# முன்னுரை

இந்த நூற்றுண்டின் முதல் இருபது வருஷங்களில் தமிழ் நாடு பெற்ற பெரு வளர்ச்சிக்கு மூன்று தமிழ் மணிகள் காரணம் என்று சொல்வதுண்டு: கவி சுப்பிரமணிய பாரதி, அறிஞரும் புரட்சி வீரருமான வ. வே. ஸு. ஐயர், ஸ்வதேசிக் கப்பல் வீரரான வ. உ. சிதம்பரம் பிள்ளை.

மூவரும் நாட்டுக்காகத் தங்களை அர்ப்பணித்துக் கொண்ட தேசபக்தர்கள். மூவரும் தத்தம் துறையில் பாரதமாதாவின் விடுதலைக்காக உழைத்தார்கள்.

மூவருக்கும் தமிழ் மொழியிடம் ஆழ்ந்த பற்றுதல் இருந்தது; மூவரும் தமிழ்ப் பண்பாட்டை வெகுவாகப் போற்றினார்கள். தமிழ் மக்களின் தன்னம்பிக்கை மூவராலும் வளர்ந்தது.

சுதந்திர இந்தியா 1972-இல் வ. உ. சிதம்பரம் பிள்ளையின் நூற்றுண்டு விழாவைக் கொண்டாடியது. வ. வே. ஸு. ஐயர், பாரதி இவர்களின் நூற்றுண்டு விழாக்கள் முறையே 1981, 1982 ஆண்டுகளில் வருகின்றன.

பாரதியின் பெயரும், சிதம்பரம் பிள்ளையின் பெயரும் இன்றைய இந்தியாவுக்கு ஓரளவு தெரிந்துள்ளன. ஆனால், வ. வே. ஸு. ஐயரைப் பற்றி இன்றைய பாரதம் அறிந்து கொண்டுள்ளதாகச் சொல்ல முடியாது.

ஐயர் வக்கீல் தொழில் புரிந்தவர்; பாரிஸ்டர் பட்டம் பெற லண்டன் சென்றார். ஆனால், அங்கே அவர், அதற்கு பதிலாக, புரட்சி வீரராக மலர்ந்தார். லண்டன் 'இந்தியா ஹவுஸ்' விடுதியில், 1907–10 காலத்தில், வி. டி. ஸாவர்க்கரின் வலது கையாக விளங்கினார். வ. வே. ஸு. ஐயர் பாரிஸ்டர் எம். கே. காந்தியை லண்டனில் சந்தித்து அவரைப் புரட்சி வீரர் ஆக்க முயன்றார். ஐயரும் காந்தி

யும் மீண்டும் 1915–இல் பாண்டிச்சேரியில் சந்தித்தனர். அப்போது, ஐயரை மனமாறச் செய்தார் காந்தி. அது முதல் கடைசிவரை ஐயர் தூய காந்தீயவாதியாக விளங்கினார்.

ஐயர் தமிழிலும், ஆங்கிலத்திலும் பல நூல்களை எழுதினார். இலக்கிய உலகில் அவருக்குள்ள புகழ் மகத்தானது. தமிழில் தற்காலச் சிறுகதையைத் தோற்றுவித்தவர் ஐயர்; இலக்கிய விமர்சனத்திலும் அவர் தமிழ் நாட்டுக்கு வழிகாட்டி. திருக்குறளை அவர் ஆங்கிலத்தில் மொழி பெயர்த்துள்ளதும், கம்பராமாயணம் பற்றி ஆங்கிலத்தில் எழுதியுள்ள ஆராய்ச்சி நூலும் ஐயருக்கு இன்றும் உலகெங்கும் அறிஞர்களிடையே பாராட்டு பெற்றுத் தந்து வருகின்றன. அவர் மிகச் சிறிய காலமே நடத்திய "பால பாரதி" என்ற தமிழ் மாதப் பத்திரிகையும் தமிழ்ப் பத்திரிகை உலகில் வழிகாட்டியாகத் திகழ்ந்தது. சேர மாதேவியில் அவர் துவங்கிய "தமிழ்க் குருகுலம்" என்ற தேசியக் கல்விக் கூடம், இலக்கியம், தொழில் கல்வி இரண்டையும் புரட்சிகரமாக இணைத்துப் போதித்தது. இந்தக் கல்விக்கூடம் பிரமாதமாக வளர்ந்திருக்க வேண்டும், அதற்குள் ஐயர் காலமாகிவிட்டது துரதிர்ஷ்ட வசமானது. அவருடைய முடிவும் அவருடைய வாழ்க்கை போலவே வீரம் செறிந்ததாக இருந்தது.

ஐயர் போன்றோர் அதிசய மாந்தர். தன்னலமற்ற தேசத் தொண்டுக்கு வழிகாட்டிகள், ஐயர் போன்றோர்.

# நன்றி

இந்த நூல் தயாரிப்பில் கீழ்க்கண்டவர்களுக்கு நூலாசிரியர் கடமைப் பட்டிருக்கிறார் :

வ. வே. ஸு. ஐயருடைய புதல்வர் டாக்டர் வ. வே. ஸு. கிருஷ்ணமூர்த்தி ஐயர், மணச்சநல்லூர், திருச்சி மாவட்டம் – ஐயர் பற்றித் தம்மிடமிருந்த கையெழுத்துப் பிரதிகள், நூல்கள், அபூர்வமான லண்டன் டயரி, பிற டயரிகள் உள்பட எல்லா விஷயங்களையும் பார்வையிட உதவியதற்காக ; "ஹிந்துஸ்தான்" தமிழ் வாரப் பத்திரிகை, சென்னை ஆசிரியராகவிருந்த ரா. நாராயண ஐயங்கார் – ஐயரைப் பற்றியும் பாரதி பற்றியும் அப்பத்திரிகை வெளியிட்ட 1938–40 மலர்களை உபயோகித்துக் கொள்ள அனுமதித்ததற்காக ; சென்னை "குமரி மலர்" மாதப் பத்திரிகை ஆசிரியர் ஏ. கே. செட்டியார், மறைமலையடிகள் நூலகம், சென்னை நூலகர் ஆர். முத்துக்குமாரஸ்வாமி இருவருக்கும் – நூலகத்திலிருக்கும் கிடைத்தற்கரிய பழைய 'நவசக்தி' முதலிய 1920–25 இதழ்களைப் பார்வையிட உதவியதற்கு ; பம்பாய் வாசியும் இளம் ஆராய்ச்சியாளருமான டாக்டர் ஆர். வி. ராமதாஸ் – 1910 காலத்து ஐயர், ஹர்தயாள், ஸாவர்க்கர், ஷாம்ஜீ கிருஷ்ண வர்மா கடிதங்களின் பிரதிகளை அளித்ததற்காக ; சென்னை "ஹிந்து" பத்திரிகை முதல்வர்களுக்கு – அப்பத்திரிகையின் 1921 இதழ்களைப் பார்த்து 'தேசபக்தன்' ராஜத்துவேஷ வழக்கு விவரம் சேகரிக்க அனுமதித்ததற்கு ; "ப்ரீ இந்தியா" வாரப் பத்திரிகை, சென்னையைச் சேர்ந்த ஜி. ரங்கராஜன், டி. கிருஷ்ணமூர்த்தி இருவருக்கும் – அப்பத்திரிகையில் 1972–73–இல் வெளியான எனது விரிவான ஐயர் வாழ்க்கை வரலாற்றை உபயோகித்துக் கொள்ள அனுமதித்ததற்கு.

# பொருளடக்கம்

# 1. வரகனேரி

தமிழ்நாட்டின் இதயம் போல, நடுமையத்தில் அமைந்தது திருச்சி நகரம். மனம் கவர் நகரம். திருச்சி, திருச்சினுப் பள்ளி, திருச்சிராப்பள்ளி, திரிசிரபுரம் என்ற பல பெயர்களை உடைய இந் நகரம், தமிழ்நாட்டின் முக்கிய நகரங்களில் ஒன்று மட்டுமல்ல, தமிழகத்தில் ஆட்சி புரிந்த மிகப் பழைய சோழ வம்சத்தாரின் தலைநகராக இருந்துள்ள புகழும் கொண்டது. தற்போதைய திருச்சி நகரின் மேற்குப் பாகமாக விளங்கும் உறையூரிலிருந்து கரிகால் சோழன் கி. பி. இரண்டாம் நூற்றுண்டில் ஆட்சி புரிந்தான் என்பர். சங்க காலச் சோழர்களுள் கீர்த்தி மிக்கவன் கரிகாலன். அவனது புகழை அக்காலப் பாடல்கள் பறைசாற்றுகின்றன.

கரிகாலன் சிறையிலிருந்து தப்பி மீண்டும் ஆட்சியில் அமர்ந்த திறனைப் 'பட்டினப் பாலை' பாடல் பெருமிதத்துடன் எடுத்துரைக்கிறது. தஞ்சைக்கருகே வெண்ணியில் ஒரு பெரும் போரில் கரிகாலன் வெற்றி பெற்ருன்; தென்னகத்தின் முதன்மையான அரசன் என்று புகழ் பெற்ருன். 'சிலப்பதிகாரம்' உள்ளிட்ட பல நூல்களிலும் அவனது புகழ் விவரிக்கப்பட்டுள்ளது. அவனது காலத்தில் காவிரிப் பூம்பட்டினம் மிகச் சிறந்த பெரும் துறைமுகமாக விளங்கியது. அதன் வழி நடந்த கடல் வாணிபம் சோழ நாட்டுக்குச் செல்வச் செழிப்பை அளித்தது.

கரிகாலன் உள்நாட்டிலும் தொழில் வளம் பெருக்கினன். வாணிபம் வளர்த்தான். விவசாயம் விருத்தி செய்தான். காடுகளை விளைநிலமாக்கினன். காவிரி நதிக்குக் கரைகட்டி நாட்டில் நீர்வளம் மலியச் செய்தான். திருச்சிக்கு அருகிலுள்ள கல்லணை அவன் கட்டிய அணை; இன்றளவும் உள்ளது. உலகில் மாந்தர் அமைத்த மிகப் பழைய அணை

களுள் கல்லணையும் ஒன்று. இதன் அஸ்திவாரத்தின் மீதுதான் சென்ற நூற்றாண்டில் பிரிட்டிஷ் எஞ்சினியர்கள் தற்காலக் கல்லணைத் தேக்கத்தை நிறுவி 'மகத்தான அணை' (The grand anicut) என்ற பெயரும் சூட்டினார்கள்.

திருச்சி நகரம் தொலைவிலிருந்து பார்ப்பதற்கும் ரம்மிய மானது. தொலை தூரத்திலிருந்தே, திருச்சிக்கு அழகு செய்யும் மலைக்கோட்டை என்ற பாறை நமது கண்ணில் தெரிகிறது. தரை மட்டத்திலிருந்து 273 அடி உயரம் நிற்கும் இந்தப் பழுப்பு வண்ணப் பழம் பாறை திருச்சி நகரின் வட கிழக்குக் கோடியில் இருந்தாலும், ஊருக்கே நடுநாயகமாக விளங்குகிறது. இந்தப் பாறை இரண்டு பெரும் பாளங்கள் ஒன்றன் மேல் ஒன்று அமைந்ததாக இருக்கிறது. மேலே உள்ள பாறை, உருவ அமைப்பில் பிரம்மாண்டமான ஓணான் ஒன்றைப் போலுள்ளது; மேற்கே பார்த்திருக்கும் ஓணான்.

இந்த ஓணான் பாறையின் தலை மேலே உள்ளது உச்சிப் பிள்ளையார் கோயில். அடிப் பாறையைச் சுற்றி, மலைக் கோட்டைக் குன்றின் பாதி உயரத்துக்கும் சற்று உயர்வாக, கோட்டை போன்ற வலுவான நெடுஞ்சுவர்கள் கொண்ட மாத்ருபூதேசுவரர் 'தாயும் ஆனார்' கோயில் உள்ளது. கீழே தரை மட்டத்திலிருந்து மாத்ருபூதேசுவரர் கோயில் வரை மூடிய படிக்கட்டு இருக்கிறது. வலப்புறம் திரும்பினால், திறந்தவெளிப் படிகள் மேலே உச்சிப் பிள்ளையார் கோயில் வரை செல்கின்றன. வழியில் மகேந்திரப் பல்லவனது குடைவரைக் குகைக் கோயிலின் அற்புதச் சிற்பங்களும் கல்வெட்டுக்களும் நம்மைக் கவருகின்றன.

உச்சிப் பிள்ளையார் கோயிலுக்குப் போகும் திறந்த வெளிப் படிகளிலிருந்தும் சரி, மேலே உச்சிப் பிள்ளையார் கோயிலின் திறந்த சுற்றுப் பிராகாரத்திலிருந்தும் சரி நமக்குக் கிடைக்கும் காட்சி கண் கொள்ளாக் காட்சி. பார்க்கப் பார்க்கத் தெவிட்டாத காட்சி விருந்து. வலுவுடன் வீசும் காற்று நம்மை உபசரிக்க, எந்த வெயிலும் உறைக்காமல் நாம் மகிழ, நாம் திருச்சி நகரின் பரந்த

அமைப்பையும் பசுமை நிறைந்த அதன் சுற்று வட்டார அழகையும் நேரம் போவது தெரியாமல் ரசிக்கலாம்.

வடதிசை நோக்கினுல், ஒரு மைலுக்கும் குறைவான தூரத்தில் காவிரி நதி பரந்து பாய்வதைக் காணலாம் பொன்னி என்று புகழ் பெற்ற காவிரி நதி. சோழ நாட்டின் உயிர் நாடி. சோழ தேசத்தின் வாழ்க்கை அனுதி காலம் முதலாகக் காவிரி நதியை ஒட்டி வளர்ந்துள்ளது. காவிரிக் கலாசாரம் புகழ் மண்டியது: காவிரி நாடு வள மிக்கது, திருச்சிக்கு அருகேதான் காவிரி அகண்ட (பிளவு படாத) காவிரியாகவும், அகன்ற காவிரியாகவும் காட்சி யளிக்கிறது. திருச்சியிலும் அதன் அகலம் கணிசமானது.

வெயில் ஒளியில் மின்னும் காவிரி நீருக்கு அப்பால், நதியின் வடகரை முழுவதும் ஒரு பசுமைத் திரை அக் கரையை மறைக்கிறது. மாந்தோப்புகளும், தென்னந் தோப்புகளும் வானளாவ உயர்ந்து காற்றில் ஆடிக் களிக்கின்றன. இந்தப் பசுமைத் திரையின் பின்னே உள்ளது ஸ்ரீரங்கம் தீவு; சோலை சூழ் திருவரங்கம்.

ஸ்ரீரங்கம் தீவில், செழுமையான மரங்களின் உச்சிக்கும் மேலாகப் பல கோபுரங்கள் வானைத் தொடுகின்றன. கிழக்கே திருவானைக் கோயில் – ஜம்புகேசுவரம்—க்ஷேத்திரத்தின் கோபுரங்களும், மேற்கே ஸ்ரீ ரங்கநாதரது கோயில் கோபுரங்களும் ஸ்ரீரங்கம் தீவுக்கு மகிமையூட்டுகின்றன. ஸ்ரீரங்கம் ரங்கநாதர் கோயில் பாரதத்தின் மிகப் பழைய கோயில் என்றும், ஸ்ரீரங்கநாதர் ஸ்ரீராமபிரானே வழிபட்ட தெய்வம் என்றும் சொல்கிருர்கள். பாரதத்தின் மிகப் பெரிய கோயிலும் இதுவே என்பர். இதன் ஏழு பிராகாரங்களுள் அமைந்தது புராதன ஊர் ஸ்ரீரங்கம்.

மலைக் கோட்டை உச்சிப் பிள்ளையார் கோயிலிலிருந்து பார்க்கும்போது, காவிரியைக் கடக்கும் பாலத்தில் போகும் மோட்டார்களும், பஸ்களும், லாரிகளும், மாட்டு வண்டிகளும் சிறு சிறு பொம்மைகளாகத் தெரிகின்றன. கிழக்கே உள்ள ரெயில் பாலத்தைக் கடக்கும் ரெயில் வண்டி, ஏதோ பெரிய மரவட்டை ஊர்ந்து செல்லுவது போலக் காட்சியளிக்கிறது.

ஸ்ரீரங்கம் தீவுக்கு அப்பால் வடக்கே கொள்ளிடம் நதி பாய்கிறது. முக்கொம்பு என்ற இடத்தில் பிரிந்து பதினெட்டு மைல் கீழே ஒன்று சேரும் காவிரியும் கொள்ளிடமும் ஸ்ரீரங்கத்துக்குத் தீவு என்ற பெருமையைத் தருகின்றன. 'ஆறிரண்டும் காவேரி; அதனடுவே ஸ்ரீரங்கம்.' மனிதர் தோற்றுவித்த ஆறு கொள்ளிடம்; மனிதர் தோற்றுவித்த தீவு ஸ்ரீரங்கம்.

உச்சிப் பிள்ளையார் கோயிலிலிருந்து கிழக்கே தென்படுவது ஒரே வயல்வெளிக் காட்சியாகும். பசுமை நெல் வயல்கள், அடர்ந்த வாழைத் தோட்டங்கள்.

தென் திசையில், முற்றிலும் வேறுபாடான காட்சி. மலைவாசலிலிருந்து கண்ணுக்கெட்டும் தூரம் வரை ஒரே வீடுகள், தெருக்கள். நேர் தெற்கே செல்லுவது திருச்சிக் கடைத் தெரு; நெடுந்தூரம் போவது. 'காந்தி மார்க்கெட்'டையும் அதன் மணிக் கூண்டையும் தாண்டி, பாலக் கரையை அடைந்து, அதற்கப்பாலும் திருச்சி ஜங்ஷன் வரை நீளுகிறது. இந்தச் சாலையின் இரு மருங்கிலும் வெகுதூரம் வரை ஒரே வீடுகள், வீடுகள், வீடுகள்! நெளியும் தெருக்கள், நெருக்கமான சந்துக்கள், ஓயாத ஜனப் புழக்கம். இதுதான் திருச்சி நகரம்.

தெற்கே, திருச்சி ஜங்ஷன் ரெயில் நிலையத்துக்குக் கிழக்கே தெரிவது பொன்மலை என்ற சிறு பாறை. இதன் அருகே தெரிவது தென்மண்டல ரெயில்வேயின் புகழ் பெற்ற பொன்மலை ரெயில்வே 'ஒர்க் ஷாப்'. பொன்மலை ஒர்க்-ஷாப்புக்குக் கிழக்கே தஞ்சாவூர்ச் சாலையிலும் அருகாகவும் பல விஸ்தாரமான அமைப்புகள் உள்ளன. பாரத் ஹெவி எலெக்ட்ரிகல்ஸ், ரீஜனல் எஞ்சினீயரிங் காலேஜ், ஸ்மால் ஆர்ம்ஸ் ஃபாக்டரி இத்தியாதி.

மலைக் கோட்டைக்கு மேற்றிசையில், சரித்திரப் பிரசித்தமான சின்னங்களைக் காண்கிறோம். மலைக் கோட்டையை ஒட்டி உள்ளது பிரசித்தி பெற்ற தெப்பக்குளம். இதன் கிழக்குக் கரையில் உள்ள பழங்கட்டிடம் 'கிளைவ்ஸ் ஹாஸ்டல்'. ஒரு காலத்தில் ராபர்ட் கிளைவ் இங்கே வசித்தான். தெப்பக்குளத்துக்கு மேற்கே 'மெயின் கார்டு கேட்'

என்ற கோட்டை வாசல்; பழைய திருச்சிக் கோட்டையின் முக்கிய மேற்குவாசல். இன்றளவும் பழைய கோட்டைச் சுவர்கள் சிறிதளவு இங்கு எஞ்சி நிற்கின்றன.

'மெயின் கார்டு கேட்'டுக்கு மேலே உள்ளது 'வெஸ் டர்ன் பூல்வர்' என்ற முக்கிய சாலை. 'அகன்ற சாலை' என்று ஃபிரெஞ்சு மொழியில் பொருள்படும் 'பூல்வர்' இன்று தமிழர் நாவில் 'புலிவார்டு ரோ'டாக நடமாடு கிறது. 'மேலைப் புலிவார்டு ரோ'டும் 'கீழைப் புலிவார்டு ரோ'டும் பதினெட்டாம் நூற்றாண்டில் கர்நாடக யுத்தங் களின்போது திருச்சி பல தடவை கைமாறிய சமயம் ஃபிரெஞ்சுக்காரர்களிடம் நகரம் இருந்ததற்கு அத்தாட்சி களாக விளங்குகின்றன.

தெப்பக்குளத்துக்கு மேற்கே, கோட்டைச் சுவர்களுக்கு அப்பால், மேலைப் புலிவார்டு ரோடில் உயர்ந்து தெரிவது ரோமன் கத்தோலிக்க சர்ச்; லூர்து மாதா கோயில். இது தென் ஃபிரான்சிலுள்ள புனித லூர்து மாதா கோயிலைப் போலவே உருவ அமைப்புக் கொண்டது. இம் மாதா கோயிலை ஒட்டி உள்ளது தென்னாட்டின் புகழ் பெற்ற கல்விக்கூடங்களில் ஒன்றான ஸெயின்ட் ஜோஸப் காலேஜ்.

பதினான்காம் நூற்றாண்டில், மாலிக் காபூரின் முஸ்லிம் வீரர்கள் திருச்சி மீது படையெடுத்து வந்தார்கள். பின்னர் மதுரை நாயக்கர்களது ஆட்சி நடந்தது. மராட்டிய யுத்தங்களின்போதும் ஆங்கிலோஃபிரெஞ்சு யுத்தங்களின் போதும் பல தடவை கைமாறிய திருச்சியில் சிறிது காலம் நவாபுகள் ஆட்சியும் நடந்தது. திருச்சியில் நவாபுகள் வாழ்ந்த அரண்மனை இன்று தாலுக்கா கச்சேரிக் கும் வேறு பல அலுவலகங்களுக்கும் இடமளித்துள்ளது.

மலைக் கோட்டையிலிருந்து பார்த்தால் தென்மேற்குத் திசையில் தெரியும் 'நாதர்ஷா பள்ளிவாச'லில் கர்நாடக நவாபு சந்தா சாகேபின் தலையற்ற உடல் அடக்கம் செய்யப்பட்டுள்ளது.

திருச்சி நகருக்கு வெளியே, திருச்சி மாவட்டத்திலும் பல சரித்திரப் பிரசித்தமான இடங்கள் உள்ளன.

பதினொன்றும் நூற்றுண்டு முதலாகச் சோழர் தலைநகரமாக விளங்கிய கங்கை கொண்ட சோழபுரம், இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு ரோமாபுரியுடன் வர்த்தகம் நடத்தியதைக் குறிக்கும். ரோமாபுரிக் காசுக்கள் கண்டெடுக்கப்பட்டுள்ள கரூர் நகரம் முதலியன இவற்றுள் முக்கியமானவையாகும்.

கைத்தொழில் வளத்தில் முன்னேறி நிற்கும் கோயம்புத்தூருக்கும், விவசாயமே முக்கியத் தொழிலாகக் கொண்ட தஞ்சாவூருக்கும் இடையிலுள்ள திருச்சி மாவட்டம். இன்று கைத்தொழில், விவசாயம் இரண்டுக்கும் இடமளிக்கிறது. சோழர்கள், பல்லவர்கள், நாயக்கர்கள், நவாபுகள், ஆங்கிலேயர், ஃபிரெஞ்சுக்காரர், மராட்டியர் என்று பலதரப்பட்ட ஆட்சியாளர்களைக் கண்டுள்ள திருச்சி யாவருக்கும் ஏற்றதான மனப்பான்மை கொண்டதாக இருக்கிறது. தனது புராதன மாண்புகளை ஒதுக்கிவிடாமல், திருச்சி முற்போக்கான நவநாகரிக நகரமாக வளர்ந்துள்ளது.

இத்தகைய புகழ்மிக்கது நமது கதாநாயகரான வ. வே. ஸு. ஐயரின் பிறந்த ஊரான திருச்சி. இந் நகரின் ஒரு பகுதியாக விளங்கும் வரகனேரியில் இருக்கிறது ஐயரின் பூர்விக இல்லம்.

சென்ற நூற்றுண்டுத் துவக்கத்தில், ஒரு சிற்றூராக இருந்தது வரகனேரி. திருச்சி நகரம் விரிவடைய அடைய வரகனேரி நகரின் ஒரு பகுதியாகிவிட்டது. திருச்சி நகரின் மிகப் பெரிய காய்கறி வியாபார ஸ்தலமான 'காந்தி மார்கெட்' அருகே, தஞ்சாவூர்ச் சாலைக்குப் போகும் வழியிலுள்ளது வரகனேரி. அங்கே வர்த்தகர்கள் அதிகம். வரகனேரி அக்கிரகாரத்தில் பிராம்மணர்கள் வசித்தனர். இந்த அக்கிரகாரத்தில் தமது சொந்த வீடு ஒன்றில் வாழ்ந்தார் வ. வே. ஸு. ஐயரின் தந்தை வரகனேரி வேங்கடேச ஐயர்.

வேங்கடேச ஐயர் செல்வத்தில் நடுத்தர வகுப்பைச் சேர்ந்தவர். சென்ற நூற்றுண்டு ஆங்கிலக் கல்வி பரவிய காலத்தில், வேங்கடேச ஐயர் தாமாகவே சிறிது ஆங்கிலம் பயின்றுர். பிறகு அவர், தம் சகோதரருடன்

எஃப். ஏ. என்ற கல்லூரி முதல்நிலைப் பரீட்சையில் தேர்ந்தார். சென்னை ராஜதானியிலேயே முதலாவதாகத் தேறிய அவருக்கும், அவருடைய தம்பிக்கும் தபால் இலாகாவில் வேலை தந்தார்கள். வேங்கடேச ஐயர் சிறிது காலம், தெற்கே ராமநாதபுரம் மாவட்டத்தில் போஸ்ட் மாஸ்டராக வேலை பார்த்தார். மாதச் சம்பளம் ஐந்து ரூபாய்.

தபால் இலாகா வேலை பிடிக்காமல், அதை ராஜீநாமாச் செய்துவிட்டு, திருச்சி நகரில் வேறு ஒரு பகுதியான வடவூரில் சொந்தமாக லேவாதேவி வியாபாரத்தில் ஈடுபட்டார் அவர். இந்தக் கொடுக்கல் வாங்கல் வியாபாரம் வெற்றிகரமாக நடக்கவே, இதை வரகனேரிக்கு மாற்றினார் வேங்கடேச ஐயர்.

வேங்கடேச ஐயருக்கு ஊரில் நல்ல செல்வாக்கு ஏற்பட்டது. வரகனேரி சுப்பிரமணிய ஜனோபகார நிதி என்று அவர் ஆரம்பித்த நிதி நிறுவனம் செழிப்புடன் பணியாற்றியது. 1888-இல் அவர் 'திருச்சினாப்பள்ளி வர்த்தக சங்கம்' என்ற கூட்டுறவு ஸ்தாபனத்தைத் தோற்றுவிக்க உதவினார். இந்தக் கூட்டுறவுச் சங்கம் இன்றளவும் செல்வாக்குடன் விளங்குகிறது. வேங்கடேச ஐயர் 1893 முதல் 1913 வரை வர்த்தக சங்கத்தின் டைரக்டர்களில் ஒருவராக இருந்தார். நிதித் தணிக்கை அவரது தனித் திறமை. இதே வர்த்தக சங்கத்தில், பிற்காலத்தில் அவரது புதல்வர் வ. வே. ஸு. ஐயரும் டைரக்டராக இருந்துள்ளார்.

சென்ற நூற்றுண்டின் இறுதியில் திருச்சி நகர வட்டாரத்தில் கிறிஸ்தவப் பாதிரிமார்கள் செய்த தீவிர மதமாற்றம் வேங்கடேச ஐயருக்குக் கவலை அளித்தது. ஆழ்ந்த மனமாற்றமின்றி, வேறு காரணங்களுக்காக மதம் மாறியவர்களை மீண்டும் ஹிந்து மதத்தில் சேர்த்துக் கொள்ள அவர் வீடுவீடாகப் பிரசாரம் செய்தார். காஞ்சி காமகோடி பீடம் சங்கராசாரியரை அணுகி, மதம் மாறியவர்களை மீண்டும் ஹிந்து மதத்தில் ஏற்பதற்கு ஆதரவு தருமாறு கோரினார். சங்கராசாரியர் அனுமதி தரவில்லை. மிகுந்த ஏமாற்றமடைந்த வேங்கடேச ஐயர், தம் கருத்துக்களை

வாய் மொழியாகவும், அச்சுப் பிரசுரங்கள் மூலமும் தொடர்ந்து பிரசாரம் செய்தார்.

வேங்கடேச ஐயர் கரூர் அருகிலுள்ள சின்னாளம்பட்டி கிராமத்தைச் சேர்ந்த காமாட்சி அம்மாள் என்ற பெண்ணை மணந்தார். இந்தத் தம்பதியருக்கு 1881 ஏப்ரல் 2-ஆம் தேதி ஓர் ஆண் குழந்தை - தலைச்சன் பிறந்தது. தமிழ் வருஷக் கணக்கில், விக்ரம ஆண்டு பங்குனி மாதம் 22-ஆம் தேதி, ஜன்ம நட்சத்திரம் கிருத்திகை, ஸுப்பிர மணியருக்கு உகந்த நட்சத்திரம். குழந்தைக்கு ஸுப்பிர மணியன் என்று பெயர் வைத்தார்கள்; வீட்டில் 'மணி' என்று அழைத்தார்கள்.

வேங்கடேச ஐயர் ஹிந்து மதாசாரங்களைச் சிறுவர் களுக்கு இளம் வயதிலேயே கற்றுத் தரவேண்டும் என்று நம்பினார். அண்டை அயலில் உள்ள சிறுவர் சிறுமியர்கள் பலரை அழைத்துக்கொண்டு, கால் நடையாகவே திரு வானைக் கோயில், ஸ்ரீரங்கம் முதலிய க்ஷேத்திரங்களுக்கு உற்சவ நாட்களில் கூட்டிச் செல்லுவார் அவர். நான்கு மைலுக்கும் அதிகமாக வழிநடையில் அலுப்புத் தட்டாம லிருக்க, அவர் வழி நெடுக ஹிந்து இதிகாச புராணங் களிலிருந்து கதைகள் சொல்லுவார். நிறையப் பட்டாணிக் கடலையை வாங்கிக்கொண்டு, சிறுவர்கள் வழியில் சாப் பிட்டுக்கொண்டே வருவதற்குக் கொடுப்பார். நடக்கக் கூடிய வயது வந்ததும், மற்றச் சிறுவர் சிறுமியரைப் போல ஸுப்பிரமணியனும் இந்த வழிநடையில் சேர்ந்து கொள்வான். ஹிந்து இதிகாச, புராண வீரர்களின் லட்சிய வாழ்வும், தன்னலமற்ற செயல்களும், வீரம் செறித்த போக்கும், இளம் மணியின் மனத்தில் ஆழப் பதிந் தன. அவனுக்கு ஞாபகசக்தி அதிகம். தந்தையிடமிருந்து கேட்ட கதைகளைப் பிற சிறுவர்களுக்குச் சொல்லி மகிழ்வான். ஹிந்து மத வீரர்களின் வாழ்க்கையை நாடக மாக நடிப்பதிலும் அவனுக்கு ஆர்வம் இருந்தது. சிறுவர் கள் தாமாகச் செய்த வில், அம்புகளை தரித்து வேடம் பூணுவார்கள். ஸ்ரீராமர், அர்ஜுனன் வேடங்களை நடிப் பதில் தனி ஆர்வம் காட்டுவான் மணி.

தேகப் பயிற்சியிலும் மணிக்கு ஆசை. பஸ்கி, தண்டால், கர்லாக் கட்டை சுற்றுதல் இவற்றில் அவன் கவனம் செலுத்துவான். நீச்சலில் நிபுணன் அவன். ஆண்மையைக் காட்டும் பயிற்சிகளிலும் விளையாட்டுகளிலும் அவன் அதிகக் கவனம் செலுத்துவான். அவனுடைய வீடு இருந்த தெருவின் தெற்குக் கோடியில் இருந்த வாய்க்கால் அவனது நீச்சல் பயிற்சிக்கு நிறைய இடமளித்தது. நாள் முழுவதும் நீரில் துளைவான். அவன் துணிச்சல் மிக்கவனுக வளர்ந்தான்; அவனுடைய தோழர்களுக்கு அவனே தலைவன்.

இளைஞன் மணியினுடைய தைரியத்தைச் சோதிக்க அக்காலத்தில் ஒரு சந்தர்ப்பம் ஏற்பட்டது. தெருக் கோடி வாய்க்காலுக்கு அப்பால் புதர்கள் நிறைந்திருந் தன. இருட்டினுல் பாம்புகள் ஊரும்; நரிகள் ஊளையிட்டு ஓடும். அந்தப் புதர்கள் நடுவே ஒரு காளி கோயில். உக்கிரமான காளி; இளங்காளியம்மன் என்று பெயர். அந்த இளங்காளியம்மன் கோயிலுக்கு நள்ளிரவில், கும்மிருட்டில் போய்வர முடியுமா என்பது கேள்வி. பேய் பிசாசு உலவும் நேரம். சிறுவர்களிடையே எழுந்த வாக்குவாதத்தில், மணியை 'நீ போய் வரமுடியுமா' என்று சவால் விட்டான் ஒருவன் 'சும்மா போய் வந்தேன்' என்று சொன்னுல் போதாது, காளி கோயில் கதவைத் தொட்டு அங்கிருந்து குங்குமமும், எதிரே உள்ள பலிபீடத்தைத் தொட்டு அதிலிருந்து எண்ணெய்க் கரியும் கொண்டு வரவேண்டும் என்பது நிபந்தனை. ஸுப்பிரமணியன் சவாலை ஏற்று, நள்ளிரவு இருட்டில் வாய்க்காலைக் கடந்து, புதர்களைத் தாண்டிச் சென்று, காளி கோயில் குங்குமமும் பலிபீடக் கரியும் கொண்டு வந்து காட்டினுன்.

ஸுப்பிரமணியன் 1895-இல் மெட்ரிகுலேஷன் பரீட்சையில் தேர்ந்தான்; சென்னை ராஜதானி முழுவதிலும், 5-ஆவதாக வந்தான். திருச்சி ஸெயின்ட் ஜோஸப் காலேஜில் சேர்ந்து, 1899-இல் பி.ஏ. பரீட்சையில் நல்ல மதிப்பெண்களுடன் தேர்ந்தான். வரலாறு, பொருளாதாரம், லத்தீன்

மூன்றும் அவன் எடுத்துக்கொண்ட பாடங்கள்; லத்தீனில் அவன்தான் முதல் மதிப்பெண் பெற்றான். காலேஜில் சிறந்த மாணவனுக்கு அளிக்கப்பட்ட 'ஸ்காலர்ஷிப்' அவனுக்குக் கிடைத்தது. அவனுக்குக் கிடைத்த ஏராள மான பரிசுகளைக் கண்டு பிற மாணவர்கள் பொறாமைப் படும்படி இருந்தது. ஆசிரியர்களுக்கு அவனிடம் தனிப் பிரியம்; கல்லூரியின் பேச்சுப் போட்டிகளிலும் விவாதங் களிலும் அவன் பொறுமையாகத்தான் பேசுவான்; ஆனால் எதிர்க்கட்சியின் வாதங்களைச் சுக்குநூறாக்கி விடுவான்.

இலக்கியத்தில் ஸுப்பிரமணியனுக்கு இருந்த பற்றுதல் விரிவானது. பல நாட்டு இலக்கியங்கள் அவனுக்கு அத்துபடி. விர்கில், ஹோமர், ஷேக்ஸ்பியர், கம்பன், காளி தாஸன் முதலிய மகாகவிகளும், ஸ்பென்ஸர், ஹக்ஸ்லி, ஷோப்பன்ஹோர், எமர்ஸன் முதலிய வேதாந்திகளும் அவனுக்குப் பிடித்தமானவர்கள். குறிப்பாக எமர்ஸ னிடத்தில் அவனுக்கு அதிகப் பிரியம். எமர்ஸனுடைய 'தன்னம்பிக்கை' ('Self Reliance') என்ற வியாசம் அழியாப் புகழ் கொண்டதென அவன் கருதினான். இந்த வியாசத்தைப் பிற்காலத்தில் அவன் தமிழிலும் மொழி பெயர்த்தான்.

சதுரங்கம், வான சாஸ்திரம் முதலியவையும் ஸுப்பிர மணியனைக் கவர்ந்தன. கல்லூரியிலிருந்த 'டெலஸ்கோப்' (வான தர்சினி) மூலம் இரவெல்லாம் நட்சத்திரங்களைப் பார்த்து மகிழ்வான்.

*1897* - ஆம் ஆண்டு ஸுப்பிரமணியனுக்குத் திருமணம் நடந்தது. தன்னைவிட நான்கு வயது இளையவளான பாக்கியலட்சுமி என்ற பெண்ணை அவன் மணந்தான். பாக்கியலட்சுமி அம்மாள் வ. வே. ஸு. ஐயருக்கு உற்ற துணையாக விளங்கினார். புரட்சிவீரராக அவர் சிரமமான வாழ்க்கை நடத்தியபோதும், தக்க துணையாக விளங் கினார். பிற்காலத்தில் ஐயர் காந்தீயவாதி ஆனபோது, பாக்கியலட்சுமி அம்மாள் ஒத்துழையாமை முதலிய காந்தீய இயக்கங்களில் பங்கு கொண்டார். ஐயர் *1925*-இல் மறைந்த பின்பும், நெடுநாள் வாழ்ந்து, தமது

73 – ஆம் வயதில் பாக்கியலட்சுமி அம்மாள் மறைந்தார்.

ஸுப்பிரமணியன் 1902-இல் சென்னை ராஜதானியின் 'ப்ளீடர்' (வக்கீல்) பரீட்சையில் முதல் பிரிவில் தேறினார். அதன் பயனாக, திருச்சி ஜில்லா கோர்ட்டில் முதல் வகுப்பு ப்ளீடராகச் சேர்ந்து வக்கீல் தொழில் நடத்தலானார். ஸுப்பிரமணியனுக்கு வக்கீல் தொழிலில் சகல சௌக்கியங்களும் இருந்தன. நல்ல வருவாய், புகழ், ஓய்வு எல்லாம் கிடைத்தன. தமது ஓய்வு நேரத்தை இலக்கிய நூல்களைப் படிப்பதிலும், சதுரங்கம் ஆடுவதிலும் அவர் செலவிட்டார். சதுரங்கத்தில் சிக்கலான ஆட்டங்களுக்கு முடிவு கண்டு அவற்றை லண்டன், ஹாலந்து முதலிய வெளிநாட்டுச் சதுரங்கக் கூடங்களுக்கு அனுப்பி வந்தார். திருச்சி வர்த்தக சங்கத்தில் டைரக்டர் பதவியும் வகித்து வந்தார்.

சுதேசி இயக்க நாட்களில், ஸுப்பிரமணியன் சுதேசி இயக்கத் தலைவர்களான வ. உ. சிதம்பரம் பிள்ளை, சுப்பிரமணிய சிவம் இவர்களுடன் தொடர்பு கொண்டு, ஒரு சுதேசிப் பஞ்சாலை நிறுவ முயன்றார். ஆனால் அது கூடவில்லை.

ஐந்து வருஷம் வக்கீல் தொழில் செய்தபின், ஸுப்பிரமணியனுக்கு அது அலுத்துப் போயிற்று. அக்காலத்தில் வெளியூரில் வெற்றிகரமாகத் தொழில் நடத்திய வக்கீல்கள், சென்னை சென்று ஹைகோர்ட்டு வக்கீலாகப் பதிவு செய்துகொண்டு, பேரும் புகழும் பொருளும் குவிப்பது வழக்கம். தாமும் அவ்வாறு செய்வதா என்று ஸுப்பிரமணியன் யோசித்துக் கொண்டிருந்த வேளையில், விதி அவரை வேறு திக்கில் இழுத்துச் சென்றது. அவருடைய மனைவியின் நெருங்கிய உறவினரான கே. ஜி. பசுபதி ஐயர் என்பவர் பர்மாவில் ரங்கூன் நகரில் பெரிய ஜவுளிக் கடை வைத்திருந்தார். அதற்கு இந்தியாவில் பெங்களூரிலும், பாண்டிச்சேரியிலும் கிளைகள் இருந்தன. ஸுப்பிரமணியன் ரங்கூன் வந்தால் நல்லது என்றார் பசுபதி ஐயர். ரங்கூனில் இருந்த இந்திய வர்த்தகர்களுக்கு நல்ல இந்திய வக்கீல்கள் தேவையாக இருந்தனர். ரங்கூனில்

ஆங்கிலேய பாரிஸ்டர் ஒருவருக்குத் துணை வக்கீலாக ஸுப்பிரமணியன் தொழில் நடத்த ஏற்பாடு செய்தார் பசுபதி ஐயர்.

ஆனல் ரங்கூன் செல்வதில் பல தடைகள் இருந்தன. கடல் கடந்து செல்வது அக்காலத்தில் வைதிகப் பிராம்மண சமூகத்துக்கு ஏற்புடையதல்ல. ஆகையால், ஸுப்பிரமணியனின் தாயார் ஆட்சேபித்தாள். தன்னுடைய மூத்த குமாரன் இவ்வாறு சென்ருல் அவனை மீண்டும் காணுவோமா என்ற சந்தேகம் அவளுக்கு இருந்தது. ஆனல் தந்தையாரோ, தம் மகன் ரங்கூன் செல்வதை ஆசீர்வதித்தார். பைபிளில் உள்ள ஒரு வாக்கியமான, "ஸால் போலப் போய், பால் போலத் திரும்புவாயாக!" (சாதாரணமாகச் சென்று புகழுடன் திரும்புவாயாக!) என்று வாழ்த்தினர் தந்தையார்.

ஸுப்பிரமணியன் 1906-இல் ரங்கூனுக்குக் கிளம்பிச் சென்ருர். அவரது தாயார் பயந்த மாதிரியே அவர் அன்னை அவரை மறுபடி பார்க்கவில்லை! லண்டனில் ஐயர் இருந்த சமயம் அவள் காலமாகிவிட்டாள். தந்தையின் வாக்கும் பலித்தது. வெறும் பாரிஸ்டர் படிப்புக்காக ரங்கூனிலிருந்து லண்டன் சென்ற ஐயர், புகழ் பெற்ற புரட்சி வீரராகவே பல்லாண்டுகளுக்குப் பின் தாயகம் திரும்பினர்.

ரங்கூனில் ஆங்கிலேய பாரிஸ்டருக்கு ஸுப்பிரமணியனை மிகவும் பிடித்துப்போயிற்று. பாரிஸ்டரிடம் வந்த வழக்குக்காரர்களில் பெரும்பாலோர் நாட்டுக்கோட்டைச் செட்டியார்கள். ஆகையால், தமிழ் தெரிந்த ஒரு திறமையான உதவி வக்கீல் இருந்தது பாரிஸ்டருக்கு மிகவும் வசதியாக இருந்தது. ஸுப்பிரமணியனுடைய செய்நேர்த்தி அவருக்கு மிகவும் பிடித்திருந்தது. வழக்குகளை நன்ருகப் பரிசீலித்து, ரத்தினச் சுருக்கமாகப் பாரிஸ்டருக்குக் குறிப்பு எழுதி வைப்பதில் ஸுப்பிரமணியன் திறமைசாலியாக இருந்தார்.

ஒரு நாள் பசுபதி ஐயர் அந்த ஆங்கிலேய பாரிஸ்டரிடம் பேசிக்கொண் டிருக்கும்போது, ஸுப்பிரமணியன் எப்படி இருக்கிருன் என்று கேட்டார். ஸுப்பிரமணியனை

வானளாவப் புகழ்ந்த பாரிஸ்டர், அந்த இளைஞன் மட்டும் லண்டன் சென்று பாரிஸ்டர் பரீட்சை தேறிப் பட்டம் பெறுவானுனால் அவனுடைய எதிர்காலம் ஒளி மிக்கதாக இருக்கும் என்றார். பசுபதி ஐயருக்குச் சந்தோஷம் தாங்கவில்லை. ஆனால் இதை அவர் ஸுப்பிரமணியனிடம் சொன்னபோது, அவர் மிகுந்த வருத்தமுற்றார். திறமை இருந்தென்ன செய்வது, லண்டன் போய்ப் படிக்கத் தமக்கு வசதி இல்லையே என்று ஏங்கினார் அவர்.

ரங்கூனில் அக்காலத்தில் திருச்சியிலிருந்து வந்த வேறு சில பிராம்மணக் குடும்பங்களும் இருந்தன. திருச்சியைச் சேர்ந்த டாக்டர் டி. எஸ். எஸ். ராஜன் என்ற திறமையான இளம் டாக்டர் ஒருவரை, அகம்பாவம் பிடித்த ஆங்கிலேய மேலதிகாரி ஒருவன் கடுமையாகப் பேசிவிட்டான். உடனே தமது வேலையை உதறியெறிந்து, 'உனக்குச் சமமாக நானும் லண்டனில் வைத்திய மேல் படிப்புப் படித்து வராவிட்டால் பார்!' என்று சூளுரைத்து, அங்குமிங்குமாகப் பணம் சேர்த்து, ரங்கூனிலிருந்து லண்டனுக்குப் போய்விட்டார் டாக்டர் ராஜன். ராஜன் லண்டன் போனது ஸுப்பிரமணியனது ஆர்வத்தைக் கிளறிவிட்டது.

நல்ல வேளையாக; கே. ஜி. பசுபதி ஐயர், ஸுப்பிரமணியன் லண்டன் போவதற்கு ஒரு திட்டம் சொன்னார். பசுபதி ஐயர் பண வசதி உள்ளவர். அவர் லண்டன் கம்பெனிகளின் பங்குகளை வாங்கி விற்று லாபம் அடைவதிலும் பழக்கம் உள்ளவர். பங்கு மார்க்கெட்டில் அடிக்கடி ஏற்படும் விலை ஏற்ற இறக்கங்களை லண்டனில் கவனித்துத் தமக்குத் தெரிவித்து, தமது விருப்பப்படி பங்குகளை விற்றும் வாங்கியும் உதவ லண்டனில் ஒருவர் இருந்தால் தமக்கு லாபகரமாக இருக்கும் என்று அவர் கருதினார். இந்த வேலையையும் கவனிக்க முடியுமானால், ஸுப்பிரமணியனை லண்டனுக்கு அனுப்பி, பாரிஸ்டர் பரீட்சை தேற உதவுவதாகப் பசுபதி ஐயர் சொன்னார். ஸுப்பிரமணியனுக்கோ பங்கு மார்க்கெட்டைப் பற்றி ஏதும்

தெரியாது. ஆயினும், லண்டன் போய்ப் படித்துப் பாரிஸ்டராக வாய்ப்புக் கிடைக்குமென்பதால், திட்டத்துக்கு உடனே சம்மதித்தார். புதிய விஷயமானாலும் அதில் முழுக் கவனம் செலுத்தி, அதன் அந்தரங்கத்தை அறிந்து கொண்டு, அதில் தேர்ச்சி பெற்றவர் ஆகும் சுபாவம் உள்ளவர் ஸுப்பிரமணியன். லண்டன் போகும் காரணத்துக்காக, பள்ளிக்கூடச் சிறுவன் பாடம் கற்பது போலப் பசுபதி ஐயரிடம் பங்கு மார்க்கெட்டின் ஆதியோடந்தமான சகல நுணுக்கங்களையும் சீராகக் கற்றார் ஸுப்பிரமணியன்.

1907 – ஆம் ஆண்டின் இறுதியில், ஸுப்பிரமணியன் இவ்வாறாக மறுபடி கப்பலேறினார். ரங்கூன் வந்த பத்து மாதத்தில் அவர் லண்டனுக்குப் புறப்பட்டுவிட்டார்.

கப்பலேறிய ஸுப்பிரமணியனிடம் பல மாறுதல்கள் காட்டின. அவரது சிகை சுருங்கி, நவநாகரிகக் கிராப்பு ஆயிற்று. அவருடைய உடைகள் மடிப்புக் கலையாத வெள்ளையர் உடையாக இருந்தன. அவருடைய பெயரும் வி. வி. எஸ். ஐயர் என்று சுருங்கிவிட்டது. அவர் முகத்தில் மீசை அரும்பியது.

ஆனால், என்னதான் மேலை நாகரிக நடையுடை பாவனைகள் இருந்த போதிலும், அவருடைய நெஞ்சம் தமது இயல்பான பாரதப் பண்பையே நாடியது; அவரது பெட்டி நிறையத் தமிழ் இலக்கிய நூல்களும், ஸம்ஸ்கிருத நூல்களும், சில ஆங்கில நூல்களும், லத்தீன் நூல்களுமே இருந்தன. தமிழ்க் கவிச்சக்கரவர்த்தி கம்பனுடைய புகழ் பெற்ற இராமாயணம் முழுதும் அதில் இருந்தது. ஐயருக்குக் கம்பனிடத்தில் ஏற்பட்ட பக்தி பாலியத்திலேயே உண்டானது.

கப்பல் ஏடன் துறைமுகத்தை அடைந்தபோது, வேறு இரு இந்தியர்கள் கப்பலில் ஏறினார்கள். ஒருவர் சீக்கியர்; மற்றொருவர் ஆரிய ஸமாஜி. அவர்களுடைய மதக் கோட்பாடுகளைப் பற்றி அவர்களுடன் சல்லாபித்து அறிந்தார் ஐயர். சீக்கியர்களின் பிரார்த்தனை கீதங்களான ஜப்ஜீயையும் சுகமணியையும் ஐயர் மனப்பாடம் செய்தார்.

சீக்கிய மதத்தில் ஜாதிகள் இல்லாததும், சீக்கிய குருமார்களின் வீரமிக்க, தேசபக்தி நிறைந்த வாழ்வும் ஐயர் மனத்தைக் கவர்ந்தன. முக்கியமாக, குரு கோவிந்த ஸிங் வாழ்க்கை ஐயருக்கு மிகவும் பிடித்திருந்தது. தமது வாழ்வின் இறுதி வாரங்களில் 1925–இல், சீக்கியரிடையே உள்ளதுபோல ஜாதி பேதமற்றதாகத் தமிழ்ச் சமூகத்தைச் சீர்த்திருத்த ஐயர் கருத்துக் கொண்டிருந்தார். ஆனல், இதற்கென அவர் வகுத்த திட்டம் உருக்கொள்வதற்கு முன் ஆண்டவன் அவரை அழைத்துச் சென்றுவிட்டான்.

ஆரிய ஸமாஜ நண்பருடன் ஐயர் ஹிந்து வேதங்களை ஓதினர். வேத நெறிகள் அவரது மனத்துக்கு மிக உகந்தவை.

கப்பல் கெய்ரோ நகரை நெருங்கிய சமயம், சில முஸ்லிம் பயணிகள் கப்பலில் ஏறினர்கள். இதனல், இஸ்லாம் மதம் அராபிய நாடுகளில் அனுஷ்டிக்கப்படும் முறையை ஐயர் அறிந்துகொள்ளச் சந்தர்ப்பம் ஏற்பட்டது. முஸ்லிம்கள் தினந்தோறும் வேளை தவருது தொழுகை நடத்துவது அவருக்குப் பிடித்திருந்தது; அவர்களுடைய தீவிர மத பக்தியும் அவரைக் கவர்ந்தது.

பல்வேறு மதத்தினரின் நடையுடை பாவனைகளையும் பிரார்த்தனைகளையும் இவ்வாறு ஐயர் கற்றது, அவருக்குப் பின்னர் நெருக்கடியான சில சமயங்களில் மிகவும் பயன்பட்டது. 1910 – இல் லண்டனிலிருந்து அவர் தப்பிச் செல்ல நேர்ந்தபோது, அவர் ஒரு சமயம் சீக்கியர் போலவும், மற்ருெரு சமயம் முஸ்லிம் யாத்திரிகர் போலவும் நடித்துத் தப்பினர்.

சில வாரங்களில், கப்பல் லண்டனை அடைந்தது. 1907–ஆம் ஆண்டு அக்டோபர் 10-ஆம் தேதி ஐயர் லண்டனில் காலடி வைத்தார்.

லண்டனில் முதல் சில வாரங்கள், ஐயர் ஆங்கிலேய நாட்டில் ஆங்கிலேயரிடையே பழகுவதற்கான பழக்க வழக்கங்களைக் கற்பதில் முனைந்தார். பாரிஸ்டர் படிப்புக்காக, 'லிங்கன்ஸ் இன்' என்ற அமைப்பில் தம்மைப் பதிவு செய்துகொண்டார். பாரிஸ்டர் படிப்புக்கான

இத்தகைய நான்கு அமைப்புகள் இருந்தன. அவற்றில் இது ஒன்று.

பாரிஸ்டர் படிப்பு வழக்கமான கல்லூரிப் படிப்புப் போன்றதல்ல. தினமும் கல்லூரிக்குச் சென்று பாடம் கேட்கும் திட்டம் ஏதும் அதற்கு இல்லை. பாடமெல்லாம் மாணவர் தாமாகவே படித்துக்கொள்ள வேண்டியதுதான். ஆனால், வருஷத்தில் இருபத்துநான்கு விருந்துகளில் கலந்துகொள்ள வேண்டும். அப்படிக் கலந்துகொண்டால், பாரிஸ்டர் பரீட்சைக்கு உட்காரத் தகுதி பெறலாம். இந்த முறையினால், மாணவர் தம் இஷ்டப்படி தமது காலத்தைச் செலவிடலாம். ஐயருக்கு இது மிகவும் வசதியாக இருந்தது; லண்டன் பங்கு மார்க்கெட் சூட்சுமங்களை அவர் நன்கு தெரிந்துகொள்ள நிறைய அவகாசம் கிடைத்தது.

முதலில் ஐயர் ஒரு வீட்டில் குடியிருப்பு அறை ஒன்று எடுத்துக்கொண்டு அதில் தங்கியிருந்தார். ஆனால் சைவ உணவுக்காரரான ஐயருக்கு, உணவுப் பிரச்னை பெரும் பிரச்னையாக விளங்கியது. இசையில் ஆர்வம் உள்ள ஐயர், மேனாட்டு இசையையும், ஆங்கிலேயரின் நடன பாணிகளையும் கற்கலானார். நடன பாணிகள் தெரியாதவர்கள் ஆங்கிலச் சமூகத்தில் முன்னேறுவது கடினம் என்ற நிலை இருந்ததால், ஐயர் நடனக் கலையிலும் ஊக்கம் கொண்டார். ஆனால் இந்த ஆர்வமெல்லாம் மூன்றே மாதத்தில் முடிந்துவிட்டது. அவரை அறியாமல் விதி அவரை வேறொரு திக்கில் இழுத்துச் சென்றுவிட்டது.

மரக்கறி உணவைத் தேடிச் சென்ற ஐயர், முடிவாக 'இந்தியா ஹவுஸ்' (இந்திய விடுதி) என்ற இல்லத்தை அடைந்தார். அங்கே போய்ச் சேருமுன், ஐயர் லண்டனில் அக்காலம் இருந்த நூறு இந்திய மாணவர்களில் பலரைச் சந்தித்து அவர்களில் மரக்கறி உணவுக்காரர்கள் நிலைமையை எவ்வாறு சமாளிக்கிறார்கள் என்று விசாரித்தறிந்தார். அவர்களில் பலர், சிரமம் பொறுக்காமல் புலால் உணவுக்குத் தம்மைப் பழக்கப்படுத்திக்கொண்டுவிட்டார்கள். ஆயினும், அவர்கள்கூட இந்திய உணவு

– இந்திய மரக்கறி உணவு முதலியவற்றை அடிக்கொரு சமயம் சாப்பிட விரும்பினார்கள்.

லண்டன் நகரின் வடபகுதியில் 'ஹைகேட்' என்ற பேட்டையில் இருந்த 'இந்தியா ஹவு'ஸில் இவர்களுக்குப் பிடித்தமானபடி இந்திய உணவு கிடைத்தது. ஆதலால் ஐயரும் இங்கே போய் நேரில் பார்க்கத் தீர்மானித்தா

இந்த முடிவு அவரை எங்கெங்கெல்லாம் கொண்டு செல்லப் போகிறதென்பது ஐயருக்கு அப்போது சிறிதும் தெரியாது. விதி அவரை அழைத்துச் சென்றது. மனம் கனிந்த வரவேற்பு, பரிவுமிக்க கைகுலுக்கல், சில நிமிஷம் சாதாரணப் பேச்சு - 'இந்தியா ஹவு'ஸில் நடந்த இந்தச் சிறு சம்பவங்கள் ஐயரது வாழ்க்கையை அடியோடு மாற்றிவிட்டன.

# 2. ‘இந்தியா ஹவுஸ்’ லண்டன்

‘இந்தியா ஹவுஸ்’ என்ற இந்திய விடுதி லண்டன் நகரில் வட பகுதியில், ‘ஹைகேட்’ என்ற பேட்டையில் கிராம்வெல் ரோடு என்ற சாலையில் 65-ஆம் எண் இல்லத்தில் இருந்தது. அறைகள், உணவு இரண்டும் கொண்ட இந்த இல்லம், இந்திய மாணவர்களின் வசதிக்காக ஷாம்ஜி கிருஷ்ண வர்மா என்ற குஜராத்திச் செல்வரால் அமைக்கப்பட்டிருந்தது. ஷாம்ஜி கிருஷ்ண வர்மா ஸம்ஸ்கிருதத்திலும் தத்துவ ஆராய்ச்சியிலும் புலமை மிக்கவர்; பாரிஸ்டர் பட்டமும் பெற்று, லண்டன் நகரிலேயே தமது மனைவியுடன் வசித்தார். அங்கே இந்திய மாணவர்கள் இருக்கைக்காகவும் மரக்கறி உணவுக்காகவும் படும் பாட்டைக் கண்டு, தம் சொந்தச் செலவில் வீடு எடுத்து, இந்திய விடுதியைத் தோற்று வித்தார்.

ஷாம்ஜி கிருஷ்ண வர்மா குஜராத்தில், கட்ச் பகுதியில், மாண்ட்வி நகரில் 1857 – இல் பிறந்தவர். மாணவராக இருந்தபோதே ஆரிய ஸமாஜ ஸ்தாபகரான ஸ்வாமி தயானந்த ஸரஸ்வதியின் சீடரானார். ஸம்ஸ்கிருதத்தில் புலமை பெற்று மாக்ஸ்முல்லர், புரொபஸர் மோனியர் வில்லியம்ஸ் போன்ற மேல்நாட்டு அறிஞர்களின் பாராட்டு தலையும், நட்பையும் பெற்றார். இங்கிலாந்துக்குச் சென்று, கேம்பிரிட்ஜ் பல்கலை கழகத்தில் பி.ஏ. பட்டம் பெற்றுப் பிறகு பாரிஸ்டர் சட்டப் பரீட்சையிலும் தேர்ந்தார். ‘இந்தியாவில் எழுத்துக்கள் தோற்றம்’ என்ற தலைப்பில் ‘அவர் ராயல் ஏஷியாட்டிக் ஸொஸைட்டி என்ற உயர் சங்கத்தில் பேசி, அதன் அங்கத்தினராகத் தேர்வு பெற்றார். 1881 –இல், ஜெர்மனியின் தலைநகரமான பெர்லினில் கூடிய கீழ்த்திசைக் கலைகள் வல்லுநர் மகாநாட்டில் கலந்து

கொள்ளப் பிரிட்டிஷ் அரசு ஷாம்ஜி கிருஷ்ணவர்மாவை அனுப்பியது.

பிறகு ஷாம்ஜி இந்தியாவுக்குத் திரும்பி உதயபுரி, ரட்லம், ஜூனாகட் முதலிய சம்ஸ்தானங்களில் திவானாகப் பதவி வகித்தார். ஆனால் அவர் விரைவில் லோகமானிய திலகரின் தீவிர அரசியலில் ஆர்வம் கொள்ளவே, பிரிட்டிஷ் அதிகாரிகளுக்கு அவரைப் பிடிக்காமற் போயிற்று. 1897-இல் லோகமானிய திலகர் கைதானதும் ஷாம்ஜி இந்தியாவில் இருக்க விருப்பமின்றி லண்டன் வந்து அங்கேயே நிரந்தரமாக வசிக்கலானார்.

லண்டனில் அவர் ஹெர்பர்ட் ஸ்பென்ஸர் என்ற புகழ்பெற்ற தத்துவ ஆசிரியரிடம் மாணாக்கரானார். குரு பக்தி நிறைந்த ஷாம்ஜி, 1903-இல் தமது குருநாதர் ஸ்பென்ஸர் மறைந்தபோது அவரது நினைவாக ஆக்ஸ்போர்டு பல்கலைக் கழகத்தில் ஒரு விரிவுரையாளரை நியமிக்கத் தாம் ஆயிரம் பவுன் நன்கொடை வழங்குவதாக அறிவித்தார். அது மட்டுமன்று. ஸ்பென்ஸரின் நாட்டவர் கூட அவரது புகழுக்கேற்ற மரியாதை செய்ய முன்வராதிருந்த சமயம், ஷாம்ஜி லண்டனில் ஸ்பென்ஸருக்கு ஒரு சிலை நாட்டினார். ஸ்பென்ஸரின் போதனைகளில், "ஆக்கிரமிப்பை எதிர்ப்பது நியாயம் மட்டுமன்று; அத்தியாவசியமான கடமையும் கூட" என்ற கோட்பாடு ஷாம்ஜிக்கு மிகவும் பிடித்திருந்தது. இந்தியாவுக்கு இது நன்கு பொருந்துமென அவர் கருதினார்.

ஷாம்ஜிக்கு ஃபிரான்ஸிடம் பிரியம் அதிகம். பாரதம் ஃபிரெஞ்சுக் குடியரசு போலச் சுதந்தரக் குடியரசு ஆக வேண்டுமென அவர் விரும்பினார். ஃபிரெஞ்சுத் தேசீய கீதமான 'லா மார்ஸலேஸ்' பாடலை அவர் ஸம்ஸ்கிருத மொழியில் பெயர்த்துப் பரப்பினார்.

இந்திய விடுதலைக்காக 'இந்தியன் ஹோம் ரூல் ஸொஸைட்டி' என்ற சங்கத்தை லண்டனில் அமைத்து, "தி இந்தியன் ஸோஷாலஜிஸ்ட்' என்ற பத்திரிகையையும் அவர் நடத்தினார்.

ஷாம்ஜி கிருஷ்ண வர்மாவின் தர்மங்களில் 'சிவாஜி

ஸ்காலர்ஷிப்' என்பதும் ஒன்ருகும். இந்திய மாணவர்கள் ஐரோப்பாவில் கல்வி பயில இது உதவியது. பூர்வாங்கத் தேர்வு இந்தியாவில் நடந்தது; லோகமானிய திலகர், 'கால்' பத்திரிகை ஆசிரியர் சிவராம பராஞ்சபே முதலியோர் தேர்வாளர்களாக இருந்தனர். இந்தச் சிவாஜி ஸ்காலர்ஷிப் உதவி பெற்று லண்டனுக்கு வந்தவர் விஞயக தாமோதர ஸாவர்க்கர். இவரைப் பற்றி லோகமானிய திலகர் தனிப் படச் சிபார்சு செய்தார். "இவர் சென்ற வருஷம் பட்டப் படிப்பு முடித்தார். நல்ல ஊக்கமுள்ள இளைஞர். சுதேசீய இயக்கத்திலும் ஆர்வமுள்ளவர். இதனுல் தமது கல்லூரி அதிகாரிகளின் கோபத்துக்கு ஆளானவர். சர்க்கார் உத்தியோகம் ஏற்பதில்லையென விரதம் பூண்டவர். சிறந்த குணவான்." இவ்வாறு திலகர் சிபார்சு செய்தார். ஷாம்ஜிக்கும் ஸாவர்க்கரைப் பிடித்தது. திலகர் முன்பு ஸ்காலர்ஷிப் ஒப்பந்தத்தில் கையெழுத்திட்டு, முதல் தவணையாக 400 ரூபாய் பணம் பெற்றுக்கொண்டு லண்டனுக்கு வந்தார் ஸாவர்க்கர்.

ஸாவர்க்கர் மகாராஷ்டிரத்தில் புகழ்மிக்க சித்பவன் பிராம்மண சமூகத்தில் தோன்றியவர். 1857-இல் புகழ்வீசிய நான பட்ஞவிஸும், லோகமானிய திலகரும் இந்தச் சமூகத்தில் தோன்றியவர்களே.

ஸாவர்க்கர் 1883-இல் நாஸிக்கில் ஒரு ஜாகீர்தாரின் மகனுகப் பிறந்தார். இளம் வயதிலேயே அவர் கவிதைகள் எழுதினர்; இவை புன நகரப் பத்திரிகைகளில் வெளி வந்தன.

அக்காலம் மகாராஷ்டிரத்தில் பிளேக் நோய் பரவியது. பலர் உயிரிழந்தனர். டபிள்யூ. ஸி. ராண்ட் என்ற பிளேக் கட்டுப்பாட்டு அதிகாரியின் முரட்டுத்தனத்தால் மக்கள் கஷ்டப்பட்டார்கள். அதிகாரிகள் எச்சரிக்கையுடன் நடந்துகொள்ள வேண்டுமெனத் திலகர் எழுதினர். ஆனல் அதற்கு மாருக அதிகாரிகள் விக்டோரியா ராணியின் பட்டமேற்பு வைரவிழாவைப் பெரும் செலவில் கொண்டாடத் திட்டமிட்டார்கள். மக்களின் துயரின் நடுவே இவ்வாறு செய்வதைக் கண்டு வெகுண்ட இரண்டு

இளைஞர்கள் வைரவிழா தினத்தன்று ராண்டையும், ஆயர்ஸ்ட் என்ற இன்னோர் அதிகாரியையும் சுட்டுக் கொன்றார்கள். சாப்பேக்கர் சகோதரர்கள் என்ற அந்த இளைஞர்களின் செயலுக்குத் திலகரின் தூண்டுதலே காரணமென நினைத்த அரசாங்கம் திலகரைக் கைது செய்து ராஜத் துரோகக் குற்றம் சாட்டி, 18 மாதம் கடுங் காவல் தண்டனை விதித்தது. சாப்பேக்கர் சகோதரர்கள் தூக்கிலிடப்பட்டார்கள்.

சாப்பேக்கர் சகோதரர்களின் தியாகம் மகாராஷ்டிரத் தைக் கலக்கியது. ஸாவர்க்கர் பிரிட்டிஷாரை இந்தியாவை விட்டு வெளியேற்றத் தம் வாழ்நாள் முழுவதையும் அர்ப்பணிப்பதாகவும், உற்றார் உறவினரின் சுகதுக்கங் களைப் பாராட்டுவதில்லையென்றும் ஒரு நாள் இரவு தெய்வத்தின் முன்பு சபதம் செய்துகொண்டார். சத்ரபதி சிவாஜி பவானி அம்மன் முன் செய்துகொண்ட சபதத்தை யொத்தது இது.

விரைவில் ஸாவர்க்கர் தியாகத்துக்குத் துணிந்த பல இளைஞர்களைச் சேர்த்துக்கொண்டு, 'மித்திர மேளா' [நண்பர் சங்கம்] என்ற ரகசிய ஸ்தாபனத்தை நிறுவினார். நாட்டைப் பலாத்காரப் புரட்சிமூலம் விடுவிப்பதே அவர் களது லட்சியம்.

1902-இல் ஸாவர்க்கர் புனாவில் ஃபெர்குஸன் கல்லூரியில் படிக்கும்போது, 'மித்திர மேளா'வின் அங்கத்தினர்களின் பெருங்கூட்டம் ஒன்று நடத்தினார். இந்த ரகசியக் கூட்டத் தில் சங்கத்தின் பெயர் 'அபிநவ பாரத்' (புதிய பாரதம்) என மாற்றப்பட்டது. சங்க நடவடிக்கைகளை நாடெங்கும் விஸ்தரிக்க முடிவாயிற்று. நமது சுதந்தரப் போராட் டத்தில் பங்கு கொண்ட பல தலைவர்கள் இளமையில் 'அபிநவ பாரத்'தில் அங்கம் வகித்திருக்கிறார்கள். ஆசாரிய கிருபளானி, பி. ஜி. கேர் முதலியவர்கள் இவர்களில் சிலர்.

இது நடந்த சில ஆண்டுகளில்தான் ஸாவர்க்கருக்குச் சிவாஜி ஸ்காலர்ஷிப் கிடைத்தது. ஸாவர்க்கர் 1906-ஆம் ஆண்டு ஜூலை மாதம் லண்டனை அடைந்தார். 'இந்தியா ஹவு'ஸில் அவர் ஜாகை வைத்துக் கொண்டார்.

'கிரேஸ் இன்' என்ற அமைப்பில் பதிவு செய்துகொண்டு, பாரிஸ்டர் படிப்புக்குத் தம்மைத் தயார் செய்து கொள்ளலானார்.

ஸாவர்க்கரின் தேசப் பற்று ஷாம்ஜி கிருஷ்ண வர்மாவுக்குப் பிடித்திருந்தது. தாமும் 'அபிநவ பாரத்' சங்க அங்கத்தினரானார். 1907 - இல் இந்திய விடுதி நிர்வாகத்தை ஸாவர்க்கரிடம் ஒப்படைத்துவிட்டு, ஷாம்ஜி கிருஷ்ண வர்மா பாரிஸ் நகரில் வசிக்கப் போய்விட்டார். பாரிஸ் நகரில் இந்தியப் புரட்சியாளர்கள் அனைவருக்கும் உறு துணையாக மதாம் பிக்காஜி காமா என்ற பார்ஸிப் பெண்மணி இருந்தார்.

ஸாவர்க்கர் இந்திய விடுதியில், 'சுதந்தர இந்தியா சங்கம்' என்ற நிறுவனத்தை உண்டாக்கினார். ரகசியச் சங்கமான 'அபிநவ பாரத்'துக்கு ஆள் சேர்க்க இந்த வெளிப்படைச் சங்கம் பயன்பட்டது. வாரா வாரம் இந்திய விடுதியில் இந்திய உணவு விருந்து நடந்தது. விருந்து முடிந்ததும் இந்தியா பற்றிப் பேச்சுகளும், விவாதங்களும் நடந்தன. வழக்கமாக ஏழு பேர்தாம் குடியிருக்கும் இந்திய விடுதியில், விருந்து நாட்களின்போது விடுதியின் இருபது அறைகளிலும் இளைஞர்கள் நிறைந்துவிடுவார்கள்.

இந்தப் புரட்சிக் கூடத்துக்குள்தான் வ. வே. ஸு. ஐயர் தாம் லண்டன் வந்த சின்னாட்களில் காலடி எடுத்து வைத்தார். ஐயரைத் தாம் முதன் முதலில் சந்தித்ததை ஸாவர்க்கர் பின்வருமாறு வர்ணிக்கிறார் :

"1907-ஆம் ஆண்டு அல்லது சற்று முன்பின் இருக்கலாம். ஒரு நாள் நாங்கள் மாடியிலிருந்து கீழே உணவு உட்கொள்ள இறங்கி வந்த சமயம், வேலைக்காரப் பெண் எங்களிடம் ஒரு 'விஸிட்டிங் கார்'டை நீட்டி, எங்களைக் காண ஒரு கனவான் முன் அறையில் காத்திருப்பதாகச் சொன்னாள். சற்று நேரத்துக்கெல்லாம், பகட்டாக ஐரோப்பிய உடை தரித்த ஒரு கனவான் உள்ளே நுழைந்தார். அவர் எங்களுடன் ஆர்வத்தோடு கை குலுக்கினார். தாம் ரங்கூனில் வக்கீல் தொழில் பார்ப்பதாகவும், பாரிஸ்டர் பட்டம் பெற இங்கிலாந்துக்கு வந்துள்ளதாகவும்

சொன்னர். அவருக்கு வயது முப்பதுக்கு மேலிருக்குமெனத் தோன்றியது. நாங்களெல்லோரும் இளைஞர்களாக இருப்பதைக் கண்டு அவர் வியந்தார். தாம் ஆங்கில இசை கற்கப் போவதாயும், ஆங்கில நடனத்திலும் தேர்ச்சிபெறத் தீர்மானித்துள்ளதாயும் அவர் சொன்னர். பெரிய பெரிய பிரச்னைகள் நம் முன் இருக்கும்போது நமது இளைஞர்கள் அற்பக் கேளிக்கைகளில் காலத்தை வீண் செய்வது பற்றி நாங்கள் வழக்கம் போல் முணுமுணுத்தோம், எங்கள் கண்டனத்தை அவர் ஏற்கவில்லை. எனினும் அதன் நியாயத்தை அவர் ஓரளவு உணர்ந்ததாகத் தோன்றியது. பிறகு அவர் எங்களிடம் விடை பெற்ருர். அடிக்கடி வந்து பார்ப்பதாகச் சொல்லிச் சென்ருர். அந்தக் கனவான்தான் திரு வி. வி. எஸ். ஐயர்.''

ஸாவர்க்கர் ஐயரின் வயதை அதிகமாக மதிப்பிட்டு விட்டார். ஐயருக்கு அப்போது வயது 26 தான் ; வலுவான உடற்கட்டுக் கொண்ட அவர் அதிக வயதுள்ளவராகத் தோன்றியிருக்கலாம். ஸாவர்க்கர் ஐயரைவிட இரண்டு வயது இளையவர் ; மெலிந்த உடல் உள்ளவர் ; ஆதலால் அவர் மேலும் இளையவராக ஐயருக்குத் தோன்றியிருக்கலாம்.

இந்த முதல் சந்திப்பு இருவர் மனத்திலும் ஆழ்ந்த பாதிப்பை உண்டாக்கியது. இருவரும் நெருங்கிய நண்பர்களானுர்கள். ஆயுளளவும் அவர்களது நட்பு நீடித்தது.

இந்தச் சந்திப்பின் முதல் பலன் ஐயர் இந்திய விடுதியில் குடியிருக்க வந்துவிட்டார். ஐயருக்கு முன்பே லண்டன் வந்திருந்த டாக்டர் டி. எஸ். எஸ். ராஜனும் சில நாட்களில் இந்திய விடுதிக்குவ ந்துவிட்டார். ஐயர் 'அபிநவ பாரத்' சங்கத்தின் உபதலைவரானுர் ; ஸாவர்க்கரின் வலது கையானுர். ஸாவர்க்கர், ஐயர், ராஜன் மூவரும் இந்திய நடவடிக்கைகளின் ஜீவநாடிகளாயினர்.

இந்திய விடுதிக்கு வந்து சேர்ந்த ஐயரிடம் பல மாற்றங்கள் வெளிப்படையாகவே தெரிந்தன. பகட்டான உடைகள் போய், சாதாரண உடைகள் அணியலானுர் அவர். மேல்நாட்டு இசையும் நடனமும் மறந்து

போயின. செலவு மிகுந்த உபசார விருந்துகள் நின்று போயின. ஏன், பாரிஸ்டர் படிப்புக்கூட இரண்டாம் பட்சமாயிற்று.

இந்திய விடுதி பற்றி டாக்டர் ராஜன் கூறுகிறுர்:

"அக்காலத்தில் லண்டனில் இந்தியர்கள் சாப்பிடும் உணவு கிடைக்காது. ஆனல் எங்கள் இருப்பிடத்தில் இந்திய உணவுதான் சமைத்து வந்தோம். மாதம் ஒரு முறை அல்லது இரண்டு முறை நடத்தும் எங்கள் சங்கக் கூட்டத்துக்குக் குறைந்தது முப்பது இந்தியர்களாவது வருவார்கள். அங்கத்தினர்கள்தாம் வரவேண்டும் என்கிற நிர்ப்பந்தம் இல்லை. இந்த முப்பது பேர்களில் பாதிப்பேராவது இந்திய உணவு ஒரு வேளையாகிலும் சாப்பிட்டுப் போகலாம் என்று வருவார்கள். உண்ணும் பொழுதும், ஓய்வு நேரங்களிலும் இந்திய விடுதலை இயக்கத்தின் தத்துவங்கள், கையாள வேண்டிய முறைகள், இந்தியப் பத்திரிகைகளில் வரும் செய்திகளைப் பற்றிய வாக்கு வாதங்கள், இவை போன்ற காரியங்களையே செய்து கொண்டிருப்போம். எங்களுக்கு உளவுப் போலீஸ்காரர்களின் தொல்லை இருந்தது. இதனல் விடுதியில் வசிப்போர் தொகை ஒரு பொழுதும் ஏழு பேர்களுக்கு மேல் போகவில்லை."

லண்டனுக்குப் படிக்க வந்த இந்திய இளைஞர்களில் பெரும்பாலோர் பணக்கார வீட்டுப் பிள்ளைகள். அவர்களுக்குத் தாய்நாட்டைப் பற்றிய கவலையே இராது. பிரிட்டிஷ்காரர்களைக் கண்மூடித்தனமாகப் பின்பற்றுவதே அவர்களுக்குத் தெரியும். நல்ல உத்தியோகம் அல்லது தொழிலில் அமர்ந்து, நன்ருகச் சம்பாதித்து, சுகவாசியாக வாழ்வதுதான் வாழ்க்கையின் லட்சியம் என அவர்கள் நினைத்தார்கள். இந்த மனப்பான்மையை மாற்றவே இந்திய விடுதி இளைஞர்கள் முயன்றனர். அவர்களிடம் பணவசதி இல்லை. ஆனல் அசைக்க முடியாத நம்பிக்கை இருந்தது. அவர்களுக்கு இந்திய சரித்திரம் வெறும் பழங் கதையல்ல; வரலாற்று வீரர்கள் கனவுலக மக்களல்ல; இந்தியாவின் வரலாறு அழியாத வளமூட்டும் ஜீவ

கதை, வரலாற்று வீரர்கள் பெருமை கொள்ளத்தக்க முன்னோர்கள். ஆதலால் அவர்களது நினைவு நாட்களைக் கொண்டாட வேண்டும்; தீபாவளி, தசரா போன்ற இந்தியப் பண்டிகைகளையும் கொண்டாட வேண்டும் என்று இந்திய விடுதி இளைஞர்கள் கருதினார்கள்.

இம்மாதிரிக் கொண்டாட்டங்களுக்கு அவர்கள் அவ் வமயம் லண்டனில் வந்திருக்கக் கூடிய இந்தியத் தலைவர் களைத் தலைமை வகிக்க அழைப்பார்கள். ஆனால் அத் தலைவர்களில் பெரும்பாலோர் மிதவாதிகளானபடியால், அவர்கள் அழைப்பை ஏற்கமாட்டார்கள்; பிரிட்டிஷ் அதிகார வர்க்கம் ஏற்பாடு செய்யும் கூட்டங்களில் கலந்துகொள்ளவே அவர்கள் விரும்புவார்கள். அந்தக் கூட்டங்களிலும், திலகர் கட்சியைச் சேர்ந்த தீவிரவாதி களைத் தாக்குவதில் உற்சாகமாக இருப்பார்கள். இந்திய விடுதி இளைஞர்கள் இந்தக் கூட்டங்களுக்கும் சென்று மிதவாதத் தலைவர்கள் திலகரையும் புரட்சியாளர்களையும் தாக்குவதற்கு இடமளிக்காமல் இடைமறிப்பார்கள்.

இந்திய விடுதி இளைஞர்கள் பிரிட்டிஷ் பத்திரிகைகளில் உள்ளவர்களுடன், முக்கியமாக இந்தியாவிடம் அனு தாபம் உள்ள ஐரிஷ்காரர்களுடனும் இளைஞர்களுடனும் நட்புக் கொண்டு, இந்திய விடுதலை முயற்சிகள் பற்றிய ஒன்றிரண்டு செய்திகளாவது அப்பத்திரிகைகளில் வெளி யாகுமாறு செய்வார்கள்.

இந்திய சுதந்தரம் பற்றிய சிறு பிரசுரங்களைச் சில சமயம் வெளியிட்டு, பிரிட்டிஷ் பொதுவாழ்வில் செல்வாக்குக் கொண்ட பார்லிமென்ட் அங்கத்தினர்களுக்கும் பிறருக் கும் இலவசமாக அனுப்புவார்கள். இந்திய மக்கள் தங்கள் மதிமயக்கத்திலிருந்து விழித்தெழத் தூண்டும் கோரிக்கை களை அச்சிட்டு, அவைகளை ரகசியமாகப் பயணிகள் மூலம் இந்தியாவுக்கு அனுப்பி விநியோகிக்க ஏற்பாடு செய்வார்கள்.

'அபிநவ பாரத்' சங்கம் தன் லட்சியங்களைப் பின் வருமாறு அதிகாரபூர்வமாக விளக்கியது: "தாய்நாட்டை விடுவிக்க வேண்டும். இதைப் போர் மூலம் சாதிக்க

வேண்டும். இதற்காகத் திட்டமிட்டுத் தயார் செய்து கொள்ள வேண்டும். தயாரிப்பு என்றால் (1) சுதேசியை ஆதரித்தல்; அந்நியப் பொருள்களை விலக்குதல், தேசீயப் பற்றுடன் இருத்தல் (2) போர்க் கருவிகள், தளவாடங்கள் முதலியவற்றை வாங்கி அண்டை நாடுகளில் சேமித்து வைத்தல்; (3) சிறு கைத்தொழிற்சாலைகளைத் துவக்கு தல்; (4) துப்பாக்கி முதலிய ஆயுதங்களை அந்நிய நாடு களில் வாங்கி ரகசியமாக இந்தியாவுக்கு அனுப்புதல்; (5) முடிந்தபோது கொரில்லாப் போர் முறையைக் கையாளுதல்; (6) பெரும் புரட்சியாக வெகுண்டெழச் சரியான சமயம் எப்போது வருமென விழிப்புடன் காத்திருத்தல்.''

ஐரோப்பாக் கண்டம் வேகமாகப் பெரும் போர் ஒன்றை நோக்கி விரைந்து செல்வதால், இந்திய மக்கள் புரட்சி செய்வதற்கான சந்தர்ப்பமும் விரைந்து நெருங்கி வருகிறது என 'அபிநவ பாரத்' நினைத்தது.

ஐர்லாந்து, துருக்கி, ருஷ்யா முதலிய நாட்டுப் புரட்சி யாளர்களுடனும் இந்திய விடுதி இளைஞர்கள் தொடர்பு கொண்டார்கள். வெடிகுண்டு செய்வது, ஆயுதங்களைக் கையாளுவது, புரட்சி அணிகளை உருவாக்குவது என்பன போன்ற விஷயங்களைப் பற்றி அவர்கள் படித்தார்கள். இந்திய விடுதியின் பின்கொல்லையிலேயே வெடிகுண்டு செய்தும் பார்த்தார்கள். வெடி மருந்தான பிக்ரிக் அமிலத் தினால் மஞ்சள் கறை பட்ட கையுடன் ஸாவர்க்கர் அடிக்கடி காணப்பட்டார்.

பாரிஸில் வசித்த ருஷ்ய அராஜகப் புரட்சியாளர் ஒரு வரிடம் வெடிகுண்டு செய்வது பற்றி நேரில் அறிந்து கொள்ள ஸேனுபதி பாபத், ஹேமசந்திர தாஸ் என்ற இரண்டு அங்கத்தினர்களைப் பாரிஸுக்கு அனுப்பியது 'அபிநவ பாரத்'. அவர்கள் வெடிகுண்டு செய்வதைக் கற்ற துடன், செய்முறையை விவரமாக விளக்கும் 'பாம் மானு வல்' (வெடிகுண்டு விளக்க நூல்) என்ற பிரசுரத்தையும் கொண்டு வந்தார்கள். இப்பிரசுரத்தைப் பிரதியெடுத்து ஸேனுபதி பாபத், ஹேமசந்திரதாஸ், ஹோதிலால் வர்மா

ஆகிய மூவர் மூலம் இந்தியாவுக்கு அனுப்பி வைத்தனர். அவர்கள் இந்தியாவுக்குச் சென்று அங்கே இந்தியப் புரட்சித் தலைவர்களிடம் இப்பிரசுரப் பிரதிகளைச் சேர்த்தார்கள். இதன் பலன், இந்தியாவின் முதல் வெடி குண்டு 1908-ஆம் ஆண்டு, வெடித்தது; வங்காளத்தில் முஸபர்பூர் நகரில் குதிராம் போஸ் என்ற 19 வயது இளைஞன் ஜில்லா மாஜிஸ்டிரேட் கிங்ஸ்ஃபோர்டு மீது வீசினான்.

சர்வதேச ஸோஷலிஸ்ட் காங்கிரஸ் கூட்டம் ஜெர்மனியில் ஸ்டுட்கர்ட் நகரில் 1907-ஆம் ஆண்டு ஆகஸ்ட் மாதம் நடைபெற இருந்தது. அந்தக் கூட்டத்தில் கலந்து கொள்ள மதாம் பிக்காஜி காமா, ஸர்தார் ஸிங் ராணா, ஆகிய இரு அங்கத்தினர்களை 'அபிநவ பாரத்' அனுப்பியது. மதாம் காமா பாரிஸில் வசித்து வந்தார். தாதாபாய் நவுரோஜி பிரிட்டிஷ் பார்லிமெண்ட் அங்கத்தினராக இருந்த சமயம் அவரது செயலாளராக இருந்தவர் மதாம் காமா. அந்த வீராங்கனை, இந்தியா சுதந்தரம் அடைய வேண்டும் என்று ஒரு தீர்மானத்தை ஸ்டுட்கர்ட் மகாநாடு நிறைவேற்றச் செய்தார். 'சுதந்தர இந்தியாவின் கொடி ஒன்றையும் அவர் மகாநாட்டில் பறக்கவிட்டார். இதை மதாம் காமா தாமாகவே தயாரித்திருந்தார். ஃபிரெஞ்சுக் கொடியின் சிவப்பு, வெண்மை, நீல வர்ணங்களை எடுத்துக் கொண்டு, மூன்று பட்டைகள் நீளவாட்டத்தில் ஒன்றன் மேல் ஒன்றாக அமைந்ததே இக்கொடி. மேல் சிவப்புப் பட்டையில் எட்டு நட்சத்திரங்கள்; நடு வெள்ளைப் பட்டையில் 'வந்தே மாதரம்' என்ற வாசகம் ஸம்ஸ்கிருத எழுத்தில்; கீழ் நீலப் பட்டையில், இடதுபுறம் சூரியன், வலதுபுறம் சந்திரன். நட்சத்திரங்கள் அக்கால பாரதத்தின் எட்டு மாகாணங்களையும், சூரிய சந்திரர்கள் ஹிந்து, முஸ்லிம் மக்களையும் குறிக்கும். இந்தக் கொடியின் மாதிரியில் செய்யப்பட்ட ஒரு கொடி வ. வே. ஸு. ஐயர் வீட்டில் வெகு காலம் இருந்தது. தாம் சிறுவனாக இருந்தபோது பாண்டிச்சேரியில் தங்கள் வீட்டில் இக்கொடியை 1916 – 20 ஆண்டுக் காலத்தில்

பார்த்துள்ளதாக ஐயரின் புதல்வர் டாக்டர் வ. வே. ஸு. கிருஷ்ணமூர்த்தி தெரிவிக்கிறார்.

மதாம் காமா இக்கொடியைச் சர்வதேச ஸோஷலிஸ்ட் மகாநாட்டில் பறக்கவிட்டு, "இதோ பாருங்கள், சுதந்தர இந்தியாவின் கொடி! இந்திய இளைஞர்களின் தியாக ரத்தத்தால் புனிதமாகிவிட்ட கொடி இது. அன்பர்களே, எழுந்து நின்று சுதந்தர இந்தியாவின் கொடிக்கு வணக்கம் செலுத்துங்கள். இந்தக் கொடியின் பெயரால் உங்களை அழைக்கிறேன், உலகின் ஐந்தில் ஒரு பகுதி மக்களுக்கு விடுதலை கிடைக்கச் சுதந்தரத்தில் ஆர்வமுள்ள அனைவரும் உதவுங்கள்!" என்று உருக்கமாகப் பேசினார். மகாநாட்டில் அங்கத்தினர் அனைவரும் ஒருமுகமாக எழுந்து நின்று கொடியை வணங்கினார்கள்.

'அபிநவ பாரத்' சங்கத்தின் நடவடிக்கைகளில் ஒன்று பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்துக்கு எதிராகப் பல நாடுகளில் ஐக்கியமாக ஒரே சமயம் கிளர்ச்சி தோன்றச் செய்வதாகும். லண்டனிலும், பாரிஸிலும் அக்காலம் வசித்துவந்த எகிப்தியத் தேசீயத் தலைவர்களுடன் தொடர்பு கொண்டு, இந்தியாவில் புரட்சி நடந்தால் ஸூயெஸ் கால்வாய் வழியாகத் தன் துருப்புகளை பிரிட்டன் அனுப்ப முடியாமல் செய்ய எகிப்தியர்கள் ஸூயெஸ் கால்வாயில் தடை உண்டாக்க வேண்டும் என்று ஆலோசித்தார்கள். ஐர்லாந்து விடுதலைப் படையான ஸின்ஃபீன் இயக்கத் தலைவர்களுடன் பழகி, அந்த இயக்கத்தினர் அமெரிக்காவில் நியூயார்க் நகரில் நடத்திவந்த 'கயேலிக் அமெரிக்கன்' என்ற பத்திரிகையில் பிரிட்டனுக்கு எதிராகப் பல கட்டுரைகளை ஸாவர்க்கர் வரைந்தார். இக்கட்டுரைகள் ஐரோப்பிய மொழிகளில் ஆக்கப்பட்டு, ஐரோப்பா எங்கும் வெளியிடப்பட்டன. துருக்கிப் புரட்சித் தலைவர் கெமால் ஆடா துர்க் அவ்வமயம் லண்டனில் இருந்ததைப் பயன்படுத்தி, ஐயர் அவரை நேரில் சந்தித்துத் தொடர்பு கொண்டார்.

பிற நாட்டுத் தேசபக்தர்களின் வாழ்க்கை வரலாறு இந்திய தேசபக்தர்களுக்கு வழிகாட்டி உதவும் என்றும்

இந்திய விடுதி இளைஞர்கள் நம்பினார்கள். ஆஸ்திரியாவிடமிருந்து இத்தாலிக்கு விடுதலை வாங்கித் தந்த வீரர் மாஜினியின் சுயசரிதையையும், இத்தாலியை ஐக்கிய நாடாக ஆக்கிய தேசபக்தர் கரிபால்டியின் வரலாற்றையும் அவர்கள் பல மொழிகளில் எழுதி இந்தியாவிலுள்ள பத்திரிகைகள் வெளியிட அனுப்பினார்கள். வ. வே. ஸு. ஐயர் எழுதிய 'கரிபால்டி சரிதம்' பாண்டிச்சேரியிலிருந்து பாரதியாரை ஆசிரியராகக் கொண்டு வெளிவந்த 'இந்தியா' வாரப் பத்திரிகையில் தொடர்ச்சியாக வெளிவந்தது. அத்துடன் ஐயர் 'லண்டன் கடிதம்' என்ற தலைப்பில் வாரா வாரம் ஐரோப்பாவிலும் பிரிட்டனிலும் நடக்கும் சம்பவங்களில் இந்தியாவுக்கு அக்கறை உள்ளவற்றை எடுத்துக் கோத்து அனுப்பினார். சாதாரணமாக இந்தியர்கள் நினைப்பது போல் பிரிட்டன் அவ்வளவு அசைக்க முடியாத பலம் கொண்டதல்ல என்றும், அதன் ஆட்சியும் அவ்வளவு நேர்மையானதல்ல என்றும், அது இந்தியாவில் மட்டுமல்ல, தனது அண்டைப் பிரதேசமான ஐர்லாந்திலும் எப்படி ரத்தம் சிந்தக் கொடுமைகள் புரிகிறது என்றும், பிரிட்டிஷ் ஆதிக்கத்தை ஒழிக்க ஐரிஷ்காரர்கள் எப்படி ஆக்ரோஷத்துடன் பதில் நடவடிக்கை தொடுக்கிறார்கள் என்றும் இத்தியாதி பல விஷயங்கள் 'லண்டன் கடித'த்தில் இருந்தன.

டாக்டர் ராஜன் ஜான்ஸி ராணி பற்றி எழுதினார். இதுவும் 'இந்தியா' பத்திரிக்கையில் வெளிவந்தது. ஸாவர்க்கர் 1857-இல் நடந்த கிளர்ச்சி வெறும் சிப்பாய்க் கலகமல்ல ; இந்திய மக்களின் முதல் சுதந்தரப் போராட்டமேயாகும் என்று தீவிரமான ஆராய்ச்சி செய்து, பலவித ஆதாரங்களுடன் நிரூபித்தார். இதை ஒரு நூலாக மராட்டி மொழியில் அவர் எழுத, பிறகு லண்டனில் இருந்த இளைஞர்கள் ஒன்றுகூடி இதை ஆங்கிலப்படுத்தினார்கள். ஆங்கில வாசகத்துக்கு இறுதி வடிவம் கொடுத்தவர் வ. வே. ஸு. ஐயர்.

எதையும் முயன்று கற்கும் திறனுள்ள ஐயர் லண்டன் வந்த கொஞ்ச காலத்தில் லண்டன் பங்கு மார்க்கெட்

நுணுக்கங்களை நன்கு அறிந்துகொண்டு, தமது மைத்துனர் பசுபதி ஐயருக்காகக் கொடுக்கல் வாங்கலில் ஈடுபடலானார்.

ஓய்வு நேரங்களில் பிரிட்டிஷ் மியூஸியத்துக்குச் சென்று அங்கே நெப்போலியன் வாழ்க்கை வரலாற்றைப் பற்றிய விவரங்கள் சேகரித்தார். ஃபிரெஞ்சு, பிரிட்டிஷ் சரித்திர ஆதாரங்கள், கடிதப் போக்குவரத்துக்கள், நூல்கள் எல்லாவற்றையும் அலசிப் பார்த்து 'நெப்போலியன்' என்ற தமிழ் நூல் ஒன்றை ஐயர் எழுதினார். இந்நூல் பல்லாண்டுகளுக்குப் பின், பாண்டிச்சேரியில் வெளியாயிற்று. நவீனப் போர்க்கலை இந்திய தேசீயவாதிகள் அறியாத விஷயமாதலால், ஐயர் அக்கலையை நம்மவர் அறிய வேண்டுமென்று நெப்போலியனது போர்த்திறனை நுணுக்கமாக ஆராய்ந்து வெளியிட்டார். இந்த அரிய நூலை மேலும் செம்மைப்படுத்திப் பாண்டிச்சேரியில், பிற்காலத்தில் அச்சிட்டு வெளியிட்டார். ஆனால் பிரிட்டிஷ் இந்தியாவுக்குள் நுழையாதபடி நூலுக்குப் பிரிட்டிஷ் அதிகாரிகள் தடை விதித்தார்கள்; கிடைத்த நூல் பிரதிகளையெல்லாம் அழித்தார்கள். துரதிர்ஷ்டவசமாக ஐயர் குடும்பத்தாரிடமோ நண்பர்களிடமோகூட இந்த நூலின் பிரதி இல்லாமற் போய்விட்டது.

ஆனால் அதிர்ஷ்டவசமாக, ஐயரின் பிற நூல்கள் (ஒன்றிரண்டு தவிர) நமக்குப் பத்திரமாகக் கிடைத்துள்ளன. அதிசயிக்கத்தக்க வகையில், 1907 - 10 ஆண்டுகள் லண்டனில் இருந்த சமயம் ஐயர் உபயோகித்த 'குறிப்பு நோட்டுப் புத்தகம்' ஒன்று எவ்வளவோ நெருக்கடிகளையும் தாண்டி நமக்கு முழுமையாகக் கிடைத்துள்ளது.

இந்தச் சிறிய, கெட்டி அட்டை, ரூல் போட்ட நோட்டுப் புத்தகத்தை ஐயர் லண்டன் வந்த முதல் வாரமே வாங்கியிருக்கிறார். இதில் அவர் எழுதியுள்ள நானாவிதக் குறிப்புகள் மூலம் நமக்கு அவரைப் பற்றியும் இந்திய விடுதிச் சகாக்கள் பற்றியும் வேறு எங்கும் கிடைக்காத பல தகவல்கள் கிடைக்கின்றன. ஐயரின் உடைமைகளைச் சல்லடை போட்டுச் சலித்த பிரிட்டிஷ் துப்பறியும் நிபுணர்கள்

கையிலோ, பிற்காலத்தில் பாண்டிச்சேரியில் பிரிட்டிஷ் உளவாளிகள் கையிலோ அகப்படாமல் இந்த நோட்டுப் புத்தகம் சேதமின்றித் தப்பியது வியப்பே. இந்த நோட்டு இன்று, ஐயரின் பிற தஸ்தாவேஜுகளைப் போலவே, புது டெல்லி நேரு நினைவு மியூசியத்தில் பாதுகாக்கப்பட்டு வருகிறது. ஐயரின் குமாரர் டாக்டர் வ. வே. ஸு. கிருஷ்ண மூர்த்தி தமது பிதாவின் தஸ்தாவேஜுகள் அனைத்தையும் தேசத்துக்கு அன்பளிப்பாகக் கொடுத்துவிட்டார்.

ஐயரின் லண்டன் நோட்டுப் புத்தகத்தில் ஒரு குறிப் பிடத்தக்க விஷயம், ஐயர் ஆங்கிலம், தமிழ், ஸம்ஸ் கிருதம், கிரந்தம் முதலிய எழுத்துக்களில் மட்டுமன்றி, ஏராளமான பக்கங்கள் ஆங்கிலச் சுருக்கெழுத்திலும் எழுதியிருப்பதாகும். ஆங்கிலச் சுருக்கெழுத்து 'பிட்மன்' முறைப்படி இருந்தாலும், தமக்கு மட்டுமே புரியக்கூடிய பல ரகசியச் சுருக்கங்களை அவர் உபயோகித்துள்ளார்.

லண்டன் நோட்டுப் புத்தகம் வாங்கப்பட்ட தேதி ஐயரது கையெழுத்தில், தெளிவான சங்கிலி எழுத்துக் களில், "வி. வி. எஸ். ஐயர், 15 அக்டோபர் 1907" என்று எழுதப்பட்டுள்ளது. மற்றொரு குறிப்பு, "லண்டனில் வந்து சேர்ந்தேன், 10 அக்டோபர் 1907" என்று தெரி விக்கிறது. இதற்குப் பக்கத்திலேயே ஒரு குறிப்பு, "சுய ராஜ்யம் விரைவிலேயே பெறப்படவேண்டும்" என்று காண்கிறது.

முன்பக்க அட்டையின் உள்பக்கத்தில் ஒரு குறிப்பு வருமாறு உள்ளது :

| | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| "1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 | 9 | 0 |
| S | U | B | R | A | M | O | N | I | E" |

இது என்ன என்று எவ்வித விளக்கமும் இல்லை. எதற்காக இவ்வாறு ஐயர் எழுதி வைத்துள்ளார்?

ரகசியமாக விஷயங்களைத் தெரிவிப்பதற்கான ரகசிய பாஷை ஏற்பாடாக இது இருக்குமென ஊகிக்கத் தோன்றுகிறது. ஆங்கில எழுத்துக்கள் 26-க்கு 26 எண் களைக் கொடுத்து, எண்களில் எழுதி ரகசியமாகச் செய்தி

அனுப்ப முடியும். அதுபோன்ற ஏற்பாட்டுக்கு இது 'திறவு கோல்' ஆக இருக்கலாமென்று தோன்றுகிறது.

*1, 2, 3...* என்ற பத்து எண்களை ஐயரின் பெயரில் உள்ள ஆங்கில எழுத்துகளுக்குத் தந்து, ஆங்கில வரிசையில் மீதம் உள்ள எழுத்துக்களுக்கும் இதே போல எண்களைக் கழித்தல், பெருக்கல் குறிகளுடன் கொடுத்து ஆங்கில எழுத்து வரிசையை இவ்வாறு காட்டலாம்:

| | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| A | 5; | B | 3; | C | −8; | D | ×1; | E | 0; |
| F | −7; | G | ×2; | H | −6; | I | 9; | J | ×3; |
| K | −5; | L | ×4; | M | 6; | N | 8; | O | 7; |
| P | −4; | Q | ×5; | R | 4; | S | 1; | T | −3; |
| U | 2; | V | ×6; | W | −2; | X | ×7; | Y | −1; |
| Z | ×8; | | | இடைவெளிக் குறி | | | | $ | |

தெளிவான ஆங்கிலத்தில் வாசகம் கொண்ட

"SENDING ONE DOZEN BROWNING AUTOMATIC PISTOLS PASS TO SWAMI ACKNOWLEDGE AIYAR"

என்பது போன்ற செய்தியைக் கூட எண்களாக (மேலே உள்ள முறைப்படி) வருமாறு எழுதலாம்:

"$ 108 ×198 ×2 $ ×780 $ ×17 ×808 $
347 −2898 ×2 $ 52 −3765 -39 −8........"

ஐயருக்கு வெடிமருந்து ரசாயனப் பொருள்களில் இருந்த சிரத்தையை, லண்டன் நோட்டுப் புத்தகத்திலுள்ள பின்வரும் குறிப்புகள் காட்டுகின்றன:

"பிராக்ஜீ ஸொர்ஜி அண்டு கோ, காஜி ஸையது தெரு, பம்பாய் - அனிலின், அலிஜாரின் சாயங்கள், கந்தகம், நேரடியான அமிலச் சாயங்கள். விக்டோரியா கமர்ஷியல் ஏஜென்ஸி, டாக்கா, வங்காளம். 20 ரூபாய், வி. பி. பி. க்கு 22 குரோஸ் அனுப்பப்படும். 22 டஜன் ரூ. 2-க்கு இரண்டணா தபால் தலைகளாக முன்பணம் அனுப்பினால்."

மற்றொரு பக்கத்தில், 'ஒரு வேவுகாரனின் நினைவுகள்: ரகசியப் படையில் 25 வருடப் பணி' என்ற நூலின்

தலைப்பு குறிப்பிடப்பட்டுள்ளது. இந்நூல் லண்டன் ஹெய்னிமன் பிரசுரக் கம்பெனி வெளியிட்டது; விலை 2 ஷில்லிங் 6 பென்ஸ்.

இந்நூலில் ஐயருக்குள்ள சிரத்தை புரிந்துகொள்ளக் கூடியதே.

'ஹிந்து தேசீய கோஷம்' என்ற தலைப்பில் பின்வரும் ஹிந்தி மொழி கோஷம் தரப்பட்டுள்ளது (ஆங்கிலத்தில்):

"ஹிந்து, ஹிந்து, ஹிந்துஸ்தான் (3 தடவை)
ஹிந்துஸ்தான் (மெதுவாக) ஆலேஷான்
பதே நஹீ நிஷான்
ஷான் ஷான் ஷான்
தேரி ஹிந்துஸ்தான்."

விளையாட்டுப் போட்டிகள் போன்ற கூட்டங்களில் தத்தம் கட்சிகளை ஊக்குவிக்க இவ்வாறு கோஷமிடுவது மேல்நாடுகளில் வழக்கம். அதை இந்திய விடுதலைக்காக மாற்றியமைத்துள்ளார் ஐயர். இவ்விதக் கோஷங்கள் தேசீய ஒற்றுமையை வளர்க்குமென்பது ஐயரது கருத்து.

மற்றொரு பக்கத்தில் ஐயர் ஆங்கிலக் கவிதை ஒன்றை வரைந்துள்ளார். 'வந்தே மாதரம்' என்ற அந்த ஏழு பா-பாடலில் சில பாக்கள் வருமாறு.

VANDE MATARAM

1. Hail land of ancient fame
Bharat of holy name,
Motherland mine!
Teach me to know thy worth
O Land of Sacred Birth.
Thou Soul of all the Earth,
My heart is thine!

2. Wherever my feet may roam,
Thou art my well-loved home,
My Country dear!

The magic of thy air,
And all thy beauties rare
But haunt us everywhere
Both far and near.

3. All men their Gods may bring
All men their creeds may Sing
On thy broad breast.
Thy gracious arms embrace,
All who accept thy grace,
Thou Mother of the Race,
Forever blest.

*(இப்பாக்களின் சாரம்: 1. "பண்டைப் புகழ் படைத்த பாரதமே, புனித நாமம் கொண்ட என்னருமைத் தாய் நாடே, புண்ணிய பூமியே, பூமிக்கெல்லாம் நடுநாயகமே, உனது பெருமையை உணர எனக்குக் கற்றுக் கொடு. என் இதயம் உனக்கே!*

*2. "என் கால்கள் எங்கே திரிந்தாலும், எனது அருமைத் தாயகமே, நீயே எனது அன்பு கனிந்த இல்லம். உனது காற்றின் மாயமும், எல்லையற்ற பேரழகுகளும் நான் எங்கே சென்றாலும் என் மனத்தை விட்டு அகலா.*

*3. "தத்தம் கடவுளரை அவரவர் கொண்டு வரலாம்; தத்தம் மதங்களை அவரவர் துதித்துப் போற்றலாம்; உனது பரந்த மார்பில் அனைவருக்கும் இடமுண்டு; உனது அருளை ஏற்கும் அனைவருக்கும் அன்னையே, உனது கடாட்சம் உண்டு!")*

மேலே எடுத்துத் தரப்பட்டுள்ள குறிப்புகளிலிருந்து ஐயர் எப்போதும் வேலையே குறியான, கடுமையான முகம் கொண்ட காரியவாதி என்று தவறாக மதிப்பிட்டுவிட வேண்டாம். அவர் நிறைந்த நகைச்சுவை உள்ளவரே; கலகலப்பான நபரே. அவருடைய லண்டன் நோட்டுப் புத்தகத்தில் நகைச்சுவைத் தொகுப்பு நூல்கள் சிலவற்றின் தலைப்புகளும் கொடுக்கப்பட்டுள்ளன. தவிர, சில நகைச்சுவைக் கதைகளையும் அவர் குறித்து வைத்துள்ளார். தமிழ்

நாட்டு நகைச்சுவைக் கதைகளை ஆங்கிலத்தில் கொடுக்க நினைத்தாரோ என்னவோ, தெரியவில்லை. ஆங்கிலப் பாடலாக அவர் கொடுத்துள்ள ஒரு குட்டிக்கதையைப் பாருங்கள் :

"என் மரத்தில் ஏன் ஏறினீர், ஐயா ?"
"என் கன்றுக்குட்டியைத் தேடி, ஐயன்மீர்."
"மரத்தில் கன்றுக்குட்டி இருக்குமா, என்ன !"
"அதனால்தான் இறங்கி வருகிறேன், ஐயா !"

இது பழந்தமிழ்க் குட்டிக்கதை ஒன்றின் மாறுபட்ட வடிவம் என்பதைக் கவனிக்கலாம். தென்னை மரத்தில் ஏறிய ஒரு திருடன் பிடிபட்டான். "ஏனடா மரத்தில் ஏறினாய் ?" என்று கேட்டதற்கு, "கன்றுக்குட்டிக்குப் புல் பிடுங்கலாமென ஏறினேன்" என்றான். "முட்டாள், தென்னை மரத்தில் புல் வளருமா, என்ன ?" என்று கேட்க, திருடன் கூசாமல் பதிலளித்தான் : "அதனால்தான் இறங்கி வருகிறேன், ஐயா !"

# 3. 1857-இன் பொன்விழா

1907 - ஆம் ஆண்டில், இங்கிலீஷ்காரர்களில் சிலர், அந்த வருஷம் மே மாதம் முதல் தேதியன்று, '1857-இல் கலகக்காரர்கள் மீது கொண்ட வெற்றியின் பொன் விழாவை'க் கொண்டாடுவதெனத் தீர்மானித்தார்கள். பிரிட்டனிலுள்ள முக்கியமான பத்திரிகைகளும், இந்தியா விலுள்ள ஐரோப்பியர் பத்திரிகைகளும் போட்டிபோட்டுக் கொண்டு, சிறப்பு மலர்கள் தயாரித்து வெளியிட்டன. இவைகளில் 1857-இன் இந்திய தேசபக்தர்களைக் கொலை காரக் கொள்ளையர்கள் என்று காட்டினார்கள். இந்த அபாண்டத்தை இந்திய விடுதி இளைஞர்கள் பொறுப் பார்களா ?

லண்டனில் ஒரு நாடகம் நடந்தது. அதில் ராணி லக்ஷ்மி பாயையும் நானாஸாகேபையும் முரட்டுக் கொடுமைக்காரர் களாகக் காட்டினார்கள். இம்மாதிரி பொய்ப் பிரசாரம் நடப் பதற்கு முற்றுப்புள்ளி வைக்க, தாங்கள் 1857-இன் இந்திய வீரர்களுக்கு அஞ்சலி செலுத்த தாங்களும் '1857-இன் பொன்விழா' ஒன்றைக் கொண்டாட இந்திய விடுதியினர் தீர்மானித்தார்கள். 1907, மே 10 -ஆம் தேதி இந்திய விடுதி யில் ஒரு மறக்க ஒண்ணாத கூட்டம் நடந்தது. விடுதியினர் உபவாசமிருந்து, ஒரு வாரம் விரதம் அனுஷ்டித்தார்கள். "ஓ, தியாகிகளே!" என்ற பிரசுரம் ஒன்றை வெளியிட்டு, எங்கும் வினியோகித்தார்கள். இந்திய மாணவர்கள் ஆக்ஸ்போர்டிலும், கேம்பிரிட்ஜிலும், பிற கல்விக் கூடங் களிலும், "1857 தியாகிகள் புகழ் ஓங்குக !" என்று பொறித்த பாட்ஜுகளை அணிந்து சென்றார்கள்.

லண்டனுக்கு வந்திருந்த இந்திய மிதவாதத் தலைவர்கள் இந்தக் கொண்டாட்டங்களில் கலந்து கொள்ளவில்லை. ரெயில் வண்டிகளில் பாட்ஜு அணிந்து பயணம் செய்த

இந்திய மாணவர்களுக்கும் பிரிட்டிஷ் காலிகள் சிலருக்கும் சச்சரவு நடந்தது. கல்லூரிகளில் பாட்ஜுகளை எடுத்து விட மறுத்த இரு இந்திய மாணவர்கள் ஹர்நாம் ஸிங், எஃப். எம். கான் என்ற இருவர் வெளியேற்றப்பட்டார்கள். இந்திய மாணவர் சிலரது 'ஸ்காலர்ஷிப்' உதவி நிறுத்தப் பட்டது. அவர்கள் தங்கள் படிப்பைப் பாதியில் விட்டு விட்டு இந்தியா திரும்ப நேர்ந்தது.

பிரிட்டிஷ் பத்திரிகைகள் ஷாம்ஜி கிருஷ்ண வர்மா, ஸாவர்க்கர் முதலியவர்கள் மீது வசைமாரி பாடின. லண்டன் 'டைம்ஸ்' பத்திரிகையும், 'ஜான் புல்' வாரப் பதிப்பும் நிருபர்களை அனுப்பி இந்திய விடுதிப் பிரமுகர் களைப் பேட்டி காணச் செய்தன. ஏதோ முரட்டுக் காட்டு மிராண்டிகளைப் பேட்டி காணப்போகிறோமென்று வந்த நிருபர்கள், ஸாவர்க்கரின் இளமையும் கல்விப் புலமையும் பண்பான நடத்தையும் கண்டு வியப்படைந்தார்கள். அப் படியிருந்தும் அப்பத்திரிகைகள் இந்திய விடுதியினரைத் தாக்குவதை நிறுத்தவில்லை. 'மான்செஸ்டர் கார்டியன்', 'டெய்லி நியூஸ்' என்ற இரு பத்திரிகைகளே அவர்களைப் பற்றி மரியாதையுடன் எழுதின; ஆனால்கூட ஸாவர்க் கரின் கருத்துக்களை ஏற்கவில்லை.

1857 பற்றிய சர்ச்சைகளும் சம்பவங்களும் பிரிட்டிஷ் துப்பறிபவர்கள் கவனத்தைக் கவர்ந்தன. இந்திய விடுதி, அதிலுள்ள இளம் இந்திய மாணவர்களின் நடவடிக்கை கள் யாவும் துப்பறிபவர்களது பார்வைக்கு உட்பட்டன.

1907 அக்டோபர் மாதம் ஐயர் வந்து சேருவதற்கு முன்பு இருந்த நிலைமை இது. 1908-இலோ, நிலைமை மேலும் கடுமையாயிற்று. இந்திய விடுதியைச் சேர்ந்த மூன்று இளைஞர்கள் இந்தியாவுக்கு, 'வெடிகுண்டு விளக்க நூல்' பிரதிகளை எடுத்துச் சென்று வினியோகித்ததன் காரண மாக வங்காளத்தில் இந்தியாவின் முதல் வெடிகுண்டு வீசப் பட்டதைக் கருதி, இந்திய விடுதியின் மீது கண்காணிப்பு அதிகரித்தது.

முஸபர்பூரில் வெடிகுண்டு வீசிய குதிராம் போஸ் தூக்குத் தண்டனை பெற்றார். அவருடைய கூட்டாளிகளில்

ஒருவரான பிரபுல்ல சக்கரவர்த்தி என்பவர் போலீஸ் ஸ்டேஷனிலேயே தம்மைத் தாமே சுட்டுக்கொண்டு உயிர் நீத்தார். கல்கத்தாவில் மாணிக்டோலா தோட்டம் என்ற இடத்தில் வெடிகுண்டுகள் செய்யப்பட்டதாகப் போலீஸார் கருதினர்கள். இதற்கெல்லாம் மூலபுருஷர் எனப் பாபு அரவிந்த கோஷையும், அவருடைய தம்பி பாரிந்திரநாத் கோஷையும் கைது செய்தார்கள். 'மாணிக் டோலா வெடிகுண்டு வழக்கு' என்றும், 'அலிபூர் வெடி குண்டு வழக்கு' என்றும் பெயர் பெற்ற விசாரணை நடந்தது. குதிராம் போஸின் சகபாடிகள் இருவர் தூக்குத் தண்டனை பெற்றனர். பாரீந்திரநாத் கோஷ் உட்படப் பல இளைஞர் கள் அந்தமான் தீவுக்கு அனுப்பப்பட்டார்கள்.

இந்திய அரசியலிலும் கொந்தளிப்பு ஏற்பட்டது. வைஸ்ராய் மின்டோ பிரபு கிரிமினல் சட்டத்திருத்தம் என்ற கொடுமையான சட்டத்தைப் பிறப்பித்தார். லோகமானிய திலகர் பர்மாவில் மாண்டலே நகருக்கு நாடு கடத்தப் பட்டார். 'கால்' பத்திரிகை ஆசிரியர் சிவராம பராஞ்சபே 19 மாதக் கடுங் காவல் பெற்றுர். அலிபூர் வழக்கில் அரசுத் தரப்புச் சாட்சி ஒருவர் ஸேனுபதி பாபத்துக்கும் வங்கப் புரட்சியாளர்களுக்கும் இருந்த தொடர்பை வெளி யிட்டுவிட்டதால், ஸேனுபதி பாபத் தலைமறைவானுர். ஆனுல் இந்தச் சாட்சியம் லண்டனில் இருந்த ஸாவர்க்கர் மீதுதான் அதிகச் சந்தேகத்தைத் தூண்டிவிட்டது. ஸாவர்க்கரை எப்படியாவது சிறைச்சாலைக்குள் தள்ள வேண்டுமெனப் பிரிட்டிஷ் போலீஸ் கருதினர்கள். ஸாவர்க்கரின் வலது கையான ஐயருடைய நிலையும் கிட்டத்தட்ட இதேதான்.

இந்தச் சந்தர்ப்பத்தில், மிதவாதத் தலைவர் கோக்கலே மின்டோ - மார்லி சீர்திருத்த விஷயமாக லண்டனுக்கு வந்திருந்தார். ஐ.ஸி. எஸ். அதிகாரியாக இருந்து காங்கிரஸ் தலைவரான ரமேஷ் சந்திர தத் என்ற சரித்திராசிரியரும் லண்டனுக்கு வந்திருந்தார். திலகரை நாடு கடத்தியதைக் கண்டிக்க லண்டனில் கூட்டப்படவிருக்கும் ஒரு கூட்டத் துக்குத் தலைமை வகிக்க வேண்டுமென ஸாவர்க்கர், ஐயர்

ராஜன் மூவரும் கோக்கலேயை அணுகினார்கள். கோக்கலே மறுத்துவிட்டார். இளைஞர்கள் பிறகு வேறு விஷயங்களைப் பற்றிக் கோக்கலேயுடன் விவாதித்தார்கள். 1857-ஆம் ஆண்டுச் சம்பவங்களை இந்தியத் தேசீய நோக்கத்தில் ஆராய்ந்து எழுத வேண்டும் என்று ஸாவர்க்கர் வற்புறுத்தினார். கோக்கலே இதை ஏற்கவில்லை, ஆனால் இந்த விஷயம் ரமேஷ் சந்திர தத்திடம் விவாதிக்கப்பட்ட போது, அவர் அதை வரவேற்றார். கோக்கலே மறுத்த போதிலும், காக்ஸ்டன் ஹால் என்ற பொது இடத்தில், திலகர் நாடு கடத்தப்பட்டதைக் கண்டித்து ஒரு கூட்டம் நடந்தேறியது.

இந்தியத் தலைவர்களது மெத்தனத்தைக் கண்ட ஸாவர்க்கர், 1857 பற்றித் தாம் எழுதிவந்த புத்தகத்தை விரைவில் முடித்தார். மராட்டியிலிருந்த இந்த நூல் ஏற்கனவே குறிப்பிட்டது போல, ஐயர் தலைமையில் ஆங்கிலத்தில் மொழி பெயர்க்கப்பட்டது. இந்நூல் இந்திய மக்களுக்கு, "மீண்டும் ஒரு முறை சுதந்தரப் 'போராட்டம் நடத்தி, அதில் வெற்றிகொள்ளத் தணியாத ஆவேசத்தை உண்டாக்குமாக!" என்று இதன் நோக்கம் விளக்கப்பட்டிருந்தது. வெறும் வாழ்த்தாக இராமல், 'தேசபக்தப் புரட்சியாளர்கள் கைக்கொள்ளக் கூடிய அமைப்பு முறையையும் நடவடிக்கைத் திட்டத்தையும் அவர்கள் முன் வைப்பதே இந்த நூலின் லட்சியம். இந்தியாவில் இந்தப் புரட்சிகரமான கருத்துகளைப் பிரசாரம் செய்வது சாத்தியமில்லை. ஆதலால், இதை ஏற்கனவே நடந்த வரலாற்றின் கதையாகச் சொல்லுவதே சிறந்ததெனச் சொல்லுகிறோம். இந்நூலின் கருத்துகளை வரலாற்று நாயகர்களின் சொற்களும் செயல்களும் வெளியிட்டுவிடும்." இவ்வாறு இந்நூலின் முகவுரை கூறுகிறது.

நூல் தயாராகிவிட்டது. அச்சாக வேண்டுமே. ஸாவர்க்கரின் மராட்டி நூலை இந்தியாவில் மகாராஷ்டிரத்தில் பல பெரிய அச்சகங்களுக்கு அனுப்பினார்கள். அவர்கள் அதை அச்சடிக்க ஏற்கவில்லை. முடிவில், 'அபிநவ பாரத்'

சங்க அங்கத்தினரான ஒருவர் அச்சிட்டுத் தர முன்வந்தார். அதற்குள் போலீஸார் விஷயமறிந்து அச்சகத்தைச் சோதனை செய்தார்கள். நல்ல வேளையாக, அச்சக உடைமையாளர் முன்தகவல் அறிந்து, அச்சுக் கோத்த பக்கங்களைக் கலைத்து, நூலின் கையெழுத்துப் பிரதியை ஸாவர்க்கருக்குத் திருப்பியனுப்பிவிட்டார்.

மராட்டி நூல் கதை இப்படி முடிந்ததால் நூலின் ஆங்கிலப் பதிப்பைத் தயாரித்து ஐரோப்பாவிலேயே அச்சிடத் தீர்மானித்தார்கள். பிரிட்டனில் அச்சிடுவது இயலாதென்று, நூல் கையெழுத்துப் பிரதியை ஃபிரான்ஸுக்கு அனுப்பி, அங்கு அச்சிட முயன்றார்கள். பிரிட்டிஷ் நிர்ப்பந்தத்தினால் ஃபிரெஞ்சு அச்சகத்தார்கள் பின்வாங்கினார்கள். அதன்பின் அது அக்காலத்தில் அச்சுத் தொழிலில் உலகத் தலைநகரம் என்று புகழ் பெற்றிருந்த ஆம்ஸ்டர்டாம் நகருக்கு அனுப்பப்பட்டது. ஹாலந்து நாட்டின் தலைநகரான ஆம்ஸ்டர்டாமில் நூல் அச்சாயிற்று.

அச்சான நூலின் நூற்றுக்கணக்கான பிரதிகள், 'பிக்விக் பேப்பர்ஸ்', 'டான் குவிக்ஸாட்', ஸர் வால்ட்டர் ஸ்காட் நாவல்கள் போன்ற அரசியல் சம்பந்தமில்லாத நூல்களின் அட்டைகளுடன் இந்தியாவுக்கு அனுப்பப்பட்டன. இந்தியாவில் பல தலைவர்களும் கல்லூரி நூல் நிலையங்களும் 'அபிநவ பாரத்' அங்கத்தினர்களும் இவ்வாறு இந்நூலின் பிரதிகளைப் பெற்றார்கள்.

இந்தியாவில் இவ்வாறு ரகசியமாகப் பரப்பப்பட்ட பிறகு, நூல் பகிரங்கமாக ஃபிரான்ஸில் பிரசுரிக்கப்பட்டுப் பிரிட்டன், ஃபிரான்ஸ், ருஷியா, அமெரிக்கா முதலிய பல நாடுகளில் முக்கியஸ்தர்களுக்கு இலவசமாக அனுப்பப்பட்டது.

இந்த ஆங்கில நூலுக்குப் பல்வேறு பதிப்புகள் பிற்காலத்தில் வெளிவந்தன. கனடாவுக்குக் குடியேறிச் செல்ல முயன்ற 'கதர்' கட்சிச் சீக்கியப் புரட்சியாளர்கள் இந்த நூலைக் கையேடாகப் படித்துப் பாராயணம் செய்தார்கள். பஞ்சாப் சிங்கம் பகத் ஸிங் தாமாக இந்தியாவில் ஒரு பதிப்பு வெளியிட்டார். நேதாஜி சுபாஷ்

சந்திர போஸ் இந்திய தேசீய ராணுவத்துக்காக ஓர் ஆங்கிலப் பதிப்பும், தமிழ், பஞ்சாபி, உருது, ஹிந்திப் பதிப்புகளும் வெளியிட்டார்.

'முதலாவது இந்திய சுதந்தரப் போர்' நூலின் ஆங்கிலப் பதிப்பும் பிற பதிப்புகளும் இவ்வாறு பரவிக்கொண்டிருக்கையில் இந்நூலின் மூலமான மராட்டி நூல் வெகு காலம் காணுமல் போய்விட்டது. 1910-இல் ஸாவர்க்கர் கைதானபோது மராட்டி நூலின் கையெழுத்துப் பிரதி பாரிஸில் மதாம் காமாவிடம் ஒப்படைக்கப்பட்டது. அவர் அதைப் பாங்க் ஆஃப் ஃபிரான்ஸில் தம் சொந்த 'லாக்க'ரில் வைத்திருந்தார். அது அங்கே பல்லாண்டுகள் பத்திரமாக இருந்தது. ஆனல் 1940-இல் ஹிட்லரின் படைகள் ஃபிரான்ஸைப் பிடித்தபோது நூலின் கையெழுத்துப் பிரதி காணுமல் போய்விட்டது. நல்ல வேளையாக 1968-இல் அது மீண்டும் கிடைத்தது.

நூலின் ஆங்கிலக் கையெழுத்துப் பிரதியும் வெகுகாலம் இருக்குமிடம் தெரியாமலிருந்து பிறகு கிடைத்தது. நூல் 1909-இல் அச்சிடப்பட்டதும், அதன் கையெழுத்துப் பிரதியை டி. வி. கூட்டினே என்ற போர்த்துகீசிய இந்தியர் வசம் ஒப்படைத்திருந்தார்கள். 'அபிநவ பாரத்' அங்கத்தினரான இவர் லண்டனில் 1910-இல் நிலைமை கடுமையானதும் போர்ச்சுகல் தேசத்துக்குக் குடியேறினர். ஐரோப்பாவில் இந்தியப் புரட்சி வீரராகப் பலவித அல்லல்களுக்கு நடுவிலும் இவர், நூல் கைப்பிரதியைப் பத்திரமாக வைத்திருந்தார். 1947-இல் நூலுக்கு இந்தியாவில் தடை நீங்கியதும் நூல் பிரதியைப் பத்திரமாக அவர் ஸாவர்க்கருக்குத் திருப்பி அனுப்பினர். ஐயர் கைப்படத் திருத்தங்கள் கொண்ட இப் பிரதி ஸாவர்க்கரது நூல் நிலையத்தில் சேர்ந்தது.

1908-ஆம் ஆண்டின் கடைப் பகுதி லண்டனில் முக்கியத்துவம் வாய்ந்ததாக விளங்கியது. இந்தியாவிலிருந்து பலதரப்பட்ட குழுக்கள் வந்திருந்தன ; பலதரப்பட்ட தலைவர்களும் வந்திருந்தார்கள். திலகரின் நண்பர்கள் ஜீ .எஸ். காபர்தேயும் ஆர்.வி.காரண்டிகரும் திலகர் சார்பில் ப்ரிவி கவுன்ஸிலில் அப்பீல் செய்ய வந்திருந்தார்கள். 'இரட்டை

ஆயுள் தண்டனை' விதிக்கப்பட்டிருந்த வ. உ. சிதம்பரம் பிள்ளை சார்பில் சிலர் வந்திருந்தனர், ப்ரிவி கவுன்ஸில் அப்பீலுக்காக இந்தியாவிலிருந்து நாடு கடத்தப்பட்ட பஞ்சாப் தலைவர்கள் லாலா லாஜ்பத்ராய், ஸர்தார் அஜீத் ஸிங் இருவரில் லாஜ்பத்ராய் லண்டனுக்கு வந்திருந்தார்.

கிழக்கிந்தியா கம்பெனியிடமிருந்து பிரிட்டிஷ் மன்னர் இந்திய ஆட்சியைத் தாமே மேற்கொண்டதன் பொன் விழாவும் 1908-இல் வந்தது. இதை நினைவூட்டி, ஏழாம் எட்வர்டு மன்னர் ஒரு பிரகடனம் வெளியிட்டார். இந்தச் சந்தர்ப்பத்தில் இந்திய ஆட்சியில் புதிய மாற்றங்கள் செய்ய மின்டோ-மார்லி சீர்திருத்தங்கள் ஆலோசனையில் இருந்தன: இந்தச் சீர்திருத்தங்களைப் பற்றிய எதிர்ப்புகளைச் சமாளிக்க மிதவாதத் தலைவர் கோக்கலே லண்டனுக்கு அழைக்கப்பட்டிருந்தார். இத்துடன், சமீபத்தில் சிறையிலிருந்து விடுதலையான விபின் சந்திர பால் என்ற தலைவரும் லண்டனுக்குச் சொந்த விஷயமாக வந்திருந்தார்.

1905-இல் உண்டாக்கப்பட்ட வங்க மாகாணப் பிரிவினை இந்தியாவில் இன்னும் கொதிப்பை உண்டாக்கிக் கொண்டிருந்தது. புதிய சீர்திருத்தங்களை, இந்தப் பிரிவினை உத்தரவை ரத்து செய்யவேண்டுமென ஒரு கிளர்ச்சி லண்டனிலும் நடந்தது. 1908 அக்டோபர் 16-ஆம் தேதி லண்டனில் பிரிவினை எதிர்ப்பு நாள் கொண்டாடப்பட்டது. ஒரு கூட்டத்தில் லாஜ்பத்ராய் தலைமை வகிக்க, விபின் சந்திர பால், காபர்தே, காரண்டிகர் முதலியோர் பேசினார்கள்.

அதே தினம் அதே இடத்தில், இந்திய விடுதி இளைஞர்கள் ஒரு கூட்டம் நடத்தினார்கள். காபர்தே தலைமை வகித்தார். மதாம் காமா 'பகிஷ்காரம்' என்பது பற்றிப் பேசினார். துருக்கி தேசம் சுல்தான் ஆட்சியை நீக்கிக் குடியரசான சம்பவத்தைப் பாராட்டி வ.வே.ஸு. ஐயர் ஒரு தீர்மானம் கொண்டு வந்து பேசினார். தீர்மானத்தை மே. த. ஆகாகான் வழி மொழிந்தார். தீவிரவாதிகள் நடத்திய ஒரு கூட்டத்தில் ஆகாகான்

வந்திருந்ததே ஆச்சரியம். கூட்டத்தின் முக்கியத் தீர்மானம், வர இருக்கும் சீர்திருத்தங்களில் நம்பிக்கை யில்லை என்று தெரிவித்து, இந்தியாவுக்குச் சுதந்தரம் அளிப்பதே வழி என்று வற்புறுத்தியது.

இந்தக் கூட்டம் நடந்த ஒன்பது தினங்களில், குரு கோவிந்த ஸிங்கின் பிறந்தநாளைக் கொண்டாட ஒரு கூட்டம் நடந்தது. விபின் சந்திர பால் தலைமை வகித் தார். லாஜ்பத்ராய், ஸாவர்க்கர் முதலியோர் பேசினார்கள். அந்நிய ஆதிக்கத்தைத் துணிவுடன் எதிர்க்க வேண்டும்; குரு கோவிந்த ஸிங் இதில் வழி காட்டியுள்ளார் என்றார் ஸாவர்க்கர்.

பிரிட்டிஷ் பத்திரிகைகள் இச்சமயம் இந்திய விடுதித் தேசபக்தர்களைக் கண்டித்து எழுதி வந்தன. சில ஏகாதிபத்தியப் பத்திரிகைகள், 'இந்தத் தீவிரவாதிகளை ஒடுக்கித் தள்ளுங்கள்!' என்று எழுதின. பிரிட்டன் தனது நாட்டில் ஜனநாயக ஆட்சியைப் பலாத்காரத்தின் மூல மாகவே நிலைநாட்டியது என்பதை மறந்து, பல பிரிட்டிஷ் பத்திரிகைகள் இந்திய விடுதித் தேசபக்தர்களின் பலாத் கார முயற்சிகளைக் காரசாரமாகத் தாக்கின.

லண்டனில் உள்ள இந்திய யுவர்களிடையே பதற்ற மான நிலை இருப்பதை விவாதிக்கப் பிரிட்டிஷ் அதிகாரிகள் ஏற்பாடு செய்த ஒரு கூட்டம் பதற்றத்தை அதிகரித்தது. ஒரு காலத்தில் இந்தியாவில் சுதேச மன்னர்களை ஆட்டி அடக்கி வந்த ஸர் லீ - வார்னர் என்ற முன்னாள் அதிகாரி, இந்தக் கூட்டத்தில் பேசுகையில், குஞ்ஜ விஹாரி பட்டாசாரியா என்ற இந்தியத் தலைவரை, "அவர் ஒரு கறுப்புக் கயவாளி!" என்று தரக்குறைவாகப் பேசினார். 'யுகந்தர்' என்ற வங்கப் புரட்சிப் பத்திரிகை யின் ஆசிரியராக இருந்த வாசுதேவ பட்டாசாரியா என்பவர் கூட்டத்தில் இருந்தார். அவர் உடனே எழுந்து லீ - வார்னரைக் கன்னத்தில் அறைந்தார். குழப்பம் நேர்ந்தது. இதனால் வாசுதேவ பட்டாசாரியாவுககு 20 ரூபாய் அளவுக்கு அபராதம் விதிக்கப்பட்டது. வாசுதேவ பட்டாசாரியாவுக்கு இந்திய விடுதியுடன் தொடர்பு இருந்த படியால், இந்திய விடுதி பற்றி எங்கும் பேசலானார்கள்.

'டைம்ஸ்' பத்திரிகை, "சர்க்கார் இந்தியாவில் கல்வியை மிகுந்த கட்டுப்பாட்டில் வைத்திருக்க வேண்டும்" என்று எழுதியது. 'ஸ்டாண்டர்டு' என்ற மற்ெருரு பத்திரிகை, "நமது பல்கலைக் கழகங்களிலும் சட்டப் படிப்பு மன்றங் களிலும் இங்கே இங்கிலாந்தில் கல்வி பயிலும் புத்திக் கூர்மையான இந்தியர்களில் நிறையப் பேர்கள் இந்தியா வில் ஆயுதமேந்திய பலாத்காரப் புரட்சிக்குச் சாதகமாகப் பிரசாரம் செய்து வருகிருர்கள் என்பதில் சந்தேகமில்லை" என்று எழுதியது.

இதனுல், துப்பறியும் இலாகாவான ஸ்காட்லாந்து யார்டு இந்திய விடுதியின் மீது தன் கண்காணிப்பை வலுப் படுத்தியது. அந்த விடுதி இளைஞர்களைக் கண்காணிப் பதால் மட்டும் அதிகம் தெரியவில்லை என்று கருதி இந்திய விடுதியில் வசிக்கத் தனது ஆள் ஒருவரை மாறு வேஷத்தில் அனுப்புவதெனவும் தீர்மானித்தது. இவ்வாறு அனுப்பப்பட்ட முதல் வேவுகாரன் கீர்த்திகர் என்பவன். இவன் மராட்டியன்; முப்பது வயதினன்; இவன் ஸாவர்க் கருடன் நெருங்கிய நண்பனுகி, இந்திய விடுதியின் ரகசியங்களை ஸ்காட்லாந்து யார்டுக்குத் தெரிவிக்கலானுன். நல்லவேளையாக ஐயர் இதற்கு ஒரு முற்றுப்புள்ளி வைத்தார்.

கீர்த்திகரை அனுப்புவதெனப் பிரிட்டிஷ் போலீஸ் காரர்கள் தேர்ந்தெடுக்க விசேஷ காரணங்கள் இருந்தன. கீர்த்திகர், ஸாவர்க்கரைப் போலவே மராட்டியன். அவன் பம்பாய் உயர்நீதி மன்றத்தில் மொழி பெயர்ப்பாளனுக இருந்தான். அவனுக்கு நான்கைந்து இந்திய மொழிகள் தெரியும். ஆகையால் அவனை இந்திய விடுதிக்குள் வசிக்க அனுப்பி வைத்தால், அங்கே எம்மொழியில் பேச்சு நடந் தாலும் அவன் புரிந்துகொள்வான். இந்த நோக்கத்துடன் தேர்ந்தெடுக்கப்பட்டு, கீர்த்திகர் 1909-ஆம் ஆண்டு மையத்தில் இந்திய விடுதிக்கு வந்து சேர்ந்தான். முன்பின் அறிவிப்பில்லை; பெட்டி படுக்கையுடன் வந்து நின்ருன்; ஸாவர்க்கருடன் மராட்டி மொழியில் பேசினுன். தான் பெரிய பிரபுக்கள் குடும்பத்தவன் என்றும், பல்

வைத்தியம் படிக்க லண்டன் வந்துள்ளதாகவும் சொன்ஞன். உண்மையில், இந்திய அதிகாரிகள் ஓராண்டுக் காலம் விடுப்பு அளித்திருந்தனர்; பல் வைத்தியம் படிப்பதாக நடிக்கச் சொல்லியிருந்தனர்.

கீர்த்திகர் தந்திரமாகப் பேசி, இந்திய விடுதியில் தங்க ஸாவர்க்கரின் அனுமதி பெற்றுவிட்டான். மறுநாளே லண்டன் ஆஸ்பத்திரி ஒன்றில் பல் வைத்தியப் படிப்புக்குச் சேர்ந்துவிட்டான்.

கீர்த்திகர் சம்பவத்தைப் பற்றி டாக்டர் ராஜன் நினைவு கூர்கையில், கீர்த்திகர் நுட்ப புத்தியுள்ளவனுகத் தோன்றவில்லை என்றும், அவன் தினமும் காலையில் டாக்டர் ராஜனுடன் காலை உணவை முடித்துக்கொண்டு அவருடனேயே கிளம்புவான் என்றும் சொல்கிருர். ஆனுல் சில நாட்களானதும், கீர்த்திகர் தனது வைதியக் கல்லூரிக்குப் போவதில் ஊக்கமின்றி இருந்தான். விடுதியில் சோம்பிக் கிடப்பான்; படுக்கையை விட்டு எழுந்திருக்க மாட்டான். வேளைக்குச் சாப்பிட வரமாட்டான். இரவு நேரம் கழித்து வருவான். இந்திய விடுதியில் வேலை பார்த்து வந்த இங்கிலீஷ் பெண்ணை அவன் தன் கைக்குள் போட்டுக்கொண்டுவிட்டான்.

டாக்டர் ராஜன் இது பற்றிப் புகார் செய்தார். ஆனுல் ஸாவர்க்கரோ, இது பணக்காரப் பிள்ளைகளின் விளையாட்டு என்று சும்மா இருந்துவிட்டார்.

இந்திய விடுதியின் வேலைக்காரப் பெண் வெளியே போவது அதிகரித்தது. அதனுல் உணவு தயாரிக்கும் வேலை தடைப்பட்டது; குடியிருப்பைச் சுத்தம் செய்வது சரிவர நடக்கவில்லை. முடிவில் அந்தப் பெண்ணை வேலையிலிருந்து நீக்கிஞர்கள்.

ஆனுல் அந்தப் பெண்ணிடம் கொண்ட மோகத்தைக் கீர்த்திகர் விடவில்லை. தனது சொந்தச் செலவில், இந்திய விடுதிக்குப் பக்கத்திலேயே அவளுக்கு ஓர் அறை எடுத்துக்கொடுத்து அவளைப் பராமரித்தான். இந்திய விடுதியிலேயே அவன் இருந்தான். அதன் நடவடிக்கைகளில் அதிகமாகக் கலந்துகொண்டான்; அடிக்கடி முன்னைவிடக்

கூட்டங்களில் பேசினான், தனது வழக்கமான சந்தா தவிர மாதம் ஒரு பவுன் நன்கொடையும் தந்தான்.

சில மாதங்கள் சென்றன. கீர்த்திகர் பல் வைத்தியம் கற்பதாக நடித்த ஆஸ்பத்திரியில் ஒரு நாள் டாக்டர் ராஜன் அவனைத் தேடிச் சென்றார். முதல் ஒரு வாரத்துக்குப் பின் கீர்த்திகர் வரவேயில்லை என்று கேட்டு ஆச்சரிய மடைந்தார் ராஜன். இதன் மர்மம் என்னவென்று கண்டு பிடிக்க வேண்டுமென அவர் விஷயத்தை ஐயரிடம் சொன்னார்: இருவரும் மேலும் கவனித்ததில் தங்களுக்கெல் லாம் துப்பறிபவர்கள் தொல்லை இருந்து வருகையில் கீர்த்திகருக்கு மட்டும் உளவுகாரர் தொல்லை இருக்கவில்லை என்பது தெரிந்தது. அப்படியானால் கீர்த்திகர் பிரிட்டிஷ் போலீஸ் உளவாளியோ என்ற சந்தேகம் எழுந்தது.

ஒரு நாள் இரவு கீர்த்திகர் தனது காதலியுடன் ஒரு நாடகத்துக்குப் போயிருந்தான். இதைப் பயன்படுத்தி ஐயர் அவனுடைய அறையைத் திறந்து அறை முழுவதும் சோதனை செய்தார். கீர்த்திகருடைய பெட்டியில் பிரிட்டிஷ் போலீஸ் அதிகாரிகளுக்கு அனுப்புவதற்காக அவன் அந்த வாரம் தயாரித்திருந்த அறிக்கை இருந்தது. அதில் அந்த வாரம் இந்திய விடுதியில் நடந்த கூட்டம் முதலிய நடவடிக்கைகள் விவரிக்கப்பட் டிருந்தன.

ஐயர் அந்த அறிக்கையை எடுத்துக்கொண்டு அறை யைப் பூட்டிவிட்டு, அறிக்கையை டாக்டர் ராஜனிடமும் ஸாவர்க்கரிடமும் காட்டினார். கீர்த்திகர் போலீஸ் உளவாளி என்பது தெள்ளத் தெளியத் தெரிந்துவிட்டது. இனி அவனை என்ன செய்வது என்று விவாதித்தார்கள். அவனை ஒரேயடியாக தீர்த்துக் கட்டிவிடுவது முதல் அவனைச் சும்மா வெளியேற்றிவிடுவது வரை பலவழிகள் யோசனை செய்யப்பட்டன. முடிவில், அவனை வெளி யேற்றக் கூடாதென்றும், அவன் அங்கே இருப்பதைப் பயன்படுத்திக்கொண்டு லாபமடைய வேண்டும் என்றும் தீர்மானமாயிற்று.

கீர்த்திகரை வெளியேற்றினாலும், பெயர் தெரியாத வேறோர் உளவாளியைப் பிரிட்டிஷ் போலீஸார் அனுப்பு

வார்கள். அவனைக் கண்டுபிடிக்க நாளாகும். ஆகையால், தெரிந்த இந்த ஆள் வழக்கம் போல இந்திய விடுதியில் இருந்துகொண்டே, வழக்கம் போலப் போலீஸாருக்கு அறிக்கை அனுப்பட்டும்; ஆனால், ஒவ்வோர் அறிக்கையையும் அவன் ஐயரிடம் காட்டி, அவர் அனுமதிக்கும் செய்திகளை மட்டுமே அனுப்பவேண்டும் என்று ஏற்பாடு செய்வதெனத் தீர்மானமாயிற்று.

அன்றிரவு கீர்த்திகர் தனது அறைக்குத் திரும்பியதும் ஐயர் கையில் ஒரு சுழல் துப்பாக்கியுடன் அவன் அறைக்குள் நுழைந்தார். அன்று மாலை கீர்த்திகர் பார்த்த நாடகம் எப்படி இருந்ததென விசாரிப்பது போல் சாதாரணமாகப் பேச்சை ஆரம்பித்து, லண்டனில் கீர்த்திகர் என்னதான் செய்கிறான் என்ற கேள்வியை நாசுக்காக எழுப்பினார் ஐயர். கீர்த்திகர் தான் பல்வைத்தியம் படிப்பதாகப் பாவனை செய்தான். ஐயர் சட்டென்று குரலைக் கடுமையாக்கிக் கொண்டு, கீர்த்திகரைப் பற்றி எல்லாம் தங்களுக்குத் தெரியுமென்று கூறி, போலீஸ் வேவுகாரனைப் போல் ஈனப் பிழைப்பு உண்டா என்று கேட்டார். கீர்த்திகர் அப்போதும் உண்மையை மறைக்க முயன்றான். ஐயர் உடனே அறைக் கதவைத் தாளிட்டு, சுழல் துப்பாக்கியை வெளியில் எடுத்து நீட்டி, "இது சாதாரண ரிவால்வர் அல்ல. ஒரு தடவையில் ஆறு தோட்டாக்கள் போடலாம். நல்ல வேகமான தோட்டாக்கள். நீ உண்மையைச் சொன்னாலொழிய உன்னைத் தீர்த்துக் கட்டிவிடுவதென்ற தீர்மானத்துடன் வந்திருக்கிறேன். உண்மையைச் சொன்னாயாகில், உனக்குத் தீங்கு செய்யமாட்டேன்" என்றார்.

உள்ளே இது நடக்க, தாளிட்ட கதவின் வெளியே டாக்டர் ராஜன் எதற்கும் தயாராக நின்றுகொண்டிருந்தார்.

ஐயர் கீர்த்திகரது அறிக்கையைத் தமது பையிலிருந்து எடுத்துக் காட்டி, "இது உன் கையெழுத்து. போலீஸாருக்கு அனுப்ப நீ தயாரித்துள்ள அறிக்கை. உன் பெட்டியைத் திறந்து நான் எடுத்தேன். இப்போது என்ன சொல்கிறாய்? இனியும் வேஷம் போட்டால், இங்கேயே ஒழிந்துபோவாய், ஜாக்கிரதை!" என்றார்.

கீர்த்திகர் உண்மையை ஒப்புக்கொண்டு ஐயர் காலில் விழுந்து வணங்கினுன். தன்னைக் கொன்றுவிட வேண்டா மென மன்ருடினுன். ஐயர் ஒரு நிபந்தனையின்படி அவனைக் கொல்லாமல் விடுவதாகச் சொன்னுர். அந்த நிபந்தனை என்னவென்ருல், கீர்த்திகர் இந்திய விடுதியிலேயே தங்கி யிருந்து, வழக்கம் போலப் போலீஸுக்கு அறிக்கை அனுப்ப வேண்டும்; ஆனுல் ஒவ்வோர் அறிக்கையையும் ஐயரிடம் காட்டி, அவரது அனுமதி பெறவேண்டும். மேலும், போலீஸிலிருந்து வரும் பணத்தில் மாதம் இரண்டு பவுன் இந்திய சுதந்தர சங்கத்துக்கு நன்கொடை தரவேண்டும்.

ஐயரது நிபந்தனைக்கு இணங்காவிட்டால் தன் உயிர் நிலைப்பது நிச்சயமில்லை; போலீஸுக்கு அறிக்கை அனுப்பாவிட்டாலோ, லண்டனில் வாழவசதியின்றி அனுதைபோல் ஆகிவிடுவான். அதுமட்டுமல்ல; தங்க ளுக்கு அறிக்கை அனுப்பவில்லையென்ருல், பிரிட்டிஷ் போலீஸார் தன்னை என்ன செய்வார்களோ!- இவ்வாறெல் லாம் பலவிதத்தில் யோசித்துப் பார்த்த கீர்த்திகர், இறுதியில் ஐயரது ஏற்பாடே சிறந்ததென ஏற்றுக்கொண்டான்.

கீர்த்திகர் இதன் பின் பல மாதங்கள் இந்திய விடுதியில் இருந்தான். இருந்த வரையில், தனது ஒப்பந்தப்படி தவருமல் நடந்துகொண்டு வந்தான்.

கீர்த்திகர் சம்பவத்துக்குச் சில மாதங்களுக்குப் பிறகு மற்ருேர் இந்திய இளைஞர் முன்னறிவிப்பு இல்லாமல் இந்திய விடுதிக்கு வந்து சேர்ந்தார். அவரும் பெட்டி படுக்கையுடன் வந்தார். மெலிந்த தேகக்கட்டு, எலும்பும் தோலுமான சரீரம்; ஆனுல் புத்திக்கூர்மையான முகம்; கூரிய கண்கள். வயது சுமார் இருபது இருக்கலாம். தம் பெயர் எம். பி. திருமலாச்சாரி என்ருர். தாம் கப்பலில், கடைசி வகுப்பில் பயணம் செய்து வந்ததாகச் சொன்னுர். தாம் தமிழர் என்றும், சென்னை திருவல்லிக்கேணியைச் சேர்ந்தவரென்றும் சொன்னுர். தாம் வேலை பெற்றுக் கொண்டு வரவில்லை என்றும், இனிமேல்தான் வேலை தேடவேண்டும் என்றும், தனக்கு வருவாய் ஏதுமில்லை

என்றும் கூறினர். பாரதியாரை ஆசிரியராகக் கொண்ட 'இந்தியா' வாரப் பத்திரிகை சென்னையில் இருந்தபோதே அதன் மானேஜராகத் தாம் இருந்ததாகச் சொன்னர். பத்திரிகை பாண்டிச்சேரிக்கு மாறியபிறகு அதில் வெளியான செய்திகள் மூலம் இந்திய விடுதி பற்றி அறிய வந்ததாகவும், இந்திய விடுதித் தேசபக்தர் குழாத்தில் தாமும் சேர விரும்புவதாகவும் திருமலாச்சாரி சொன்னர்.

திருமலாச்சாரி உண்மையில் தேசபக்தர்தாமா? அல்லது இன்னெரு போலீஸ் உளவாளியா? ஐயரும் டாக்டர் ராஜனும் எச்சரிக்கையாகவே இருந்தார்கள்.

உண்மையில், திருமலாச்சாரி தம்மைப் பற்றிச் சொன்ன தெல்லாம் உண்மையே. அவர் அவசரப்பட்டு லண்டனுக்கு வந்துவிட்டார், அவ்வளவுதான். 'இந்தியா' பத்திரிகை பாண்டிச்சேரிக்கு மாற்றப்பட்டுச் சரிவர நடந்து வரத் தொடங்கியதும், பத்திரிகையின் சொந்தக்காரர்களான எஸ். என். திருமலாச்சாரி, எஸ். ஸ்ரீநிவாஸாச்சாரி இருவரும் பத்திரிகை ஆசிரியர் பாரதியைக் கூட்டிக் கொண்டு ஐரோப்பாவுக்கு வருவதாக இருந்தார்கள். பத்திரிகையை எம். பி. திருமலாச்சாரியிடம் ஒப்புவித்து வருவதென்பது அவர்கள் திட்டம்.

இதை அறிந்தபோது எம். பி. திருமலாச்சாரிக்கு வருத்த மேற்பட்டது. ஐரோப்பியப் பயணத்திற்குத் தம்மை விட்டுவிட்டார்கள் என்று பொருமினர். மற்றவர்கள் தங்கள் திட்டங்களை உறுதிசெய்து கிளம்புவதற்கு முன் எம். பி. திருமலாச்சாரி தமது வேலையை ராஜீநாமா செய்துவிட்டு, கிடைத்த பணத்தை வைத்துக்கொண்டு லண்டனுக்குப் புறப்பட்டுவிட்டார்! ஷாம்ஜி கிருஷ்ண வர்மாவைப் பற்றி அவர் படித்திருந்தார். இந்திய தேசபக்தர்களுக்கு உதவிசெய்ய ஷாம்ஜி உதவிநிதி ஏற்படுத்தியிருக்கிறர் என்று தவருகத் திருமலாச்சாரி நினைத்துவிட்டார். லண்டனில் போய் நின்றுல் போதும், உதவி கிடைத்துவிடும் என நினைத்தார் அவர்.

எம். பி. திருமலாச்சாரியின் திடீர்வெளியேற்றம் பாரதி முதலிய மற்றவர்களுடைய திட்டத்தைப் பாழடித்து

விட்டது. அவர்கள் லண்டனுக்கோ ஐரோப்பாவுக்கோ போகவேயில்லை.

எம். பி. திருமலாச்சாரி தாம் எந்த வேலையானாலும் செய்வதாக டாக்டர் ராஜனிடம் தெரிவித்தார். சமையலானாலும் சரி, வீட்டைத் துப்புரவாக வைத்திருப்பதானாலும் சரி, எதற்கும் தயார் என்றார். தாம் அங்கே தங்க அனுமதித்து, சாப்பிட உணவு தந்தால் போதும் என்றார். சமையலிலும், சாமான்கள் காய்கறி வாங்குவதிலும் உதவி செய்ய ஓர் ஆள் வேண்டி யிருந்ததால், திருமலாச்சாரியை வைத்துக் கொண்டு பார்ப்போம் என்று ஐயர் தீர்மானித்தார். எதற்கும் உஷாராகவே இருப்போம்; திருமலாச்சாரி ஒரு போலீஸ் உளவாளியாகவே இருந்தாலும் சரியே; அவரைத் தமது கண்காணிப்பில் வைத்திருக்கலாமல்லவா என்று ஐயர் நினைத்தார்.

இரண்டே மாதத்தில் திருமலாச்சாரி உண்மையான தேசபக்தர்தாம் என்பது விளங்கிவிட்டது. தன்னலமின்றி உழைத்தார்: சொல்லப்பட்டதை விட அதிகமான வேலை செய்தார். சமையலறையிலும் கடை கண்ணிக்குப் போய் வருவதிலும் உதவி செய்தது போக, சுதந்தர இந்தியச் சங்க நடவடிக்கைகளிலும் உதவி செய்தார். இந்திய விடுதிக்கு அவர் பேருதவியாக இருந்தார். ஆனல் அவரை வைத்துப் பராமரிக்கும் செலவை இந்திய விடுதியின் நிரந்தரக் குடிகளான ஏழு பேர் பங்கிட்டுக்கொள்ள வேண்டியிருந்தது. ஆகவே திருமலாச்சாரியின் சொந்தவருவாய்க்கு ஏதேனும் வழி செய்வது அவசியமாயிற்று.

கீர்த்திகர் விஷயத்தில் பிரிட்டிஷ் போலீஸார் பெருந் தொகை செலவிடத் தயாராயிருப்பதிலிருந்து, இந்திய விடுதி பற்றி விஷயங்கள் தெரிந்துகொள்ள மேன்மேலும் செலவு செய்ய அவர்கள் தயங்கமாட்டார்களென்று தோன்றியது. கீர்த்திகர் சொல்வதெல்லாம் சரிதானு என்று வேறொரு தரப்பிலும் தகவல் கிடைப்பதை அவர்கள் வரவேற்கக் கூடும். ஆகையால், திருமலாச்சாரியை ஸ்காட்லாந்து யார்டு போலீஸ் அதிகாரிகளிடம் அனுப்பி அவர் இந்திய விடுதி பற்றித் தகவல் தருவதாகச் சொல்லச்

செய்தால் என்ன? இவ்வாறு ஐயர் யோசனை செய்தார். அவ்வாறே திருமலாச்சாரி ஸ்காட்லாந்து யார்டுக்குப் போனார்; அதிகாரிகளைப் பார்த்தார். தாம் ஓர் ஏழைச் சமையல்காரர் என்றும், வசதியற்றவரென்றும், மாதம் குறைந்தது ஐந்து பவுன் தந்தால் இந்திய விடுதியைப் பற்றிய சகல ரகசியங்களையும் அவ்வப்போது தெரிவிப்பதாகவும் சொன்னார். தம் தகவல்கள் சரியாக இருந்தால், இரட்டிப்புச் சன்மானம் தரவேண்டும் என்றார்.

ஸ்காட்லாந்து யார்டு இந்தப் பொறியில் விழுந்தது. வாரா வாரம் திருமலாச்சாரி யார்டு அதிகாரிகளைச் சந்தித்து ஐயர் சொல்லித் தந்த விஷயங்களை மட்டும் தெரிவித்தார். இதெல்லாம் கீர்த்திகர் தெரிவிக்கும் கதைகளை ஊர்ஜிதம் செய்வதாக இருந்ததால், இந்திய விடுதி பற்றிய ரகசியங்களெல்லாம் தமக்குக் கிடைத்து வருவதாகப் பிரிட்டிஷ் போலீஸ் உளவு அதிகாரிகள் மகிழ்ந்தனர்.

இந்த ஏற்பாடு இரு தரப்பாருக்கும் மகிழ்ச்சி தந்தது. இந்திய விடுதிக்கும் பணம் கிடைத்தது. ஸ்காட்லாந்து யார்டு 'ஊர்ஜிதமான செய்திகள்' கிடைப்பதாய் எண்ணி மகிழ்ந்தது.

தந்திரசாலியான ஐயர், கீர்த்திகர் அறிக்கையிலும் சரி, திருமலாச்சாரியின் அறிக்கையிலும் சரி, உண்மை நிலையைப் பிரிட்டிஷ் போலீஸார் அறியாதபடி பல பொய்க் கதைகளைச் சேர்த்து அவர்கள் வழி தடுமாறிச் செல்லச் செய்தார். தேசபக்தி மிகுந்த திருமலாச்சாரியோ, தமக்குக் கிடைத்த தொகை முழுவதையும் ஐயரிடம் கொடுத்துவிடுவார். இதனால் அவரது இருப்புக்கும், உணவுக்கும் போதிய தொகை கிடைத்ததுமின்றி, சுதந்தர இந்தியச் சங்கத்துக்கு நிறைய நன்கொடையும் கிடைத்தது.

# 4. மதன்லால் திங்க்ரா

காலம் செல்லச் செல்ல, இந்திய விடுதி இளைஞர்கள் புரட்சிப் பாதையில் தங்களை நன்கு பயிற்சி செய்து கொள்ள விரும்பினார்கள். ஒரு நாள் டாக்டர் ராஜன் ஐயரிடம், "நாம் ஓயாமல் அந்நியரை நம் நாட்டை விட்டு வெளியேற்றவேண்டும், அவசியமானால் ஆயுதம் தாங்கிய புரட்சியின் மூலமாகவும் செய்யவேண்டும் என்கிறோம். கொரில்லாப் போராட்டம் முதலியவை பற்றி யும் பேசுகிறோம். இந்த லட்சியங்களைச் சாதிக்க நேரிடைப் பயிற்சி ஏதும் பெற வேண்டிய காலம் வரவில்லையா?" என்று கேட்டார்.

"நேரிடைப் பயிற்சி என்றால்?" ஐயர் வினவினார்.

"ராணுவப் பயிற்சி; நாகரிகப் போர் ஆயுதங்களைக் கையாளும் பயிற்சி."

ஐயர் சிந்தனையுடன் நகைத்த வண்ணம், "நாம் இங்கே இங்கிலாந்தில் இருக்கும் சமயத்திலேயே நாம் ஆயுதப் பயிற்சி பெறுவது நல்லதென்று ஒப்புக்கொள் கிறேன். யுத்தமும் போர்க் கலையும் ஆயுதங்களும் நமது நாட்டுக்குப் புதிய விஷயங்கள் அல்ல என்றாலும் சரித்திர நிர்ப்பந்த காரணங்களினால் நமது புஜபல பராக் கிரமம் மறந்து போகப்பட்டுள்ளது. நம் நாட்டிலும் பயமே அறியாத தீரர்கள் இருந்துள்ளார்கள். ஆனால் நமக்குள் ஒற்றுமை குலைந்தது, பொதுவான தேசீய மனப்பான்மை குன்றியது. அந்த ஒருமைப்பாட்டு உணர்ச்சியையும் தீவிர நாட்டுப் பற்றையும் நாம் தோற்று வித்து வளர்க்க வேண்டும். நம் மக்கள் ஆயுதமேந்திப் புரட்சி செய்தாவது அந்நிய ஆட்சியை எதிர்க்கவேண்டும். இதற்கு, நாம் முதலில் ராணுவப் பயிற்சி பெறுவது அவசியம். அது எப்படி முடியும்? பிரிட்டனில் பிரிட்டிஷ்

பிரஜைகளுக்கு ஆயுதப் பயிற்சியளிக்கும் நிறுவனங்கள் பல இருக்கின்றன. ஆனால், கறுப்பர்கள் என்று நமக்குப் பயிற்சிதர மறுக்கிறார்கள். ஸாவர்க்கரும் நானும் நமது விடுதிக்குப் பக்கத்திலுள்ள துப்பாக்கிப் பயிற்சி நிலையத்தில் சேர விண்ணப்பித்தோம். எங்களைச் சேர்க்க மறுத்து விட்டார்கள். ஆகையால், குறி பார்த்துச் சுடும் பயிற்சியை நாங்கள் சூதாட்டக் கூடங்களில் கற்றோம், அவ்வாறு கற்பதென்பது செலவு மிகுந்த விஷயம், என்ன செய்வது? நமது அடிமைத் தனத்திற்காக நாம் கொடுக்கும் அபராதம் அது!'' என்றார்.

''சரி, நான் முயற்சி செய்து பார்க்கிறேன். நீங்கள் வெற்றியடையாத போதும், நான் வெற்றியடையக்கூடும்'' என்று டாக்டர் ராஜன் சொன்னார். மறுநாள் அவர் துப்பாக்கிப் பயிற்சி நிலையத்துக்குச் சென்று, எப்படியோ கட்டணம் செலுத்தி ஒரு மணி நேரம் சுடும் பயிற்சிகூடச் செய்தார். அன்றிரவு ஐயரிடம் இதைச் சொல்லிக் களித்தார் ராஜன் ஐயரும் மகிழ்ந்தார்.

ஆனால், மூன்றாவது நாள் ராஜனுக்கு ஒரு மணியார்டர் மூலம் அவர் கட்டின கட்டணம் திரும்ப வந்துவிட்டது. ஒரு நாள் பயிற்சிக்குப் பணம் கழித்துக்கொண் டிருந்தார்கள். அவரை அங்கத்தினராக்குவதற்கில்லை என்று நாசுக்காகத் தெரிவித்திருந்தார்கள். காரணம் ஏதும் சொல்லவில்லை. இந்தியர்கள், அதுவும் இந்திய விடுதியைச் சேர்ந்தவர்கள் பயிற்சி பெற லாயக்கற்றவர்கள் என்பது தெளிவாகத் தெரிந்தது.

டாக்டர் ராஜனுக்கு ஆத்திரமாக இருந்தது. சற்று யோசனை செய்து, அவர் வேறு ஒரு திட்டம் போட்டார். லண்டனில் பாலிடெக்னிக் என்ற பயிற்சி நிலையங்கள் நிறைய இருந்தன. அவைகளில் பலவிதப் பயிற்சிகள் தந்தார்கள். சமையல், முடிவெட்டுதல், துணிகளுக்கு இஸ்திரி போடுவது, புகைப்படம் எடுப்பது போன்ற பயிற்சிகளும் துப்பாக்கியால் சுடப் பழகுவதும் கற்றுக் கொடுத்தார்கள். ராஜன் தந்திரமாக, போட்டோ எடுக்கக் கற்கும் வகுப்பில் சேர்ந்தார். கட்டணம் குறைவு ; வகுப்பு

கள் வசதியாகச் சாயந்தர வேளையில் நடந்தன. கொஞ்ச காலம் போட்டோக்களை கற்றுவிட்டு, துப்பாக்கியால் சுடப் பழகும் வகுப்பிலும் சேர ராஜன் விண்ணப்பித்தார். ஏற்கனவே அந்தக் கல்விநிலைய மாணவராக இருந்தபடியால், அவருக்குத் துப்பாக்கியால் சுடப் பயிற்சி தரும் வகுப்பிலும் இடம் கிடைத்தது. அவர் விரைவிலேயே காமிராவைக் கையாளுவதைவிடக் கைத்துப்பாக்கியைக் கையாளுவதில் திறமைசாலி ஆனார்.

ஆனல், போர்கள் கைத்துப்பாக்கிப் பயிற்சியால் வெற்றி பெறுவதில்லை. பெரிய துப்பாக்கிகளால் சுடுவதிலும் 'டிரில்' என்ற கவாத்துப் பயிற்சியிலும் படைவீரர்கள் திறமை பெற வேண்டுமே. மேலும், படைவீரர்கள் சிறு தொகுதிகளாக, ஒற்றுமையாக முன்னேறவும் கற்க வேண்டும். படை அணிகள் முன்னேறுவது எப்படி, அவைகளுக்கான தளவாடங்களும் உணவும், உடையும் தடையின்றிக் கிடைக்கச் செய்வது எப்படி முதலிய பல போர்த் திறன்களை அவர்கள் கற்க வேண்டும். போர்க்களப் பயிற்சி இன்றி அவர்கள் இந்தியாவைப் படைப் பலத்தால் விடுவிப்பது எப்படி?

இத்தகைய போர்ப்பயிற்சி பெறுவதற்கான சந்தர்ப்பம் ஒன்று 1909-ஆம் ஆண்டு நேர்ந்தது. வட ஆப்பிரிக்காவில் மொராக்கோ நாட்டில், சுதேசிகளான மூர்ஜாதியாருக்கும் அவர்களை ஆண்டு வந்த வெள்ளையரான ஸ்பானிஷ்காரர்களுக்கும் போர் மூண்டது. இந்தப் போரில் மொராக்கோ மக்கள் கட்சியிலாவது, ஸ்பானிஷ்காரர்கள் கட்சியிலாவது சேர்ந்து போர்க்களப் பயிற்சி பெறுவதற்கு இந்திய விடுதியிலிருந்து மூன்று இளைஞர்களை அனுப்புவதென ஐயர் தீர்மானித்தார். இதற்கெனப் பணம் சேமித்து எம். பி. திருமலாச்சாரி, சோட்டு தத், எஃப். எம். கான் என்ற மூன்றுபேரை அனுப்பத் தேர்ந்தெடுத்தார். நிறையப் பணச்செலவில் அவர்களுக்குக்கான பெரிய துப்பாக்கிகள் வாங்கி, உடைகள் தைத்து, கைச்செலவுத் தொகை கொடுத்து மூவரையும் மொராக்கோவுக்கு அனுப்பினர்.

ஏழு மாதங்கள் சென்றன. அவர்கள் நல்ல பயிற்சி பெற்றிருப்பார்கள் என்று எல்லாரும் நம்பினார்கள். ஒரு நாள் மாலை 'மூன்று தளபதி'- களில் இருவர் திரும்பி வந்து சேர்ந்தார்கள். அவர்கள் இருந்த நிலைமை பரிதாப மாக இருந்தது. ஊக்கமின்றி, எலும்பும் தோலுமாக, அலுப்புத் தட்டிய மனிதர்களாக இருந்தனர். அவ்விரு வரும் தங்கள் துப்பாக்கிகளைத் தூக்கி வரக்கூடச் சக்தியற்றவர்களாக இருந்தார்கள். அவர்களின் ராணுவ உடைகள் கசங்கி, அழுக்குப் படிந்திருந்தன. அவர்கள் தெரிவித்த செய்தியும் பரிதாபமாக இருந்தது. தாங்கள் வலிய உதவுவதற்கு முன்வந்த போதிலும் மூர்களும் சரி. ஸ்பானிஷ்காரர்களும் சரி எந்தத் தரப்பினரும் தங்களை ஏற்க விரும்பவில்லை என்றார்கள். சாதாரண காலாட் படையினராகச் சேர்த்துக் கொள்ளக்கூட இரு தரப் பினரும் மறுத்துவிட்டார்கள். இரு தரப்பினருமே இந்த இந்திய இளைஞர்கள் எதிரித் தரப்பால் அனுப்பப்பட்ட உளவாளிகளாக இருப்பார்களோ என்று சந்தேகப்பட் டார்கள்; என்னென்னவோ முயற்சிகளில் ஏழு மாதம் கழிந்ததும், சொந்தச் செலவில் பணமெல்லாம் கரைந்த தும்தான் மிச்சம். முந்நூறு பவுன் பணமும் மூவரது தேகப் பிரயாசையும் வீணாயின!

இந்திய விடுதி இளைஞர்கள் இவ்வாறு போர்ப் பயிற்சி பெறுவதிலும் இந்தியாவைப் புரட்சிப் படை மூலம் விடு விப்பதிலும் கவனம் செலுத்தி வந்த அதே சமயம், பிரிட் டிஷ் போலீஸாரும் இந்திய விடுதிக்குள் ஊடுருவி அதன் மர்மங்களை அறியப் புதுப் புது முயற்சிகளை மேற்கொண் டார்கள். *1908*-ஆம் ஆண்டு லண்டனுக்கு வந்து சேர்ந்த இரு இந்தியர்கள் பிரிட்டிஷ் போலீஸாருக்கு வசதியான கையாட்களாக அமைந்தார்கள். அவர்களுடைய உதவி யால், பின்னர் ஸாவர்க்கரைக் கைது செய்து இந்தியா வுக்கு அனுப்பவும், ஐயரைக் கைது செய்யவும் பிரிட்டிஷ் போலீஸார் முயன்று, ஓரளவு வெற்றியும் பெற்றார்கள்.

அவர்களில் ஒருவர் பெயர் ராமராவ். ரங்கூன் முனிசி பாலிடியில் ஸானிடரி இன்ஸ்பெக்டராக இருந்தவர். தமது

துறையில் மேற்படிப்புப் படிக்கலாமென அவர் லண்டன் வந்தார். மற்ெருருவர் ஹரிச்சந்திர கோரேகாவ்ங்கர் என்ற மராட்டியர். குவாலியர் சம்ஸ்தானம் அளித்த பண உதவி யால் லண்டனில் எஞ்சினீயரிங் படிப்புப் படிக்க வந்தவர். ராம ராவை டாக்டர் ராஜனுக்கு ரங்கூனிலேயே தெரியும். ஹரிச்சந்திர கோரேகாவ்ங்கர் அவர்கள் யாருக்கும் முன் பின் தெரியாதவர்.

ராம ராவ் லண்டனில் டாக்டர் ராஜனேப் பார்த்தார். ராஜன் அவரை ஐயருக்கு அறிமுகப்படுத்தி வைத்தார். ஐயரின் நட்பால் ராம ராவ் தேசபக்தியுள்ளவராஞர். இந்திய விடுதிக் கூட்டங்களுக்குத் தொடர்ந்து வரலாஞர்.

கோரேகாவ்ங்கர், கீர்த்திகரைப் போல ஸாவர்க்கரிடம் விரைவில் நெருங்கிப் பழகிஞர். அவர் குள்ளமானவர்; கறுப்பான மேனி. தடித்த கண்ணுடி அணிந்தவர். ஆஞல் குறுகுறுத்த கண்கள் உள்ளவர், பேச்சில் வல்லவர். இந்திய விடுதிக் கூட்டங்களில் அவர் சத்ரபதி சிவாஜியைப் பற்றிப் பேசிஞல், கேட்போர் கண்களில் நீர் பெருகும். தமக்கு மாதா மாதம் கிடைத்த உதவிப் பணமான 20 பவுனில் பெரும் பகுதியை அவர் சுதந்தர இந்தியச் சங்கத் துக்கு வழங்கி வந்தார்.

இந்தச் சமயம், பிரிட்டிஷ் பத்திரிகைகளில் ஷாம்ஜி கிருஷ்ண வர்மாவின் மீது கடுமையான தாக்குதல்கள் வெளிவந்த வண்ணமிருந்தன. இந்திய விடுதியின் ஜீவநாடி அவரே என்று கருதி, அவரைத் தாக்கும் பல கடிதங்களே 'டைம்ஸ்' பத்திரிகை வெளியிட்டது. புரட்சிக் கொள்கை கள் கொண்ட அவர் பாரிஸ்டர் தொழில் செய்ய அருகதை யற்றவர் என்றும், அவரைப் பதிவு செய்துகொண்டிருந்த 'இன்னர் டெம்பிள்' நிறுவனம் தனது பாரிஸ்டர் பட்டியலி லிருந்து அவரது பெயரை நீக்கிவிடவேண்டும் என்றும் இக்கடிதங்கள் வற்புறுத்தின.

'இன்னர் டெம்பிள்' நிர்வாகிகள் 1909 ஏப்ரல் 30-ஆம் தேதி கூடி, ஷாம்ஜியின் எழுத்துக்கள் ஆட்சேபகரமா னவை என்றும், ஆதலால் அவரது பெயர் பாரிஸ்டர் பட்டியலிலிருந்து நீக்கப்படுவதாகவும் தீர்மானம் நிறை

வேற்றினார்கள். எல்லா நீதி மன்றங்களுக்கும் இத் தீர்மானம் அனுப்பப்பட்டது.

ஷாம்ஜி கிருஷ்ண வர்மா பாரிஸ்டர் தொழில் நடத்தி ஜீவிக்க வேண்டிய நிர்ப்பந்தத்தில் இருக்கவில்லையென்றாலும், இதில் கொள்கைப் பிரச்னை இருப்பதால், தீர்மானத்தை அவர் ஆட்சேபித்தார். 'டைம்ஸ்' பத்திரிகைக்கு அவர் எழுதிய நீண்ட கடிதத்தில் அவர், ''தீர்மானம் குற்றம் சாட்டுபவர்களுக்கும், குற்றம் சாட்டப்பட்டவருக்கும் இரு தரப்புக்குமே மனத்துக்கு உகந்ததாக இருக்கிறது'' என்று நையாண்டி செய்தார். ஆயினும், இந் நடவடிக்கை சிந்தனை சுதந்தரத்தையும் அபிப்பிராய சுதந்தரத்தையும் பாதிக்கிறது. தம்முடைய எழுத்துக்களில் ஆட்சேபகரமானவை என்ன என்று யாருமே சுட்டிக் காட்டவில்லை. இந்திய அரசாங்கம் தம் மீது வெறுப்புக் கொண்டுள்ளதால் பிரிட்டனில் 'இன்னர் டெம்பிள்' நிர்வாகிகளும் வெறுப்புக் காட்டுகிறார்கள்'' என்று ஷாம்ஜி தமது கடிதத்தில் சுட்டிக் காட்டியிருந்தார்.

மேலும், ''நான் ஒரே ஒரு வேண்டுகோளை விடுக்கிறேன். இங்கிலாந்து ஓர் அந்நியனால் படையெடுக்கப்பட்டு அவன் காலடியில் கிடந்தால், அவனுக்கெதிராகக் கலகம் செய்து வெகுண்டெழுதல் எப்படி இங்கிலீஷ்காரருக்கு நியாயமாக இருக்குமோ, அதே போல் நியாயமானதே இந்திய மக்கள் தங்கள் விடுதலைக்காகப் புரட்சி செய்வது. அது அவர்களது தலையாய கடமை என்று நான் கருதுவேன். எட்மண்டு பர்க் முதலிய பிற பாரிஸ்டர்கள் என் கருத்தை நன்கு ஆதரித்துள்ளார்கள்'' என்று ஷாம்ஜி தமது கடிதத்தில் குறிப்பிட்டார்.

தம்முடைய குருநாதர் ஹெர்பர்ட் ஸ்பென்ஸர், பிரிட்டன் இந்தியாவை ராணுவ பலத்தாலேயே தன் பிடியில் வைத்திருக்கிறது என்றும், இந்தியா பிரிட்டனது நன்மைக்காகவே இருக்கிறது என்றும் சொல்வாரென்று ஷாம்ஜி எடுத்துக் காட்டினார். இந்திய மக்கள் பிரிட்டிஷ்காரர்களை விரட்டியடித்தாலொழிய இந்திய மக்கள் மனிதர்கள் என்றுகூடக் கருதப்படமாட்டார்கள் என்று ராபர்ட்

வாலஸ் என்ற மற்றொரு பாரிஸ்டர் கூறியுள்ளதையும் ஷாம்ஜி காட்டினர். தென் ஆப்பிரிக்காவில் போயர்கள் பிரிட்டிஷ் ஆட்சிக்கெதிராகக் கிளர்ச்சி செய்த சமயம் போயர் இனத்தைச் சேர்ந்த பாரிஸ்டர்கள் கிளர்ச்சியை ஆதரித்தார்கள். அப்போது அவர்களுடைய பெயர்கள் பாரிஸ்டர் பட்டியலிலிருந்து, நீக்கப்படவில்லை என்பதையும் ஷாம்ஜி நினைவூட்டினர்.

தமது கடிதத்தில், ஷாம்ஜி கிருஷ்ண வர்மா முடிவாகக் கூறினர்: ''தன்னுடைய நாட்டுக்காக உயிர் துறப்பது உயர்வானது, இனியது என்று புகழ் பெற்ற ரோமானிய கவி ஹொரேஸ் கூறியுள்ளார். 'இன்னர் டெம்பிள்' நிறுவனம் என் மீது எடுத்துள்ள நடவடிக்கையை எனக்கு அளிக்கப்பட்ட பெரிய கௌரவம் என்றே நான் எடுத்துக் கொள்கிறேன். லண்டனில் இந்திய மாணவர்களுக்கான தர்ம நிலையமாக இயங்கும் இந்திய விடுதியை நான் லண்டனிலிருந்து பாரிஸ் நகருக்கு மாற்றுவதைப் பற்றியும் சிந்திக்க வேண்டியிருக்கிறது.''

இந்தச் சம்பவங்களெல்லாம் 1909-ஆம் ஆண்டு மத்தியில் நிகழ இருந்த ஒரு பெரும் கொந்தளிப்புக்கு முன்னறிவிப்புப் போலவே அமைந்தன. இவை நடந்த சிறிது காலத்தில் நாட்டுக்காக உயிர் துறப்பது பற்றி ஷாம்ஜி எடுத்துக்காட்டியது போல, ஓர் இந்திய மாணவர் உயிர் துறக்கவும் நேர்ந்தது.

1909-ஆம் ஆண்டு ஜூலை மாதம் முதல் தேதி லண்டன் நகரில் ஒரு செய்தி எல்லாரையும் பேராச்சரியத்தில் மூழ்கடித்தது. லண்டன் நகரில், பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தின் தலைநகரில், அரசியல் காரணங்களுக்காக ஓர் உயர் பிரிட்டிஷ் அதிகாரி சுட்டுக் கொல்லப்பட்டார்.

சுடப்பட்டவர் லெப்டினன்ட்-கர்னல் ஸர் கர்ஸான்-வில்லி. பிரிட்டிஷ் மந்திரி சபையில் இந்திய விவகார மந்திரியின் துணையாளர். இவரைச் சுட்டுக் கொன்றவர் மதன்லால் திங்க்ரா என்ற இந்திய மாணவர். மதன்லால் சுடும்போது அவரைத் தடுத்து நிறுத்த முயன்ற காப்டன் கவாஸ் லால்காக்கா என்ற பார்ஸி டாக்டர் மீதும்

குண்டுகள் பாய்ந்தன. ஆஸ்பத்திரிக்குப் போகும் வழியில் அவர் காலமானார்.

சம்பவம் நூற்றுக்கணக்கான பேர் கூடியிருந்த ஒரு பெரிய ஹாலுக்கு வெளியே நடந்தது. ரகசியமாகச் சுட்டு விட்டு ஓடும் முயற்சி அல்ல. இந்தக் காரியத்தைச் செய்தவரின் துணிச்சல் எல்லாரையும் பிரமிக்க வைத்தது.

லண்டனில் 'இம்பீரியல் இன்ஸ்டிட்டியூட்' என்ற சாம்ராஜ்ய சங்கத்தின் ஜஹாங்கீர் ஹாலின் முன் வாசல் படிகளில் தான் கொலை நடந்தது. இங்கே லண்டன் இந்திய சங்கம் ஒரு கூட்டம் நடத்தியது. கூட்ட முடிவில் விருந்து ஒன்றும், இசை நிகழ்ச்சி ஒன்றும் ஏற்பாடாகியிருந்தன. முந்நூறு பேர் கூடியிருந்தார்கள். பெரும்பாலோர் இந்திய மாணவர்கள். இந்திய மாணவர்கள் விஷயங்களில் சம்பந்தப்பட்ட முக்கியமான அதிகாரிகளும் இந்திய மாணவர்களின் நண்பர்களான வெள்ளையர்கள் பலரும் வந்திருந்தார்கள்.

இரவு பதினொரு மணி இருக்கும். ஜஹாங்கீர் ஹாலுக்கு அடுத்தாற் போல் இருந்த ஸவாய் ஹோட்டலில் நடந்த விருந்து முடிந்து, அதைத் தொடர்ந்த இசை நிகழ்ச்சியும் முடியும் தறுவாயில் இருந்தது. அன்றைய நிகழ்ச்சிகளின் முக்கிய விருந்தினர்களில் ஒருவரான ஸர் கர்ஸான்-வில்லி தம் மனைவியுடன் வீட்டுக்குக் கிளம்பிக் கொண்டிருந்தார். முன் வாசல் படி வரிசையில் அவர் கீழே இறங்கி வந்துகொண் டிருந்தபோது, அவர் மனைவி எதையோ வைத்துவிட்டு வந்துவிட்டதை நினைவு கொண்டு மீண்டும் உள்ளே போனார்.

ஸர் கர்ஸான்-வில்லி மட்டும் தனியாகப் படியில் இறங்கி வந்துகொண் டிருக்கையில் அவருக்கு ஏற்கனவே நன்கு பழக்கமுள்ள மதன்லால் திங்க்ரா என்ற இளம் மாணவர் அவரை நெருங்கி வணக்கம் தெரிவித்தார். நெருங்கிக் கொண்டே, தமது கையிலிருந்த ஒரு ரிவால்வரால் ஐந்து தடவை சுட்டார். முதல் நான்கு குண்டுகள் எவ்விதத் தீங்கும் செய்யவில்லை. ஐந்தாவது குண்டு ஸர் கர்ஸான்-வில்லியின் தலையில் பாய்ந்து அதைச் சுக்கு நூருக்கியது. அவர் உயிரற்றுக் கீழே சாய்ந்தார்.

ஸர் கர்ஸான்-வில்லியுடன் இறங்கி வந்துகொண்டிருந்த காப்டன் கவாஸ் லால்காக்கா கர்ஸான்-வில்லியைச் சுட்டவர்மீது பாய்ந்தார். ரிவால்வரிலிருந்து வந்த ஆருவது குண்டு அவர் மார்பில் பாய்ந்து அவரைக் கொன்றது.

விருந்துக்கு வந்தவர்களில் ஒருவர், தோர்பர்ன் என்பவர் மதன்லாலைப் பிடித்துக்கொண்டு, மற்ருெருவரின் உதவியுடன் அவரை ஒரு நாற்காலியில் கட்டிப் போட்டார். மதன்லால் தமது வலது கையை விடுவித்துக்கொண்டு ரிவால்வரைத் தமது தலைக்கெதிரே காட்டிச் சுட்டார். ரிவால்வரில் குண்டுகள் தீர்ந்து போய்விட்டதால், ஏதும் நடக்கவில்லை. அவர் மீண்டும் கட்டிப் பிடிக்கப்பட்டார். இந்தக் களேபரத்தில் அவரது மூக்குக் கண்ணுடி கீழே விழுந்துவிட்டது. அவரது வேண்டுகோளின்படி அதைக் கண்டெடுத்து அவரிடம் தந்தார்கள்.

தம்மை மாய்த்துக்கொள்ளத் தாம் செய்த முயற்சி வீணுகிப் போனதால், மதன்லால் மேலும் முரண்டு பண்ணுமல், அமைதியாக இருந்தார். தமது கண்ணுடியைச் சரி செய்துகொள்ளத் தமது வலக்கையை விடுவிக்குமாறு கேட்டார். கையை அவிழ்த்துவிட்டதும், கண்ணுடியைச் சரி செய்துகொண்டாரே தவிர, தப்பித்துச் செல்லவோ, யாரையாவது தாக்கவோ முயற்சி செய்யவில்லை. தோர்பர்ன் மதன்லாலின் நாடியைப் பிடித்துப் பார்த்தார். அதிசயிக்கத் தக்கவாறு, நாடியில் படபடப்பு ஏதும் இல்லை ; சாதாரண நிலையிலேயே இருந்தது. தம்மைச் சுற்றியிருந்த அத்தனை பேரும் பதற்றப் பட்டுக்கொண்டிருக்கையில் மதன்லால் ஒருவரே எவ்விதக் கலக்கமுமற்றவராக இருந்தார் !

துப்பாக்கிவெடிச் சத்தத்தைக் கேட்டு உள்ளேயிருந்து உயரமான ஒரு பிரிட்டிஷ் பெண்மணி வெளியே என்ன நடக்கிறதென்று பார்க்க வந்தார். தலையில்லாது ஓர் இங்கிலீஷ்காரர் தரையில் கிடப்பதைக் கண்டு, "ஐயோ பாவம்!" என்று பரிதாபப்பட்டு, அவர் அருகே குனிந்தார். இறந்து கிடப்பவர் தம் கணவரே என்று அந்தப் பெண்மணி உணரச் சிறிது நேரமாயிற்று. லேடி கர்ஸான்-வில்லி தேம்பித் தேம்பி அழுதது மனமுருக்குவதாக இருந்தது.

போலீஸார் வந்துசேர்ந்தார்கள். மதன்லாலை அழைத்துச் சென்ருர்கள். மதன்லாலிடம் இன்னெரு ரிவால்வரும் ஒரு குத்துவாளும்கூட இருந்ததைச் சோதனையின்போது கண்டார்கள். அவர் வால்டன் தெரு போலீஸ் ஸ்டேஷனுக்குக் கொண்டு செல்லப்பட்டார்.

இளம் இந்திய மாணவர் மதன்லால் திங்க்ராவுக்கு வயது 26. அவர் இதற்கு முந்தின மாதம்தான் லண்டன் யுனிவர்ஸிடி காலேஜில் எஞ்சினீயரிங் பட்டப்படிப்பில் முதல் வகுப்பில் தேறியிருந்தார். அவர் அமிர்தஸரஸ் நகரைச் சேர்ந்த பஞ்சாபி க்ஷத்திரியக் குடும்பம் ஒன்றில் பிறந்தவர். அவருடைய தகப்பஞர் பெரிய நிலப் பிரபு. பிரிட்டிஷாரிடம் மிகவும் பயபக்தி விசுவாசம் கொண்டவர். மதன்லாலுக்கு இரண்டு மூத்த சகோதரர்கள்; இருவரும் லண்டனில் படித்தவர்கள். ஒருவர் லாஹோர் நகரில் பாரிஸ்டராக இருந்தார். இந்தச் சமயம் லண்டன் வந்திருந்தார். மற்றவர் இந்தியாவில் டாக்டராக இருந்தார்.

லண்டனுக்குப் படிக்க வருவதற்கு முன்பு மதன்லால் ஹாங்காங், சிங்கப்பூர், மலேயா முதலிய இடங்களில் இருந்துள்ளார். லண்டனில் அவர் மிகச் சிறந்த மாணவரெனப் பெயரெடுத்திருந்தார். தாய்நாட்டினிடமும் தமது ஹிந்து பாரம்பரியத்திலும் அவருக்கு ஆழ்ந்த பற்றுதல் உண்டு. 1857-இன் பொன்விழாவின்போது அவர் '1857 தியாகிகள்' பாட்ஜைப் போட்டுக்கொண் டிருந்தார்; அதனல் தமது கல்லூரி மாணவர்கள் சிலருடன் அவர் மோத நேர்ந்தது.

மதன்லால் திங்க்ராவின் நெஞ்சுரம் வியக்கத் தக்கது. கர்ஸான்-வில்லி கொலை பற்றியும், மதன்லால் பற்றியும் ஏராளமான செய்திகளை ஐயர் பாண்டிச்சேரி 'இந்தியா' பத்திரிகைக்கு அனுப்பிக்கொண் டிருந்தார். வழக்கமான 'லண்டன் கடிதம்' தவிர, தனியாகப் பல செய்திகளும், 'இந்தியா'வில் வெளிவந்தன. 'லண்டன் கடிதம்' ஒன்றில் ஐயர் மதன்லால் திங்க்ராவின் தீரத்தைப் பற்றிய இரு சம்பவங்களை விவரித்துள்ளார். ஐயர் கூறுகிருர்:

"...திங்க்ராவைப் பற்றிச் சில சங்கதிகள் வெளிவந்திருக்கின்றன. ஒரு நாள் அவனும் அவனுடைய

கூட்டாளியும் ஒரு கடிதம் எழுதிவிட்டு அதில் ரத்தத்தினுல் கையொப்பம் வைக்க வேண்டுமென்று விளையாட்டாகப் பேசிக்கொண்டிருக்கும்போது, திங்க்ரா உடனே கத்தியினுல் தன் விரலை அறுத்து ரத்தத்தை எடுத்துக் கொடுத்தானும். ஒரு நாள் அவனும் அவனுடைய சிநேகிதர்களும் பேசிக்கொண்டிருந்தபோது ஒருவன் ஜப்பானியர்களுடைய தீரத்தைப் பற்றி உற்சாகத்துடன் பேசினுன். திங்க்ரா உடனே, 'ஜப்பானியர்கள் என்ன உயர்த்தி? நம் ஹிந்து மக்கள் அதற்கு மேலான தைரியத்தையும் வீரத்தையும் தூரத்தையும் காட்டுவார்கள்' என்ருன். ஹிந்துக்களுடைய தைரியத்தில் அவனுக்கு அபார நம்பிக்கையிருப்பதுடன், அதற்கு மிஞ்சின தைரியம் கிடையவே கிடையாது என்பதும் அவனுடைய பூரணமான நம்பிக்கை. ஆகையால் மற்றெந்த ஜாதியாருடைய சௌரியத்தைப் பற்றியாவது அளவுக்கு மிஞ்சி அவனுக்கு எதிரில் புகழ்ந்துவிட்டால் அவனுக்கு எரிச்சல் வந்துவிடும். ஆகையால் அன்று ஹிந்துக்கள் ஜப்பானியருக்குத் தைரியத்தில் எவ்விதத்திலும் தாழ்ந்தவரில்லையென்று கக்ஷியாடினுன். அப்பொழுது மற்ருெரு சிநேகிதன், 'ஜப்பானியர்கள் பீரங்கிகளுக்கு எதிரில் சளைக்காமல் எதிர்த்துச் சென்ருர்கள்; எதிரிகளின் சூலங்களை மார்பில் ஏற்ருர்கள். பீரங்கி வேண்டாம், சூலம் வேண்டாம், இந்தக் குண்டூசியை உன் கையில் குத்துகிறேன்; உன்னுடைய தைரியத்தைப் பார்க்கலாம்' என்ருன். உடனே திங்க்ரா தன் கையை மேஜை மீது வைத்து, குண்டூசியைக் குத்தச் சொன்னுன். அவன் சிநேகிதனும் அந்தக் குண்டூசியை முற்றிலும் ஏற்றினுன். ரத்தம் பெருகிற்று. ஆனுல் திங்க்ராவின் கை ஆடவில்லை. அவன் முகம் சிணுங்கவில்லை!''

மதன்லால் திங்க்ராவுடன் பேசிக்கொண்டிருந்த முதல் நண்பர் ஐயர். ஜப்பானியரின் தீரத்தைப் பற்றி உரைத்தவர் டாக்டர் டி.எஸ்.எஸ். ராஜன். குண்டூசியைக் குத்தட்டுமா என்று கேட்டவரும், ஊசியைக் குத்தியவரும் அவரே. அனைத்துக்கும் சாட்சியாக இருந்தவர் ஐயர்.

தமது சொந்த அனுபவத்தையே 'லண்டன் கடித'த்தில் மேலே கண்டவாறு ஐயர் எழுதினர்.

கர்ஸான்-வில்லியைச் சுட்டுக் கொல்வதற்குச் சிறிது காலத்துக்கு முன், மதன்லால், "தேசபக்தர் ஒருவர் பெருங் காரியம் சாதிக்க வேண்டித் தம் உடல், பொருள், ஆவி யாவற்றையும் தியாகம் செய்ய வேண்டிய காலம் வந்து விட்டதா என்பதை எப்படி உணர்வார் ?" என்று ஸாவர்க் கரிடம் கேட்டாராம். ஸாவர்க்கர் சொன்னாராம் : "ஒரு தியாகி தமது சகலத்தையும் துறக்கத் தயாராகிவிட்டால், அதுவே காலம் கூடிவிட்டதற்கு அடையாளம்" என்று. இந்த விடை மதன்லாலுக்கு ஏதோ சூட்சுமமான அனுமதி போலாகிவிட்டது. காரியத்தை உடனே முடிக்கச் சித்த மானர்.

ஆங்கிலேயப் பிரபுக்களும் அந்தஸ்துள்ள மக்களும் அங்கம் வகிக்கும் கௌரவமிக்க கிளப் ஒன்றில், மதன் லால் சேர்ந்தார்; வாழ்வில் நல்ல செல்வாக்கும் அந்தஸ்து முள்ள சீமான்களுடன் பழகினர். இந்தியாவில் வைஸ் ராயாக இருந்த கர்ஸான் பிரபுவையே தீர்த்துக் கட்டு வதெனத் தீர்மானித்தார். வங்கப் பிரிவினை என்ற விஷ வித்துக்குக் காரணமாயிருந்தவரும், ஏகாதிபத்திய மமதை கொண்டவருமான கர்ஸான் அவ்வமயம் லண்டனுக்கு வந்திருந்தார். ஆனல் அவரைச் சுடச் சந்தர்ப்பம் சரி யாக அமையவில்லை, ஆகையால், இந்தியாவில் இருந்த சமயம் சுதேச சம்ஸ்தான மன்னர்களை வாட்டிப் பாடு படுத்தியவனும், லண்டன் திரும்பியபின் இந்தியா மந்திரி யின் உதவியாளர் பதவி பெற்று, பிரிட்டனில் உள்ள இந்திய மாணவர்கள் ராஜவிசுவாச அடிமைப் புத்தியை இழந்துவிடாமல் காக்கும் பணியில் அவர்களுடன் பழகி அவர்களை வேவு பார்க்கும் பணியிலிருந்தவனுமான ஸர் கர்ஸான்-வில்லியைச் சுட்டுக் கொல்ல முடிவு செய்தான்.

மதன்லால் திங்க்ராவின் குடியிருப்பில் அவனுடைய உடைமைகள் போலீஸாரால் சோதனை செய்யப்பட்ட போது, அவனுடைய நோட்டுப் புத்தகம் ஒன்றைப போலீஸார் எடுத்துச் சென்றனர். துப்பாக்கியால்

சுடுவதன் உபயோகங்களைப் பற்றி அதில் குறிப்பு ஒன்று இருந்ததாம்.

இந்திய விடுதியிலும் சோதனை நடந்தது. அங்கே சில கடிதங்களையும் ஏராளமான தேசீயப் பிரசுரங்களையும் போலீஸார் எடுத்துச் சென்றார்கள். ஷாம்ஜி கிருஷ்ண வர்மாவின் 'இந்திய ஸோஷாலஜிஸ்ட்' பத்திரிகை அச்சாகும் அச்சுக்கூடமும் சோதனைக்குள்ளாயிற்று.

பாரிஸில் வசித்து வந்த ஷாம்ஜி, தமக்கும் இக்கொலைக்கும் சம்பந்தம் ஏதும் இல்லை என்று 'டைம்ஸ்' பத்திரிகைக்கு எழுதினார். ஆனால், மதன்லால் திங்க்ரா ஒரு பெரும் தியாகி என்றே தாம் கருதுவதாகவும் அவர் குறிப்பிட்டிருந்தார். ஆங்கிலேயர்கள் தொடர்ந்து இந்தியாவுக்கு அநீதி இழைப்பார்களேயானால், உலகத்தையே அதிர்ச்சியில் மூழ்கடிக்க வைக்கும் மற்றொரு துயரச் சம்பவமும் நிகழலாம் என்று எச்சரிக்கையும் செய்திருந்தார்.

'பால் மால் கெஜட்' பத்திரிகையின் நிருபர் ஒருவர் இந்திய விடுதிக்குச் சென்று பார்த்தபோது விடுதி அநேகமாக மூடப்பட்டுவிட்டது போல இருந்ததைக் கண்டார். ஒரே ஓர் இந்திய மாணவர்தான் இருந்தாராம்; அவர், "மதன்லால் ஒன்பது மாதங்களுக்கு முன்பு விடுதியில் இருந்ததாகவும், அதன் பிறகு இங்கிருக்கவில்லை" என்றும் தெரிவித்தாராம். அவருக்கு அப்போது அரசியலில் சிரத்தை இருந்ததாகவே தோன்றவில்லை என்றாராம்.

ஜூலை மாதம் 2-ஆம் தேதி மதன்லாலை வெஸ்ட்மின்ஸ்டர் போலீஸ் கோர்ட்டுக்கு அழைத்துச் சென்று குற்றப் பத்திரிகை படித்தார்கள். போலீஸார் தங்களது அறிக்கையைச் சமர்ப்பித்த பின், அவர்களை மதன்லால் குறுக்கு விசாரணை செய்ய விரும்புகிறாரா என்று மாஜிஸ்டிரேட் கேட்டார். மதன்லால் இல்லை என்று தலையாட்டி, காப்டன்-கவாஸ் லால்காக்காவைக் கொல்லும் நோக்கமும் தமக்கு இருக்கவில்லை என்றார். தற்காப்புக்காகச் சுட்டதிலேயே அவர் இறந்தார் என்றார். வழக்கு ஒரு வாரம் தள்ளிப் போடப்பட்டது.

மறுநாள் ஜூலை 3-ஆம் தேதி, லண்டனில் உள்ள இந்தியர்களின் பொதுக்கூட்டம் ஒன்று நடந்தது. பாபு சுரேந்திநாத் பானர்ஜி தலைமை வகித்தார். கர்ஸான்-வில்லி கொலையைக் கண்டித்துப் பலர் பேசினார்கள். ஒரு தீர்மானமும் நிறைவேறியது. ஜூலை 5-ஆம் தேதி, இன்னும் பெரிதான ஒரு கூட்டம் காக்ஸ்டன் ஹாலில் நடந்தது. ஆகா கான் தலைமை வகித்தார். முன்போலவே பலர் மதன்லால் திங்க்ராவைக் கண்டித்துப் பேசினார்கள். திங்க்ராவைக் கூட்டம் ஏகமனதாய்க் கண்டிப்பதாகக் கூட்டத் தலைவர் ஒரு தீர்மானத்தை முன்மொழிந்ததும், தகராறு மூண்டது. ''இல்லை, ஏகமனதாக இல்லை'' என்று ஒரு குரல் கேட்டது. ''அப்படிக் கூறுபவர் யார்?'' என்று தலைவர் வினவினார். ''நான் தான்!''-''உங்கள் பெயர்?'' இதற்குள், கூட்டத்தில் இருந்த சிலர் பொறுமை இழந்து, ''அவரைக் கீழே இழுத்து உட்கார வையுங்கள், அவரை வெளியே அனுப்புங்கள்!'' என்றெல்லாம் கத்தினார்கள். ஆனால் அத்தனை களேபரத்தின் மத்தியிலும் அந்தத் தனி மனிதர் சற்றும் கலங்காமல் நின்றார். ''என் பெயர் ஸாவர்க்கர்'' என்றார்.

அவ்வளவுதான். ஸாவர்க்கர் பெயரைக் கேட்ட மாத்திரத்தில் கூட்டத்தில் குழப்பம் உண்டாயிற்று. கூட்டத்தில் ஏதாவது வெடிகுண்டுகள் வீசப் புரட்சிக்காரர்கள் வந்திருக்கிறார்களோ? பயமும் ஆத்திரமும் அதிகரித்தன. பாமர் என்ற ஆங்கிலோ இந்தியன் ஒருவன் ஸாவர்க்கரை நெருங்கி அவரை அறைந்தான். கண் அருகே அடிபட்டது. கண்ணாடி உடைந்துபோய், ரத்தம் சொட்ட, உடைகளெல்லாம் ரத்தக் கறை படிய, ஸாவர்க்கர் சற்றும் கலங்காமல், ''நீங்கள் இவ்வளவு கெடுபிடி செய்தும், நான் தீர்மானத்தை எதிர்க்கவே செய்கிறேன்!'' என்றார்.

ஸாவர்க்கர் அருகில் இருந்த எம். பி. டி. ஆச்சார்யா அவரை அடித்தவனுக்கு நல்ல உதை தந்தார். அவன் காயம் பட்டுக் கீழே விழுந்தான், ஸாவர்க்கருக்கு அருகே ஐயரும் இருந்தார். ஸாவர்க்கரைத் தாக்கியவனைச் சுட்டுவிட ஐயர் கைத்துப்பாக்கியை எடுக்கப் போனார்.

ஆனால் ஸாவர்க்கர் கண் ஜாடையால் வேண்டாமென்று தடுத்துவிட்டார்.

'டைம்ஸ்' பத்திரிகைக்கு எழுதிய கடிதம் ஒன்றில் ஸாவர்க்கர், தாம் காக்ஸ்டன் ஹால் கூட்டத்தில் தீர்மானத்தை எதிர்த்ததன் காரணத்தைத் தெரிவித்தார். இன்னும் விசாரணையில் இருந்து வருபவரும், இதுவரை கோர்ட்டால் குற்றவாளி என்று தீர்மானிக்கப் படாத வருமான மதன்லாலைக் குற்றவாளி எனக் கூட்டத் தீர்மானம் கண்டித்ததாலேயே தாம் எதிர்த்ததாக ஸாவர்க்கர் சொன்னார். விஷயம் கோர்ட் விசாரணையில் இருப்பதால் அவ்வாறு சொல்வது தவறு என்பதை அவர் சுட்டிக் காட்டினார்.

ஸர் கர்ஸான்–வில்லி கொலை பற்றியே ஊரெங்கும் பேச்சாக இருந்தது. கிளப்புகள், பொது இடங்கள், பொதுக் கூட்டங்கள், ரெயில்கள், பார்லிமென்ட் எங்கும் இதே பேச்சு. பிரிட்டிஷ் அதிகாரவர்க்கத்தின் கோபாவேசத்தைக் கண்டு, இந்தியர்களில் விசுவாசிகளானவர்கள் நடுங்கினார்கள். மதன்லாலின் தந்தையும் மூத்த சகோதரரும் அவருக்கும் தங்களுக்கும் தொடர்பு கிடையாது என்றும், தாங்கள் பிரிட்டனிடம் விசுவாசமுள்ள பிரஜைகள் என்றும் அறிவித்தார்கள்.

ஆனால் மதன்லால் உறுதியாக இருந்தார். அவரது திட சித்தம் கலங்கவில்லை. பூர்வாங்க விசாரணையில் அவர் தமக்கு மரண தண்டனை கிடைக்க வேண்டுமென்பதே தமது விருப்பம் என்றும், இவ்வாறு தாம் உயிர் நீத்தால் தான் தமது தாய்நாட்டு மக்கள் வஞ்சம் தீர்க்க வேண்டும் என்ற உறுதியில் மேலும் வலுவாய் நிற்பார்கள் என்றும் சொன்னார். தமக்குச் சித்த சுவாதீனமில்லை என்று சொல்லிக் கொள்ளுமாறு தமக்குக் கூறப்பட்ட ஆலோசனையை உறுதியாக நிராகரித்து, அவர் கோர்ட்டில் மிக அழகானதொரு வாய்மொழி வாக்குமூலம் தந்தார்.

"எப்படி ஜெர்மனியானது இந்த இங்கிலாந்து தேசத்தை ஆக்கிரமித்துக்கொள்ள உரிமை இல்லையோ, அப்படியே இங்கிலாந்து இந்தியாவை ஆக்கிரமித்துக் கொள்ள உரிமை

இல்லை. எங்கள் புனிதமான பூமியை அசுத்தப்படுத்தும் ஆங்கிலேயரைக் கொல்லுதல் எல்லாவிதத்திலும் நியாய மானதே. இவ்விஷயத்தில் ஆங்கிலேய மக்கள் காட்டும் கபடம், போலித்தனம், பித்தலாட்டம் இவைகளைக் கண்டு நான் ஆச்சரியப்படுகிறேன்'' என்றார் மதன்லால்.

மதன்லால் இந்த வாய்மொழி வாக்குமூலம் தவிர, எழுத்தில் எழுதித் தயாரித்த வாக்குமூலம் ஒன்றையும் கர்ஸான்-வில்லியைச் சுடும்போதே தமது பையில் வைத் திருந்தார். ஆனால் அந்த வாக்குமூலம் வெளியாவதை விரும்பாத போலீஸார், அதை மூடி மறைத்துவிட்டார்கள். இந்த வாக்குமூலம், மதன்லால் தூக்கிலிடப்பட்ட பின் அவருடைய நண்பர்களால் வெளியிடப்பட்டது.

பூர்வாங்க விசாரணை முடிந்ததும், மதன்லால் ஸெஷன்ஸ் விசாரணைக்கு அனுப்பப்பட்டார். ஓல்டுபெயிலிகோர்ட்டில் பிரிட்டனின் பிரதம நீதிபதியான ஆல்வெர்ஸ்டன் பிரபு விசாரணையை நடத்தினார். விசாரணை சுருக்கமாக இருந்தது. மதன்லால் எதிர்வாதம் ஏதும் செய்யவில்லை. தமது எழுத்து மூலமான வாக்குமூலத்தைப் பதிவு செய்துகொள்ளும்படி மட்டும் சொன்னார். அப்படி ஒரு வாக்குமூலம் இருப் பதே தங்களுக்குத் தெரியாதெனப் போலீஸார் சாதித் தார்கள். ஸெஷன்ஸ் கோர்ட் மதன்லாலுக்கு மரண தண்டனை விதித்தது.

தண்டனை அறிவிக்கப்பட்டதும், மதன்லால், ''உங்க ளுக்கு நன்றி, ஐயா. என்னுடைய தாய்நாட்டின் நன்மைக் காக அற்பமான என் உயிரைத் தருகிறேனே என்று பெருமைப் படுகிறேன்'' என்றார்.

ஸாவர்க்கர் மதன்லாலை, பிரிக்ஸ்டன் ஜெயிலில் பார்த் தார். தமது உடல் ஹிந்து ஆசாரப்படி மந்திரங்களுடன் எரிக்கப்பட வேண்டும் என்றும், தமது உடலை ஹிந்து அல்லாத எவரும் தொடக்கூடாது என்றும், தம் உடை களும் உடைமைகளும் விற்கப்பட்டு அதன் மூலம் வரும் தொகை தேசீயக் காரியங்களுக்குக் கொடுக்கப்பட வேண்டும் என்றும், இவையே தமது கடைசி விருப்பம் என்றும் மதன்லால் சொன்னார்.

மதன்லாலுக்கு மரண தண்டனை நிறைவேற அவர் காத்திருக்கையில், லண்டன் பத்திரிகைகள் அவரது வழக்கு பற்றிக் கருத்துத் தெரிவித்தன. செல்வாக்கு மிக்க 'ரிவ்யூ ஆஃப் ரிவ்யூஸ்' பத்திரிகை ஆசிரியர் டபிள்யூ. டி. ஸ்டெட், மதன்லாலுக்கு ஆயுள் தண்டனை கொடுத்திருக்க வேண்டும்; தூக்குத் தண்டனை சரியில்லை என்று வற்புறுத்தினர். 'லண்டன் ஈவ்னிங் கெஜட்' நாளிதழும் இவ்வாறே கூறியது. இதை முன்னிட்டு, தூக்குத் தண்டனை நிறைவேற்றுவதை ஒத்திப்போடுவதும் நல்லதென இருவரும் கூறினர். 'டைம்ஸ்' பத்திரிகை மட்டும் மதன்லாலுக்கு விரோதமாகவே இருந்தது; எல்லா விஷயங்களுக்கும் ஸாவர்க்கரே பொறுப்பு என்று எழுதியது.

மதன்லால் திங்க்ரா சம்பவம் ஐயர், ஸாவர்க்கர், டாக்டர் ராஜன் மூவரது வாழ்க்கையையும் மிகவும் பாதித்தது. இந்திய விடுதியில் இருந்த பிறர் வாழ்க்கையும் இதனால் பாதிக்கப்பட்டது. ஸாவர்க்கர் பாரிஸ்டர் பரீட்சையின் முடிவுத் தேர்வில் வெற்றி பெற்றாரென்றாலும் அவருக்குப் பாரிஸ்டர் பட்டமளிக்க மறுத்துவிட்டார்கள். அரசியலில் பங்கு கொள்வதில்லை என்று எழுத்து மூலம் வாக்குறுதி கொடுத்தால் பட்டம் தருவதாகச் சொன்னார்கள். ஸாவர்க்கர் மறுத்துவிட்டார்; அவர் பாரிஸ்டர் பட்டம் பெறவேயில்லை. ஐயரும்தாம். அவர் பட்டமேற்க வேண்டிய வேளை பின்னர் வந்தபோது, அவரும் பட்டம் ஏற்கவில்லை.

கர்ஸான்-வில்லி கொலைக்குப் பின் இந்திய விடுதி கொஞ்ச காலம் மூடியிருந்தது. காலிகளால் தாக்குண்டு சிரமப்படாமல் இருக்க ஸாவர்க்கர், ஐயர், ராஜன் மூவரும் நண்பர்கள் இல்லங்களில் சில நாட்கள் இருந்தனர். அவர்களுக்கு இடம் கொடுத்து உதவியதற்காக நண்பர்கள் கண்டிக்கப்பட்டார்கள். தினந்தோறும் அவர்கள் வாடகை அறைகள், ஹோட்டல்கள் அல்லது குடியிருப்புகளில் இடம் கிடைக்குமா என்று அலைந்தார்கள். "இந்தியர்களா? ஐயையோ, வேண்டாம்!" என்று எல்லாரும் கதவை மூடினார்கள்.

ஐயரும் ராஜனும் எப்படியோ நண்பர்களுடன் தங்கியிருக்க மிகவும் களைத்துப் போயிருந்த ஸாவர்க்கர் பிரைட்டன் என்ற கடலோரச் சுகவாச ஸ்தலத்தில் ஓய்வு கொள்ளச் சென்றார். ஆனால் அங்கும் அவர் சும்மா இருக்கவில்லை. மதன்லாலின் எழுத்துமூலமான வாக்குமூலத்தை அச்சிட்டு, இங்கிலாந்திலும் ஐர்லாந்து, அமெரிக்கா முதலிய இடங்களிலுமுள்ள பத்திரிகைகளுக்கு அனுப்பி வைத்தார். போலீஸார் மூடி மழுப்பிய இந்த அறிக்கையை ஒன்று தவிர மற்ற எல்லா இங்கிலீஷ் பத்திரிகைகளும் வெளியிடாமல் ஒதுக்கிவிட்டன. 'டெய்லி நியூஸ்' என்ற அந்த ஒரே பத்திரிகையில், அதன் உதவிப் பத்திராதிபர் ஐரிஷ்காரர் என்ற காரணத்தால், அவருடைய இந்திய அபிமானத்தால், மதன்லால் திங்க்ராவின் வாக்குமூலம் வெளியாயிற்று. மதன்லால் தூக்கிலிடப்பட்டதற்கு மறுநாள் இது வெளிவந்தது.

1909-ஆம் ஆண்டு ஆகஸ்ட் மாதம் 17-ஆம் தேதியன்று மதன்லால் திங்க்ரா உற்சாகத்துடன் தூக்குமேடை ஏறினார்.

'டெய்லி நியூஸ்' பத்திரிகைச் செய்தி கூறியது:

"மதன்லால் திங்க்ராவைத் தூக்கிலிடுவதற்கு முன்பே ஏராளமான கூட்டம், பென்டோன்வில் சிறைச்சாலைக்கு வெளியே கூடிவிட்டது. இவர்களில் இந்திய மாணவர்கள் ஒரு சிலரே, மற்றவர்கள் பிரிட்டிஷார். மணி ஒன்பது அடித்ததும் அண்டர் - ஷெரிஃப் அதிகாரி சிறைச்சாலைக்கு வெளியே வந்தார். தண்டனை எப்படி நிறைவேறியது என்று கேட்டதற்கு 'எல்லாம் சரிவர நடந்தன; தூக்கிலிட்டதும் உடனே உயிர் பிரிந்துவிட்டது' என்றார். உடலை எரிக்க அதைக் கேட்டு ஒரு மனு வந்தது. அது நிராகரிக்கப்பட்டது. திங்க்ராவின் உடல் வழக்கப்படி ஜெயிலின் உள்ளேயே புதைக்கப்படும்."

மதன்லாலின் எழுத்து மூலமான வாக்குமூலம் 'டெய்லி நியூஸ்' பத்திரிகையில் முழுதாக வெளிவந்தது.

மதன்லால் திங்க்ராவின் கடைசி நாட்களைப் பற்றி வ. வே. ஸு. ஐயர் 'இந்தியா' பத்திரிகைக்கு அனுப்பிய

'லண்டன் கடித'த்தில் கூறுகிறார்: "தன்னுடைய ஆயுளின் கடைசி நிமிஷம் வரையில் அவன் யாதொரு தளர்ச்சியும் காட்டவில்லை. ஜெயிலில் அவனத்தனை சாதுவான கைதி இதுவரையில் இருந்ததில்லையென்று ஜெயில் உத்தியோகஸ்தர்களெல்லாம் சொல்லி ஆச்சரியப்படுகிறார்கள். ஆத்ம சம்பந்தமான புத்தகங்களைப் படிப்பதில்தான் தன்னுடைய நேரத்தைக் கழித்தானும். கடைசியில் தூக்குப் பலகையில் ஏறும்போது யாதொரு மனக்கலக்கமும் பயமும் இல்லாமல் அபாரமான ஆத்ம வசியத்துடனேயே ஏறினன் என்று சொல்லப்படுகிறது."

மதன்லாலின் எழுத்து மூலமான வாக்குமூலம் ('டெய்லி நியூ'ஸில் வந்தது) பாண்டிச்சேரி 'இந்தியா' பத்திரிகைக்கு ஐயரால் அனுப்பப்பட்டு, 'இந்தியா'வில் முழுவதாக வெளிவந்தது. இந்த வாக்குமூலத்தை ஐயரே தமிழில் மொழி பெயர்த்து அனுப்பினாரா, அல்லது அவர் அனுப்பிய 'டெய்லிநியூஸ்' செய்தியைப் பாண்டிச்சேரியில் பாரதியார் மொழி பெயர்த்தாரா என்று தெரியவில்லை. ஆனால் மொழிபெயர்ப்பு நடை ஐயருடையது போலவே இருக்கிறது,

திங்ராவின் வாக்குமூலம் வருமாறு:

"என்னுடைய இந்தியா தேசத்துத் தேசபக்தர்களான சிறுவர்களுக்கு மனிதன் செய்வதற்கு ஒவ்வாத அத்தனை அயோக்கியமான தூக்குத் தண்டனைகளும், தேச நிர்வாஸங்களும் விதித்ததற்குப் பதிலுக்கு பதிலாக என்னால் இயன்ற அளவு மிகவும் வணக்கமாகப் பழி வாங்க வேண்டி அன்றைக்கொரு நாள் நான் இங்கிலீஷ் ரத்தத்தைச் சிந்த எத்தனப்பட்டது உண்டென்பதை நானே ஒப்புக் கொள்கிறேன்.

"இந்த விஷயத்தில் நான் எனது மனச்சாட்சியைத் தவிர வேறு எவரையும் யோசனை கேட்கவில்லை. என்னுடைய சொந்தக் கடமை தவிர வேறு ஒருவருடனும் ஆலோசிக்கவில்லை.

"அந்நிய (அரசாங்கத்தின்) ஈட்டிமுனையின் கீழ் அடக்கி ஆளப்பட்டு வரும் ஒரு ஜாதியானது ஸதா யுத்த நிலை

மையிலேயேதான் இருந்து வரும். நிராயுதபாணிகளாக்கப் பட்ட ஜனங்களுக்கு வெளிப்படையான யுத்தம் செய்வது அஸாத்தியமானதால், நான் திடீரென்று எதிர்த்தேன். பீரங்கிகள் வைத்துக்கொள்ளும் பாத்தியதை எனக்கு மறுத்துவிட்டபடியால் கைத்துப்பாக்கியால் சுட்டேன்.

''என்னுடைய தேசத்துக்குச் செய்யப்படும் ஒவ்வொரு தீமையையும் என் கடவுளை அவமானப்படுத்தினதாக, ஹிந்துவாகிய நான் உணர்கிறேன். தேசமாதாவினுடைய கக்ஷியிலிருந்து நான் செய்வதெல்லாம் ஸ்ரீராமனுடைய திருப்தி; அவளுக்கு நான் செய்யும் கைங்கரியங்கள் ஸ்ரீ கிருஷ்ணனுக்குச் செய்யும் கைங்கரியங்கள், ஸம்பத்திலும் புத்தியிலும் எளியனுன என்னைப்போன்ற பிள்ளை, தன்னுடைய சொந்த ஜீவ ரத்தத்தையே அவளுக்கு ஸமர்ப்பிக்க முடியும்; வேறு எவ்விதக் கைமுதலும் ஸமர்ப்பிக்க அவனிடத்தில் ஒன்றும் கிடையாது, ஆனபடியால்தான் நான் என்னுடைய ரத்தத்தையே அவளுடைய பலி பீடத்தில் பலியாக ஸமர்ப்பித்துவிட்டேன்.

''இந்தக் காலத்தில் இந்தியாவில் ஜனங்கள் கற்றுத் தெரிந்துகொள்ள வேண்டிய முக்கிய பாடம் என்னவென்றால், எப்படியும் ஒருவன் சாவது என்பது நிஜம்; அதை உலகத்துக்குக் கற்பித்துக் கொடுக்க நாமே இறப்பதனுல்தான் முடியும். ஆகையால்தான் நான் திருத்தொண்டு பூண்டு கீர்த்தியுடன் சாகிறேன்.

''இப்போதிருக்கும் இந்த அஸம்பாவிதமான ஸம்பந்தம் ஒழியாவிட்டால், ஹிந்து ஜாதியும் இங்கிலீஷ் ஜாதியும் உள்ள வரையில் இந்தியாவுக்கும் இங்கிலாந்துக்கும் யுத்தம் ஓயாமல் தொடர்ந்துகொண்டே இருக்கும்.

''நான் இந்திய மாதாவுக்கே மறுபடியும் பிறந்து, அவளுடைய பக்ஷம் ஜயமடைந்து, ஜீவகாருண்யத்தின் நன்மைக்கும் கடவுளின் பெருமைக்கும் ஒருங்கே காரணமாக அவள் ஸவயேச்சை அடைகிற வரையில் நான் அதே காரணத்துக்காக மறுபடி இறந்து பிறப்பேனுக.

''வந்தே மாதரம்.''

இவ்வளவு தேசபக்தி நிறைந்த ஓர் இளைஞர் தூக்கிலிடப் பட்டது பிரிட்டிஷ் வட்டாரங்களிலும் கிளர்ச்சியை உண்டு பண்ணுமலில்லை. ஐர்லாந்து தேசப் பத்திரிகைகள் பெரிய காகிதத்தில், “தனது நாட்டுக்காக உயிரை அளிக்கப் பெருமைப்பட்ட மிஸ்டர் திங்க்ராவை ஐர்லாந்து போற்றுகிறது” என்று அச்சிட்டுவெளியிட்டன. இங்கிலாந்தின் அரசியலில் முக்கியப் பங்கு வகித்த அரசியல்வாதிகள் சிலரும் மதன் லாலுக்குத் தங்கள் பாராட்டுதலைத் தெரிவித்தார்கள். பிரிட்டிஷ் மந்திரிசபையில் நிதிமந்திரியாக இருந்த லாய்டு ஜார்ஜ், மந்திரிசபையில் வர்த்தக மந்திரியாக இருந்த வின்ஸ்டன் சர்ச்சிலிடம், “மதன்லால் திங்க்ரா மிக உயர்வான தேசபக்தர்” என்றார். வின்ஸ்டன் சர்ச்சில் இதை ஆமோதித்ததுடன், “மதன்லாலின் கடைசி மொழிகள் உலகில் தேசபக்தியின் பெயரில் வந்துள்ள மிகச் சிறந்த மொழிகளில் ஒன்றாகச் சேர்க்கப்படும்” என்றார். இந்தச் சம்பவம் டபிள்யூ. எஸ். ப்ளன்ட் என்பவர் எழுதியுள்ள ‘எனது டயரிகள்’ என்ற நினைவு நூலின் இரண்டாவது பாகம் பக்கம் 288-இல் வெளியிடப்பட்டுள்ளது.

மதன்லால் திங்க்ராவின் தியாகம் ஐயருடைய மனத்திலும் அழிக்க முடியாத வடுவை விட்டுச் சென்றது. அவரும் தாய்நாட்டுக்காகத் தமது யாவற்றையும் அர்ப்பணித்துக் கொண்டார். ஐயருடைய வாழ்க்கையில் ஒரு மாபெரும் திருப்பம் இது.

# 5. ஐயருடைய 'லண்டன் கடிதம்'

இந்திய விடுதியில் ஸாவர்க்கரும் ஐயரும் நடத்திய வெளிப்படைச் சங்கமான சுதந்தர இந்தியச் சங்கத்தின் நடவடிக்கைகளில் பத்திரிகைப் பிரசாரம் ஒன்றாகும். சங்க அங்கத்தினர்கள் தினமும் குறைந்தது ஒரு காரியமாவது நாட்டுக்காகச் செய்யவேண்டும் என்பது சங்க விதி. இதற்கென அவர்கள் ஒரு நாட்குறிப்பு வைத்துக்கொண்டு அதில் தங்கள் அன்றாட தேசபக்த நடவடிக்கைகளைக் குறித்து வருவார்கள். இந்த நாட்குறிப்பு சங்க முதல்வர் களால் பரிசீலிக்கப்படும்.

இங்கிலாந்திலுள்ள பத்திரிகைகளுக்குக் கடிதங்கள் எழுதுவது, பிறநாட்டுப் பத்திரிகைகளுக்கு எழுதுவது, இந்தியப் பத்திரிகைகளுக்குக் கடிதங்களும் கட்டுரை களும் அனுப்புவது, உலகெங்கும் உள்ள அனுதாபி களுடன் கடிதத் தொடர்பு வைத்திருப்பது – இவையெல் லாம் பத்திரிகைப் பிரசாரத்தில் அடங்கும். தேகப் பயிற்சி, குதிரைச் சவாரி, மோட்டார் ஓட்டுதல், குத்துச்சண்டை, மல்யுத்தம், துப்பாக்கியால் குறிபார்த்துச் சுடுவது-இவையும் அங்கத்தினர் செய்யக் கூடிய தேசீயத் தொண்டாகக் கருதப்பட்டன, இக்கலைகளில் ஞானம் சமயத்தில் பயன் படும் என்று.

தமது சங்கக் கடமையாக, ஐயர் பத்திரிகைகளுக்கு எழுதுவதை மேற்கொண்டார். தமிழிலும் ஆங்கிலத்திலும் எழுதினார். அவரது எழுத்துக்களை நிறைய வெளியிட்டது புதுவை 'இந்தியா' வாரப் பத்திரிகை. சுப்பிரமணிய பாரதியாரைப் பொறுப்பாசிரியராகக் கொண்டு வெளிவந்த இந்தப் பத்திரிகையில் ஐயர் பலவிதங்களில் விஷய தானம் செய்துள்ளார். வாராவாரம் 'லண்டன் கடிதம்' என்ற தலைப்பில் ஒரு கடிதம் அனுப்பிக் கொண்டிருந்தது

தவிர, முக்கியமான சந்தர்ப்பங்களில் (திங்க்ரா சம்பவம் போல) ஆங்கிலேயப் பத்திரிகைகளிலிருந்து செய்திகளை யும் வெட்டி அனுப்பி வந்தார். மற்றும் கரிபால்டி சரித்திரம், மாஜினி சரித்திரம் முதலியவற்றையும் எழுதி அனுப்பினாரென்று ஏற்கனவே கண்டோம். ரூஸோவின் 'சமுதாய ஒப்பந்தம்' (ஸோஷல் காண்டிராக்ட்), ஸாவர்க் கரின் '*1857*' ஆகிய நூல்களையும்கூட ஐயர் மொழி பெயர்க்கத் துவங்கி வாராவாரம் 'இந்தியா'வுக்கு அனுப்பி வந்தார். அவர் அனுப்பிய அளவு வரை யாவும் 'இந்தியா' வில் வெளியாகியுள்ளன.

வாராந்தர 'லண்டன் கடிதம்', கர்ஸான்-வில்லி கொலைக் குப் பின் மிகவும் முக்கியமான விஷயமாகிவிட்டது. அதில் செய்திச் சுவை மட்டுமின்றி, தேசபக்தி, லட்சிய விவகாரங்களும் பின்னிக் கிடந்ததால் தேசபக்தியைத் தூண்டும் பலவிதமான தகவல்களையும், பிரிட்டிஷ் ஆட்சி யாளரின் வண்டவாளங்களை வெளிப்படுத்தும் தகவல் களையும் ஐயர் சேர்க்க முடிந்தது.

லண்டன் பத்திரிகைகளிலிருந்து செய்திகள், கருத்துரை களை அனுப்பி, தமது கருத்துக்களையும் வெளியிட இதைப் பயன்படுத்தினார் ஐயர். மதன்லாலின் ஒளிமிகுந்த தியாக வாழ்வு இந்திய இளைஞர்களுக்கு முன்மாதிரி என்று காட்டினார் ஐயர்.

ஆனால், இந்தியாவில் பிரிட்டிஷாரை ஆயுத பலத்தால் விரட்டுவதை எல்லாருமே வரவேற்றார்கள் என்பதில்லை. அரசியல் சட்ட பூர்வமாகச் சட்டசபைகள் வழியே மாற்றம் செய்வதையே பெரும்பாலான தலைவர்கள் ஆதரித்தனர். உதாரணமாக, புதுவை 'இந்தியா' பத்திரிகை ஆசிரியர் பாரதிக்குப் பலாத்காரம், ரத்தம் சிந்துவது என்றால் துளியும் பிடிக்காது. மகாத்மா காந்தி இந்திய அரசியலுக்கு வருவதற்கு முன்பே, அஹிம்ஸையை அவர் இந்நாட்டு அரசியலில் கையாளுமுன்பே பாரதியார் பலாத்காரத்தை வெறுத்தார். அரசியல் படுகொலைகளை அவர் ஆதரிக்கவில்லை. படைதிரட்டிப் புரட்சி செய்வது பற்றியும் அவர் ஆதரவு தெரிவிக்கவில்லை.

ஆயினும் மதன்லால் திங்க்ரா சிறந்த தேசபக்தர் என அவரது தேசபக்தியைப் பாரதி மதித்தார். சற்றும் தயக்க மின்றி, திங்க்ராவைப் பற்றிய எல்லாச் செய்திகளுக்கும் இடமளித்தார் பாரதி. ஆகையால் ஐயர் திங்க்ரா பற்றிப் பல விஷயங்களை அனுப்பி, வெளிவரச் செய்ய முடிந்தது.

இப்படியிருக்கையில், பத்திரிகாசிரியருக்கும் விஷய தானம் செய்தவருக்குமிடையில் பகிரங்கமாக ஓர் அபிப்பிராய பேதம் எழுந்தது. இந்த விவாதத்தில், பாரதி கட்சிக்கு எதிராக விஷயதானம் செய்த ஐயரது கட்சியை 'இந்தியா' பத்திரிகையின் சொந்தக்காரர் மண்டயம் ஸ்ரீநிவாஸாச்சார்யார் ஆதரிக்கவே, பாரதியார் 'இந்தியா' பத்திரிகையின் பொறுப்பாசிரியர் பதவியிலிருந்து விலகிக் கொண்டார்.

இது நடந்தது எப்படியென்றால்—

கர்ஸான்-வில்லி ஜூலை முதல் தேதி கொல்லப்பட்ட செய்தி கிடைத்ததும், பாரதி 'இந்தியா' பத்திரிகையில் ஒரு தலையங்கம எழுதினார். 'இந்தியா', 1909 ஜூலை 10-ஆம் தேதி இதழில் வந்த இத்தலையங்கமாவது: **'லண்டனில் கொலை!'** லண்டன் நகரத்தில் ஸர் கர்ஸான்-வில்லியையும் டாக்டர் லால்காக்காவையும் கொலை செய்ததைக் கேட்டு மிகவும் மனவருத்தமுறுகிறோம். இக்கொலைகளைக் குறித்து இந்தியாவிலும் இங்கிலாந்திலும் ஒரு கக்ஷியார் மற்றொரு கக்ஷியார் மீது குற்றஞ்சாட்டுகிறார்கள். இப்படிப்பட்ட கொலையினால் ஒரு ஜாதியாரின் அபீஷ்டம் நிறைவேறி விடுமென்று நினைக்கிற மூடர்கள் ஒரு கக்ஷியிலுமில்லை. எவனோ ஒருவன் கொலை செய்துவிட்டால், அதைக் கொண்டு ஒரு கக்ஷியார் மற்றொரு கக்ஷியாரைப் பழிப்பது நலமாய்த் தோன்றுகிறதில்லை. வீண் துவேஷமே அதிகரிக் கின்றது. ஒற்றுமையை வேண்டுமென்கிறவர்கள், வேற்று மைக்காகப் பாடுபடுவார்களா? இக்கொலைக்கும் யாதொரு கக்ஷியாருக்கும் எவ்விதச் சம்பந்தமும் இருக்கமாட்டா தென்பது திண்ணம்.''

பத்திரிகையின் கருத்து இது என்று தெளிவாகத் தெரிவித்துவிட்டு, செய்திப் பத்திகளில் திங்க்ரா பற்றி வந்த

எல்லாச் செய்திகளுக்கும் தாராளமாக இடமளித்தார் பாரதி. ஐயரும் இதை நன்கு பயன்படுத்தினர். திங்க்ரா இணையற்ற தேசபக்தர் என்று அவருடைய பேனு தொடர்ந்து பறைசாற்றியது.

1909 ஆகஸ்டு 28-ஆம் தேதி, 'இந்தியா'வில் வெளியான 'லண்டன் கடிதம்' (ஸ்வதந்திர லக்ஷ்மீ பிரசன்னம்' என்ற தலைப்பில்) கூறியது :

"இன்னும் திங்க்ராவின் விவகாரம் ஜனங்களுடைய கண்ணோட்டத்தைவிட்டுப் போய்விடவில்லை. இன்னும் அவனுடைய விஷயம் ஜனங்களுடைய மனதை ஆகர்ஷிக்கிறது என்கிறதற்கு அன்றைய தினம் 'பால்மால் கெஜட்'டும், 'ஈவ்னிங் ஸ்டாண்டர்'டும் தங்களுடைய இஸ்தியார்த் தாள்களில் (போஸ்டர்களில) 'டிங்ரா பைத்தியமா' என்றும், 'டிங்ரா தகப்பனிடமிருந்து கடிதம்' என்றும் எழுதியதும். அதற்கேற்றது போல அந்தத் தேதியில் அந்தப் பத்திரிகைகள் விலையான தொகையுமே அத்தாட்சியாகும்.

"அவனுடைய சகோதரர்கள் பஞ்சாப் லெப்டினன்ட் கவர்னருக்கு எழுதிய அருவருப்பைக் கொடுக்கத் தக்க கடிதமும், அவனுடைய தகப்பனர் ஸிக்ரடரி ஆப் ஸ்டேட்டுக்கு எழுதிய கடிதமும் இங்கே வெளியாகியிருக்கின்றன. முதற் சொன்ன கடிதம், இங்கேயிருக்கும் இந்தியர்களுக்கு மாத்திரமில்லை, ஆங்கிலேயர்களுக்குக் கூட அருவருப்பையும், அந்தச் சகோதரர்களின் மீது அவமதிப்பையும் உண்டாக்கியிருக்கிறது, இவ்வளவு சகோதரத் துரோகமும், காப்ராவும், மானக் குறைவும் அடங்கிய எந்தத் தஸ்தாவேஜூம் இதுவரையில் உலகத்தில் பிறந்திராது, இரண்டாவது சொன்ன கடிதமோ, திங்க்ரா ஏதோ வீட்டை விட்டு ஓடியும், பூனையின் மீசையைக் கத்தரித்தும், சீட்டியடித்துக் கொண்டும் இருந்தானுகையால் அவன் பைத்தியக்காரனென்று நிரூபிக்க முயலுகிறது. அவனுடைய எதிர்வாதத்தையும், அவன் கர்ஸான்- வில்லியைக் கொன்ற நிமிஷம் முதற் கொண்டு இந்த நிமிஷம் வரையில் நடந்துகொண்டிருக்கிற

மாதிரியையும் பார்த்தவர்களில் யார்தான் அவனைப் பைத்தியமென்று சொல்லத் துணிவார்கள்?"

திங்க்ரா விசாரணையை விவரமாகக் கொடுத்தபிறகு கடிதம் தெரிவிக்கிறது :

"மரண தண்டனையை உச்சரித்ததும், 'வந்தனம், ஐயா! என்னுடைய அற்பமான பிராணனைக் கொடுக்கிறேன் என்கிற எண்ணம் எனக்குக் கர்வத்தைக்கூட உண்டாக்குகிறது' என்றான். இவ்விதம் பேசுகிறவனும், இந்தப் பேச்சுகளுக்குத் தகுந்தபடி ஜெயிலிலும் இயற்கையான கௌரவத்துடன் நடந்துகொள்கிறவனும் பைத்தியக்காரனவானா? அப்படிப் பைத்தியக்காரன் என்று வைத்துக் கொண்டால், கம்சனைக் கொன்ற கிருஷ்ணபிரானுக்கும், அப்ஜல்கானைக் கொன்ற சிவாஜிக்கும், ஆஸ்டிரிய கவர்னரைக் கொலை செய்த வில்லியம் தெல்லுக்கும் பிடித்த பைத்தியம்தான் இவனுக்கும் பிடித்திருக்கிறதென்று சொல்லவேண்டும்.

"நாட்டில் சுதந்தரம் ஏற்பட்டுவிட்டால் இம்மாதிரி பைத்தியம் யாருக்கும் பிடிக்காது என்பது திண்ணம்."

'இந்தியா' பத்திரிகை அதே 1909 ஆகஸ்ட் 28 இதழில் வேறொரு பக்கத்தில், மதன்லால் திங்க்ரா தூக்கிலிடப் பட்டபின் அனுப்பப்பட்ட மற்றொரு 'லண்டன் கடிதம்' வெளியாகியிருந்தது. அதில் ஐயர் எழுதியிருந்தார் :

"இவர் (திங்க்ரா) தமது சரீரத்தைத் தகனம் செய்துவிடும்படி அதிகாரிகளுக்குத் தெரிவித்தார். அதிகாரிகள் அதை மறுத்துவிட்டார்கள். இங்கிலாந்தில் ஸாதாரணமாய் யாராவது இறந்துவிட்டால் பிணத்தைப் புதைப்பது வழக்கம். இது அந்தத் தேச ஆசாரம். நமது தேசத்தில் கொளுத்துவது வழக்கம். நமது தேச ஆசாரப்படிக்கு ஸ்ரீமான் மதன்லால் திங்க்ரா தமது சரீரத்தைத் தகனம் செய்யும்படி கேட்டார். அதிகாரிகள் இதை ஏதோ காரணத்துக்காக மறுத்துவிட்டார்கள். இந்தத் திவ்ய பாரத புத்திரரின் சரீரத்தை நல்ல பரிசுத்தமான ஹவிஸாக ஹிந்துக்கள் வேத சாஸ்திராதி வழக்கப்படி அமுது செய்ய அக்கினி பகவான் ஸித்தமாய் இருந்தார்; ஆனால் அது

கிடைக்கவில்லை! அதற்காகக் கோபங்கொண்ட அக்னி பகவான் கிளாஸ்கோ பருத்திச்சாலையில் புகுந்து $2\frac{1}{2}$ லக்ஷம் பவுன் பெறுமான ஸாமான்களைத் தீண்டத் திருவுள்ளம் பற்றிவிட்டார்! அதாவது அவர் மதிப்பில் ஸ்ரீமான் திங்க்ரா வின் திவ்ய சரீரம் $2\frac{1}{2}$ லக்ஷம் பவுன் பெறுமானமானது என்று உலகோர் அறிந்துகொள்ளலாமே!''

பிரிட்டனில் கிளாஸ்கோ நகரில் ஒரு பெருந்தீ மூண் டதைப்பற்றி இவ்வாறு நம்மவர் குதூகலப்படுவது பாரதிக்குப் பிடிக்கவில்லை. மறுவாரம் 'இந்தியா'வில் அவர் இதுபற்றித் தலையங்கக் குறிப்பு ஒன்றை வரைந்தார். அந்தக் குறிப்பாவது:

''சென்ற வாரத்தில் நமது நிருபர் ஒருவர் ஸ்ரீமான் மதன் லால் திங்க்ரா விஷயமாய் எழுதியிருந்தார். அதை நாம் முற்றிலும் அங்கிகரிக்கவில்லை. அதில் ஸ்ரீமான் திங்க்ராவின் உயிர் ஏதோ இரண்டரை லக்ஷம் பவுன் என்று ஒரு மதிப் பாய்க் கூறியிருக்கிறார். மேலும், கிளாஸ்கோ பருத்திச் சாலை தீப்பிடித்ததைப் பற்றி சந்தோஷப்படுவது போல் எழுதியிருக்கிறார்.

''கிளாஸ்கோவில் பருத்திச்சாலையில் நெருப்புப் பற்றி அது நஷ்டமடைந்துவிட்டதால் திங்க்ரா உயிர்த்தெழுந்து விட்டாரா? நம் பாரதவாசிகளுக்கு அதனால் என்ன அனு கூலமாய் விட்டது? நாமேன் அதையோர் பழி வாங்கு தலைப் போல் கொள்ளவேணும்?

''அற்பத்துக்கெல்லாம் சந்தோஷித்துப் பழி வாங்கும் இழிவான குணம் ஆரியர்களுடையதல்ல. நமது நாட்டில் ஒரு நாளும் கேட்டிருக்க முடியாத வெடிகுண்டு முதலிய பயங்கரமான செயல்கள் அநாகரிகமானவைகள். இவை யெல்லாம் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தின் நிரந்தர நிரங்குசப் பிரபுத்வச் சட்ட திட்டங்களின் பலன்தானே? இறந்த பிறகும் அவர் தெரிவித்துக்கொண்டதைச் செய்விக்க ஆங்கிலேயர் மனமிரங்காமல் திங்க்ராவைச் சிறைக் கூடத்திலேயே புதைத்துவிட்டதைப்பற்றி உலகமெல்லாம் ஆங்கிலேயர்களைத் தூஷிக்கத்தான் தூஷிக்கிறார்கள்.''

ஆசிரியர் பாரதியின் இந்தத் தெளிவான கண்டனம் ஏற்கனவே ஆசிரியருக்கும் பத்திரிகைச் சொந்தக்காரருக்கும் இடையே புகைந்துகொண் டிருந்த அபிப்பிராய பேதத்தை ஊதி வளர்த்துவிட்டது. அரசியல் செயல் முறைகள் பற்றிக் கடுமையான வாக்குவாதம் நடந்தது. அபிப்பிராய பேதம் வலுத்தது. பாரதியார் 'இந்தியா' பத்திரிகையின் ஆசிரியப் பொறுப்பிலிருந்து விலகிக் கொண்டார். உத்தேசமாக 1909 செப்டம்பரில் இது நடந்தது; இதன் பின்னரும் ஆறுமாத காலம் 'இந்தியா' பத்திரிகை நடந்தது. வேறு ஒரு சாதாரணப் பத்திரிகையாளர் ஆசிரியப் பணியைச் செய்து வந்தார்.

பாரதியார் 'இந்தியா' விலிருந்து விலகியது தேசீய சக்திகளுக்குப் பெரிய நஷ்டமாயிற்று. பத்திரிகை அழகும் அந்தஸ்தும் குறைந்தது; பிரிட்டிஷாரை மூர்க்கமாகத் தாக்குவதற்கு மட்டும் பெயர் வாங்கியது.

தொலைதூரத்தில் லண்டனில் இருந்த வ. வே. ஸு. ஐயருக்குத் தம்முடைய எழுத்தினுல் எதிர்பாராதபடி புதுவையில் நேர்ந்த குட்டிக் கலகம் பற்றி ஏதும் தெரியாது. அவர் லண்டனில் தமக்கிருந்த நெருக்கடிகள் நடுவேயும் தொடர்ந்து 'லண்டன் கடிதம்' அனுப்பி வந்தார். ஆனுல் கடிதத்தின் தலைப்பும் தன்மையும் மாறலாயின. 'லண்டன் கடிதம்' என்பதற்கு பதிலாக, 'ஸ்வதந்திர லஷ்மீ பிரசந்நம்' என்ற தலைப்பு வந்தது. கடிதம் 'தேசபந்து' என்பவருக்கு, 'தேசபக்தன்', 'பாரத சேவகன்', 'பாரதப்பிரியன்' என்ற பெயர் கொண்ட யாரோ எழுதும் கடிதம் போல மாறியது. புதிய அமைப்பில் 'இந்தியா'வில் வெளியான 'லண்டன் கடிதம்' 1909 செப்டம்பர் 11-ஆம் தேதி இதழில் பிரசுரமாயிற்று. மதன்லால் சிறையில் கழித்த கடைசி நாட்களைப் பற்றி இதில் சொல்லியிருந்தது. அவரைப்போல நல்லபடி நடந்துகொண்ட கைதிகள் இல்லையென்று சிறை அதிகாரிகள் பாராட்டியதையும் அவர் தமது நேரமெல்லாம் ஆத்மிக நூல்களைப் படித்துக் கழித்தார் என்பதையும் தம்முடைய நிலைமை பற்றிச் சிறிதும் கவலைப்படவில்லை என்பதையும், எப்போதும் நாட்டைப்பற்றியே சிந்தனை

செய்துகொண் டிருந்தார் என்பதையும் கடிதம் தெரிவித்தது. மதன்லால் ஹிந்துவானதால் அவருக்குக் கடைசி நிமிஷ ஆறுதல் சொல்லத் தமக்கு அனுமதி தரும்படி ஒரு நண்பர் கோரியது அதிகாரிகளால் நிராகரிக்கப்பட்டு விட்டதையும் கடிதம் தெரிவித்தது.

அத்துடன், மதன்லால் பற்றி, அவர் தமது கையில் குண்டுசியை ஏற்றச் செய்த சம்பவமும், போலீஸாரால் வெளியிடப்படாமல் அமுக்கப்பட்ட மதன்லால் அறிக்கையும் 'சவால்' என்ற தலைப்பில் அச்சிடப்பட்டு இங்கிலாந்திலும், அமெரிக்காவிலும் விரிவாகப் பலருக்கு அனுப்பட்டுள்ளன என்பதையும் இக்கடிதம் வெளியிட்டது.

ஐயரது பிற கடிதங்களில் லண்டன் நிலவரமும், இந்திய விடுதி நிலவரமும் இருந்தன. நடுநடுவே தேசபக்தியை வளர்ப்பதற்கு ஒரு திட்டம், தென் அமெரிக்காவில் பிரேஸில் நாட்டில் இந்தியர்கள் குடியேற வாய்ப்பு என்ற விஷயங்கள் வந்தன.

ஒரு கடிதம் இந்திய விடுதியைப் போலீஸார் மேற்கொண்டுவிட்டார்கள், அங்கே இந்திய மாணவர் எவருமில்லை என்ற சரடுகளை மறுத்தது. இந்திய மாணவர்கள் இன்னும் அங்கே வசிக்கிறார்கள்; விடுதி ஷாம்ஜி கிருஷ்ண வர்மாவின் மனைவியார் மேற்பார்வையில் நடக்கிறது என்றும்; பாரிஸில் இருந்த போதிலும், ஷாம்ஜி தாக்கப் படக்கூடுமென்றும்; அவரை மிரட்டி அனுமதேயக் கடிதங்கள் வந்துள்ளன என்றும் 'லண்டன் கடிதம்' தெரிவித்தது.

மதன்லால் திங்க்ரா தூக்கிலிடப்பட்ட நான்கு தினங்களில், ஷாம்ஜியின் 'இந்தியன் ஸோஷாலஜிஸ்ட்' பத்திரிகையை அச்சிடுபவரான கை ஆல்டிரெட் என்பவர் கைது செய்யப்பட்டார். ஆல்டிரெட்டுக்கு வயது 22 தான். தாம் அராஜகத்தை ஆதரிக்கும் கம்யூனிஸ்ட் என்று அவர் பகிரங்கமாகத் தெரிவித்திருந்தார். பத்திரிகையின் முந்தைய அச்சகத் தலைவர் சிறைத் தண்டனை பெற்றிருந்தார் என்று தெரிந்திருந்தும், கை ஆல்டிரெட் அவருக்குப் பதில்

பத்திரிகையைத் தாம் அச்சடித்துக் கொடுக்க முன் வந்தார். ஆல்டிரெட் கைதானது பத்திரிகைச் சுதந்தரத்தில் தலையிடுவதாகும் என்று ஸோஷலிஸ்ட்டுகள் வழக்காடக் கூடுமென ஐயரது கடிதம் ஒன்று சொல்லிற்று.

இதைக் குறிப்பிட்டு, இந்த 'லண்டன் கடித'த்தில் ஐயர் மேலும் சொல்லுகிறார்:

''பத்திரிகா சுவதந்தரமாவது ராஜாங்கம் சரிவர நடை பெறுவதற்கு இன்றியமையாததான பாத்தியமாகிறது. இந்தப் பாத்தியம் பிரஜைகளுக்குக் குறைவற இல்லாத விஷயத்தில் மேலதிகாரிகள் எவ்விதமான அட்டூழியங்கள் வேண்டுமென்றாலும் செய்துவிடுதல் சாத்தியமாகும். ராஜாங்கம் செய்கிற அல்லது ஒழிக்கிற விஷயங்களைப் பற்றி விசாரித்துப் பேசவும் எழுதவும் ஜனங்களுக்குப் பூர்ணமான சுதந்தரமில்லாத விஷயத்தில் நாளுக்கு நாள் ராஜாங்கம் கொடுங்கோல் வழிகளில் அதிகமாகப் பிரவர்த்திக்கும், மற்ற ஜனங்களின் அபிப்ராயம் தன்னைக் கண்டிக்கும் என்கிற பயமில்லா பக்ஷத்தில் ஒரு தனியான மனிதன்கூட நேரான வழிகளில் நடக்கமாட்டான்.

''அப்படியிருக்க ஒரு தேசத்தின் பலம் முழுவதையும் வகித்து, செய்கிற குற்றம் வெளிவந்தாலும்கூடப் பொறுப்பை மற்றவர்கள் மீது போட்டு விடலாகுமென்று நினைக்கக் கூடிய ராஜாங்க உத்தியோக பரம்பரையானது, அதன் நடவடிக்கைகளை நிர்ப்பயமாக விசாரிக்கக் கூடிய மனிதர்களாவது பத்திரிகைகளாவது இல்லையென்று கண்டுவிடும் பக்ஷத்தில் அதர்மமான வழிகளில் ராஜ்ய சக்கரத்தை நடத்தி விடுமென்பதில் கொஞ்சமேனும் சந்தேகமில்லை. இதை நினைத்துத்தான் இங்கிலாந்திலும் இதர ஐரோப்பிய அமெரிக்க நாடுகளிலும் சில நூற்றாண்டுகளாக இந்தச் சுதந்தரத்தை மிகவும் தைரியத்துடன் ஜனங்கள் பாதுகாத்து வருகிறார்கள்.''

அபிப்பிராய சுதந்தரம் என்பது பாரதத்துக்குப் புதிதல்ல. ஐயர் தொடர்ந்து சொல்லுகிறார்:

''இந்தச் சுதந்தரம் நமது பாரதபூமியில் புதிதானது என்று ஒரு பாரிசமாகப் பார்க்கக்கூடிய ஆங்கிலேயர் மாத்திரம்

அல்ல; அனேக ஹிந்துக்கள்கூட நினைக்கவும் பேசவும் செய்கிறார்கள். இதைப் பற்றி விரித்து எழுதுவதற்கு இது இடமில்லாததனால், ஒரு மேற்கோள் மாத்திரம் இவ்விடம் காட்டுகிறேன். 'இறைமாட்சி' அதிகாரத்தின் ஒன்பதாவது குறளில் திருவள்ளுவ நாயனார்,

'செவி கைப்பச் சொற் பொறுக்கும் பண்புடைவேந்தன்
கவிகைக்கீழ் தங்கும் உலகு.'

என்றருளிச் செய்ததன் அர்த்தமென்ன?

"உலகத்தை நெடுங்காலம் ஆளவேண்டுமென்கிற எண்ணத்தையுடைய அரசன் தனக்குக் கசப்பான வார்த்தைகளைச் சொல்பவர்களை அப்படிச் சொல்வதற்காகத் தண்டிக்காமல் பொறுமையுடன் அவர்கள் வார்த்தைகளைக் கருதவேண்டுமென்பதே. அப்படி அவன் தண்டிக்க முனைந்தால் உலகு அவனிடம் தங்காது. இது பத்திரிகா சுதந்தரமாகாதேல். பத்திரிகா சுதந்தரமென்பது என்ன?"

'இந்தியா' 1909 செப்டம்பர் 25 இதழில் வெளியான 'லண்டன் கடித'த்தில், "மொராக்கோவில் மூர் ஜாதியாருடன் சேர்ந்து யுத்தம் செய்ய இரண்டு ஹிந்து வாலிபர்கள் போனார்கள்" என்று தரப்பட்டுள்ளது. மேலும் அவர்களில் ஒருவர் ஜிப்ரால்டருக்குப் போனதும் தம்முடைய நிச்சயத்தை மறந்துவிட்டு முயற்சி சரிவரச் செய்யாமல் திரும்பி வந்துவிட்டார். அவர் வங்காளி. ஆனால் மற்றவர் துணை வந்தவர் ஏமாற்றிவிட்டதைக்கூடச் சட்டை செய்யாமல், தம்முடைய சங்கற்பத்தைக் கடைசி வரை முடிக்க முயல்வதுதான் ஹிந்துவுக்கு அழகு என்பதை உணர்ந்து, டாஞ்சியருக்குப் புறப்பட்டுப் போயிருக்கிறார். அவர் சினேகிதனொருவனுக்குத் தாம் மனதிடத்துடனிருப்பதாகவும், தாம் போன காரியத்தை முடிக்க மனிதனால் எவ்வளவு பிரயாசை எடுத்துக்கொள்ள முடியுமோ அவ்வளவும் எடுத்துப் பார்க்கத் தயாராக இருப்பதாகவும் எழுதியிருக்கிறார். அவர் தமிழ் தேசத்துப் பிராம்மணன் என்று கேட்க நம்முடைய மாகாணத்து ஜனங்கள் ஆனந்தம் கொண்டு அந்தத் தேசத்தினத்தைக் கொண்டாடுவார்கள் என்று நம்புகிறேன்..."

மொராக்கோவுக்கு இவ்வாறு போன தமிழர் எம். பி. திருமலாச்சாரியார் என்பதை முன்பே கவனித்துள்ளோம்.

'இந்தியா' 1909 அக்டோபர் 9-ஆம் தேதி இதழில் வெளியான 'லண்டன் கடிதம்' மீண்டும் 'நமது லண்டன் கடிதம்' என்ற தலைப்புடன் வெளியாகியுள்ளது. இந்தக் கடிதத்தில்தான் ஐயர் தென் அமெரிக்காவில் பிரேஸில் நாட்டில் இந்தியர்கள் குடியேறுவது பற்றி எழுதுகிறார். இந்தக் கடிதம், தாம் பிரேஸிலுக்குப் போகத் திட்டமிடுவதாகப் பிரிட்டிஷ் உளவாளிகள் நினைக்கும்படி செய்ய ஐயர் கடைப்பிடித்த யுக்திகளில் ஒன்றாகும்.

பாரத பூமியில் ஜனங்கள், "அரை வயிற்றுக்கும் கால் வயிற்றுக்கும் சாப்பிட்டுக்கொண்டு ஜீவச் சவங்களாகிக் கொண்டு வருகிறதையும், அந்த ஆகாரம்கூட அகப்படாமல் மடிந்துகொண்டு வருகிறதையும்" சுட்டிக் காட்டி மானத்தையும் போக்கிவிடும் இந்தக் கறுப்பை ஒழிப்பது தேசபக்தர்களின் கடமை என்று ஐயர் இக்கடிதத்தின் துவக்கத்தில் கூறுகிறார். இதற்கு வழி என்ன? ஐயர் கூறுகிறார் :

"இந்தப் பஞ்சங்கள் அடிக்கடி நேரிடுவதற்கு மூல காரணமான தற்கால ராஜாங்க தோரணைகளில் ஒரு சமாதானமான புரட்சி (மாறுபாடு) உண்டாக்குவதுதான் அவைகளை வேரோடு நிவர்த்தி செய்யும் ஔஷதம்...... பாரத பூமிக்கு அவசியமென்று நாம் மேலே சொன்ன மருந்து தயாராக இன்னும் சில வருஷங்களாகக் கூடுமாதலால்...... தற்கால ஔஷதம் ஒன்று தேடிக் கொடுப்பது அவசியத்திலும் அவசியமே.

"பிற தேசங்களுக்குப் போய்க் கொஞ்ச நாட்களுக்கு வாழ்வது இவ்விதத் தற்கால மருந்துகளில் ஒன்று என்பது வெகு நாட்களாக நம்முடைய தேசத்தில் ஒப்புக்கொள்ளப் பட்டிருக்கிறது. ஆனால் இதுவரையில் நம்முடைய ஜனங்கள் பரதேசங்களுக்கு அனேகமாகக் கூலிகளாகவே போனபடியாலும், அவ்விதம் போன பரதேசங்களில் நம்முடைய ஜனங்கள் பொருள் நஷ்டங்களுக்கும் மான நஷ்டத்துக்கும் நானாவிதமான கஷ்டங்களுக்கும் உட்பட

வேண்டியதாகி இருந்து வருகிறது. இலங்கையிலிருந்தும், மோரீசிலிருந்தும், ஜமைகாவிலிருந்தும், நத்தாலிலிருந்தும் டிரான்ஸ்வாலிலிருந்தும் ஒரே விதமான துக்கம் நிறைந்த ஓலமேதான் நாட்டிற்கு வந்தெட்டி வருகிறது.

"இந்தப் பரிதாபமான கதறல் நம்முடைய நெஞ்சைக் கலக்குகிறது, மனத்தை அறுக்கிறது. ஆனால் இந்த விபரீதத்தை நீக்கத் தற்காலம் அசக்தர்களாக இருக்கிறோம். சபை மண்டபத்தில் மானபங்கப்பட்ட திரௌபதியைக் கண்ணெதிரிலேயே பார்த்துப் பரவசமாகிவிட்டபடியால், கையெடுக்கத் திராணியற்றவர்களாக இருக்கிறோம். ஒரே வழிதானிருக்கிறது, அகங்காரத்தின் ஆதிக்கத்தினால் அவர்கள் இழைக்கும் தீங்குகளுக்குச் சீக்கிரம் பழி வாங்குவோம் என்று சபதம் செய்துகொண்டு வனவாசம் போவதுதான்.

"ஆங்கிலோ—சாக்ஸன் வமிசத்தார் இன்னும் உலகம் முழுவதையும்கைக்கொண்டு விடவில்லை. அவர்களுடைய சங்காத்தமேயில்லாமல் வசிக்கக்கூடிய நாடுகள் பல உள. புதிய தேசங்கள் என்று நமது ஜனங்கள் பயப்பட வேண்டாம். நம்முடைய ஜனங்கள் குடியேற நாம் ஏற்பாடுகள் செய்து வருகிற தேசங்களின் ஜனங்கள் நல்ல குணமுடையவர்கள், மனிதாபிமானமுடையவர்கள். ஜீவகாருண்யமுடையவர்கள். பிறரைத் தம்மைப் போலவே பார்க்கிறவர்கள். இந்தத் தேசங்களில், முக்கியமாக பிரேஸிலில் குடியேறும் ஜனங்களுக்கு ஆள் ஒருவனுக்கு 10 ஏக்கர் நிலம் இனாமாகவும், அதைச் சாகுபடி செய்வதற்கு வேண்டிய பணத்தைக் கடனாகவும் கொடுக்கிறார்கள். மேற்படி கடனைப் பத்து வருஷத்தில் கொஞ்சம் கொஞ்சமாகத் திருப்பிக் கொடுக்க வேண்டியது. பெண்சாதியுடன் வருகிறவனுக்கு 25- ஏக்ராவும் அதற்கேற்ற பணமும் கொடுக்கிறார்கள். அவ்விதம் குடியேறுகிறவர்களுக்கு ராஜாங்க உத்தியோகஸ்தர்களைத் தெரிந்தெடுக்கிற பாத்தியமும் கொடுக்கிறார்கள். இன்னும் எத்தனையோ அனுகூலங்கள் இருக்கின்றன.

"இந்தக் குடியேற்றத்தைச் சரிவர நடத்தச் சங்கம் ஒன்று ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. அந்தச் சங்கம் மேற்படி

ராஜாங்கங்களுடன் வியாபாரம் செய்துகொண்டிருக்கிறது. ஜனங்களுக்கு ரெயில் செலவும் கப்பல் செலவும் கொடுத்து அந்தந்த தேசங்களுக்கு அழைத்துப்போகக் கப்பல்களை இந்தியத் துறைமுகங்களுக்கு அனுப்புவது முதலான சௌகரியங்களைச் செய்யும் என்று எதிர்பார்க்கப்படுகிறது. இது விஷயமாக எம்முடைய தேசாபிமானிகள் தீர்க்காலோசனை செய்து பஞ்சத்தால் மடியும் நம்முடைய ஏழை ஜனங்களை இந்தத்தேசங்களுக்கு அனுப்ப ஏற்பாடு செய்ய முயல வேண்டுமென்பது என்னுடைய கோரிக்கை. அடியிற் கண்ட விலாசத்துக்கெழுதினால் இதைப் பற்றித் தெரிந்து கொள்ள விரும்புகிற சங்கதிகளெல்லாம் தெரிந்து கொள்ளலாம்.

DESHABANDHU J.X.O. COUTINO,
CHAL ET FELICIANA,
ESTORIL, PORTUGAL."

தென் அமெரிக்காவிலுள்ள பிரேஸில் நாட்டில் இந்தியர்களைக் குடியேற்றம் செய்வதற்கு அந்தக் காலத்தில் இப்படி ஒரு திட்டம் இருந்தது உண்மையே. ஆனால், ஐயர் தாமும் அங்கே குடியேற நிஜமாகவே நினைத்தாரா என்பது சந்தேகமானதே. இந்த 'லண்டன் கடிதம்' எழுதிய அதே சமயத்தில், ஐயர் திருச்சியிலுள்ள தமது உற்றார் உறவினருக்கும் கடிதங்கள் இது பற்றி எழுதினார். பல குடும்பங்களைத் தயார் செய்து பிரேஸில் நாட்டுக்கு அனுப்பச் சித்தமாக இருக்கும்படி ஐயர் அவர்களைக் கேட்டுக்கொண்டிருந்தார். தாமும் பிரேஸிலுக்குக் குடி போய்விடப் போவதாக எழுதியிருந்தார். அவருடைய உறவினர்கள் அவர் இவ்விதம் எங்கோ கண்காணாத ஒரு நாட்டுக்குப் போய்விடப் போகிறாரே என்ற கவலையில் மூழ்கினார்கள்.

ஆனால், உண்மையில் இவையெல்லாம் பிரிட்டிஷ் உளவாளிகள் கண்ணில் மண்ணைத் தூவிவிட்டு அவர்களிடம் அகப்பட்டுக் கொள்ளாமல் பத்திரமாகத் தாயகம் திரும்புவதற்காக ஐயர் உபயோகித்த பல தந்திரங்களில் ஒரு பகுதியேயாகும் என்பது போகப் போகத் தெரியும்.

போர்த்துகலில் எஸ்டோரில் என்ற ஊரில் இருப்பதாக விலாசம் தந்துள்ள 'தேசபந்து ஜே. எக்ஸ். ஒ. கூட்டினோ' என்பவர் லண்டன் அபிநவ பாரத் சங்கத்தின் அங்கத்தினர்; இந்திய விடுதியில் இருந்தவர்; கோவாவைச் சேர்ந்தவர்; போர்த்துகீசிய மொழி அறிந்தவர். அவர் திங்க்ரா சம்பவத்துக்குப் பிறகு தலைமறைவாகி, போர்த்துக்கல் நாட்டுக்குப் போய் நண்பர்களுடன் வசிக்கலானார். அவரது விலாசம் தான் மேலே கொடுக்கப்பட்டுள்ளது.

கூட்டினோ மற்றொரு வகையிலும் நமது கவனத்துக்குரியவர். ஸாவர்க்கர் எழுதிய *'1857'* நூலின் ஆங்கில மூலத்தை *38* வருஷங்கள் பத்திரமாகக் காத்து, *1947*- இல் அதை ஸாவர்க்கரிடம் திருப்பியனுப்பினார் இவர் என்பதை முன்பக்கம் ஒன்றில் கண்டுள்ளோம்.

## 6. ஐயர் - காந்திஜி முதல் சந்திப்பு

போர்க் களத்தில் துக்கம் கொண்டாட நேரமேது? ஓய்வுக்குத்தான் நேரமேது? ஒவ்வொரு போர்வீரனும் வரிந்து கட்டிக்கொண்டு போரைத் தொடர்ந்து நடத்த வேண்டாமா? சாய்ந்த சகோதரர்களுக்காகக் கண்ணீர் வடிக்கத்தான் ஒரு கணம் தயங்கி நிற்க அவனுக்கு அவகாசம் ஏது?

மதன்லாலின் மறைவுக்குப் பிறகு இந்திய விடுதி இளம் தேசபக்தர்களின் நிலை இவ்வாறுதான் இருந்தது.

மதன்லால் தூக்கிலிடப்பட்ட பிறகு, சின்னுட்களில் இந்திய விடுதி இளைஞர்கள் மீண்டும் அங்கே திரும்பி விட்டார்கள். சுதந்தர இந்தியச் சங்கத்தின் வழக்கமான வாராந்தரக் கூட்டங்கள் மீண்டும் ஆரம்பமாகிவிட்டன.

இரண்டு மாதம் சென்றது. தசரா பண்டிகை வந்தது. தசரா தேசீயப் பண்டிகை என்பது அவர்களது கருத்து. ஆகையால் அதைக் கொண்டாடாமல் விடக்கூடாது என்று அவர்கள் தீர்மானித்தார்கள். தசரா பாரத நாடெங்கும் கொண்டாடப்படும் பண்டிகை. நீதியும் தர்மமும், அநீதியையும் அதர்மத்தையும் வெற்றி கொண்ட திருநாள்; துர்க்கை மகிஷாசுரனை வதம் செய்த திருநாள். பாரதத்தின் சில பகுதிகளில், தசராவை ஸ்ரீராமபிரான் ராவணனை வென்ற திருநாளாகக் கொண்டாடுகிறார்கள். லக்ஷ்மி, ஸரஸ்வதி, துர்க்கை எனும் தாயின் மூன்று அம்சங்களும் தவமிருந்து வீரியம் கொண்டு, விஜயதசமி அன்று வெற்றி கொள்கின்றன. தேசபக்தர்களோ இதைக் கல்வி, செல்வம், வீரியம் மூன்றும் அடிமைப்படுத்த முயலும் அசுர சக்தியை வெற்றி கொள்வதாகக் கொள்வர்.

1909-இல் விஜயதசமி ஒரு ஞாயிறன்று வந்தது—அக்டோபர் 24-ஆம் தேதியன்று. அந்த நன்னாளில்

விருந்தொன்று வைத்து, தசராவின் பொருள் பொதிந்த தத்துவத்தை விளக்கிப் பேச்சுக்கள் நடத்தத் தீர்மானித் தனர் இந்திய விடுதியினர். இதற்குத் தலைமை வகிக்கப் பலரை அணுகி ஏமாந்தபிறகு, பாரிஸ்டர் எம். கே. காந்தி என்ற அவ்வளவு பிரசித்தம் இல்லாத இளம் தென்ஆப் பிரிக்கத் தலைவரைத் தலைமை வகிக்க ஏற்பாடு செய்தனர்.

ஐயருடைய 'லண்டன் கடிதம்' ஒன்று இதன் விவரங் களைத் தந்தது. "அக்டோபர் 24-ஆம் தேதி தசரா விழா கொண்டாடப்பட்டது. இதில் அக்கிராசனம் வகிக்க ஸ்ரீ எம். கே. காந்தி அழைக்கப்பட்டார். முதலில் இதற்கு ஸ்ரீ விபின் சந்திரபாலைக் கூப்பிட்டார்கள். இந்த அழைப்பில் விருந்து நடக்குமென்றும், அதன் பின் ஸ்ரீ ராமசந்திர மூர்த்திக்கும், பாரத மாதாவுக்கும் புஷ்பாஞ்சலி செய்யப் படும் என்றும் தெரிவித்திருந்தார்கள். ஏழாம் எட்வர்டு ராஜாவுக்கு மரியாதை ('டோஸ்ட்') இல்லையே என்று ஸ்ரீ பால் கலங்கிப் போனார். இந்திய விடுதியினர் தசராவுக்கும் எட்வர்டு மன்னருக்கும் என்ன சம்பந்தம் என்று கேட் டனர். ஸ்ரீ பால் பதில் சொல்லவில்லை. அவர் தசரா விழா வுக்கு வரவில்லை; தமது மகனையும் அனுப்பவில்லை..."

"ஸ்ரீ எம். கே. காந்தி அப்போது தென் ஆப்பிரிக்கா வில் இருந்து வந்தார். அங்கே பாரிஸ்டர் தொழில் நடத்தச் சென்றவர் இந்தியர்களின் உரிமைகளைத் தென் ஆப்பிரிக்க வெள்ளையர் அரசாங்கங்கள் ஏற்குமாறு செய்ய அஹிம்சை அடிப்படையிலான 'சத்தியாக்கிரஹம்' என்ற புதிய அரசியல் போர் முறையை உருவாக்கிப் புகழெய் தினர். இப்போராட்டத்திற்குப் பணிந்துபோன வெள்ளையர் சின்னாட்களில் வாக்குறுதி தவறி, மீண்டும் இந்தியரைக் கொடுமைப்படுத்தலானார்கள். காந்தி கைது செய்யப் பட்டார். மூன்று மாதச் சிறைத் தண்டனை கிடைத்தது. விடுதலையானதும் காந்தி இந்தியத் தூது கோஷ்டி ஒன்றின் தலைவராக லண்டனுக்கு வந்தார். பிரிட்டிஷ் பார்லிமென்ட், மந்திரி சபை, பத்திரிகைகள், ராஜதந்திரி கள், லண்டன் வந்திருக்கக்கூடிய இந்தியத் தலைவர்கள் அனைவருக்கும் நிலைமையை விளக்கி அவர்களது

ஆதரவு பெற வந்திருந்தார் காந்தி. இதே சமயம் தென் ஆப்பிரிக்க அரசுத் தலைவர்களான ஜெனரல் போத்தா, ஜெனரல் ஸ்மட்ஸ் இருவரும்கூட லண்டன் வந்திருந் தனர். 1909 ஜுலை 10 தேதி முதல் நவம்பர் 13 தேதி வரை லண்டனில் இருந்தார் காந்தி.

காந்தியை ஐயர் தேடிக் கண்டுபிடித்ததையும் அவர் களது முதல் சந்திப்பையும் பற்றி டாக்டர் ராஜன் தமது ஐயர் நினைவு நூலில் அழகாக வர்ணித்திருக்கிருர். ராஜன் எழுதுகிருர் :

"'மனிதசிருஷ்டியில் உயர்ந்தவரும் ஒப்பற்றவருமான ஒருவரை இன்று சந்தித்தேன்' என்று அளவற்ற மகிழ்ச்சி யுடன் படுக்கையில் படுத்த வண்ணமே சொன்ஞர் வ. வே. ஸு. ஐயர். லண்டனில் இந்திய விடுதியில் 1909-ஆம் ஆண்டு ஒரு நாள் இரவு நாங்கள் இருவரும் பேசும் பொழுது அவர் கூறிய சொற்கள் இப்போதுதான் நேரில் என்னிடம் சொல்வது போல் இருக்கின்றன...... அன்றைத் தினம் பகலில் அவரை (ஸ்ரீமான் காந்தியை) க் காண வேண்டிப் புறப்பட்டுச் சென்ற ஐயர் இரவுதான் வீடு வந்து சேர்ந்தார்.

"'செளந்தரம், அவர் சாமான்ய மனிதரன்று. அவருடன் பேசப் பேச என் மனம் அவரிடமே ஈடுபட்டுவிட்டது. என்ன அன்பு, என்ன மரியாதை, என்ன தேசபக்தி, என்ன உண்மை; சொல்லி முடியாது போ' என்ருர் ஐயர்.

"'ஸ்ரீமான் காந்தியை எங்கே கண்டீர்கள்?' என்று நான் கேட்டேன்.

"'பல இடங்களில் அவரை விசாரித்துத் தேடினேன். இந்தியாவிலிருந்து வந்திருக்கும் தலைவர்கள் இறங்கி யிருக்கும் பெரிய ஹோட்டல்களில் எல்லாம் அலைந்து திரிந்து, இரண்டு மணி நேரத்திற்கு அப்பால், வண்டி புக முடியாத ஒரு சிறிய சந்தில், இந்தியாவிலிருந்து வந்து சிற்றுண்டிச் சாலை ஒன்றை நடத்தி வரும் ஒருவர் வீட்டில் கடைசியாக அவரைக் கண்டேன். இரண்டு மூன்று பழைய நாற்காலிகள், ஒரு கிழிந்த ஜமுக்காளம், அதன் மேல் ஒரு படுக்கை இவைகள் அடங்கிய ஒரு சிறிய

அறையில் சதா புன்னகை புரியும் முகத்துடன், ஆங்கில உடுப்புடன் ஸ்ரீமான் காந்தியைக் கண்டேன். அவருடன் பேசியபிறகு மறுபடியும் அவரைக் கண்டு பேசவேண்டும் என்கிற ஆசை அதிகம் ஆகிவிட்டது. நாளைத் தினம் விநாயக ஸாவர்க்கரை அவரிடம் அழைத்துக்கொண்டு போய் இருவருமாக அவருடன் பேசப் போகிறேம்' என்று சொல்லிவிட்டு அயர்ந்து தூங்கிவிட்டார்.''

பிறகு மூன்று நான்கு நாட்களுக்குத் தொடர்ந்து ஐயரும் ஸாவர்க்கரும் காந்தியைக் கண்டு பேசினர்கள், இவ்விரு வரும் கேட்ட கேள்விகளும் இவர்களுக்கு விடையளித்த காந்தியின் தத்துவமுமே 'ஹிந்த் ஸ்வராஜ்' என்ற புத்தகத் துக்கு ஆதாரம். காந்தி அசைக்க முடியாத வேரூன்றின அஹிம்சாவாதி .. தாங்கள் படித்திருந்த சரித்திர ஞானம், மனித இயல்பு, சமூக நடவடிக்கைகள் இவை எல்லா வற்றிற்கும் அஹிம்சா முறையில் தகுந்த பதில் அளித்த படியால் அவரைப் புரட்சி, சதியாலோசனை, யுத்தம் முதலிய விஷயங்களில் ஈடுபடுத்திவிடலாம் என்று கட்சி யாடின ஐயருக்கு ஒருவிதமான ஏமாற்றமே உண்டாயிற்று.

'''நான்கு நாட்கள் மன்றுடியும் பயன் இல்லை. அவருக்கு அஹிம்சையில் பிடிவாதமான மூட நம்பிக்கை. இருந்த போதிலும் நம் நாடு விடுதலை அடையவேண்டும்; நமது அடிமைத்தனம் ஒழிய வேண்டும், நமது கோழைத்தனம் நீங்க வேண்டும் என்ற இத்தகைய எண்ணங்களில் சந்தேகமற்ற முடிவு உள்ளவர் அவர். இந்த அஹிம்சை யால் அரசியல் துறையில் வெற்றி பெற்றுவிடலாம் என்று சாதிப்பது மாத்திரந்தான் பொருத்தம் இல்லாமல் இருக் கிறது!' இதுதான் ஐயருடைய முடிவான அபிப்பிராயம். எனினும் காந்தியிடத்தில் அளவற்ற அன்பும் பக்தியும் ஏற்பட்டன. அவருடன் பேசுவதில் உற்சாகம். அவரது உண்மையான பேச்சில் ஒரு சக்தி இவைகளைப் பற்றி ஐயர் ஓயாது புகழ்வார்.''

காந்தியைப் பொறுத்தமட்டில், இந்திய விடுதி இளைஞர் களது துணிவும், தேச பக்தியும் அவரைக் கவர்ந்தன. ஆனல் அவர்களது ஆர்வம் தவறன பாதையில்

செலுத்தப்படுகிறதென அவர் நினைத்தார். "மதன்லால் திங்க்ராவின் செயலாலும், இதர பிற செயல்களாலும் இந்தியா லாபமடைந்துள்ளது என்று நம்புகிறவர்கள் பெருந்தவறு செய்கிறார்கள். திங்க்ரா தேசபக்தர்தாம். ஆனால் அவரது தேசபக்தி பார்வையற்றது. தம் உயிரை அவர் தவறான வழியில் இழந்துவிட்டார் ; அதன் பலன்கள் நாசகரமாகவே இருக்கமுடியும்" என்றார் காந்தி.

இந்த அடிப்படையான கருத்து வேற்றுமை இருந்த போதிலும், தசரா கொண்டாட்டத்துக்குக் காந்தியே தலைமை வகிக்க வேண்டும் என்று ஐயரும் ஸாவர்க்கரும் வற்புறுத்தினார்கள். காந்தியும் வேற்றுமைகளைப் பொருட்படுத்தாமல், ஒரு நிபந்தனைக்குட்பட்டு வர இசைந்தார்.

"கொண்டாட்டம் எதற்காக?" என்றார் காந்தி.

ஐயர் சொன்னார்: "இங்கிலாந்தில் எழுநூறு இந்திய மாணவர்கள் இருக்கிறார்கள். பெரும்பாலோர் பணக்காரப் பிள்ளைகள். அவர்களுக்குத் தங்கள் தாய்நாட்டைப் பற்றிய சிந்தனையே கிடையாது. வெள்ளையரைப் போல வாழ்வதே சொர்க்கம் என்ற மூடநம்பிக்கை உள்ளவர்கள். தசரா பண்டிகை என்பது ஒரு சாக்குப் போக்கு. தகுந்த சாக்குப் போக்கு. எல்லாரையும் ஒரு பொதுப் பண்டிகை சமயத்தில் ஒன்று கூட்டி, அவர்கள் இந்திய நாட்டின் பிரஜைகள் என்ற நினைவை உண்டாக்குவதே கொண்டாட்டத்தின் நோக்கம்" என்றார் ஐயர்.

"யோசனை நல்லது ; ஆனால் யாரும் ஒன்று கூடி ஒரு ஹோட்டலில் பணம் கொடுத்து ஆங்கில முறையில் உண்டு பேசிக் கலைவதில் எனக்கு விருப்பமில்லை" என்று காந்தி சொன்னார்: "நாம் இந்தியர், இது இந்தியப் பண்டிகை என்பதற்கு அடையாளமாக இந்திய உணவு, புலால் இன்றி ஏற்பாடு செய்தால்" தாம் வருவதாக ஒப்புக் கொண்டார்.

"இது மிகவும் கடினமான நிபந்தனை. இருந்தபோதிலும் தகுந்த ஏற்பாடு செய்துவிடுகிறோம்" என்று ஐயர் விடை பெற்றார்.

சுமார் எழுநூறு பேருக்கு விருந்து. சிரமமான காரியம் ;

பாத்திரம் பண்டமெல்லாம் வேண்டுமே; இருப்பினும் ஒப்புக்கொண்டுவிட்டார்கள்.

ஒரு பெரிய ஹால் வாடகைக்கு எடுத்தார்கள். பாத்திரங்கள் சேர்த்தார்கள். டாக்டர் டி. எஸ். எஸ். ராஜன் தலைமையில் ஆறு பேர் சமையல் பொறுப்பை ஏற்றுர்கள். மிகவும் கஷ்டப்பட்டுக் கடை கடையாய் அலைந்து, சமையலுக்கான பண்டங்களைச் சேகரித்தார்கள். விழாவுக்கு முந்தின தினம் ஐயர், காந்தியிடம் மறுநாள் நிகழ்ச்சியை நினைவூட்டப் போனுர். இடம், நேரம், நிகழ்ச்சிநிரல் எல்லாம் உன்னிப்புடன் கேட்டுத் தெரிந்துகொண்டார் காந்தி.

விருந்து நடக்க இருந்த தினம் பிற்பகல் ஒரு மணிக்கே சமையல் செய்ய ஆரம்பித்து விட்டார்கள். இதை டாக்டர் ராஜன் மேலும் விவரிக்கட்டும்:

"வேலை தெரிந்தவர்களும், தெரியாவிட்டாலும் ஊக்கம் உடையவர்களுமான ஆறு பேர் அடங்கிய ஒரு கோஷ்டி சமையல் வேலையைத் தொடங்கியது. நானும், என் நண்பர் ஒருவரும் சமையலைச் செய்ய மற்றவர்கள் உதவி செய்தார்கள். பழக்கம் இல்லாததனுல் வேலை சற்றுத் தாமதமாகவே நடந்தது. அன்று வரையில் ஐயரிடமிருந்து கேட்டதைத் தவிர நான் நேரில் காந்தியைப் பார்த்ததில்லை. நாங்கள் வேலை செய்யத் தொடங்கி அரை மணிநேரத்துக்கெல்லாம், நடு வயசுள்ளவரும் பலம் அற்றவர் போலத் தோன்றியவருமான ஒருவர் எங்களுடன் வந்து கலந்து கொண்டார். வேலையில் அவர் காட்டிய ஊக்கமும் ஆர்வமும் மற்றவர்களில் ஒருவருக்குக்கூட இல்லை. அவரைப் பலவித முரட்டு வேலைகளில் விட்டோம். தட்டு, தொட்டி, பாத்திரம் இவைகளைக் கழுவுவது, கறிகாய் நறுக்குவது, தண்ணீர் கொண்டுவந்து கொடுப்பது முதலிய எல்லா வேலைகளையும் சொல்லுவதற்கு முன்பாகவே அறிந்துகொண்டு அவர் செய்தார். இந்தியாவிலிருந்து வந்திருக்கும் ஒரு புதிய ஆசாமி என்று அவரை நாங்கள் நினைத்து நன்ருக வேர்க்க வேர்க்க வேலை வாங்கினேம்."

மாலை 7.30 மணிக்கு விருந்து. சுமார் 6 மணிக்கு,

வெளியே போயிருந்த ஐயர் வந்தார். டாக்டர் ராஜன் விவரிப்பதைக் கவனிப்போம்.

"ஐயர் சமையல் அறைக்கு வந்தார். 'எல்லாம் முடிந்து விட்டதா?' என்று கேட்டுக்கொண்டே என்னைப் பார்த்துக் கவலையுடன், 'இங்கு வந்திருக்கும் இவரை யார் வேலை செய்யச் சொன்னது? இவர்தாம் இன்றைக் கூட்டத்திற்குத் தலைவரான ஸ்ரீமான் காந்தி. இவரை நீங்கள் நடத்தும் முறை மிக அழகாக இருக்கிறது' என்று சற்று துக்கத்துடன் சொன்னார்.

"உடனே நாங்களும் ஐயருடன் சேர்ந்து மன்னிப்புக் கேட்டோம். காந்தி குலுங்க நகைத்து, 'நான் யாரை எதற்காக மன்னிப்பது என்று தெரியவில்லை. இந்த வேலையில் முதல் குற்றவாளி நான். இந்த ஊரில் இந்த மாதிரி ஒரு விருந்து நடத்துவது எவ்வளவு கடினம் என்பது எனக்குத் தெரியும். எனினும் உங்களைப் போன்ற இளைஞர்கள் இந்த வேலைசெய்ய முன்வந்தது எனக்கு எவ்வளவு ஆனந்தத்தைக் கொடுக்கிறது; அதற்காக நான் அல்லவோ உங்களிடம் மன்னிப்புக் கேட்டுக் கொள்ளவேண்டும்?' என்றார்."

எவ்வளவு தடுத்தும் தாம் செய்துகொண்டிருந்த வேலையைக் காந்தி நிறுத்தவில்லை. எல்லாருக்கும் மேஜைகளில் தட்டுகளில் உணவு பரிமாறிய பின்பே கடைசியாகத் தமது இடத்தில் அமர்ந்தார்.

சாப்பிட்டபின் சொற்பொழிவுகள் நடந்தன. காந்தி தமக்கும் ஸாவர்க்கருக்கும் தேசீய விடுதலைக்கான முறையில் மாறுதலான கருத்து உண்டென்று சொல்லி, ஆனால் இத்தகைய சந்தர்ப்பங்கள் அவர்கள் ஒன்றுகூடி, தங்கள் தேசத்திடம் உள்ள பற்றினால் ஒற்றுமையாகப் பழக வேண்டும் என்றார். அஹிம்ஸை பற்றிக் குறிப்பிட்டுப் பாரதம் உலகுக்களித்த மிகச் சிறந்த பரிசு அது என்றார்.

அவரை தொடர்ந்து பேசிய ஸாவர்க்கர், காந்திக்கும் தமக்கும் உள்ள வேற்றுமைகளை விவரிக்காமல், நமது நாட்டின் புராதனப் பெருமையையும் வீரத்தையும் அன்று ஞாபகமூட்டுவதே தமது விருப்பமென்றும் அந்தப்

பெரியார்களது சந்ததியினரான நாம் இன்று அடிமைப் பட்டு வாடி வதங்கி இருப்பதைக் கவனித்துச் சுதந்தரம் பெற முயலவேண்டும் என்றும் உருக்கமாகச் சொன்னார்.

1909-இல் காந்தி நல்ல பேச்சாளரல்ல. ஸாவர்க்கரோ பேச்சுக்குப் பெயர் போன இளைஞர். இளம் வயதினரது மனமறிந்து, அவர்கள் உள்ளம் நெகிழுமாறு பேசுவதில் சமர்த்தர். இந்திய விடுதி இளைஞர்கள் ஸாவர்க்கரது பேச்சைப் பாராட்டினார்கள். இம்மாதிரி இன்னும் இரண்டு மூன்று பேச்சுகளைக் கேட்டால் பாரிஸ்டர் காந்தி மனம் மாறித் தம்முடன் சேர்ந்துவிடுவார் என்று அவர்கள் உறுதியாக நம்பினார்கள்.

காந்தியோ, தமது நிலையினின்று சிறிதும் மாறவில்லை. இதற்கு ஒரு மாதம் கழித்துக் கப்பலில் தென்ஆப்பிரிக்கா திரும்பியபோது, தமது கருத்துகளையெல்லாம் வேதம் போல எடுத்துரைக்கும் சிறு நூலான 'ஹிந்த் ஸ்வராஜ்' நூலைக் குஜராத்தி மொழியில் எழுதினார். நூலாசிரியரும் வாசகரும் சம்பாஷிப்பதுபோல, கேள்வி பதிலாக எழுதப் பட்ட இந்நூலில் பலாத்காரத்தில் நம்பிக்கை உள்ள வர்கள் தெரிவித்த காரணங்களை யெல்லாம் சொல்லி, அவற்றுக்குப் பதில் அளிக்கிறார் காந்தி.

இந்த முதல் சந்திப்புக்குப் பிறகு, ஆறு ஆண்டுகள் கழித்து, 1915-இல் ஐயரும் காந்தியும் பாண்டிச்சேரியில் இரண்டாவது தடவையாகச் சந்தித்தார்கள். மீண்டும் அஹிம்சா மூர்த்தியும் புரட்சிவீரரும் விவாதம் செய்தனர். இந்தத் தடவை ஐயர் மனம் மாறினார். அவர் காந்தீய வாதியாக, அஹிம்ஸாவாதியாக மாறினார்.

இவ்விருவருக்கும் 1924-இல் காந்தி அக்கிராசனம் வகித்த பெல்காம் காங்கிரஸ் கூட்டத்தில் மூன்றாவது சந்திப்பு நடந்தது. நான்காவது, முடிவான சந்திப்பு 1925-இல் ஐயர் நடத்திய 'தமிழ்க்குருகுலம்' சம்பந்தமாகக் கிளர்ச்சி நடந்த சமயம் அதில் சமரசம் செய்விக்கக் காந்தி ஈடுபட்டபோது நடந்தது. இது நடந்த சில மாதங்களில் ஐயர் அருவிக்கு இரையானபோது காந்தி துயருற்று, அவரைப் பாராட்டித் தமது 'யங் இந்தியா' பத்திரிகையில் எழுதினார்.

# 7. ஸாவர்க்கர் கைதானுர்

மதன்லால் சம்பவத்துக்குப் பின் இந்திய விடுதிக்குப் போலீஸ் கண்காணிப்பு தீவிரமாக இருந்தது. ஆயினும் ஸாவர்க்கரையோ பிறரையோ சதியாலோசனை எதிலும் மாட்டி வைக்க உதவும் தடயம் ஏதும் போலீஸுக்குக் கிடைக்கவில்லை.

ஷாம்ஜி கிருஷ்ண வர்மாவின் 'இந்தியன் ஸோஷாலஜிஸ்ட்' பத்திரிகையை அச்சடித்துக் கொடுத்து வந்த கை ஆல்டிரெட் கைது செய்யப்பட்டார். அவருக்குப் பதிலாக அச்சடிக்கும் பொறுப்பை ஏற்ற மற்ருெருவருக்கும் இதே கதி நேர்ந்தது. இதன் பேரில் தமது பத்திரிகையைப் பாரிஸ் நகருக்கு மாற்றிவிட்டார் ஷாம்ஜி.

மதன்லால் திங்ராவின் கையெழுத்து வாக்குமூலத்தைப் போலீஸார் பதுக்கி வைத்தும் அது எப்படியோ வெளி வந்துவிட்டதல்லவா? அதை அச்சிட்டவர் எவர் என்று தேடித்துருவிப் பார்த்தார்கள். அது அச்சடிக்கப்பட்டிருந்த எழுத்துக்களிலிருந்து, ஃபிரெஞ்சு எழுத்துகளாக இருப்பதனுல், அது பாரிஸில் அச்சடிக்கப்பட்டிருக்குமோ என்றும், ஷாம்ஜியின் வேலையாக இருக்குமோ என்றும் சந்தேகித்தார்கள்.

இந்திய விடுதியினர் போலீஸ் வேவுத் தொல்லையைப் புன்னகையுடன் ஏற்ருர்கள். எப்போதும் ஒரு போலீஸ் வேவுகாரன் தொடர்ந்து வருவது சங்கடமாக இல்லையா என்று கேட்டதற்கு, ஸாவர்க்கர், "இரவு பகலென்று பாராமல், மழை பனி பாராமல், அவர்கள் தங்களுக்கு அது ஒத்துக்கொள்ளுகிறதென்று தெருவில் நின்றுகொண்டேயிருந்தால், எனக்கு எவ்வித ஆட்சேபமும் இல்லை" என்று நகைத்தார்.

லண்டனில் நிலைமை இவ்வாறு இருக்க, இந்தியாவில் ஸாவர்க்கரின் உறவினரையும் நண்பர்களையும் பாடுபடுத்தத் தொடங்கினார்கள். ஸாவர்க்கரின் மாமனார், வேலையிலிருந்து நீக்கப்பட்டார். அவருடைய தம்பி 17 வயதுச் சிறுவன் நாராயண ஸாவர்க்கர், அஹமதாபாதில் வைஸ்ராய் மின்டோ பிரபுவை வெடிவீசிக் கொல்ல முயன்றதாகக் குற்றம் சாட்டப்பட்டான். அவருடைய தமையனார் கணேஷ் ஸாவர்க்கர், மன்னருக்கெதிராகப் போரிட்டதாக ராஜத் துரோகக் குற்றம் சாட்டப்பட்டு நாஸிக் சிறைக்கு அனுப்பப்பட்டார். பிறகு அவருக்குத் தீவாந்தர தண்டனை விதித்தனர். அதாவது, கடல்கடந்து அந்தமான் தீவில் சிறை வாசம்.

இச்செய்திகள் ஸாவர்க்கரது உடல்நிலையை மோசமாகப் பாதித்தன. போலீஸ் உளவாளிகள் தொல்லை வேறு. ஐயரும் மற்ற நண்பர்களும் அவரை நன்கு கவனித்துக் கொண்டு வேல்ஸில் இந்திய டாக்டர் ஒருவர் மேற்பார்வையில் இருந்த சுகாதார ஓய்வு நிலயத்தில் சேர்த்தார்கள். அவர் அங்கே போய் இரண்டு வாரமாகவில்லை. ஒரு நாள், அனந்த கன்னரே என்ற சித்பவன் பிராம்மண இளைஞன் நாஸிக் ஜில்லா மாஜிஸ்டிரேட் ஏ. எம். டி. ஜாக்ஸன் என்பவரைச் சுட்டு கொன்றுவிட்டதாகச் செய்தி வந்தது. கணேஷ் ஸாவர்க்கருக்குத் தீவாந்தர சிட்சை விதிக்கப்பட்டதற்கு வஞ்சம் தீர்க்கவே இவ்வாறு அந்த இளைஞன் செய்தானும்.

நாஸிக்கில் ஸாவர்க்கருடைய பழைய நண்பர்கள் பலர் கைதானார்கள். எல்லாரும் ராஜத் துரோகக் குற்றச்சாட்டுக்கு ஆளானார்கள். இந்தக் கொலைக்கும் பிற நடவடிக்கைகளுக்கும் மூல காரணம் ஸாவர்க்கரே என்றும், அவரைப் பிரிட்டிஷ் போலீஸார் ஏன் இன்னும் விட்டு வைத்திருக்கிறார்கள் என்றும் பல ஐரோப்பியப் பத்திரிகைகள் இந்தியாவில் கூக்குரல் கிளப்பின.

உடல் தேறி வந்துகொண்டிருந்த ஸாவர்க்கருக்கு, தமது காலம் வந்துவிட்டதென்று ஏதோ தெரிவித்தது. அவருடைய நண்பர்கள் அவரை இங்கிலாந்தை விட்டுப்

பாரிஸுக்குப் போய்விடுமாறு வேண்டினார்கள். ஷாம்ஜியும் மதாம் காமாவும்கூட அவ்வாறே பாரிஸ் வரச் சொன்னார்கள். 'அபிநவ பாரத்' நிர்வாகக் குழுவும் அவர் பத்திரமாக இருப்பது தங்கள் லட்சிய நடவடிக்கைகளுக்கு அவசியம் என்றும், ஆதலால் அவர் பாரிஸ் போய்விடவேண்டும் என்றும் தீர்மானம் நிறைவேற்றியது.

ஆனால் ஸாவர்க்கரோ அவ்வாறு செய்ய விரும்பவில்லை. அது ஓடிப்போவதற்கொப்பாகும் என்று நினைத்தார். 'அபிநவ பாரத்' நிர்வாகக் குழு மறுபடி கூடி, அவரைப் பாரிஸ் போகும்படி மீண்டும் வற்புறுத்தியது. அதுதான் ஸாவர்க்கர் கலந்துகொண்ட கடைசி 'அபிநவ பாரத்' சங்கக் கூட்டமாகும்.

ஸாவர்க்கர் துணைக்கு ஒருவருடன் பாரிஸ் போய்ச் சேர்ந்தார். அங்கே ஷாம்ஜியும் மதாம் காமாவும் அவரை வரவேற்றார்கள். சிறிது காலத்துக்கெல்லாம் சில அவசரமான ரகசிய விஷயங்கள் பற்றி ஆலோசனை நடத்த ஐயர் பாரிஸ் போனார். ஸாவர்க்கர் லண்டனுக்குத் திரும்பத் துடித்துக்கொண் டிருப்பதைக் கண்டார் அவர். தமது நெருங்கிய உறவினரும் நண்பர்களும் சிறையில் கொடுமை அனுபவிக்கையில் தாம் மட்டும் பாரிஸில் சுகவாசியாக இருப்பதா? என்ன நடந்ததோ அது இந்தியாவில் நடந்தது; தமக்கும் அதற்கும் தொடர்பே இல்லை. லண்டனில் தாம் இருந்தால், இந்தியாவில் குற்றம் சாட்டப் பட்டுள்ளவர்கள் சார்பில் நல்லது செய்யச் சந்தர்ப்பம் இருக்கும். மேலும், புரட்சிவீரர்களுக்கு அடைக்கலம் தருவதற்குப் பெயர்போனது லண்டன். மூன்றாவது நெப் போலியனைச் சுட்டுக் கொன்ற இத்தாலியப் புரட்சிவீரன் ஆர்ஸினி, கம்யூனிஸக் கொள்கையைத் தோற்றுவித்த ஜெர்மன் புரட்சியாளர் கார்ல் மார்க்ஸ், முதலிய பலர் லண்டனில் தொந்தரவின்றி வாழ அனுமதிக்கப்பட்டிருக் கிறார்கள். தமக்கும் லண்டன் பாதுகாப்பான ஊராகவே இருக்கவேண்டும்.

இவ்வாறு ஸாவர்க்கர் யோசனை செய்தார். ஆனால் பிரிட்டன் வெள்ளையர்களை நடத்தும் முறை வேறு, கறுப்பு

நிற இந்தியர்களை - தனது ஏகாதிபத்தியத்தைச் சேர்ந்த அடிமைகளை நடத்தும் முறை வேறு என்பதை ஸாவர்க்கர் மறந்துவிட்டார்.

ஸாவர்க்கர் முடிவில் லண்டன் திரும்பத் தீர்மானித்தார். ஷாம்ஜி, மதாம் காமா முதலிய முதியவர்களின் புத்திமதியைப் புறக்கணித்து, ஸாவர்க்கர் பாரிஸிலிருந்து கலே துறைமுகத்துக்கு ரெயிலில் சென்று, கலேயில் கப்பல் ஏறி இங்கிலீஷ் கால்வாயைக் கடந்து, டோவர் துறைமுகத்திலிருந்து ரெயில்பிடித்து லண்டன் போய்ச்சேர்ந்தார். ரெயில் லண்டனை நெருங்கும்போதே தம்மைப் போலீஸார் தொடர்வது தெரிந்தது. லண்டன் விக்டோரியா ஸ்டேஷன் பிளாட்பாரத்தில் அவர் இறங்கியதும் உடுப்பிலில்லாத போலீஸ்காரர்கள், "அதோ இருக்கிருர், ஸாவர்க்கர்!" என்று அவரைச் சூழ்ந்துகொண்டார்கள். அவரைக் கெட்டியாகப் பிடித்துக்கொண்டார்கள். ஸ்டேஷனில் பயணிகள் தங்கும் அறைக்கு அழைத்துச் சென்று, அவர் கைது செய்யப்பட்டுள்ளதாக வாரன்ட்டைப் படித்தார்கள். அதன்பின், அவர் போலீஸாரால் கொண்டு செல்லப்பட்டார்.

தமது தலைவர் கைதாகிவிட்டதால் ஐயருக்கு நிறைய வேலை இருந்தது. அடுத்தபடி வாரன்ட் பெறப்போவது தாமாக இருக்கக்கூடும் என்று ஐயருக்குத் தெரியும். இவ்வாறு தலைக்கு மேலே மயிரிழையில் கொடுவாள் தொங்கிக் கொண்டிருக்கையில், ஐயர் எவ்விதக் கவலையும் கொள்ளாமல் ஸாவர்க்கர் சார்பில் வழக்காடுவதற்கான ஏற்பாடுகளைச் செய்வதில் தம் கவனம் முழுவதையும் செலுத்தினர். வாகன் என்ற ஸொலிஸிட்டர் ஸாவர்க்கர் சார்பில் வழக்காட ஐயர் வகை செய்தார். பாரிஸிலுள்ள நண்பர்களுக்குப் பணத்துக்கு எழுதினர்.

ஸாவர்க்கர் 1910 மார்ச் 13-ஆம் தேதி கைது செய்யப்பட்டார். சட்டத்தின் பிடியிலிருந்து தப்பிச் சென்றவர்களைத் தண்டிக்கும் ஒரு சட்டத்தின்படி அவரைக் கைது செய்யுமாறு பம்பாய் மாகாண அரசாங்கம் லண்டனுக்குத் தந்தி அனுப்பியிருந்தது. அதன்படியே ஸாவர்க்கர் கைதானர். அவர் மீது ஐந்து குற்றச்சாட்டுகள் கூறப்

பட்டன; ஒன்று, மன்னருக்கு எதிராகப் போரிடுதல் அல்லது போரிட உடந்தையாக இருத்தல்; இரண்டு, மன்னரது ஆட்சியிலிருந்து இந்தியாவின் ஒரு பகுதியை விலக்கச் சதி செய்வது; மூன்று, துப்பாக்கி முதலான தளவாடங்களை வாங்கி விநியோகம் செய்தல்; நாஸிக் ஜில்லா கலெக்டர் ஏ. எம். டி. ஜாக்ஸன் கொலைக்கு உடந்தையாக இருந்தது; நான்கு, லண்டனில் துப்பாக்கி முதலான தளவாடங்களை வாங்கி அனுப்புதல், மன்னர் ஆட்சிக்கெதிராகப் போரிடத் தூண்டுதல்; ஐந்து, 1906-இல் இந்தியாவிலும், 1908, 1909-இல் லண்டனிலும் ராஜத் துரோகமான பிரசங்கங்கள் செய்தது.

போ தெரு போலீஸ் கோர்ட்டில் பூர்வாங்க விசாரணை நடந்தது. ஸாவர்க்கருக்கு ஜாமீன் மறுக்கப்பட்டது. அவரை மார்ச் 20-ஆம் தேதி பிரிக்ஸ்டன் ஜெயிலுக்கு அழைத்துச் சென்றுர்கள்.

ஐயர் மார்ச் 15-ஆம் தேதி போலீஸ் லாக்கப்பிலும், பிறகு பிரிக்ஸ்டன் ஜெயிலிலும் ஸாவர்க்கரைச் சந்தித்தார். ஸாவர்க்கர் சார்பில் வழக்காட ஏற்பாடு செய்திருந்த அவர் ஷாம்ஜிக்கு வருமாறு எழுதினுர்:

81, கிளாரெண்டன் ரோடு,
வடக்குக் கென்ஸிங்டன், மேற்கு,
15 மார்ச், 1910

அன்பார்ந்த பண்டிட்ஜி,

நமது அன்புக்குரிய ஸாவர்க்கர் எக்ஸ்பிரஸ் ரெயிலி லிருந்து இறங்கியவுடன் கைதுசெய்யப்பட்டார் என்பதை மிக்க வருத்தத்துடன் தெரிவித்துக் கொள்ளுகிறேன். இந்தியாவில் கொலைக் குற்றத்துக்கும் ராஜத் துரோகத்துக் கும் உடந்தையாக இருந்ததாய்க் குற்றச்சாட்டு. நேற்றே எழுதியிருப்பேன். ஆனுல் இன்று ஸாவர்க்கரைப் பார்த்த பின் எழுதலாமென்று தாமதித்தேன். நேற்று கோர்ட்டில் என்ன நடந்ததென்பதைத் தெரிவிக்கும் 'டெய்லி டெலகிராஃப்' பத்திரிகைச் செய்தியை அனுப்பியிருக் கிறேன். ஒரு ஸொலிஸிட்டரை நியமித்தோம்; அவர்

நேற்று வழக்கை நடத்தினர். சரியான பாரிஸ்டர் ஒருவரை வைத்தோமானல், வழக்கு இங்கேயே லண்டனில் நடக்கும்படி செய்யலாம்; அப்போது, அவர் குற்றமற்றவர் என்பதைச் சிறிதும் சந்தேகத்துக்கு இடமின்றி நிரூபித்துவிடலாம் என்று அவர் தெரிவித்தார். உங்களுக்குத் தோன்றும் சட்டநுணுக்கங்களை எனக்குத் தெரிவித்தால் அவற்றை ஸொலிஸிட்டருக்கும் பாரிஸ்டருக்கும் தெரிவிப்பேன்.

இன்று காலையில் நான் ஸாவர்க்கரைப் பார்த்தேன். வழக்கம் போலத்தான் இருக்கிறார். நாங்கள் சிறைக்கம்பிகளுக்கு எதிர்ப் புறங்களிலிருந்து பேசினேம் என்பதே வித்தியாசம். அவர் இங்கிலீஷ் ஜெயில் ஒன்றில் அடைபட்டுக் கிடப்பது என் மனத்தை உறுத்துகிறது-ஒரேயடியாக உறுத்துகிறது. ஒரு சிங்கம் வேடுவனின் வலையில்! ஜெயில் ஸுபரின்டென்டும் பிறரும் தம்மைக் கவனத்துடனும் சிரத்தையுடனும் கவனிக்கிறார்கள்; குறைப்பட ஏதுமில்லை என்று அவர் சொன்னர். நேற்று முன்தினம் அவர் உங்களுடனும், ஸ்ரீமதி ஷாம்ஜியுடனும் பத்திரமாக இருந்தார்; இன்று இதை நினைந்து நீங்களும் ஸ்ரீமதி ஷாம்ஜியும் துயரமுறுவீர்கள், தெரியும். என் செய்வது, சிந்திய பாலை நினைத்து அழுவதில் லாபம் இல்லை. அவரை இந்தியாவுக்கு அனுப்பிவிடாமல் பார்த்துக் கொள்ள நம்மால் ஆனதெல்லாம் செய்ய வேண்டும். ஏனெனில், அவரை அனுப்பிவிட்டார்களானல், நாம் அவரை மீண்டும் பார்ப்பது முடியாது; தாய்நாட்டின் மிக அருமையான, மிகவும் பக்தி சிரத்தையுள்ள ஒரு புத்திரன், எங்கோ மலேரியா மலிந்த ஒரு தீவின் சிறைச்சாலை அறையில் வாடி வதங்கிக்கொண் டிருப்பார். அந்தமானுக்குத் தம்மைக் கொண்டு போனர்களானல் அங்குள்ள தமது தமையனரைப் பார்க்கும் சந்தர்ப்பம் கிடைக்கும் என்று இன்று காலையில் ஸாவர்க்கர் சொன்னபோது பரிதாபமாக இருந்தது. அந்தத் துக்ககரமான மகிழ்ச்சி அவருக்கு நேராமலிருக்க வேண்டுமென்பதே என் ஆசை. அவர் விடுதலை பெற்றுத் தாய்நாட்டின் நலனுக்காகத்

தமக்கு உகந்த வழியில் தொண்டு செய்ய இடமிருக்கும் என்பதே எனது ஆவல்.

திருமதி ஷாம்ஜிக்கும் மற்ற நண்பர்களுக்கும் எனது வந்தே மாதரங்கள்.

ஸாவர்க்கரின் சார்பில் வழக்காட நாங்கள் நிதி வசூலித்து வருகிறோம். அந்த நிதிக்கு நீங்கள் அளிக்கக்கூடிய தொகையை அனுப்பி வைக்கக் கோருகிறேன்.

தற்சமயம் தோன்றுவதைப் பார்த்தால், மொத்தச் செலவு 200 பவுன் ஆகுமென்று தோன்றுகிறது. வந்தே மாதரம்.

வி. வி. எஸ். ஐயர்.

பண்டிட் ஷாம்ஜி கிருஷ்ண வர்மா அன்றே உடனே பதில் போட்டார் :

மார்ச் 15, 1910

அன்பார்ந்த ஸ்ரீ ஐயர்,

நமது அன்புமிக்க இளம் நண்பர் மிஸ்டர் ஸாவர்க்கர் நம்முடைய நாட்டைக் கொடுமைப்படுத்துபவர்களால் திடீரெனக் கைது செய்துகொண்டு போகப்பட்டுள்ளது என்னை எவ்வளவு துயரமுறச் செய்கிறதென்று வார்த்தைகளால் வர்ணிக்க முடியாது.

நமது அன்பார்ந்த சோதரர் எனது தீர்மானமான ஆலோசனைக்கு விரோதமாகவே இங்கிலாந்துக்குத் திரும்பினுர் என்பதை நினைத்து நான் அடையும் கலக்கத்தை நீங்கள் புரிந்து கொள்ளலாம். அது மட்டுமல்ல. அவர் பாரிஸை விட்டுக் கிளம்புவதற்குமுன் அநேகமாக ஒரு வாரமாக நாங்கள் ஒருவரையொருவர் பார்க்கவில்லை என்பதை நினைக்கத் துயரம் அதிகமாகிறது.

பத்து பவுன் மதிப்புக்கு ஒரு செக் இத்துடன் அனுப்புகிறேன். மிஸ்டர் ஸாவர்க்கரின் நலனுக்காக நீங்கள் எப்படி வேண்டுமானுலும் இதை உபயோகித்துக் கொள்ளுங்கள். இது வக்கீல்கள் வீண் செலவுக்கு உபயோகப் படாமலிருக்க வேண்டுமென்று நம்புகிறேன்.

உங்களன்புள்ள,

ஷாம்ஜி கிருஷ்ண வர்மா.

ஸாவர்க்கரின் சிறைவாசம் மதன்லால் தியாகத்துக்குத் தொடர்ச்சியாக வந்தது ஐயர் மனத்தில் மின்சாரம் பாய்ச்சியது போலாயிற்று. அவர் முற்றும் மாறிப் போனார். தமக்கு விதி எந்த வழி வகுத்து வருகிறது என்பது ஐயருக்குத் தெளிவாகலாயிற்று. அவருடைய ஆத்ம ஸமர்ப்பணம் பரிபூரணமாகிக்கொண் டிருந்தது.

இன்னும் மூன்றே மாதங்களில் ஐயர் தமது பாரிஸ்டர் படிப்பை முடித்துவிடுவார்; அவரைப் பாரிஸ்டராக ஏற்றுக் கொண்டுவிடுவார்கள். ஷாம்ஜி கிருஷ்ண வர்மா, ஸாவர்க்கர் போன்ற பாரிஸ்டர்கள் தங்கள் அரசியல் கொள்கைகளுக்காகப் பாரிஸ்டர் பட்டியலிலிருந்து நீக்கப்பட்டுள்ள போது, தாம் பாரிஸ்டர் பட்டியலில் சேருவதா? எந்த மன்னரின் ஆட்சியை இந்தியாவில் ஒழிப்பதே தங்கள் முதல் விருப்பமாக உள்ளதோ, அந்த மன்னருக்கு விசுவாசம் பூணுவதாகப் பிரமாணம் எடுத்துக்கொள்வதா? ஸாவர்க்கர் போன்ற தோழர்கள் அந்தமானில் நலிந்து வாடும் சமயம் தாம் செல்வச் செழிப்புடன் சுகவாசம் நடத்துவதா?

தம்மைப் பார்க்க பிரிக்ஸ்டன் ஜெயிலுக்கு ஐயர் வந்த போது அவருடைய தோற்றம் அடியோடு மாறியிருந்ததை ஸாவர்க்கர் கண்டார். இம்மாற்றம் அவர் மனத்தில் ஆழப் பதிந்தது. இரண்டே மாதங்களுக்குமுன் இருந்த ஐயர் வேறு, இப்போதைய ஐயர் வேறு என்று காண முடிந்தது. 1925-இல் ஐயர் மறைந்தபோது அவரைப் பற்றி எழுதுகையில் ஸாவர்க்கர் ஐயரின் அன்றைய மாற்றத்தை விவரித்துள்ளார். 1907-இல் இந்திய விடுதியில் ஐயர் முதன் முதலாகப் பகட்டான உடையில் வந்ததை நினைவு கூர்ந்து அந்த ஐயருக்கும், 1910-இல் ஜெயிலில் கண்ட ஐயருக்கும் உள்ள மாறுபாட்டை ஸாவர்க்கர் விவரிக்கிறார்:

"1910-இல் மார்ச் மாதம், நாம் கைதியாக நின்றோம். லண்டன் பிரிக்ஸ்டன் சிறையில் அடைபட்டு அதிக நாளாகவில்லை. லண்டன் நகரின் பயங்கரமான சிறைச் சாலை. வெளியிலிருந்து கைதிகளைப் பார்க்க வருபவர்கள் வரும் நேரத்தை வார்டர்கள் அறிவிக்கின்றனர். வருபவர்

களைச் சந்திக்க ஒதுக்கப்பட்ட வராந்தாவுக்கு வரிசையாகப் போகிறோம். கம்பிகளின் பின்னல் நின்றுகொண்டு, நம்மைக் காண யார் வந்திருக்கக் கூடும்; லண்டன் போலீஸாரின் விரும்பத்தகாத பார்வைக்கு உட்படத் துணிந்து யார் வந்திருக்கக் கூடும் என்று பார்க்கிறோம். ஏனெனில், கம்பிக்கு வெளியேபார்வையாளர் அரங்கிலிருந்துகொண்டு தாங்கள் எங்களுக்கு வேண்டியவர் என்று காட்டிக் கொள்வதானது, முடிவில் தவருமல் அதே கம்பிகளுக்குப் பின் தாங்களும் வருவதற்கான மார்க்கமாகும் என்பதை அறிவோம். பார்க்க வந்தவர்களை உள்ளே விடுகிருர்கள். அவர்கள் கும்பல் எங்கள் ஜன்னலைத் தாண்டிச் சென்று கொண்டேயிருக்கிறது. கடைசியில், கம்பீரமான ஒரு நபர் எங்கள் முன் உள்ள பெட்டியில் நுழைகிருர். அவர் வி. வி. எஸ். ஐயர்தான்.

''அவருடைய தாடி அவருடைய மார்பை நெருங்கத் தழுவிக்கொண் டிருந்தது. அவருடைய உடை பளபளப்பாக இல்லை. முன்போல, பகட்டாக உடை உடுத்திய கனவானுக அவர் இருக்கவில்லை. அவருடைய உருவம் முழுவதுமே ஏதோ ஆத்ம நிவேதனத்தால் மாறிப் போயிருந்தது. உணர்ச்சி பொங்க அவர் 'தலைவ, நீங்கள் ஏன் பாரிஸ் நகரை விட்டு வந்தீர்கள்?' என்று கேட்கிருர். நாம் அமைதியாக, 'அதை இங்கே விவாதிப்பதில் என்ன லாபம்?' என்று பதிலளிக்கிறோம். 'சரியோ தப்போ, இந்தச் சிறையில் அடைபட்டிருக்கிறோம். இனி என்ன செய்யலாம் என்று பார்ப்பதே சிறந்தது. நிகழ்காலத்தை எப்படிச் சமாளிப்பதென்று கவனிப்போம்.'

''செயலுக்கான திட்டங்களை விவாதித்துக் கொண்டிருக்கும்போதே மணி அடித்துவிட்டது. வார்டர்கள் ஓடி வந்து 'மணியாகிவிட்டது' என்று கத்தினர்கள். மனம் குமுற நாங்கள் ஒருவரையொருவர் பார்த்துக்கொள்கிறோம். இந்த வாழ்க்கையில் ஒருவரையொருவர் காணப்போவது இதுவே கடைசித் தடவையாக இருக்கக் கூடும் என்று ஞாபகம் வந்தது. கண்ணில் நீர் பெருகுகிறது. அதைக் கட்டுப்படுத்திக்கொண்டு, நாம் சொன்னோம். 'இல்லை

இல்லை! நாம் ஹிந்துக்கள்; கீதை படித்திருக்கிறோம். அனுதாபம் இல்லாத இந்தக் கும்பலின் முன்னால் நாம் அழக்கூடாது...'—ஹிந்தியில் பேசிக் கொள்கிறோம். ஆங்கிலேயர்கள் கும்பலாக இந்தியப் புரட்சிக்காரனையும் அவனுடைய நண்பனையும் வேடிக்கை பார்க்கிறார்கள். நாங்கள் பிரிகிறோம். அவர் மறையும் வரை அவரைப் பார்த்துக்கொண் டிருந்து மனத்துக்குள் சொல்லிக்கொண் டோம், 'என்ன செய்வது! இந்த அன்பு கனிந்த நண்பனை இனிக் காண்பது அநேகமாகச் சாத்தியமில்லை. ஏனென்றால், இரண்டில் ஒன்று எமக்கு நிச்சயம் காத் திருந்தது, ஒன்று தூக்குமேடை அல்லது அந்தமான் தீவு கள். எதுவானாலும் நாம் எமது நண்பர்களை மீண்டும் சந்திக்கும் வாய்ப்பு இராது!''

ஸாவர்க்கர் இவ்வாறு நெஞ்சையடைக்க விடைபெற்றா ரென்றாலும், இனி பார்க்கவே போவதில்லை என்று அவர் நினைத்திருந்தும், பதினான்கு வருஷங்களுக்குப் பிறகு ஐயரும் அவரும் இந்தியாவில் சுதந்தர புருஷர்களாகச் சந்திக்கவே செய்தார்கள். இருவரும் இனி அடிக்கடி சந்திக்கலாம் என்று அப்போது பிரிந்தார்கள். கொடும் விதி அதைப் பொய்யாக்கிவிட்டது. சில மாதங்களில் ஐயரை அழைத்துக்கொண்டு போய்விட்டது.

ஸாவர்க்கர் மீது வழக்கு பிரிட்டிஷ் கோர்ட்டுகளில் 1910 ஏப்ரல், மே, ஜூன் மூன்று மாதங்களும் இழுத்துக் கொண்டு போயிற்று. இது பற்றி ஷாம்ஜிக்கு ஐயர் எழுதினார்:

4 ஏப்ரல், 1910

அன்பார்ந்த பண்டிட்ஜீ,

வழக்கு அலுப்புத் தட்டும்படி நீடித்துக்கொண்டே போகிறது. இந்தியாவிலிருந்து தஸ்தாவேஜுகள் இன் னும் வரவில்லை. ஆகையால் ஸாவர்க்கரும் நண்பர்களும் முடிந்த அளவு துயரத்தைத் தாங்கிக்கொள்ளவேண்டியது தான். நண்பர்களில் யாராவது ஒருவர் அவரைப் பார்த்து வருகிறார்கள். ஜெயிலுக்கு வெளியே எவ்வளவு உற்சாகமாக இருந்தாரோ, அதே அளவு உற்சாகமாக

ஜெயிலுக்குள்ளும் இருக்கிறுர். படிக்கத் தேவையான புத்தகங்களும் பத்திரிகைகளும் தருகிறுர்கள். இந்தியாவி லிருந்து தஸ்தாவேஜுகள் சனிக்கிழமை வந்துவிடும். இவ்வளவு நாள் நிர்வாகத் தடங்கல் தாமதத்துக்குப் பிறகு, 13-ஆம் தேதி புதன்கிழமை மாஜிஸ்டிரேட் கையில் சேர்ந்துவிடும். அதன் பிறகே கோர்ட் மூலம் அந்தத் தஸ்தாவேஜுகளின் பிரதிகளைப் பெறமுடியும்.

தேசபந்து ஸாவர்க்கர், தம்முடைய ஸ்காலர்ஷிப்பில் தமக்கு மீதம் வரவேண்டிய தொகையை நீங்கள் தரமுடியு மானுல் அதை அவர் தம்முடைய சகோதரர்களின் மனைவியருக்குத் தாம் அனுப்பவிருக்கும் சிறு தொகை யுடன் அனுப்ப இயலுமென்று தெரிவிக்கச் சொன்னுர். இதனுல் அவர்கள் சிறிது காலமாவது பணக்கவலையினுல் வாடாமல் தவிர்க்கலாம். நீங்கள் தொகையை எனக்கு அனுப்பினுல் நான் ரசீது அனுப்புவேன். தொகையை ஸாவர்க்கர் விரும்பும் விதம் அனுப்புவேன்.

தேசபந்து சட்டோபாத்யாயாவுக்கு நீங்கள் மனுமுவந்து அளித்துள்ள ஸ்காலர்ஷிப்பை அவருக்கு விரைவில் அனுப்பவேண்டுமென்றும் ஸாவர்க்கர் கேட்டுக்கொள்ளச் சொன்னுர். பாரதமாதாவுக்குத் தொண்டு செய்வதிலும், அவளிடம் ஆழ்ந்த பக்தி கொண்டிருப்பதிலும் தேசபந்து சட்டோபாத்யாயாவுக்கு நிகரானவர் இல்லை. உங்கள் உதவி பெற அவர் மிகுந்த தகுதி உடையவர்...

தங்களன்புள்ள,
**வி. வி. எஸ். ஐயர்.**

இக்கடிதத்தில் குறிப்பிடப்படும் வீரேந்திர சட்டோபாத் யாயா கவிக்குயில் ஸரோஜினி தேவியின் சகோதரர் களில் ஒருவர். லண்டனில் பாரிஸ்டர் படிப்புப் படித்துக் கொண்டிருந்த இவரது பெயரையும் படிப்புப் பட்டியலி லிருந்து நீக்கினுர்கள். பிறகு வீரேந்திரர் பெரிய புரட்சிக் காரராகி ருஷ்யாவுக்குப் போனுர்; அங்கே போன இடம் தெரியாமல் மறைந்து போனுர்.

ஸாவர்க்கர் வழக்கின் தஸ்தாவேஜுகள் வந்தபோது ஸாவர்க்கருக்கும் நண்பர்களுக்கும் எதிர்பாராத அதிர்ச்சி

கள் இருந்தன. சுதந்தர இந்தியச் சங்கத்தில் உற்சாகமான அங்கத்தினராக 1908–09–இல் இருந்த ஹரிச்சந்திர கோரே காவ்ங்கர் வழக்கில் நீண்டதொரு வாக்குமூலம் கொடுத் திருந்தார். இந்திய விடுதி தேசபக்தர்களின் ரகசியங்களை யெல்லாம் அம்பலப்படுத்தி, ஐயரும் ஸாவர்க்கருமே இங்கிலாந்திலுள்ள இந்திய மாணவர்களைப் புரட்சிப் பாதைக்கு இழுத்துக்கெடுப்பதாக அவர் சொல்லியிருந்தார். கோரேகாவ்ங்கர் அப்ரூவராக, போலீஸ் தரப்பு ஸாட்சியாக மாறியிருந்தார். இரண்டாவது அதிர்ச்சி, ரங்கூனிலிருந்து ஸானிடரி எஞ்சினீயரிங் படிப்புக்காக லண்டன் வந்திருந்த செஞ்சேரி ராம ராவ் கொடுத்திருந்த வாக்குமூலமாகும். இந்தியாவுக்கு எடுத்துச் செல்லுமாறு ஸாவர்க்கர் தம்மிடம் சில கைத்துப்பாக்கிகளைத் தந்தார் என்று கூசாமல் புளுகி யிருந்தார் ராம ராவ்.

டாக்டர் ராஜனுக்கு ரங்கூனிலேயே அறிமுகமானவரான ராம ராவ், லண்டனில் அவர் மூலம் ஐயருடன் பழகலானார். ஓராண்டுப் படிப்பு முடிந்ததும் அவர் தாயகம் திரும்பினார். திரும்பும் வழியில் அவர் பாரிஸில் ஐயருடன் ஒரு வாரம் தங்கினார். அந்தச் சமயம், பம்பாயில் ஒருவரிடம் தருமாறு ஐயர் சில கைத்துப்பாக்கிகளை ராம ராவிடம் தந்தார். ராம ராவின் பெட்டியின் அடியில் மறைவு செய்து, கைத் துப்பாக்கிகளை அதில் வைத்து மூடி, வெளியே ஏதும் தெரியாதபடி செய்தார் ஐயர். ஃபிரெஞ்சுச் சுங்க இலாகா அதிகாரிகள் கண்ணில் படாதபடி எல்லாவற்றையும் அனுப்ப ஐயர் உதவினார். ஆனால், பம்பாயில் இந்திய அதிகாரிகள் ராம ராவின் பெட்டியைச் சோதித்தபோது கைத்துப்பாக்கிகளைக் கண்டுபிடித்து விட்டார்கள். ராம ராவுக்கு இரண்டு வருஷச் சிறைத் தண்டனை கிடைத்தது.

திடமான மனமில்லாதவர் ராம ராவ். ஜெயில் வாழ்க்கை யால் மனம் நொந்து போனார். ஐயருடனும் ராஜனுடனும் இருக்கும்போது தைரியமுள்ள தேசபக்தர் என்று பெய ரெடுத்த அவர், ஜெயிலில் அதிகாரிகளின் கைப்பாவை யாக மாறிவிட்டார். நாஸிக் கலெக்டர் ஜாக்ஸனைச் சுட உபயோகமான துப்பாக்கி ஸாவர்க்கர் அனுப்பியது

என்று போலீஸார் ஜோடிக்க விரும்பினார்கள். அதற்கு ராம ராவ் அவர்களுக்குப் பயன்பட்டார். தமது பெட்டியில் கண்டு பிடிக்கப்பட்ட கைத்துப்பாக்கிகளை லண்டனில் ஸாவர்க்கர்தான் வைத்தார் என்று ராம ராவ் அவர்கள் இஷ்டப்படி பொய்ஸாட்சி சொன்னார். இந்தத் துரோகச் செயல் மூலம் ராம ராவ் மன்னிப்புப் பெற்று, இந்தியப் போலீஸ் இலாகாவில் ஒரு வேலையும் பெற்றார்!

ஸாவர்க்கரை இங்கிலாந்திலேயே வைத்திருக்குமாறு செய்ய ஐயர் என்னென்னவோ செய்து பார்த்தார்; பலனில்லை. ஸாவர்க்கரை இந்தியாவுக்குக் கொண்டு சென்று அங்கே விசாரிக்கலாம் என்று போ தெரு போலீஸ் கோர்ட் 1910 மே 12-ஆம் தேதி உத்தரவிட்டது.

இந்தியாவுக்கு ஸாவர்க்கரை அனுப்புவதை எதிர்த்து ஸாவர்க்கரின் வக்கீல் பாரிஸ்டர் வாகன் ஹேபியஸ் கார்ப்பஸ் மனு கொடுத்தார். டிவிஷனல் கோர்ட்டில் பிரதம நீதிபதி வாகன் வில்லியம்ஸ் முன்பு விசாரணை ஜூன் 2, 3 தேதிகளில் நடந்தது. போலீஸ் கோர்ட் தீர்ப்பைப் பிரதம நீதிபதி ஊர்ஜிதம் செய்தார்.

இதன் பேரில் அப்பீல் கோர்ட்டில் ஒரு விண்ணப்பம் தரப்பட்டது. அந்தக் கோர்ட்டிலும், நீதிபதி கோலரிட்ஜ் தவிர மற்ற எல்லா நீதிபதிகளும் ஸாவர்க்கரை இந்தியாவுக்கு அனுப்புவது சரி என்று தீர்ப்பளித்தார்கள். மெஜாரிட்டி தீர்ப்பைப் பிரதம நீதிபதி வாகன் வில்லியம்ஸ் அறிவித்தார்.

இதற்கிடையில் இந்தியாவில் ஸாவர்க்கரை விசாரணை செய்வதற்காக ஒரு விசேஷக் கோர்ட் நியமிக்கப்பட்டிருந்தது. 'ஸ்பெஷல் டிரிபுனல்' என்ற இந்த நீதிமன்றம் நியமனமாகிவிட்டால், விசாரணைகளில் தீர்ப்புக் கூற ஜூரிகள் இருக்கமாட்டார்கள், கோர்ட் தீர்ப்புக்கு மேலே அப்பீல் கிடையாது. தூக்குமேடை அல்லது அந்தமான் வாசம்- இரண்டில் ஒன்று ஸாவர்க்கருக்குக் கிடைப்பது உறுதி என்று தோன்றியது.

கோர்ட்டுகளில் சட்டபூர்வமான முயற்சிகள் இவ்வாறு நடந்துகொண் டிருக்கும்போது, இந்தியப் புரட்சியாளர்

களின் ஐரிஷ் நண்பர்கள் ஸாவர்க்கரை அதிகாரிகள் பிடியிலிருந்து விடுவித்துக் காப்பாற்றத் துணிகரமான சில திட்டங்களைத் தெரிவித்தார்கள். இரண்டு யோசனை கள் கவனிக்கப்பட்டன. ஒன்று, இந்தியர் ஒருவர் ஸாவர்க்கரைச் சிறையில் சந்தித்து அவருக்குப் பதிலாகத் தாம் இருந்துகொண்டு அவர் வெளியே தப்பிச் செல்லச் செய்வது என்ற யோசனை. ஐரிஷ் நண்பர்களுடன் கூடி இதற்கென விரிவான திட்டம் ஒன்று தயாரித்தார்கள். அபாயம் நிறைந்த திட்டம். இது பலிக்கவில்லை. அதன் பேரில் இரண்டாவது யோசனை அமல் செய்யப்பட்டது. கோர்ட்டுக்கு ஸாவர்க்கரைக் கொண்டுசெல்லும்போதோ அல்லது திரும்பும்போதோ வண்டியை வழிமறித்து அவரை விடுவிப்பதென்பது இந்த யோசனை.

போலீஸ் மோட்டார் வண்டி வரட்டுமென்று ஸாவர்க் கரின் நண்பர்கள் ஒரு நாள் வழியில் காத்திருந்தார்கள். ஆனால், வண்டி வந்தபோது, அது காலியாக இருந்ததைக் கண்டார்கள். ஸாவர்க்கரை அன்று வேறொரு மோட்டார் வண்டியில் கொண்டு போய்விட்டார்கள்.

இந்தப் பலிக்காத முயற்சிகள் பற்றிப் பிரிட்டிஷ் நாவலாசிரியர் டேவிட் கார்னெட் தமது சுயசரிதமான 'பொன்னிற எதிரொலி' (தி கோல்டன் எக்கோ - The Golden Echo) என்ற நூலில் குறிப்பிட்டுள்ளார். நாவலா சிரியர் கார்னெட் இளைஞராக இருந்த சமயம், இந்திய மாணவர்கள் பலர் அவருக்கு நண்பர்களாக இருந்தனர்.

இந்த இரண்டு முயற்சிகளும் பலிக்கவில்லை என்றாலும் ஐயரும் அவருடைய நண்பர்களும் ஸாவர்க்கரை இந்தியா கொண்டு போவதற்கு முன்பு எப்படியாவது விடுவித்து விடுவதற்கு முயற்சி செய்துகொண்டே யிருந்தார்கள். அவகாசம் கிடைத்தபோதெல்லாம் ஐயர், ஸாவர்க்கருக்கு உற்சாகமூட்டும் கடிதம் எழுதி வந்தார்.

ஜூன் 1910-இல் ஐயரின் பாரிஸ்டர் படிப்பு முடிந்து விட்டது. இனி அவர் பட்டம் பெற வேண்டியதுதான் பாக்கி. எந்தக் காரணத்துக்காக அவர் லண்டனுக்கு வந்தாரோ அந்தக் காரணம் பூர்த்தியாகிவிட்டது. ஆனால்

ஐயர் இப்போது பழைய ஐயர் அல்லவே. பாரிஸ்டர் பட்ட மேற்கும் காலம் வந்தது. ஐயர் தாம் ஆங்கில மன்னருக்கு விசுவாசம் தெரிவிக்க முடியாதென்றும், தமது நாட்டு மன்னனல்லாத ஒருவருக்கு விசுவாசம் தெரிவித்தால் தான் பாரிஸ்டர் பட்டம் தமக்குக் கிடைக்குமென்ருல் அந்தப் பட்டம் தமக்கு வேண்டாம் என்றும் தெரிவித்து விட்டார். உறுதியான முடிவு. மாற்றத்துக்கு இடமில்லா தது. ஐயர் தம்மைப் பாரத நாட்டின் சேவைக்கு முற்றி லும் அர்ப்பணித்துக்கொண்டுவிட்டார்.

ஐயரின் முதிய நண்பர்கள் அவரது சேவையை எப்படிப் பயன்படுத்தலாம் என்று சிந்தனை செய்தார்கள். பாரிஸில் இந்தியப் புரட்சியாளர்கள் வெளியிட்டு வந்த 'வந்தே மாதரம்' என்ற பத்திரிகைக்கு ஐயரை ஆசிரிய ராக்கலாமா என்று லாலா ஹர்தயாள், ஸர்தார் ஸிங்ஜீ ராணுவுக்கு எழுதினர். ஆனல் அதில் ஐயருக்குச் சிரத்தை யில்லை. அவருடைய எண்ணமெல்லாம் ஸாவர்க்கரைப் பற்றியே இருந்தது.

ஜூன் 21-ஆம் தேதி ஸாவர்க்கரிடமிருந்து அவருக்கு ஒரு கடிதம் வந்தது. ஐயரின் சாந்தமான மனேபாவத்துக் காகவும், செழிப்பாக வளர்ந்த தாடிக்காகவும் ஐயரை அன்பொழுக "ரிஷி" என்று அழைப்பார் ஸாவர்க்கர். அவர் அவ்வளவு கலக்கமான நிலைமையிலும் ஐயரது தாடியைப் பற்றித் தமாஷ் செய்கிருர்.

கடிதம் வருமாறு :

பிரிக்ஸ்டன் சிறை,
21 ஜூன், 1910

ஓம்

ஸ்ரீ ஸ்வாதந்தர்ய லக்ஷ்மீ பிரஸந்நம் !

அன்பார்ந்த ரிஷி,

இதற்குள் உனக்கு இரண்டு அல்லது மூன்று கடிதங்கள் என்னிடமிருந்து கிடைத்திருக்க வேண்டும். அவை வந்து சேர்ந்த விவரம் தெரிவிப்பாயாக. வழக்கு இன்று முடிவதாகத் தோன்றவில்லை. ஆனல் தீர்ப்புதான் நம்

இருவருக்குமே தெரியுமே! நாளைய தினம் முடிவு முறைப்படி தெரிந்துவிடும்.

என் அருமை ரிஷி, இதற்குள்ளாக எனக்கு இந்த இடத்து உணவும் வாழ்க்கை முறையும் நன்கு பழக்கப் பட்டுவிட்டன. ஆரம்பத்திலிருந்தே நான் தனி ஆகாரம் கேட்காதது நல்லதாகிவிட்டது. இப்போது என்னை முற்றிலும் தீவாந்தர சிட்சைக் கைதியாக்க, உடை ஒன்றை மாற்றினாலே போதும்....

நான் நல்ல தேகாரோக்கியத்துடன் இருக்கிறேன். என் எடை இரண்டு பவுண்டு கூடியிருக்கிறது. (உன் போல, நாலு பவுண்டு தாடி ஒன்றை வளர்த்து அல்ல!) எடை கூடியது கேட்க நீ மகிழ்வாயென்பது திண்ணம். மனத்துக்கு ஆறுதலான மேன்மை தரும் கடிதங்களை இதுவரை பல தடவை எழுதியுள்ளது போல இனியும் எழுதி வா. நாம் முன்பே அறிந்த கோர்ட்டின் தீர்ப்பைக் கேட்கக் கோர்ட்டுக்குக் கிளம்பிக்கொண் டிருந்த சமயம் உன் கடிதம் ஒன்று வந்தது. அது நம்மிடையே உள்ள இடைவெளி தூரத்தை மறக்கச் செய்கிறது; என்னுடைய ரிஷி என் பக்கத்திலேயே ஒரு பொதுக்கூட்டத்தில் இருப்பது போலவோ, அல்லது ஒரே அறையில் எனக்குச் சிசுருஷை செய்துகொண்டு அரட்டையடிப்பதுபோலவோ, மக்களின் நிலையை மேம்படுத்துவது, புதிய ஜாதியை உண்டாக்குவது, வீரம் செழிக்கச் செய்வது என்பன போன்ற உயர்ந்த சமாசாரங்கள் பற்றிப் பேசிக்கொண் டிருப்பது போலவோ என்னைக் கனவுலகத்துக்குக் கொண்டு செல்கிறது.

சகோதரத்துவத்துடன்,
**வி. டி. ஸாவர்க்கர்.**

## 8. வீர் விக்ரம் ஸிங்கும் ருஸ்தும் ஸேட்டும்

1910 ஜூன் 29-ஆம் தேதி பிரிட்டிஷ் அரசாங்கம் ஃபிரெஞ்சு அரசாங்கத்துக்கு அனுப்பியதொரு கடிதத்தில், ஜூலை முதல் தேதியன்று எஸ். எஸ். மோரியா என்ற கப்பல் 'ஒரு முக்கியமான அரசியல் கைதியை' ஏற்றிக் கொண்டு லண்டனிலிருந்து இந்தியாவுக்குப் புறப்படும் என்று தெரிவித்தது. அந்த அரசியல் கைதியை ஐரோப்பா விலுள்ள அவரது நண்பர்களும் புரட்சியாளர்களும் விடுவிக்க முயலாமல் தடுக்க ஃபிரெஞ்சு அரசின் உதவியை நாடியது பிரிட்டிஷ் அரசு. அந்த 'முக்கிய மான அரசியல் கைதி' வேறு யாருமல்லர், ஸாவர்க்கரே. அவரை விடுவிக்க இங்கிலாந்திலேயே முயற்சிகள் நடந் ததை எப்படியோ அறிந்த பிரிட்டிஷ் அரசு, முன்யோசனை யாக எல்லா விதத்திலும் பாதுகாப்புச் செய்துகொள்ள நினைத்தது.

இத்தகைய மற்றொரு பாதுகாப்பு நடவடிக்கையாக லண்டனில் இருந்த ஐயர் மீது கைது உத்தரவு பிறப் பிக்கப்பட்டது. அவரை இனியும் வெளியே விட்டு வைக்கலாகாதென்று அவசரமாக அவரைத் தேடினார்கள். ஐயரோ இந்திய விடுதியில் இருக்கவில்லை. தம்மைக் கைது செய்துவிடாமலிருக்க, தினமும் வெவ்வேறு இடங் களில் வசிக்கலானார். லண்டன் முழுவதும் வலை போட்டு அவரைத் தேடினார்கள். கடைசியில் ஒரு நாள், ஒரு ஹோட்டலில் அவர் தங்கியிருப்பதைப் பிரிட்டிஷ் ரகசியப் போலீஸார் அறிந்து கொண்டார்கள். விடிவதற்கு முன் அவரைப் பிடித்துக்கொண்டு போய்விடுவதென, இரவில் சில போலீஸ் ஆட்கள் ஹோட்டலைச் சூழ்ந்து நின்றார்கள். ஐயருக்குத் தம்மைச் சூழ்ந்திருந்த அபாயம் தெரிந்து போயிற்று. நள்ளிரவில், அத்தியவசியமான

உடைமைகளை ஒரு சிறு கைப்பெட்டியில் போட்டுக் கொண்டு, போலீஸார் கண்ணில் படாமல் ஐயர் எப்படியோ தப்பிச் சென்றுவிட்டார். இவ்வாறு அவர் எடுத்துச் சென்ற அத்தியவசியப் பொருள்களில் கம்ப ராமாயண நூலின் தொகுதிகள் இருந்தன. எந்த அபாயத் திலும் அவற்றை விட்டுவிட அவர் தயாராக இல்லை.

ஏமாந்து போன பிரிட்டிஷ் போலீஸார், லண்டனை விட்டுப் போகும் எல்லா ரெயில், கப்பல் பாதைகளிலும், "தென் இந்தியப் பிராம்மணப் புரட்சியாளர்' வி.வி.எஸ். ஐயர்" போகிறாரா என்று உஷாராக இருக்கும்படி தங்க ளுடைய ஆட்களுக்கு எச்சரிக்கை செய்தார்கள். ஐயர் பாரிஸ் போவாரென்று எதிர்பார்த்து, பாரிஸ் போகும் கப்பல் பாதையான டோவர்–கலே மார்க்கத்தில் கண்ணும் கருத்துமாய்க் காவல் இருந்தார்கள்.

ஆனால் ஐயர் அவர்களுக்கு வேறு பல சந்தேகங்களை யும் வேண்டுமென்றே உண்டாக்கியிருந்தார். தென் அமெரிக்காவிலுள்ள பிரேஸில் நாட்டில் நிரந்தரமாகக் குடியேறி வாழ அவர் பிரேஸில் போகக்கூடும் என்ற சந்தேகத்தை அவர் உண்டாக்கியிருந்தார். பிரேஸில் நாட்டுக் குடியேற்றத் திட்டத்தைப் பாராட்டியும், தாம் அங்கே போய்விட விரும்புவதையும் அவர் தமது வீட்டா ருக்குக் கொஞ்ச காலமாகவே பல கடிதங்கள் எழுதிக் கொண்டிருந்தார். பாண்டிச்சேரி 'இந்தியா' பத்திரிகைக்கு எழுதிய கடிதத்திலும் பிரேஸில் குடியேற்ற விஷயத்தைப் பாராட்டி எழுதியிருந்தார்.

பிரிட்டிஷ் உளவாளிகள் இக்கடிதங்களை இடைமறித்து, படித்துப் பார்த்து, ஐயரை வளைத்துக்கொள்ளப் பிரேஸில் போகும் கப்பல் மார்க்கத்திலும் கடுமையாகப் பாரா இருந்தார்கள்.

பிரிட்டிஷாருக்கு மூன்றுவது சந்தேகம் ஒன்றையும் ஐயர் கிளப்பியிருந்தார். பல கடிதங்களைத் தம் கை யெழுத்தில் எழுதி, வெவ்வெறு தேதியிட்டு, அவைகளை டாக்டர் ராஜனிடம் கொடுத்தார். ராஜன் அவைகளை வெவ்வெறு தேதிகளில் வெவ்வேறு லண்டன் தபால்

பெட்டிகளில் போடவேண்டும். இவ்வாறு கடிதங்கள் லண்டனிலிருந்தே தபாலில் போவதால், ஐயர் லண்டனி லேயே இருக்கிறார் என்று பிரிட்டிஷ் போலீஸ்காரர்கள் நம்பினார்கள். இருந்தபோதிலும் பாரிஸ், பிரேஸில் மார்க் கங்களிலும் கவனிப்பாக இருந்தார்கள்.

போலீஸாரும் அவர்களுடைய உளவாளிகளும் லண் டன் - பாரிஸ், லண்டன் - பிரேஸில் பாதைகளில் கண் ணும் கருத்துமாக இருக்கையில், ஐயர் காதோடு காது வைத்த மாதிரி ஹாலந்துக்குப் போகும் கப்பல் ஒன்றில் ஏறினார். ஆம்ஸ்டர்டாம் நகருக்குப் போகும் அந்தப் பாதையில் உளவாளிகள் கவனிப்பு அதிகமில்லை. அப்படி யிருந்தும், அந்தக் கப்பலில் இருந்த ஓர் உளவாளிக்கு ஒரு சந்தேகம் இருந்தது. "தென் இந்தியப் பிராம்மணப் புரட்சியாளர்" பற்றிய உஷார் உத்தரவு அவனுக்கும் கிடைத்திருந்தது. கப்பலில் இருந்த பயணிகள் ஒவ்வொரு வராகப் பார்த்தான். யாருமே அந்த அபாயமான தென் இந்தியப் பிராம்மணனைத் தோன்றவில்லை. ஒரே ஒருவன் மட்டும் இந்தியப் பயணி போலிருந்தான்; பஞ்சாபி சீக்கியர் போல இருந்தான். அடர்த்தியான தாடி, தலையில் பாகை, பரந்த நெற்றி, அகலமான மூக்கு, கம்பீரமான உடற்கட்டு, உறுதியான தேகம். இவன் ஐயராக இருக்குமா? இராது. தென் இந்தியப் பிராம்மணர்கள் மெலிந்த உடலுள்ளவர்கள் அல்லவா? குட்டையானவர்கள் அல்லவா? அவர்களுக்கு மூளைதான் உண்டே தவிர, வலுவான உடல் கிடையாதே!

இருப்பினும் அம்மனிதரின் அடையாளம் அறிய அந்த உளவாளி ஒரு யுக்தி செய்தான். ஐயர் சாய்வு நாற்காலி ஒன்றில் ஓய்வாகப் படுத்திருந்தார். அவரிடம் பொய்த்தந்தி ஒன்றை நீட்டினான் அவன். ஐயர் தந்தி உறையை வாங்கிப் பார்த்தார். வி.வி.எஸ். ஐயருக்கு என்று விலாசம் இருந்தது. தம்மைத் துளியும் காட்டிக் கொடுத்துக் கொள்ளாமல், "இது ஐயருக்கல்லவா, எனக்கில்லையே!" என்று உறை யைத் திருப்பித் தந்தார்.

சாதாரணமாக இந்தப் பதிலே போதுமானதாக இருந்திருக்கும். ஆனால் ஐயரது கைப்பெட்டியின் மீது

'வி.வி.எஸ்.' என்ற எழுத்துக்கள் எழுதப்பட்டிருந்தன. உளவாளி அதைச் சுட்டிக்காட்டி, ஐயரை நோக்கினான். ஐயர் புன்னகையுடன், "ஓ, அதுவா? என் பெயர் வீர் விக்ரம் ஸிங். பஞ்சாபிலிருந்து வருகிறேன்" என்றார் சமயோசிதமாக. பிரிட்டிஷ் போலீஸ்புலி மன்னிப்புக் கேட்டுக்கொண்டு பின்வாங்கியது.

வேறு தொல்லையின்றி ஐயர் ஆம்ஸ்டர்டாம் நகரை அடைந்தார். தம்மை யாரும் கண்காணித்து வரவில்லை என்பதை உறுதி செய்துகொண்டு, பாரிஸுக்குப் போகும் ரெயில் ஒன்றில் தாமதமின்றி ஏறினார். ஃபிரெஞ்சுத் தலைநகரில் ஷாம்ஜி கிருஷ்ண வர்மாவும் மதாம் காமாவும் அவரது வருகைக்காகக் காத்திருந்தார்கள். அவர்கள் செய்ய வேண்டிய காரியங்கள் நிறைய இருந்தன. ஸாவர்க்கரை ஏற்றிக்கொண்டு இந்தியா செல்லும் கப்பல் தெற்கு ஃபிரான்ஸிலுள்ள மார்ஸேல் துறைமுகத்துக்கு இன்னும் சில தினங்களில் வந்து சேரும். மார்ஸேல் துறை முகத்தில் அவர்களுக்கு ஒரு காரியம் இருந்தது.

லண்டனிலிருந்து ஜுலை முதல் தேதி புறப்பட்ட 'எஸ். எஸ். மோரியா' கப்பல் வழியில் எஞ்சின் பழுதினால் மார்ஸேல் துறைமுகத்துக்கு ஜுலை 7-ஆம் தேதி வந்து சேர்ந்தது. கப்பல் மார்ஸேல் துறைமுகத்தை அடைந் ததும் தாம் எப்படியாவது கப்பலிலிருந்து தப்புவதற்கு முயற்சி செய்யப் போவதாக லண்டனில் தம்மைக் கண்ட நண்பர்கள் மூலம் பாரிஸிலுள்ள நண்பர்களுக்கு ஸாவர்க்கர் தகவல் கொடுத்திருந்தார்.

கப்பலின் எஞ்சின் பழுதுற்றதும் நல்லதுதான்; கப்பல் மார்ஸேலில் வழக்கத்தைவிட அதிக நாட்கள் நிற்கு மல்லவா?

ஜுலை 7-ஆம் தேதி இரவு, கப்பல் மார்ஸேல் துறை முகத்தை அடைந்ததும் தாம் எவ்விதம் தப்பிச் செல்வ தென ஸாவர்க்கர் யோசித்துக்கொண்டிருந்தார். கப்பலின் கழிவறைக்கு அவர் போய் வந்த சமயங்களில், அவ்வறை யில் ஒரு திறந்த, கம்பியில்லாத, வட்டவடிவச் சிறுஜன்னல் – 'போர்ட் - ஹோல்' – இருப்பதைக் கவனித்திருந்தார்.

தன்னைப் போன்ற மெலிந்த நபர் அதன் வழியே வெளி யேறிவிடலாம்; ஜன்னலின் வெளிப்புறம்-கடல் பக்கம் குதித்துவிடலாம்.

எல்லாவிதப் பிரச்னைகள், சிக்கல்களை மனத்தில் நினைத் துப் பார்த்து, எதெதை எப்படியெப்படிச் சமாளிப்பதெனத் தீர்மானித்துக் கொண்டார் அவர்.

அன்றிரவு அவர் மனம் அமைதியாக இல்லை. எண்ணங்கள் குமுறின. சந்தேகங்கள் மனத்தை உறுத்தின. தாம் அனுப்பிய செய்தி ஷாம்ஜீக்கும் மதாம் காமாவுக்கும் கிடைத்திருக்குமா? ஐயர் பத்திரமாகப் பாரிஸை அடைந் திருப்பாரா? அடைந்து தமது யோசனையைத் தெரிவித் திருப்பாரா? அவர்கள் மார்ஸேல் துறைமுகத்தில் காத்திருப் பார்களா?

மறுநாள் ஜூலை 8-ஆம் தேதி. ஸாவர்க்கர் அன்று காலை தப்பிச் செல்லத் தீர்மானித்தார்.

துறைமுகத்தில் நின்றுகொண்டிருந்த கப்பலில் அவருக் குக் காவலாக இரண்டு போலீஸ்காரர்கள் வந்தனர். ஒருவர் லண்டன் நகரிலிருந்து வந்தார்; மற்றவர் பம்பாயிலிருந்து வந்து, திரும்பிக்கொண் டிருந்தார். அதிகாலை நேரம். அவர்கள் இருவருமே தூங்கிக்கொண் டிருந்தனர். ஒரு காவலன் காவல் செய்துகொண் டிருந்தான். ஸாவர்க்கர் கழிவறைக்குப் போக வேண்டும் என்றார். காவலன் அவர்கள் இருவரையும் எழுப்பினன். அவர்கள் இருவரும் அரைகுறைத் தூக்கத்துடன் வந்தார்கள். இது ஸாவர்க் கருக்குச் சவுகரியமாக இருந்தது. கழிவறைக்குள் சென்று, சத்தமில்லாமல் உள்ளே தாளிட்டுக் கொண்டார். வட்ட ஜன்னல் அளவுக்கு எழும்பி, அது வழியாக வெளியே போக முயன்றார். அவர் உடைகளுடன் இருந்தது இடைஞ்சலாக இருந்தது. 'நைட் கவுன்' என்ற தடித்த இரவு நேர உடையே அவர் அணிந்திருந்தது. 'நைட் கவு'னைக் கழற்றிக் கீழே போட்டார். அநேகமாகப் பிறந்த மேனியாக இருந்தார். உடையின்றியிருந்த அவருடைய மெலிந்த உடல் ஜன்னல் வழியே எளிதாக நுழைந்து சென்றது. ஜன்னலின் வெளிப்புறம், ஆனது ஆகட்டும்

என்று துணிந்து கப்பலிலிருந்து துறைமுக நீரில் குதித்தார் ஸாவர்க்கர்.

ஸாவர்க்கர் வேகமாகவே நீந்தினார். துறைமுகச் சுவர்களை அவர் நெருங்கிக்கொண்டிருக்கும்போதுதான் கப்பலில் யாரோ ஒருவர் அவரைக் கவனித்தார். உடையில்லாமல் ஒருவர் நீரில் நீந்தும் விசித்திரம், விரைவில், கப்பலிலிருந்த இந்தியப் புரட்சியாளர் தப்பிவிட்டார் என்ற பரபரப்புக்கு இடமளித்தது. பிரிட்டிஷ் கடற்படைக் காவல்காரர்கள் இருவர் நீரில் குதித்து அவரைத் துரத்தினார்கள். ஸாவர்க்கரோ அதிவேகமாக நீந்தி முன்னேறினார். துறைமுகச் சுவர்களை அடைந்துவிட்டார்; செங்குத்தாக இருந்த சுவரில் பாதி தூரம் ஏறினார்; கீழே நீரில் விழுந்தார். மறுபடி ஏறினார். வெற்றிகரமாக முழுதும் ஏறி, மேலே தரைக்கு வந்துவிட்டார்; எழுந்து வேகமாக ஓடினார்.

பிரிட்டிஷ் காவலர்களும் துறைமுகச் சுவர்மேல் ஏறி வந்து துரத்தினார்கள். "திருடன்! திருடன்!" என்று ஒருவன் கத்தினான். "திருடன்! பிடித்து நிறுத்துங்கள்!" உடையில்லாத ஒரு மனிதன் ஓடுவதையும், இரு காவலர்கள் துரத்தி வருவதையும் வேடிக்கை பார்க்கக் கூட்டம் கூடிவிட்டது. ஒரு முச்சந்தியில் நின்ற ஃபிரெஞ்சுப் போலீஸ்காரன் ஸாவர்க்கரைத் தடுத்து நிறுத்தினான். பிரிட்டிஷ் காவலர்கள் ஓடிவந்து ஸாவர்க்கரைத் தங்களிடம் ஒப்புவிக்குமாறு கேட்டார்கள்.

இதற்கிடையில், துறைமுகத்திற்கு வந்து காத்திருந்த ஐயரும் மதாம் காமாவும் ஓடோடி வந்து, "இது ஃபிரெஞ்சு பூமி. இங்கே பிரிட்டிஷ் காவலர்கள் யாரையும் கைது செய்து கூட்டிச் செல்ல விடாதே!" என்று கத்திக் கொண்டே ஃபிரெஞ்சுப் போலீஸ்காரனை நெருங்கினார்கள். ஆனால் அந்த ஃபிரெஞ்சுப் போலீஸ்காரன் அவர்கள் வார்த்தையை மதிக்கவில்லை. பிரிட்டிஷ் காவலர்களிடம் ஸாவர்க்கரை ஒப்புவித்துவிட்டான்; அவர்கள் அவரை இழுத்துச் சென்றுவிட்டார்கள்.

அந்த ஃபிரெஞ்சுப் போலீஸ்காரனின் செயல் முற்றிலும் தவறானது. சர்வதேசச் சட்டக் கோட்பாடுகளுக்கு

முற்றும் விரோதமானது. ஒருவன் அந்நிய நாட்டு பூமியில் கால் வைத்துவிட்டால், அவன் அந்நாட்டுச் சட்டத்தின் கீழ் வந்துவிடுகிருன். அந்நாட்டு அரசின் அதிகாரத்துக்கு உட்பட்டவஞகிவிடுகிருன். அரசியல் கைதிகள் இவ்வாறு தப்பி வந்தால், அவர்களுக்கு அரசியல் அடைக்கலம் தருவது வழக்கம். ஸாவர்க்கர் தம்மைப் பிரிட்டிஷ் காவலி லிருந்து விடுவித்துக் கொண்டுவிட்டார்; ஃபிரெஞ்சு மண்ணில் இருந்தார்; ஃபிரெஞ்சுப் போலீஸ்காரன்தான் அவரைத் தடுத்துப் பிடித்திருந்தான். அரசியல் கைதி என்ற முறையில் அவருக்கு அடைக்கலம் தருவது நியாயம். ஃபிரெஞ்சுப் போலீஸ்காரன் ஸாவர்க்கரைத் தன் மேலதிகாரிகளிடம் ஒப்படைக்காமல் பிரிட்டிஷ் காவலர் களிடம் ஒப்படைத்தது தவறு. இந்த மாதிரி சர்வதேசச் சட்ட ஒழுங்கு மீறப்பட்டதை ஆட்சேபித்து வழக்காட ஐயரும் மதாம் காமாவும் உறுதியாக இருந்தனர்.

மார்ஸேல் நகரிலிருந்தே, அவர்கள் நடந்த விஷயத்தை 'ல ஹ்யுமானிதே' என்ற பிரபல பத்திரிகைக்குத் தந்தி மூலம் அனுப்பினுர்கள். ஸோஷலிஸ்ட் தலைவர் ஒருவரை ஆசிரியராகக் கொண்ட அப்பத்திரிகை ஜுலை 12-ஆம் தேதி இதழில் இச்செய்தியைப் பெரிதாக வெளியிட்டது. ஃஜோரஸ் என்ற ஸோஷலிஸ்ட் தலைவரைப் பண்டிட் ஷாம்ஜி கிருஷ்ண வர்மா, மதாம் காமா, ஐயர் மூவரும் அணுகி, ஸாவர்க்கரை விடுவிக்க உதவி கோரினுர்கள். ஃஜோரஸ் மார்ஸேல் நகர மேயருங்கூட. அவரும் இதில் சிரத்தை கொண்டு ஸாவர்க்கரை விடுவிக்க வேண்டு மெனக் குரலெழுப்பினுர். 'ல டெம்ஸ்', 'ல மத்தீன்', 'லெ க்ளேர்' போன்ற பிரபல தினசரிப் பத்திரிகைகள் இக்கோரிக்கையை ஆதரித்தன.

ஐயர் முதலியவர்கள் பிற ஃபிரெஞ்சுத் தலைவர்களையும் நெருங்கி ஸாவர்க்கர் விடுதலைக்கு முயன்ருர்கள். சட்ட விரோதமாக ஃபிரெஞ்சு மண்ணில் ஒருவரைப் பிரிட்டிஷ் காவலர்கள் கைது செய்தது பற்றி ஃபிரான்ஸில் பெருங் கூக்குரல் எழுந்தது.

இங்கிலாந்தில், சிறையிலிருந்து வெளியே வந்துவிட்ட கை ஆல்டிரேட், 'ஸாவர்க்கர் விடுதலைக் கமிட்டி' ஒன்று அமைத்து, தீவிரப் பிரசாரம் நடத்தினர்.

ஃபிரெஞ்சு அரசாங்கம் மட்டும் எளிதில் அசையவில்லை. பிரையாண்டு என்ற ஃபிரெஞ்சுப் பிரதமமந்திரி பிரிட்டனை விரோதித்துக்கொள்ள விரும்பவில்லை. ஐரோப்பாவில் ஜெர்மனியின் ஆபத்து அதிகரித்துவந்த காலமாதலால், ஃபிரான்ஸ் பிரிட்டனின் தயவை நாடவேண்டியிருந்தது. அப்படியிருந்தும் ஃபிரான்ஸில் எழுந்த கூக்குரலினல் பிரதமமந்திரி பிரையாண்டு ஸாவர்க்கரைத் தங்களிடம் திருப்பித் தருமாறு பிரிட்டிஷ் அரசாங்கத்தைக் கோரினர்.

ஃபிரான்ஸ் ஸாவர்க்கரைத் திருப்பித் தருமாறு கோரியிருப்பதாகப் பிரிட்டிஷ் பிரதமமந்திரி ஆஸ்க்வித் பிரிட்டிஷ் பார்லிமெண்டில் அறிவித்தார். இந்த மாதிரியான சந்தர்ப்பத்தில் ஸாவர்க்கர் கைது செய்யப்பட்டது சரியா தவரு என்று சர்வதேசச் சட்டத்தில் தெளிவாக இல்லை என்று லண்டன் 'டைம்ஸ்' பத்திரிகை எழுதியது. ஸாவர்க்கரை விட்டு விடாதிருக்க ஒரு தூண்டுதல்.

ஐரோப்பிய ஸோஷலிஸ்ட்டுகள் மகாநாடு கோபன் ஹாகன் நகரில் ஸெப்டம்பர் 10 – ஆம் தேதி நடந்தது. அம்மகாநாடு, ஸாவர்க்கர் விடுதலை செய்யப்பட வேண்டும் என்று ஒரு தீர்மானம் நிறைவேற்றியது. ஃபிரெஞ்சுப் பத்திரிகைகள் மீண்டும் கிளர்ச்சி செய்தன.

இரண்டு வாரம் கழித்து, பிரிட்டனும் ஃபிரான்ஸும் விஷயத்தைச் சர்வதேசக் கோர்ட்டின் தீர்ப்புக்கு விட இசைந்துள்ளதாகப் பிரிட்டிஷ் வெளிநாட்டு மந்திரி அறிவித்தார். வழக்கின் இருதரப்பாரும் நியமிக்கும் சட்ட நிபுணர்கள் கொண்ட தீர்ப்புமன்றம் செய்யும் முடிவை ஏற்பதாகத் தெரிவித்தனர். பிரிட்டனுக்கு எதிராகத் துணிந்து நிற்கக் கூடியவரையும் நியமிக்காமல், ஃபிரெஞ்சுப் பிரதமமந்திரி துவண்டு கொடுத்தார். தீர்ப்புமன்றம் 1911 பிப்ரவரி 24–ஆம் தேதி கூடியது ; அவசர அவசரமாக எட்டே நாட்களில் வழக்கை முடித்தது ; மார்ஸேலில் ஸாவர்க்கரைக் கைது செய்ததும், பிரிட்டிஷ் காவலர்கள் வசம் ஒப்படைத்ததும்

இரண்டுமே சட்ட விரோதமானவை என்றாலும், வழக்கைப் பிரிட்டனுக்குச் சாதகமாகத் தீர்ப்பளிக்கிறோம் என்று மன்றம் அறிவித்தது! விசித்திரமான தீர்ப்பு.

1910 செப்டம்பர் முதலே சம்பவங்கள் போகும் போக்கைக் கவனித்த ஐயர் மனமுடைந்து போயிருந்தார். ஸாவர்க்கரைப் பிரிட்டிஷ் அதிகாரிகள் இந்தியாவுக்குக் கொண்டு சென்று விசாரணை நடத்தினார்கள். ஃபிரெஞ்சு மண்ணில் தாம் கைது செய்யப்பட்டதும் தவறு; தாம் மார்ஸேலிலிருந்து இந்தியாவுக்குக் கொண்டு வரப்பட்டதும் தவறு; இரண்டுமே சட்டவிரோதம் என்று அவர் வன்மையாகக் கண்டித்தார். அதைக் காதில் போட்டுக் கொள்ளாமல் அவருக்கு 50 ஆண்டுகள் தீவாந்தர தண்டனை விதித்தார்கள். அந்தமானில் 50 ஆண்டுகள்; ஒரு ஆயுள் போதுமா அதற்கு?

கிரேக்க நாடகத்தின் துயர முடிவு போல ஸாவர்க்கர் வழக்கு எதிர்பார்த்த சோக முடிவை நோக்கித் தவிர்க்க முடியாமல் சென்றுகொண்டிருந்த சமயமே, ஐயரும் தமது எதிர்காலத்தை எப்படிப் போக்கலாம் என்று சிந்திக்கலானார். ஐயருக்கு வயது 29 ஆகிவிட்டது; அவரோ பாரிஸ்டர் பட்டத்தை வலிய உதறிவிட்டார்; பிரிட்டிஷார் கண்களில் பரமவிரோதி ஆகிவிட்டார்; அவர்மீது வாரன்ட் ஒன்றும் இருந்தது. பிரிட்டனிலும் சரி; இந்தியாவிலும் சரி, அவர் சுதந்தரமாக இருக்கமுடியாது.

அவ்வமயம் பாரிஸில் வாழ்ந்துவந்த புரட்சிவீரர் லாலா ஹர்தயாள் ஜப்பானுக்குப் போய்விட முடிவு செய்தார். ஆகையால், தமது 'வந்தே மாதரம்' பத்திரிகையின் ஆசிரியப் பொறுப்பை யாரிடம் ஒப்படைத்துச் செல்லலாம் என்று யோசித்து வந்தார். வீரேந்திர சட்டோபாத்யாயா, ஐயர் இருவர் பெயர்கள் கவனிக்கப்பட்டன.

1910 மே மாதமே அவர் ஸர்தார் ஸிங்ஜி ராணா என்ற மற்றொரு புரட்சிவீரருக்கு ஐயர் பற்றி எழுதினார்: "பாரிஸ்டர் பட்டியலிலிருந்து விலகிவிடுவதாக ஐயர் துணிவுடன் தெரிவித்திருக்கிறார் என்று கேள்விப்படுகிறேன். அவர் இந்தியாவுக்கு வெளியிலேயே வாழ

உத்தேசிக்கிறார் என்று நினைக்கிறேன். சட்டோ இல்லாத பட்சம், ஐயரை 'வந்தே மாதர'த்துக்கு நீங்கள் ஏற்பாடு செய்யலாம். அவரும் நன்றாக எழுதக்கூடியவரே. கோவிந்துக்குச் செய்தது போல, அய்யருக்கும் சம்பளமும் வாழ்க்கை துவங்க வசதியும் செய்து கொடுத்தால் ஐயர் பாரிஸில் தங்கியிருக்கலாம். இது ஒரு யோசனைதான். நீங்கள் தீர ஆலோசித்துப் பாருங்கள்..."

இதன் பின் வந்த ஒரு கடிதம், வீரேந்திர சட்டோபாத்யாயாவே சரி என்று முடிவாகக் கூறியது. ஆயினும், சட்டோபாத்யாயா இதை ஏற்கச் செய்வதற்கு அவரது நண்பர் ஐயரது உதவியை நாடுவதாய்த் தெரிவித்தது. ஹர்தயாள் ராணாவுக்கு எழுதினார்: "வந்தே மாதரம் பொறுப்பைச் சட்டோபாத்யாயா ஏற்கும்படி செய்யுமாறு மதாம் காமாவுக்கும் ஐயருக்கும் எழுதியிருக்கிறேன்... சட்டோபாத்யாயாவை எனக்கு நன்கு தெரியாதாகையால் அவருக்கு நேரில் எழுதவில்லை. சட்டோபாத்யாயா ஐயரின் நண்பர். விஷயத்தை ஐயர் எளிதில் முடிக்கலாம்."

புரட்சிவீரராகப் பாரிஸ் நகரில் அஞ்ஞாத வாசம் செய்வதில் ஐயருக்கு உற்சாகம் இல்லை. ஆகையால், சட்டோபாத்யாயா 'வந்தே மாதரம்' ஆசிரியப் பொறுப்பை ஏற்கும்படி செய்ய உதவினார். அதற்குள், ஹர்தயாளின் பயணத் திட்டம் மாறிப்போகவேண்டி வந்தது; ஆசிரியர் பொறுப்புக்கு ஆளும் தேவைப்படவில்லை. இது சம்பந்தமான கடிதப் போக்குவரத்தைக் கவனித்தால், ஐரோப்பாவில் இந்தியப் புரட்சியாளர்கள் வெளியிட்டு வந்த மற்றொரு பத்திரிகையான 'தல்வார்' இதழையும் ஹர்தயாளே ஏற்றுச் செம்மையாக நடத்தவேண்டும் என்று ஐயர் ஹர்தயாளுக்கு எழுதியிருப்பது தெரிகிறது. ஐரோப்பாவில் இருந்த இந்தியப் புரட்சிவீரர் குழாமில், வயதில் இளையவரானாலும், ஐயருக்கு நல்ல மரியாதை இருந்தது.

தாம் தொடர்ந்து பாரிஸில் வசிப்பதால் அதிக லாபமிராது என்பது ஐயரின் கருத்து. இந்திய விடுதியில் ஐயரின் நெருங்கிய நண்பரான டாக்டர் ராஜன், ஐயர் ஆபத்தைப் பாராமல் இந்தியாவுக்குத் திரும்புவதிலேயே

குறியாக இருந்தார் என்று சொல்கிருர். பாரிஸில் தாம் தங்கியிருந்த இல்லத்தின் தலைவி மதாம் காமாவுடன் ஐயர் இதைப் பற்றி விவாதித்தார். அந்த வீராங்கனை அவர் இந்தியா திரும்புவதை அங்கீகரித்தாள். ஆனால், பகிரங்கமாகச் சென்ருல், அவர் கைதாகக்கூடும் என்று எச்சரிக்கையும் செய்தாள்.

ஐயர் மாறுவேடத்தில் போவதெனத் தீர்மானித்தார். பிரிட்டிஷ் இந்தியாவில் எங்கே போவது என்பதை அவரால் தீர்மானிக்க இயலவில்லை.

ஃபிரான்ஸிலிருந்து இந்தியா செல்லும் கப்பல் மார்க்கம் மார்ஸேலிலிருந்து போர்ட் ஸயீது (அது கெய்ரோவுக்கு அருகிலுள்ள துறைமுகம்) ஏடன் வழியாகப் பம்பாய் போயிற்று. இதில் ஆபத்து அதிகம். தெரிந்த வழி; பிரிட்டிஷ் உளவாளிகள் தொல்லை இருக்கும். ஆகையால், இந்த நேர் வழியன்றி வேருெரு வழியில் போக வேண்டும்; தாம் இந்தியாவுக்குப் போக முயல்வதாகத் துளியும் சந்தேகமெழக்கூடாது. தாம் பாரிஸிலேயே இருப்பதாகவோ, வேறெங்கோ செல்வதாகவோ, சென்று விட்டதாகவோ பாய்ச்சுக் காட்ட வேண்டும். போகும் போது, தாம் முற்றிலும் வேருெரு மனிதராகப் போக வேண்டும். ஐயர் சிந்தனை இவ்வாறு சென்றது.

மதாம் காமாவின் இல்லத்தில் ஐயர் மாறு வேஷங்களுக்கான பல ஏற்பாடுகளைச் செய்தார். தமது தாடியில் தனிக் கவனம் செலுத்திஞர்; இரண்டு மாதங்களில் தாடி கருகருவென நீண்டு வளர்ந்தது; அவரது முகத் தோற்றமே மாறிவிட்டது. விதவிதமான உடைகள் தயாரித்து வைத்துக் கொண்டார். பார்ஸி கனவான், தெய்வபக்தி கொண்ட முஸ்லிம் வியாபாரி முதலிய வேடங்களுக்கான உடைகள் தயாராக இருந்தன. மதாம் காமாவிடமிருந்து பார்ஸி மதப் பிரார்த்தனைகள், பார்ஸி பேச்சு வழக்குகள், பார்ஸி நடையுடை பாவனைகளைக் கற்ருர். வேறு சில நண்பர்களிடமிருந்து முஸ்லிம் வியாபாரி வேஷத்துக்கான விஷயங்களைக் கற்ருர். பல மொழிகள் அறிந்தவராதலால் அந்தந்த வேடத்துக்குத் தக்கபடி வெவ்வேறு மொழிகளில்

பேசத் தொடங்கினார். மேடை நாடகத்தில் முக்கிய பாத்திரம் ஏற்கும் ஒரு நடிகர்கூட இவ்வளவு தீவிரமாகவும், இவ்வளவு கவனத்துடனும், இவ்வளவு நுணுக்கமாகவும் தயார் செய்துகொண்டிருக்கமாட்டார்.

ஐயர் இந்தியாவுக்கு எழுதிய கடிதங்களைப் பிரிட்டிஷ் அதிகாரிகள் உன்னிப்பாய்த் தணிக்கை செய்து வந்ததால் அவர்கள் ஏமாறட்டும் என்று, ஐயர் முன்பு லண்டனில் செய்தது போல, சில ஏமாற்றல் ஏற்பாடுகளைச் செய்தார். தாம் பிரேஸில் நாட்டில் குடியேறுவதென முடிவாகத் தீர்மானித்து விட்டதாகவும், நன்றாக உழைக்கக்கூடிய நூறு தென் இந்தியக் குடும்பங்களைத் தம்முடன் அனுப்ப ஏற்பாடு செய்யும்படியும் ஐயர் தமது தகப்பனாருக்குக் கடிதம் எழுதினார். உழைப்பாளிகளான இந்தியர்களுக்கு நல்ல வரவேற்பு இருப்பதாயும், அவர்கள் பிரேஸிலில் சுதந்தர புருஷர்களாகப் புதுவாழ்வு துவக்கலாம் என்றும், சொத்து சேர்க்கலாம் என்றும் ஐயர் எழுதினார். தாம் இந்தியாவுக்குத் திரும்புவது சாத்தியமில்லை; வந்தால் நிச்சயம் கைது செய்து ஜெயிலுக்கு அனுப்பிவிடுவார்கள். ஆகையால், இந்தியாவில் ஒரு ஜெயிலில் வாடி வதங்குவதைவிட, கண்காணாத ஒரு நாட்டில் சுதந்தரமாக வசதியுடன் வாழ்வது மேல் என்றார்.

பாரிஸை விட்டுக் கிளம்பும்போதும், தம் கைப்படப் பல கடிதங்களை எழுதி, வெவ்வேறு தேதியிட்டு, அவைகளை மதாம் காமாவிடம் கொடுத்து, பாரிஸிலிருந்து வாரா வாரம் தபாலில் போடுமாறு கேட்டுக் கொண்டார். ஐயர் இன்னும் பாரிஸில்தான் இருக்கிறார் என்று பிரிட்டிஷ் உளவாளிகள் நினைக்கச் செய்ய இந்த ஸாகஸம்.

ஐயர் நினைத்தபடியே பிரிட்டிஷ் உளவாளிகள் பாரிஸிலிருந்து பிரேஸில் துறைமுகமான ரியோ டி ஜனேரோ போகும் கப்பல்களை வெகு உஷாராய்க் கவனித்துக் கொண்டிருந்தார்கள். அவர்கள் கவனம் அப்படித் திரும்பியிருக்கையில், ஒரு நாள், பாரிஸில் மதாம் காமாவிடமிருந்து ஒரு பார்ஸி கனவான் விடைபெற்றுச் சென்றார். கையில் ஒரு சிறு பையுடன் அவர் வாடகை மோட்டார்

வண்டி வைத்துக்கொண்டு பாரிஸ் நெருக்குச் செல்லும்
னுக்குச் சென்று, அங்கே ரோமாபுரி நகருந தொழுகை ;
ஒரு ரெயிலில் ஏறினர். 'மிஸ்டர் ருஸ்தும் சேடுப்பறிபவன்
நகரில் சில தினங்கள் ஊரைச் சுற்றிப் பார்த்த.இவர் ஒரு
இத்தாலி தேசமும் அதன் தலைநகரான ரோமா..டான்.
ஐயருக்கு விசேஷமாகப் பிடித்தவை. இத்தாலியின் ப..டிங்
மொழியான லத்தீன் படித்தவர் ஐயர். பழைய இத்தாலியரி
கவிகள் விர்கில், ஹோரேஸ் முதலியோர் அவருக்கு மிகவும் பிடித்தமான கவிகள். லத்தீன் இலக்கியம் மட்டு மல்ல, ரோமானியர்களின் சட்டதிட்டங்களும் ஐயரது பாரிஸ்டர் படிப்பின்போது அவர் படித்த விஷயங்களாகும்.

அத்துடன் புராதனத் தமிழகத்துக்கும் பண்டை ரோமா புரிக்கும் இருந்த உறவுகள் அனந்தம். தமிழ் மன்னர்கள் ரோமாபுரியுடன் விரிவான வர்த்தகம் நடத்தியுள்ளனர். தமிழ்நாடும் ரோமாபுரியும் தூதர்களைக்கூடப் பரிமாறிக் கொண்டுள்ளன. தமிழகத்தின் சோழ பாண்டிய மன்னர்கள் கீழே ரோமானியப் படைவீரர்கள் சம்பளத்துக்கு உழைத் திருக்கிறார்கள்.

சமீப காலத்திலோ, இத்தாலி வீரர் காரிபால்டியும் மாஜினியும் இந்திய இளைஞர்களின் மனத்தைக் கவர்ந்துள் ளார்கள். ஐயரே அந்த தேசபக்தர்கள் சரிதங்களை வரைந்துள்ளாரே !

இவ்வளவும் போக, நித்திய நகரமெனப்பட்ட ரோமா புரியின் புராதனக் கட்டடங்களின் அழகும் கம்பீரமும் கலைச்சுவை கொண்ட ஐயரைக் கவர்ந்தன.

ரோமாபுரியில் இருந்த சமயம்தான், இந்தியாவில் முடிவாக எங்கே போவதென்று ஐயர் தீர்மானித்திருக்க வேண்டும். ரோமானிய கவி தாந்தேயின் 'டிவைன் காமெடியா' (தெய்வ நாடகம்) என்ற நூலின் பிரதி ஒன்றையும், இத்தாலிய மொழிக்கு ஆங்கிலப் பொருள் கூறும் அகராதி ஒன்றையும் வாங்கி, அவை இரண்டையும் எவ்விதக் கடிதமுமின்றிப் பாண்டிச்சேரியிலுள்ள ஒரு விலாசத்துக்கு அனுப்பினர் ஐயர். கடிதமில்லாமல், விலாசதார் கேட்காமலிருக்கும்போதே அவருக்கு இரண்டு

புத்தகங்கள், இனமாக! அனுப்பியவர் பெயர் விலாசம் இல்லாமல்!

ரோமாபுரியிலிருந்து 'ருஸ்தும் ஸேட்' கப்பலேறி, துருக்கியிலுள்ள கான்ஸ்டான்டிநோபிள் துறைமுகத்தை அடைந்தார். போகும் வழியில் ஒரு நபர், உளவாளியோ என்னவோ, அவரிடம் அளவுக்கு மீறிய சிரத்தை காட்டினன். ஐயர் தமது கணக்கு நோட்டுகளில் ஏதோ எழுதிவிட்டு, உரக்க மனக்கணக்குப் போட்டு, புரியாத ஒரு மொழியில் ஏதோ கூட்டிக் கழித்துக்கொண் டிருந்தார். உளவாளிக்குத் தலையைச் சுற்றியது, தானுக ஒதுங்கி விட்டான். தேவைப்பட்டால் எடுத்து நீட்ட, உருது எழுத்தில் அச்சிட்ட 'ருஸ்தும் ஸேட்' கார்டு பையில் தயாராகவே இருந்தது. ஆனல் அதை எடுத்துக் கொடுக்க வேண்டிய அவசியமே ஏற்படவில்லை.

கான்ஸ்டான்டிநோபிளிலிருந்து கப்பலில் எகிப்தியத் துறைமுகம் போர்ட் ஸயீதை அடைந்த 'ருஸ்தும் ஸேட்' உடனே எகிப்தின் தலைநகரம் கெய்ரோவுக்குப் போய்ச் சேர்ந்தார். அங்கே நகரின் பழைய பகுதியில் தமது நண்பர் ஒருவரது இல்லத்தில் 'ருஸ்தும் ஸேட்' மறைந்து போனர். அதற்குப் பதிலாக, ஹஜ் யாத்திரை முடித்துக்கொண்டு நாடு திரும்பும் முஸ்லிம் பக்கிரி ஒருவர் தோன்றினர். நண்பருடன் நான்கு தினங்கள் தங்கி, சில தினங்கள் ஊரைச் சுற்றிப் பார்ப்பதில் கழித்தார். அத்துடன், பாரஸீக எழுத்தில் துருக்கிப் பெயர் அச்சடித்த 'விஸிட்டிங் கார்டு' ஒன்றையும் தயாரித்துக் கொண்டார் ஐயர்.

ஹஜ் யாத்திரை முடிந்து திரும்பும் யாத்திரிகர்கள் நிறையப் பேர் இருந்த ஒரு கப்பலில் நமது முஸ்லிம் பக்கிரியும் ஏறினர். அவர் ஓயாமல் திருக்குரான் ஓதினர். நாளும் ஐந்து வேளை தொழுகை செய்தார். சில்லறைப் பேச்சைத் தவிர்த்தார். எல்லாரிடமும் பக்திமானென மிகுந்த மரியாதை பெற்ருர்.

பம்பாயில் ஒரு முஸ்லிம் நண்பர் நமது பக்கிரியைச் சந்தித்து, அவரை அழைத்துச் சென்ருர். சில தினங்கள்

கழித்து அதே 'பக்கிரி' கொழும்பு நகருக்குச் செல்லும் கப்பல் ஒன்றில் ஏறினர்; மீண்டும் ஓயாத தொழுகை; திருக்குரான் ஓதல். கொழும்பு நகரில் ஒரு துப்பறிபவன் அவரைத் தொடர்ந்தான். ஆனால் விரைவில், இவர் ஒரு மதப்பித்துப் பிடித்த ஆசாமி என்று கைவிட்டுவிட்டான். ஐயர் அப்போது கையாள வைத்திருந்த 'விஸிட்டிங் கார்டு' அவர் கல்கத்தாவில் ஒரு பெரிய வியாபாரி என்று காட்டியது.

கல்கத்தா போகும் வழியில் கப்பல் கடலூருக்கு அருகே நின்றது. ஐயர் கப்பலிலிருந்து இறங்கினர். படகில் கடலூர் சென்றர். அதிகாரிகளுக்குக் 'கடுக்காய் கொடுத்துவிட்டு', ஒரு ஜட்காவில் பாண்டிச்சேரிக்குப் போனர். அவர் இன்னும் முஸ்லிம் உடையில் குல்லாய் அணிந்து காட்சியளித்தார்.

பாண்டிச்சேரியில், ஐயர் 'இந்தியா' பத்திரிகை சொந்தக் காரராயிருந்த மண்டயம் ஸ்ரீநிவாசாச்சாரியார் வீட்டை அடைந்தார். ஐயர் அங்கே போனபோது கவிபாரதியும் ஸ்ரீநிவாசாச்சாரியாரும் மாடியில் பேசிக்கொண் டிருந்தார்கள். ஸ்ரீநிவாசாச்சாரியாரின் பெண் வாசற் கதவைத் திறந்தாள். வந்தவரை விசாரித்துவிட்டு, மாடியில் உள்ளவர்களுக்குக் குரல் கொடுத்தாள்: "அப்பா, உங்களைப் பார்க்க யாரோ சாயபு வந்திருக்கிறர்!" என்று. தாம் எந்த முஸ்லிம் நண்பரையும் எதிர்பார்க்கவில்லையே; யார் வந்திருக்கக் கூடும் என்று யோசனை செய்துகொண்டே ஸ்ரீநிவாசாச்சாரியார் கீழே இறங்கி வந்தார்.

அவரைக் கண்டதும் முஸ்லிம் வேடத்திலிருந்த ஐயர் "தாந்தேயின் 'தெய்வ நாடகம்' நூலும் அகராதியும் வந்து சேர்ந்தனவா?" என்று கேட்டார்.

நொடியில் ஸ்ரீநிவாசாச்சாரியாருக்கு எல்லாம் விளங்கி விட்டது. வந்தவர் வ. வே. ஸு. ஐயர்! புத்தகப் பார்சல் மீது இருந்த கையெழுத்து இப்போது புரிந்தது. ஐயர் ரோமாபுரியிலிருந்து அதை அனுப்பியிருக்கிறர். லண்டனிலிருந்து பாண்டிச்சேரிக்கு, ஆறயிரம் மைல்களும் பிரிட்டிஷ் உளவாளிகள் கண்ணில் மண்ணைத் தூவி

விட்டுப் பத்திரமாக வந்து சேர்ந்துவிட்டார் தீரர் வ.வே. ஸு. ஐயர்!

ஒன்றுமே பேசாமல், ஸ்ரீநிவாசாச்சாரியார் ஐயரை மாடிக்குக் கூட்டிச்சென்று பாரதியாருக்கு அறிமுகம் செய்து வைத்தார். ஐயரை அவர்கள் இருவரும் பார்ப்பது அதுவே முதல் தடவை, இதுவரை தபால்மூலம், 'இந்தியா' பத்திரிகையின் 'லண்டன் நிருபர்' என்ற முறையி லேயே அவர்கள் அவரை அறிந்திருந்தார்கள்.

தாம் லண்டனிலிருந்து தப்பிவந்த பெருங்கதையை ஐயர் சுருக்கமாகச் சொன்னார். அவர் தங்குவதற்குப் பாண்டிச்சேரியே சிறந்த ஊர் என்று பாரதியும் ஸ்ரீநிவாசாச்சாரியும் ஒப்புக்கொண்டார்கள். பாதுகாப்பை முன்னிட்டு, ஐயர் வந்துள்ள செய்தியை ரகசியமாகவே வைத்திருப்பதாகத் தீர்மானித்தார்கள்.

ஐயரது வீரம் செறிந்த வாழ்வில் ஒரு புதிய அத்தியாயம் துவங்கியது.

# 9. பாண்டிச்சேரி - 1910

வ. வே. ஸு. ஐயர் 1910 அக்டோபரில் பாண்டிச் சேரிக்குப் போய்ச் சேர்ந்தார். அப்போது அது ஃபிரெஞ்சு ஆட்சிக்குட்பட்ட பிரதேசமாக இருந்தது; ஃபிரெஞ் சிந்தியாவின் தலைநகராக விளங்கியது. பாண்டிச்சேரியும், தஞ்சாவூர் மாவட்டத்திலுள்ள காரைக்காலும், கேரளத்தி லுள்ள மாஹியும், ஆந்திரத்திலுள்ள ஏனமும், வங்கா ளத்தில் உள்ள சந்திரநாகூரும் ஃபிரெஞ்சிந்தியாவில் அடங்கியிருந்தன. அனைத்தும் கடலோர ஊர்கள். இந்தியாவில் ஓர் ஏகாதிபத்திய சாம்ராஜ்யம் அமைக்க ஃபிரெஞ்சுக்காரர் செய்த முயற்சியின் எஞ்சிய சுவடுகள்.

பாண்டிச்சேரி 'டூப்ளேயின் நகரம்' என்று புகழ் வாய்ந்தது. பதினெட்டாம் நூற்றாண்டில் பாண்டிச்சேரி யின் கவர்னராக இருந்த டூப்ளே திறமைசாலி. தென் இந்தியாவில் ஃபிரெஞ்சு சாம்ராஜ்யம் அமைக்க அவருக் கும் பிரிட்டிஷாருக்கும் கடும் போட்டி நடந்தது. பாண்டிச் சேரியின் கிழக்குத் திசையில் வங்காள விரிகுடா; மற்ற முத்திசைகளிலும் பிரிட்டிஷ் இந்தியா – தென் ஆற்காடு மாவட்டம் இருந்தது. மேலும், ஃபிரெஞ்சிந்தியப் பிரதேசங்கள் பல திட்டுத் திட்டாக, பிரிட்டிஷ் இந்தியப் பிரதேசங்கள் நடுவில் இருந்தன. ஃபிரெஞ்சுப் பிரதேசத்தி லிருந்து நாலெட்டு நடந்தால் பிரிட்டிஷ் பிரதேசம். மேலும் நாலெட்டுச் சென்றால் ஃபிரெஞ்சுப் பிரதேசம். இப்படி எல்லை பின்னிக் கிடந்ததால் போலீஸ் காவல் எளிதாக இருக்கவில்லை; கள்ளக் கடத்தல்காரர்களுக்கு இந்த எல்லை தேவலோகமாக விளங்கியது.

ஃபிரெஞ்சிந்தியாவின் ஆட்சி ஃபிரெஞ்சு கவர்னர் ஒருவ ரிடம் இருந்தது. அவருக்கு ஆலோசனை சொல்ல ஃபிரெஞ் சிந்தியச் சட்டசபை இருந்தது. ஃபிரெஞ்சிந்தியா சார்பில் ஃபிரான்ஸில் ஃபிரெஞ்சுப் பார்லிமென்டில் பிரதிநிதி –

'டெபுடே' ஒருவரைத் தேர்ந்தெடுக்கும் உரிமை ஃபிரெஞ்சிந்திய மக்களுக்கு இருந்தது. இதற்கும் மற்ற சட்டசபை முதலியவைகளுக்கும் தேர்தல் நடக்கும்போது பாண்டிச்சேரி அமளி துமளிப்படும். காலிகள் கும்பல் கும்பலாக அலைவார்கள்; வெவ்வேறு கட்சிகளுக்கு வெவ்வேறு காலிப் படைப் பட்டாளம் உண்டு. இவை நன்றாகக் குடித்துவிட்டு, சோடா புட்டி ஆயுதத்துடன் அட்டகாசம் செய்யும்போது, ஊரில் சட்டம், அமைதி எல்லாவற்றிற்கும் விடுமுறைதான்! இவர்கள் எதிர்க்கட்சி ஆட்களின் வீடுகளை முற்றுகையிட்டு அடிதடி செய்வதும் சகஜம்!

ஆனால் ஃபிரெஞ்சிந்திய அரசும் சரி, மக்களும் சரி, தங்கள் அந்தஸ்தைப் பற்றிப் பெருமைப்படுவார்கள். முக்கியமாக அண்டையிலுள்ள பிரிட்டிஷ் இந்தியாவுடன் ஒப்பிட்டுத் தங்கள் உயர்வைச் சொல்லி மகிழ்வார்கள். பிரிட்டிஷ் இந்தியாவில் உள்ள இந்தியர்கள் தங்களை ஆளும் பிரிட்டிஷ் பார்லிமெண்டுக்குத் தங்கள் பிரதிநிதிகளாக யாரையும் தேர்ந்தெடுக்கும் அடிப்படை உரிமையற்ற அடிமைகள் ('Subjects'); ஃபிரெஞ்சிந்திய மக்கள் அப்படியல்ல; அவர்கள் ஃபிரெஞ்சுப் பார்லிமெண்டுக்குத் தங்கள் பிரதிநிதியைத் தேர்ந்தெடுக்கும் உரிமை படைத்த பிரஜைகள் ('Citizens') என்று ஃபிரெஞ்சிந்திய மக்கள் பெருமை கொள்வார்கள். ஆயினும் இந்தப் பிரஜா உரிமையெல்லாம் காலிகள் செயலால் மிகவும் கட்டுப்பட்டு ஒடுங்கிப் போவது சகஜமாக இருந்தது.

தேர்தல் கால அமளி தவிர மற்றக் காலமெல்லாம் பாண்டிசேரியில் வாழ்க்கை அமைதியாக, கவலையற்றதாக, மலிவாக இருந்தது. கள்ளும் மதுபானங்களும் மலிவாகக் கிடைத்தன; கலகலப்புக்குக் குறைவில்லை. உணவுப் பொருள்கள் மட்டிலும் பாண்டிச்சேரி தனக்குத் தேவையானவற்றைத் தானே உற்பத்தி செய்து கொண்டது. பிற பொருள்களுக்கு இறக்குமதியை நம்பியிருந்தது. கடல் மூலம் அந்நிய நாடுகளிலிருந்தோ, தரை மூலம் இந்தியாவிலிருந்தோ அவை வந்தாக வேண்டும். கொழும்புவிலிருந்து கல்கத்தா செல்லும் சில

கப்பல்கள் பாண்டிச்சேரிக்கு வந்து போயின. கடலில் சில மைல் தள்ளி நிற்கும் கப்பல்களிலிருந்து பயணி களையும் சரி, சரக்குகளையும் சரி, படகுகளில் இறக்கிக் கரை சேர்க்க வேண்டும். சாமான்கள், பயணிகள் புறப் பாடும் அப்படியே. இறக்குமதியில் முக்கியப் பொருள்கள் அந்நிய மதுபானங்களும் உயர்தரப் பட்டு ஜவுளி வகைகளுமே. தென் ஆற்காடு மாவட்டத்தில் பிரசித்தமான 'மல்லாக் கொட்டை' (மணிலாக் கொட்டை; அதாவது, நிலக்கடலை) பாண்டிச்சேரியிலும் பிரசித்தம். தென் ஆற்காடு மாவட்டத்திலும், பாண்டிச்சேரியிலும் விளைந்த 'மல்லாக் கொட்டை' டன் டன்னுகைப் பாண்டிச் சேரி வழியாக ஏற்றுமதியாயிற்று, முக்கியமாகப் பாரிஸ் நகருக்கு.

புதுச்சேரிக்குப் போகிற ரெயிலும் சரி, அந்தப் பிரதே சத்தின் தபால் ஆபீஸ்களும் சரி, அதிசயமாக, பிரிட்டிஷார் கையில் இருந்தன. இது அவர்களுக்கு மிக வசதியாக இருந்தது. பாண்டிச்சேரி மக்களோ அல்லது அங்கே அடைக்கலம் புகுந்த பிரிட்டிஷ் இந்தியத் தலைவர்களோ பிரிட்டிஷாருக்கு விரோதமாக ஏதேனும் செய்தால் அதைத் தடுக்க இவ்விரு வசதிகளும் உபயோகமா யிருந்தன.

1910 என்பது, முதல் மகாயுத்தம் ஆரம்பிப்பதற்கு நான்கு வருஷம் முந்திய காலம். அப்போது, பாரிஸில் இருந்த ஃபிரெஞ்சு அரசாங்கம், ஜெர்மனியின் கெய்ஸர் வில்லியம் அரசரது ஆக்கிரமிப்புக் கோபாவேசத்தைக் கண்டு நடுங்கி, பிரிட்டிஷ் ஆதரவுக்கு ஏங்கியது. ஃபிரெஞ்சிந்திய அரசைப் பற்றிக் கேட்க வேண்டுமா? அதன் பாதுகாப்பே பிரிட்டிஷ் தயவைப் பொறுத்ததல்லவா? அப்படி யிருந்தும், ஃபிரெஞ்சிந்தியா கவர்னர்கள் சுயேச்சையாக நடந்துகொண்டார்கள். அது அவர்களுடைய பெருமை!

அதுவரை, கடன்பட்டவர்கள் தலைமறைவாக வாழப் பயன்பட்ட புதுச்சேரியை அரசியல் அஞ்ஞாதவாசத்துக்கு முதன்முதலாக உபயோகித்த பெருமை 'இந்தியா' என்ற தீவிர தேசீயப் பத்திரிகையின் ஆசிரியர் கவியரசர் சுப்பிர

மணிய பாரதியாரைச் சாரும். 1908–இல், சென்னையில் இருந்த தம்மைக் கைதுசெய்ய வாரன்ட் வரக்கூடுமென்று அறிந்த பாரதி, பாண்டிச்சேரிக்குப் போய்விட்டார். அங்கே 1908 ஆகஸ்ட் முதலாக வாழ்ந்தார் அவர். சின்னாட்களின் 'இந்தியா' சென்னையிலிருந்து புதுச்சேரிக்கு வந்துவிட்டது. புதுச்சேரியின் பாதுகாப்பில் இருந்து கொண்டு, பிரிட்டிஷ் இந்திய ஆட்சியை மீண்டும் வன்மையாகக் கண்டித்தது 'இந்தியா'.

'விஜயா' என்ற நாளிதழும், 'பாலபாரதா' என்ற ஆங்கில மாதப் பத்திரிகையும்கூடச் சென்னையிலிருந்து புதுவைக்கு மாறின. இவையும் பாரதியாருடன் தொடர்பு கொண்டவையே. இவை தவிர, பாரதியார் புதுவையில் 'கர்மயோகி' என்ற உயர்தர மாதப் பத்திரிகை துவக்கினர். பிரிட்டிஷ் இந்தியாவிலிருந்து வந்தவர்களால் நடத்தப்பட்ட இப்பத்திரிகைகள் தவிர, 'சூர்யோதயம்' என்ற உள்ளூர் வாரப் பத்திரிகையும் பிரிட்டிஷாருக்கு விரோதமாய் எழுதலாயிற்று. நீலகண்ட பிரம்மசாரி என்ற புரட்சியாளரை ஆசிரியராகக் கொண்டு நடந்தது 'சூர்யோதயம்'.

இத்தனை பத்திரிகைகளும் பிரிட்டிஷ் இந்தியாவில் உள்ள வாசகர்கள், விளம்பரதாரர்களை நம்பி வாழ்ந்தன. இப்பத்திரிகைகளின் வியாபாரம் தபால் மூலம் நடக்க வேண்டியிருந்தது. தபால் இலாகா பிரிட்டிஷார் வசம் இருந்ததால், தபால்களையும் மணியார்டர்களையும் தடுத்துத் திருப்பியனுப்பிவிட முடிந்தது. இதெல்லாம் போதாதென்றது போல, 1910–ஆம் ஆண்டுத் துவக்கத்தில், 'இந்தியா', 'விஜயா', 'சூர்யோதயம்' ஆகிய பத்திரிகைகள் பாண்டிச்சேரியிலிருந்து பிரிட்டிஷ் இந்தியாவுக்குள் நுழையக் கூடாதென்று தடை விதித்தது சென்னை அரசாங்கம். தபாலில் வந்த இந்தப் பத்திரிகைப் பிரதிகள் கட்டுக் கட்டாகச் சென்னைப் போலீஸ் கமிஷனர் அலுவலகத்துக்கு அனுப்பப்பட்டு அழிக்கப்பட்டன. இதனால் 1910 மார்ச்சில் 'இந்தியா' நின்றது. பாரதியார் புதுச்சேரியில் தொடர்ந்து இருந்து வந்தார்.

இந்தச் சமயத்தில்தான், பிரபல வங்காளி – தேசீயத் தலைவர் பாபு அரவிந்த கோஷ் அலிப்பூர் வழக்கில் விடுதலையாகி, அரசியலைத் துறந்து, அமைதியாக யோக சாதனை புரியப் பாண்டிச்சேரி வருவதெனத் தீர்மானித்தார். 'இந்தியா' பத்திரிகைச் சொந்தக்காரர் ஸ்ரீநிவாசாச்சாரி யாருடன் தொடர்பு கொண்டார் அரவிந்தர். அவர் ரகசியமாகப் புதுவை வந்தார். அவர், பாண்டிச்சேரியின் பெரிய வர்த்தகர்களில் ஒருவரான கலவை சங்கர செட்டியாரின் வீட்டு மாடியில் தங்கப் பாரதியாரும் ஸ்ரீநிவாசாச்சாரியும் ஏற்பாடு செய்தார்கள். இது 1910 ஏப்ரலில் நடந்தது.

பாண்டிச்சேரியிலிருந்த இந்திய தேசபக்தர்களுக்குச் 'சுதேசிகள்' என்ற பொதுப் பெயர் இருந்தது. 1910 அக்டோபர் மாதம் ஐயர் பாண்டிச்சேரிக்கு வந்தபோது, பாண்டிச்சேரியில் இருந்த 'சுதேசி'களில் பாரதி, ஸ்ரீநிவாசாச்சாரி, பாபு அரவிந்த கோஷ், அவரது வங்கச் சீடர்கள் சிலர், நீலகண்ட பிரம்மசாரி, ஹரிஹர சர்மா, என். நாகசாமி, வ. ராமசாமி, பரலி சு. நெல்லையப்ப பிள்ளை முதலியவர்கள் இருந்தனர். இவர்களில் அரவிந்தரே வயதில் மூத்தவர்; 38 வயது. ஸ்ரீநிவாசாச்சாரிக்கு 30 வயது ; ஐயருக்கு வயது 29; பாரதிக்கு வயது 28 ; நீலகண்ட பிரம்மசாரிக்கு வயது 21; மற்றவர்கள் இன்னும் இளையவர்கள்.

பாரதி பாண்டிச்சேரி வந்து இரண்டு வருஷத்துக்கு மேலாயிற்று ; ஸ்ரீநிவாசாச்சாரியார் வந்து கிட்டத்தட்ட அதே காலமாகியிருந்தது; மற்றத் தமிழர்கள் வந்து ஒரு வருஷத்துக்கு மேல் ஆயிற்று; அரவிந்தரும் அவரது வங்கச் சீடர்களும் வந்து ஆறுமாத காலமாகியிருந்தது.

இவர்கள் மீது வாரன்ட் இருந்ததோ இல்லையோ, எல்லாரும் சந்தேகப் பட்டியலில் இருந்தார்கள்; அவர்களைப் பிரிட்டிஷ் போலீஸின் உளவாளிகள் ஓயாமல் தொடர்ந்து கண்காணித்தார்கள்.

இவர்களுடைய அரசியல் கொள்கைகள் என்ன? பாரதிக்கு வெடிகுண்டு மார்க்கத்தில் நம்பிக்கை இல்லை; வெறுப்பு. சட்டபூர்வமான முயற்சிகளில் பரிபூர்ண

நம்பிக்கை கொண்டவர் அவர். அரவிந்தர் அரசியலைத் துறந்துவிட்டவர். ஸ்ரீநிவாசாச்சாரியாருக்கு அரசியல் கொலைகள் உட்படப் பலாத்கார முயற்சிகளில் வலுவான நம்பிக்கை இருந்தது. நீலகண்ட பிரம்மசாரிக்கோ படை திரட்டிப் புரட்சி செய்வதில் மட்டும் நம்பிக்கை இருந்தது. தனிநபர் கொலைகளை அவர் ஆதரிக்கவில்லை. இவர்கள் நடுவே தீரமிக்க புரட்சியாளர் என்ற புகழுடன் வந்து சேர்ந்தார் ஐயர். ஐயருக்கு வெடிகுண்டு, கைத்துப்பாக்கி, தனிநபர் அரசியல் கொலை எல்லாம் சம்மதமே.

அண்டை மாகாணமான சென்னை ராஜதானியில் அச் சமயம் காங்கிரஸ் கட்சியானது மிதவாதிகள் கையில் இருந்தது. சென்னைத் தலைவர்களில் ஜி. சுப்பிரமணிய ஐயர் ஒருவரே திலகர் கட்சியில் தீவிர வாதத்தை ஆதரித்தார். 'சுதேசமித்திரன்' ஆசிரியரான ஜி. சுப்பிர மணிய ஐயரைக்கூட, 1908–இல் அவர் எழுதிய சில தலையங்கங்களுக்காகக் கைதுசெய்து சிறையில் அடைத் தார்கள். உடல் நலமின்றி, கண்பார்வை குன்றி வந்த சுப்பிரமணிய ஐயர் அரசாங்கத்துக்குச் சில உறுதி மொழிகள் கொடுத்து வெளியே வரவேண்டியதாயிற்று. வெளியே வந்த ஜி. சுப்பிரமணிய ஐயர் கண்பார்வை மங்கிப் போயும்கூட, தமது பத்திரிகையைச் சிறப்பாக நடத்தி வந்தார்.

சென்னையில் அச்சமயம் இருந்த ஆங்கில நாளிதழ் களில், 'ஹிந்து' பத்திரிகையை அதன் ஆசிரியரும் சொந்தக்காரருமான எஸ். கஸ்தூரிரங்க ஐயங்கார் மிக நன்றாக நடத்தி வந்தார். அவர் துணிவுடன் சுயேச்சை யாகக் கருத்துத் தெரிவித்து வந்தார். 'பேட்ரியட்' என்ற ஆங்கில நாளிதழ் கருணாகர மேனனை ஆசிரிய ராகக் கொண்டு வெளிவந்தது. இது மிதவாதமான பத்திரிகை. 'மதராஸ் ஸ்டாண்டர்டு' என்ற நாளிதழ் சிரம தசையில் இருந்தது. இந்தியர்களால் நடத்தப்பட்ட இந்தப் பததிரிகைகள் தவிர, 'மதராஸ் டைம்ஸ்', 'மதராஸ் மெயில்' என்ற இரு வெள்ளையர் தினசரிப் பத்திரிகைகளும் இருந்தன.

பாண்டிச்சேரிக்குத் தாம் வந்த சிறிது காலத்துக்குப் பின், வி.வி.எஸ். ஐயர் மூன்று பேருக்குக் கடிதங்கள் எழுதினுர். முதல் கடிதம் சென்னை அரசாங்கத்துக்கு, தாம் பாண்டிச்சேரியில் இருப்பதைத் தெரிவித்தது ; இரண்டாவது கடிதம் தமது தகப்பனுர் வேங்கடேச ஐயருக்கு, தாம் பாண்டிச்சேரியில் பத்திரமாக இருப்பதைத் தெரிவித்து; மூன்ருவது கடிதம் தமது மனைவி பாக்கிய லட்சுமி அம்மாளுக்கு, தாம் பாண்டிச்சேரியில் இருப்பதைத் தெரிவித்து, பாண்டிச்சேரிக்கு வரச் சொல்லி, தாற்காலிகமாகப பாண்டிச்சேரியில் தங்க முடிவு செய்திருப்பதாக ஐயர் எழுதினுர். ஆனல். அவர் அடுத்த பத்து வருஷமும் அங்கேதான் இருந்தார்.

ஐயர் இங்கிலாந்தில் இருந்த சமயம், அவருடைய குடும்பத்தில் பல மாறுதல்கள் நேர்ந்திருந்தன. 1909-இல் கர்ஸான்-வில்லி கொலைக்குப்பின் அவரும் அந்தமானுக்கோ தூக்குமேடைக்கோ அனுப்பப்படுவார் என்ற பயம் இருந்தது. "இப்படியும் ஒரு பிள்ளையைப் பெற்ருயே" என்று ஐயரின் தாயாரைச் சில உறவினர்கள் குறை கண்டார்கள். ஏற்கனவே தனது மகனுடைய பிரிவினுல் மனம் நொந்து தவித்த அந்த அம்மாள், இந்தக் கடும் சொல்லையும் கொடுமைகளையும் பொறுக்க முடியாமல் ஓரிரவு வரகனேரிக்குத் தெற்கே இருந்த குளத்தில் விழுந்து உயிர்த் துறந்துவிட்டாள்.

தமது தாயார் காலமான செய்தி ஐயருக்குக் கிடைத்தது. தேம்ஸ் நதிக் கரையில் அவர் தமது தாயாருக்கு உத்தரக் கிரியைகள் செய்தார். மற்றப்படி மனத்தைத் திடம் செய்துகொண்டு, தமது புரட்சி நடவடிக்கைகளில் தொடர்ந்து ஈடுபட்டு வந்தார்.

ஐயருடைய தகப்பனுர், தமது மகன் பாரிஸ்டராகத் திரும்புவான் என்று எதிர் பார்த்தவர், மனமுடைந்து போனுர். அவனுடைய கடிதங்கள் அவருக்குக் கலக்கம் விளைவித்தன. கையில் நான்கு வயதுப் பெண் குழந்தையுடன் இருந்த பாக்கியலட்சுமி அம்மாள், ஐயரின் மனைவி தம் கணவர் என்று பாரிஸ்டர் பட்டத்துடன் திரும்புவார்,

என்று கை நிறையச் சம்பாதிப்பார் என்று காத்திருந்தார். நான்கு வயதுச் சிறுமியும்கூடத் தனது 'சீமை அப்பா' நிறையப் பொம்மைகளுடன் வருவார் என்று அந்த நன்னுளை எதிர்பார்த்துக்கொண் டிருந்தாள். ஐயருடைய வாழ்வில் பெரும் மாற்றங்கள் நேர்ந்துள்ளதை அவரது மனைவிக்கு வந்த கடிதங்கள் காட்டின. ஜான்ஸிராணி போலத் துணிச்சலுடன் இரு என்று அவரது மனைவிக்குக் கடிதம் எழுதினார் ஐயர். நல்லதோ பொல்லாததோ தமது கணவருடன் எல்லாவற்றிலும் தாமும் பங்கு கொள்ளுமாறு தம்மைக் கணவருடன் சீக்கிரம் சேர்க்க வேண்டுமென எல்லா தெய்வங்களையும் வேண்டிக்கொண் டார் பாக்கியலட்சுமி அம்மாள்.

தமது பெண் குழந்தை மழலை மொழிகிறுள் என்று கடிதம் வந்தபோது, ஐயர் குழந்தைக்கே கடிதம் எழுதினார். "பிரியமுள்ள பட்டு, தினந்தோறும் காலையில் எழுந்தவுடன் 'வந்தே மாதரம்' என்று சொல்லு; பாரதத் தாயின் முன் வணங்கி எழு" என்று தமது குழந்தைக்கு உபதேசித்தார். குழந்தையோ, காலையில் மட்டுமின்றி நாள் முழுவதும், 'வந்தே மாதரம்' என்று சொல்லிக் கொணடே யிருந்தது. இது அதனுடைய பாட்டனுருக்குப் பெருங் கவலையை உண்டாக்கியது. "வந்தே மாதரம்" என்று கோஷமிட்டாலே போதும், சிறைவாசம் கிடைத்து வந்த காலம் அது. வ. உ. சிதம்பரம் பிள்ளையும் சுப்பிரமணிய சிவாவும், "வந்தே மாதரம்" என்று கோஷமிட்டுப் பாடுபட்டது யாவரும் அறிந்ததே.

இது போதாதென்று, அவருடைய வீட்டைப் போலீஸ் உளவாளிகள் கண்காணிக்க ஆரம்பித்தார்கள், ஐயரைப் பற்றிய தகவல் ஏதேனும் கிடைக்காதா என்று. வயது முதிர்ந்தவரான வேங்கடேச ஐயர், தமது மூத்த மகனுக்கு லண்டன் போய் முன்னேற வேண்டும் என்ற ஆசை தோன்றிய நாளைச் சபித்தார். அவர் இவ்வாறு மனம் மாறிக்கொண் டிருக்கையில், ஐயரின் பெண்குழந்தை அவர் காதில் படும்படி, "வந்தே மாதரம்" என்று சொல்லி விட்டால் அவருக்குக் கவலை வந்துவிடும். "அந்த

வார்த்தை சொல்லாதே, அம்மா. அதைச் சொன்னால் போலீஸ்காரன் உன்னைப் பிடித்துக்கொண்டு போய் விடுவான்!'' என்பார் அவர். குழந்தை பயப்படாது; திரும்பத் திரும்பச் சொல்லும். "தகப்பனைப் போலப் பெண்!'' என்று பாட்டனார் முணுமுணுப்பார்.

தமது மகனுடைய செய்கைகள் இன்னும் என்னென்ன துயரங்களை விளைவிக்குமோ என்ற கவலை வேங்கடேச ஐயரை விடாமல் வாட்டியது. பையன் தவறுக்காக அரசாங்கத்தார் குடும்பச் சொத்துக்களையெல்லாம் பறிமுதல் செய்துவிட்டால் என்ன செய்வது? இப்படி ஒரு கவலை அவரைத் தூங்கவிடாமற் செய்தது. ஐயர் மீது அவர் குறைப்பட்டது போலவே, அவரது மனைவிமீதும் வருத்தப்பட்டார். அந்த அம்மாள் அவ்வீட்டில் இருப்பது மிகச் சிரமமாக இருந்தது. தமது ஒன்றுவிட்ட சகோதரர் ரங்கூன் பசுபதி ஐயரின் உதவியை நாடி, அவருடன் பெங்களூரில் சிறிது காலம் வாழச் சென்றார் பாக்கிய லட்சுமி அம்மாள்.

பசுபதி ஐயர் லௌகிக மனிதர். லண்டன் பங்கு மார்க்கெட்டில் பணம் செய்யலாம்; ஐயர் பாரிஸ்டராகித் திரும்பி வந்து நன்றாகச் சம்பாதிப்பார் என்றெல்லாம் கனவு கண்ட பசுபதி ஐயருக்கும் ஐயரின் தேசீய நடவடிக்கைகள் பிடிக்கவில்லை. பட்டம் பெற்றதும் ஐயர் மாறிப் போவார் என்று பசுபதி ஐயர் நினைத்தார். பாரிஸ்டர் பட்டத்தை ஏற்பதில்லை என்று ஐயர் அறிவித்தது அவருக்குப் பெரிய அதிர்ச்சியாக இருந்தது. மதன்லால் திங்க்ரா சம்பவமும், அதைத் தொடர்ந்து ஐயருக்கு நேர்ந்த சிரமங்களும் பசுபதி ஐயரின் ஏமாற்றத்தை மேலும் அதிகரித்தன.

உலக அனுபவம் மிக்க பசுபதி ஐயர், தமது வீட்டில் ஐயரின் மனைவி வந்திருப்பதை வெளியே காட்டிக் கொள்ளாமல் ரகசியமாகவே வைத்திருந்தார். இந்த நிலையில் ஐயருடைய குழந்தைக்குச் சீதபேதி கண்டது. டாக்டரை அழைத்தால் ஐயர் மனைவி அங்கே இருப்பது தெரிந்துவிடுமே என்று டாக்டரை அழைக்

காமலே தாமதித்தார்கள், குழந்தைக்கு நோய் அதிகரித்தது; அது ஜன்னி கண்டு இறந்து போயிற்று.

குழந்தை காலமான செய்தியை ஐயருக்குத் தெரிவித்தார்கள். ஆனால், அவர் தரப்பிலிருந்து வந்த கடிதங்கள் அவர்களுக்கு ஆறுதல் தருவதற்குப் பதில் அவர்கள் கவலையை அதிகரித்தன. ஒரு கடிதம் சொல்லும்: "நான் இனிமேல் இந்தியாவுக்கு வருவதற்கில்லை. என்னைப் பார்க்கலாமென்று எதிர்பார்க்க வேண்டாம்!" என்று. இன்னொரு கடிதம், "எதிர்காலம் எப்படி இருக்குமோ தெரியவில்லை" என்று கூறும். மூன்றாவது கடிதம், "நான் பாரிஸிலேயே தங்கிவிடத் தீர்மானித்துவிட்டேன்" என்று சொல்லும். நாலாவது கடிதம், இதை மீண்டும் சொல்லி, தம்முடன் பாரிஸில் வாழ்வதற்குப் பாரிஸ் வருமாறு பாக்கியலட்சுமி அம்மாளுக்கு உத்தரவிடும்.

பாக்கியலட்சுமி அம்மாள் பாரிஸுக்குப் போகத் தயாராகத்தான் இருந்தார். பணத்துக்குப் பசுபதி ஐயரின் உதவியை நாடினார். அவரோ பணம் தருவது மட்டுமல்ல, தாமும் பாரிஸ் பார்க்க விரும்புவதால் தாமும் வருவதாகச் சொன்னார். அவர்கள் பாரிஸ் போவதற்கான ஏற்பாடுகள் நடந்தன. ஆனால் விதி வேறு விதமாக இருந்தது. பசுபதி ஐயர் குதிரைச் சவாரி செய்வார். ஒரு நாள் கீழே விழுந்து கணுக்காலைச் சுளுக்கிக் கொண்டுவிட்டார். பாரிஸ் பயணம் காலவரையறையின்றி ஒத்திப் போடப்பட்டது.

விரைவில் பாரிஸ் வா என்று ஐயர் எழுதிக் கொண்டிருந்தார். வாரங்கள் பல ஓடிச் சென்றன. பசுபதி ஐயர் தேறவில்லை. இதற்குள் ஐயரின் கடிதங்களது தொனி மாறலாயிற்று. இந்தியாவுக்குத் திரும்பப் போவதுமில்லை, பாரிஸில் வாழப் போவதுமில்லை; தென் அமெரிக்காவில் உள்ள பிரேஸில் நாட்டில் குடியேறிவிடப் போகிறேன் என்று கடிதங்கள் சொல்லின. தம்முடன் பிரேஸிலில் வாழ நல்ல உழைப்பாளிகளான தமிழ்க் குடும்பங்கள் பலவற்றை அனுப்பும்படி தமது உறவினர் பசுபதி ஐயரையும், தமது மாமனாரையும் வற்புறுத்துமாறும் கடிதங்கள் கேட்டுக் கொண்டன.

இந்தப் புதிய ஏற்பாட்டுக்குக் காரணம் என்ன? அறிந்த நாகரிகமான ஐரோப்பாவை விட்டு, பாரிஸை விட்டு முன்பின் தெரியாத தொலைதூரத்திலுள்ள ஒரு நாட்டுக்கு எதிர்காலம் புரியாதபடி போவானேன்? மனைவியும் உறவினர்களும் குழம்பிக் கிடந்தார்கள்.

இந்தக் குழப்பமும் கவலையும் போதா என்று, மதாம் காமாவிடமிருந்து ஐயரின் மனைவிக்கு ஒரு மூடுமந்திர மான கடிதம் வந்தது. "உன்னுடைய கணவரைத் தொலை தூரத்திலுள்ள ஓர் ஊருக்கு அனுப்பியிருக்கிறேன். எந்த ஊர் என்று கேட்காதே. பொறுத்திரு" என்று சொல்லியது அக்கடிதம்.

இவ்வாறு முடிவில்லாத குழப்பங்கள் நடுவே தமது கணவர் பத்திரமாக இருக்க வேண்டுமென்று ஓயாமல் எல்லா தெய்வங்களையும் பாக்கியலட்சுமி அம்மாள் வேண்டிக்கொண் டிருந்தார். இந்தச் சமயம் வந்தது இன்னொரு கடிதம் - பாண்டிச்சேரியிலிருந்து. பாக்கியலட்சுமி அம்மாள் அடைந்த மகிழ்ச்சிக்கு அளவே இல்லை. பசுபதி ஐயரும் மகிழ்ந்தார். எப்படியோ ஐயர் பத்திரமாக இந்தியாவுக்கு வந்துவிட்டாரல்லவா? பாண்டிச்சேரியிலும் பசுபதி ஐயருக்கு வியாபாரம் இருந்ததால், அங்கே ஐயர் இருப்பதும் சவுகரியமாக இருக்கலாம் என்று பசுபதி ஐயர் நினைத்தார். பாரிஸ்டராகிச் சம்பாதித்து மகிழாத குறையைப் பசுபதி ஐயர் நினையாமலில்லை. அந்த அளவு ஐயரின் நடவடிக்கைகள் அவருக்கும் ஏமாற்றமே.

ஐயருடைய தகப்பனர், மகன் தூக்குமேடையோ, அந்தமான் வாசமோ இன்றித் தப்பினனே என்று மகிழ்ந்தார். இனியாவது அவன் அரசியலை ஒழித்துவிட்டு வக்கீல் தொழிலில் ஈடுபடமாட்டானு என்று நம்பினுர் அவர். குடும்ப விவகாரங்களை முன்னிட்டு, தம் மகனைப் பார்க்கப் பாண்டிச்சேரிக்கு வந்தார் அவர். நெடுநாள் கழித்து மகனைக் கண்ட மகிழ்ச்சியின் நடுவே, வரகனேரி வீட்டில் தமக்குள்ள பூர்விக உரிமைகளை விட்டுக் கொடுப்பதாகக் கையெழுத்துப் போட்டுத் தரும்படி கேட்டார் தகப்பனர். பழைய பயம்தான்; ஐயரது

நடவடிக்கைகளுக்குத் தண்டனையாகக் குடும்பச் சொத்தான வீட்டைப் பறிமுதல் செய்துவிடுவார்களோ என்ற கவலை. எத்தனையோ சொத்து சுகம் தந்திருக்கக்கூடிய பாரிஸ்டர் பட்டத்தைத் தியாகம் செய்த ஐயர், சிறிதும் தயங்காமல் குடும்பச் சொத்தில் தமக்குள்ள பங்கையும் தியாகம் செய்தார். எதிர்காலம் என்னவென்றே தெரியாமல், பாண்டிச்சேரி என்ற பழக்கமில்லாத சிற்றூரில் வாழ நேர்ந்துள்ள ஐயர் தமது சொத்தைத் தியாகம் செய்தது எளிய தியாகமல்ல. ஐயருடைய உறுதியான பெருந்தன்மைக்கு இது ஒரு சான்று.

புதுச்சேரியில் பாரதியும் தாமும் வசித்து வந்த ஈசுவரன் தர்மராஜா கோவில் தெருவிலேயே ஐயருக்கும் ஒரு வீடு ஏற்பாடு செய்தார் ஸ்ரீநிவாசாச்சாரியார். பாக்கியலட்சுமி அம்மாள் வந்தார். மூன்று ஆண்டுகளுக்குப் பின் தம்பதியர் ஒன்று கூடினார்கள். எதிர்பார்த்த செல்வ வாழ்க்கை இல்லையென்றாலும், பாக்கியலட்சுமி அம்மாள் தமது கணவரது போக்கைப் புரிந்துகொண்டு, அவரது தியாக வாழ்க்கைக்கேற்ப நடக்கலானார். போகப்போக, அவர் தமது வீரமிக்க கணவருக்கேற்ற வீரமிக்க மனைவியாக நடந்துகொண்டார்.

பாரதியார் தமது பாடல் ஒன்றில் ('பாரதி அறுபத்தாறு') பாண்டிச்சேரி ஈசுவரன் தர்மராஜா கோவில் தெருவை, "கீர்த்தி அடைக்கலம் சேர் ஈசுவரன் தர்மராஜா கோவில் தெரு" என்று விவரிக்கிறார். தாமும் ஐயரும் ஸ்ரீநிவாசாச்சாரியாரும் வாழும் தெருவாதலால் இவ்வாறு கூறுகிறார் அவர். இம்மூவரது குடும்பங்களும் உறவினர்கள் அல்லாத போதிலும் நெருங்கிய உறவினர் போல வாழ்ந்தன. சுகதுக்கங்கள் யாவற்றையும் மூன்று குடும்பங்களும் பங்கு கொண்டன.

அவர்கள் ஒருவரையொருவர் சந்தித்து, குசலம் விசாரித்துப் பொழுது போக்காத நாளே இல்லை என்றாயிற்று. ஐயரும் பாரதியும் ஸ்ரீநிவாசாச்சாரியாரின் வீட்டில் குறைந்தது மூன்று மணி நேரமாவது அரசியல் பேசுவதிலும் சீட்டாடுவதிலும், சதுரங்கம் ஆடுவதிலும் கழிப்பார்கள்.

அல்லது இலக்கிய விவாதத்திலோ, கையிலுள்ள அல்லது எழுதி வரும் நூலைப் பற்றியோ விவாதிப்பார்கள். பல நாட்கள் மூவருமே அரவிந்தர் வீட்டுக்குச் செல்வார்கள். அங்கே வேதம், யோகம் முதலிய ஆத்மிக விஷயங்கள் விவாதத்தில் அடிபடும். அவர்களுடைய மனைவியரும், குழந்தைகளும்கூட அச்சமயம் வருவதுண்டு. மனைவி மக்கள் வரும் நாட்களில் அரவிந்தாசிரமத்திலிருந்து சீக்கிரமே கிளம்பி, கடற்கரைக்குப் போய், மணலில் அமர்ந்து மகிழ்வார்கள். சில தினங்கள் காலை நேரத்தில் குழந்தைகளுடன் கடல் ஸ்நானம் செய்வதும் உண்டு. ஐயர் கடலில் நீந்தி, வெகுதூரம் உள்ளே செல்வார்; எளிதில் சளைக்க மாட்டார்; எதற்கும் அஞ்ச மாட்டார்.

சதுரங்க ஆட்டத்திலும் ஐயர் நிபுணர். பாரதியார் சதுரங்கமானாலும், சீட்டாட்டமானாலும் பரபரப்புடன் ஆடுவார். ஐயர் சாதுரியமாகத் தமது காய் ஒன்றைப் பலிகொடுத்து, பாரதியார் எக்களிப்புடன் இருக்கும் சமயம் பாரதியாரது காய்களையெல்லாம் வெட்டிச் சாய்த்து விடுவார். "ஐயரே, இவ்வளவு கடுமையாகக் கொலைத் தொழில் செய்யாதேயும், உமக்குக் குழந்தை குட்டி பிறக்காது!" என்று அழாக் குறையாகப் பாரதியார் சொல்வாராம்.

சீட்டாட்டமானாலும் சரி, வேறு எதானாலும் சரி, முன் யோசனையுடன் ஆராய்ந்து திட்டமிட்டு, செய்நேர்த்தியுடன் முடிப்பார் ஐயர். வறுமை வாழ்விலும் தாம் பட்டினியின்றி வாழ்ந்ததுடன், பிறருக்கு உதவியாகவும் ஐயர் இருந்துள்ளார் என்றால், அவரது கட்டுப்பாடான வாழ்க்கையே காரணமாகும்.

# 10. கலெக்டர் ஆஷ் கொலை

பாண்டிச்சேரிக்கு வந்து கொஞ்ச காலமானதும் ஐயர் ஏதும் செய்யாமல் சும்மா இருப்பது பிடிக்காமல் தவித்தார். செய்யவேண்டிய வேலை எவ்வளவோ இருக்கிறது. "சென்னை ராஜதானி மட்டுமன்று, இந்தியா முழுதும்கூடப் புதுவைச் சுதேசிகள் ஏதோ பெரிய காரியம் செய்யப் போவதாக எதிர்பார்த்துக்கொண் டிருக்கிறது. நாம் சும்மா இருப்பது சரியன்று" என்று அவர் சொல்லி வந்தார். வெளிமுயற்சிகளைவிட அந்தகரணங்களைச் சுத்திசெய்ய வேண்டியது முக்கியம் என்பது அரவிந்தரின் கொள்கை. அதோடுகூட வெளிவேலையும் ஏதாவது செய்யத்தான் வேண்டுமென்று ஐயர் வாதம் செய்வார். விரைவில் ஐயர், தேசப்பணிக்கெனச் சில இளைஞர்களைத் தயாரிக்க ஆரம்பித்தார்.

மண்டயம் ஸ்ரீநிவாசாச்சாரியார் என்று அழைக்கப்பட்ட ஸ்ரீரங்கபட்டணம் ஸ்ரீநிவாசாச்சாரியார் ('இந்தியா' முதல்வர்) கூறுகிறார் :

"வேலைக்குத் தகுந்தபடி பேர்வழிகளைப் பொறுக்கி யெடுப்பதில் ஐயருக்குத் திறமையுண்டு. சுயராஜ்ய நோக்க முள்ள சிறுவர்களை ஒன்று கூட்டி, அவர்களுக்குத் தேகப் பயிற்சி அளிக்க முயன்றார். அதற்காகத் தனி வீடு ஒன்று எடுத்து, தம் நண்பர்களில் ஒருவரை அச்சிறுவர்களுக்கு வியாயாம முறைகளைக் கற்பிக்கும்படி கேட்டுக் கொண் டார். அங்கே குத்துச்சண்டை, குஸ்தி முதலியவைகளையும், சிலம்பம், கத்தி சுழற்றல் முதலியவைகளையும் பழகலானார் கள். இதோடு, தமிழ் இலக்கியங்களில் சிறிது ஞானம் பெற வும், பத்திரிகைகள் படிக்கவும், சுயராஜ்ய முறையை வளர்க்க ஒன்று கூடிப் பேசவும் அங்கே பயிற்சியளிக்க ஐயர் தக்க ஏற்பாடு செய்தார். ஸ்ரீ நாகசாமி ஐயரை

('இந்தியா' பத்திரிகையில் குமாஸ்தாவாக முன்பு இருந்தவர்) அவ்வீட்டில் வசிக்கச்செய்து அங்கு நடக்கவேண்டியவைகளைச் சரிவரக் கவனிக்கும்படி சொல்லி, தம் வீட்டில் உணவளித்து வந்தார். நம் நாட்டு வீரர்களின் தினங்களையும் பண்டிகைகளையும் அங்கு கொண்டாடுவதுண்டு.

"வெளியூர்களிலும் இம்மாதிரியான ஸ்தாபனங்களை ஏற்படுத்தத் தம் நண்பர்கள் மூலம் ஐயர் முயன்றார். இப்படி ஐயர் வந்தது முதல் ஏதாவது முயற்சிகள் நடந்து கொண்டே யிருந்தன. இவை யாவும் வெளிப்படையாகவே நடந்துவந்ததால் பிரிட்டிஷ் இந்திய வேவுகாரர்கள் இவற்றை அறிந்துகொள்வதில் ஒரு கஷ்டமும் இருக்கவில்லை. இதையெல்லாம் அவர்கள் கூர்ந்து கவனித்து வந்தார்கள்."

என். நாகசாமியும் ஐயர் செய்து வந்த காரியங்களை விவரித்துள்ளார். இளைஞர்களின் பயிற்சிக்காக ஈசுவரன் தர்மராஜா கோவில் தெருவில் 89-ஆம் எண் இல்லத்தில் இருந்தது ஐயர் துவக்கிய 'தர்மாலயம்'. அங்கே 'தருமம்' என்ற தேசீய, தமிழ் மாதமிருமுறைப் பத்திரிகை வெளியாயிற்று. அதுபற்றியே அந்த இடத்துக்குத் 'தர்மாலயம்' என்ற பெயரும் ஏற்பட்டது. இப்பத்திரிகையை ஆர். கிருஷ்ணசாமி ஐயர் என்பவர் பதிப்பித்தார்; எம். நாராயணன் என்பவர் அச்சிட்டுக் கொடுத்தார். 'தர்மம்' பத்திரிகையின் சிறப்பென்னவென்றால், சிரத்தையுள்ளவர்களுக்கு இலவசமாக அது அனுப்பப்பட்டு வந்தது தான். எட்டுப் பக்கம் கொண்ட பத்திரிகை; சுதந்தரம், சமத்துவம், சகோதரத்துவம் என்ற குறிக்கோள்களுக்காக அது இயங்கியது. "இந்தியாவின் க்ஷீணத்துக்குக் காரணங்கள்", "நான்கு வருணங்களின் தருமங்கள்", "தேச பக்தர்களின் அபேட்சை", "சுதந்தரம் அடையும் மார்க்கம்", "மனிதர்களின் கடமை" போன்ற கட்டுரைகள் வெளியாயின. "நாட்டுப் பற்றையும் விடுதலை இயக்கத்தையும் வளர்ப்பதே இப்பத்திரிகையின் முக்கிய நோக்கமாகும். இப்பத்திரிகைக்குச் சந்தா கிடையாது... இனமாக அனுப்பப்பட்டு... அபிமானிகள் மனமுவந்து

எவ்வளவு குறைவாக அனுப்பினுலும் அத்தொகையைச் சந்தோஷமாயும் திருப்தியாயும் பெற்றுத் 'தர்மாலய' நிர்வாகம் நடைபெற்று வந்தது'' என்று நாகசாமி கூறியுள்ளார். தமிழ், ஆங்கிலத் துண்டுப் பிரசுரங்களும் வெளியிட்டு, அவைகளை நேரிலும் தபால் மூலமும் விஸ்தாரமாகப் பரப்பியது.

நாகசாமி மேலும் சொல்கிருர்: ''பாரிஸ் நகரில் மதாம் காமா பிரசுரித்த 'வந்தே மாதரம்' என்ற ஆங்கிலப் பத்திரிகையையும், ஜெர்மனியில் பிரசுரமான 'தல்வார்' (வாள்) என்ற பத்திரிகையையும், ஸ்விட்ஜர்லாந்தி லிருந்து ஷாம்ஜி கிருஷ்ண வர்மா பிரசுரித்த 'இந்தியன் ஸோஷாலஜிஸ்ட்' என்ற பத்திரிகையையும், அமெரிக்கா வில் பிரசுரமான 'கயேலிக் அமெரிக்கன்' பத்திரிகை யையும் 'தர்மாலயம்' பெற்றுப் பிரிட்டிஷ் இந்தியாவுக்குள் தபால் மூலமும், இரவோடு இரவாய், சி.ஐ.டி. க்குத் தெரி யாமல் நேரில் கொண்டு போயும் பரப்பி வந்தது. மேற் கண்ட பத்திரிகைகள் ஆங்கில சர்க்காரால் இந்தியாவுக் குள் வரக்கூடாது என்று தடுக்கப்பட்டவை ஆகும்.

''வி.டி.ஸாவர்க்கர் எழுதின '1857: முதல் இந்திய சுதந்தர யுத்தம்' என்ற ஆங்கிலப் புத்தகம், ஐந்நூறு பிரதிகள் தந்திரமாக இரட்டை மாட்டு வண்டியில் வைத்து இரவோடு இரவாய்க் கொண்டுபோய்க் காஞ்சீபுரம், சேர்த்துவிட்டு, அங்கிருந்து இந்தியா முழுவதும் பரப்பியது 'தர்மாலயம்'. இப்புத்தகமும் இந்தியாவுக்குள் வரக்கூடாது என்று ஆங்கில சர்க்காரால் தடுக்கப்பட்டதே ஆகும். இந்தப் புத்தகத்தின் பிரதி ஒன்றைத் தங்களுக்குக் கொடுத் தால் ரூபாய் நூறு விலை கொடுப்பதாக, சி.ஐ.டி. காரர்கள் 'தர்மாலயம்' நிர்வாகஸ்தரைக் கேட்டார்கள். அவர் அதைக் காதில் போட்டுக் கொள்ளவேயில்லை.

''இந்த ஸ்தாபனத்தில் உடற்பயிற்சியும் முக்கிய மானதாகும். அதிகாலையில் வாலிபர்கள் இங்கு வந்து ஊக்கத்துடன் தேகப் பயிற்சி செய்வதும், கற்றுக்கொள் வதும் உண்டு. ஞாயிறு, வியாழன் இந்த இரண்டு தினங்களிலும் மாணவர்கள் சமுத்திரம் சென்று கடல்

நீரில் குளிப்பதும், நீச்சல் கற்றுக் கொள்வதும் உண்டு. நேர்ந்த பொழுது சாயங்காலத்தில் மணலில் அவர்கள் ஓடிப் பழகுவதும் உண்டு. திறந்த வெளியில் கால்பந்து, பாட்மின்டன் ஆகிய விளையாட்டுகளும் அவர்கள் ஆடுவது உண்டு.''

புரட்சிப்படைக்கான தொண்டர்களைக் கண்டுபிடித்துப் பயில்விக்கும் நிலையம் போல இருந்தது 'தர்மாலயம்.' ஒரு வேளை அவ்வாறு அதைப் பயன்படுத்தவும் ஐயர் திட்டமிட்டிருந்தாரோ, என்னவோ. ஆனால், லண்டன் நிலைமை வேறு; பாண்டிச்சேரி நிலைமை வேறு.

மேலும், பாண்டிச்சேரியில் புரட்சியில் நம்பிக்கை கொண்ட இரு தலைவர்கள் அதை அடையும் வழி பற்றி அபிப்ராய பேதம் கொண்டிருந்தார்கள்.

'சூர்யோதயம்' பத்திரிகை ஆசிரியராக இருந்த நீலகண்ட பிரம்மசாரியும், ஐயரும்தான் இவ்வாறு கடுமையான கருத்து வேறுபாடு கொண்டவர்கள்.

நீலகண்ட பிரம்மசாரி சொல்கிறார்: ''ஐயருக்குத் தனி நபர் கொலையில் நம்பிக்கை உண்டு. ஐரோப்பாவிலிருந்து அவர் வந்தபோது, இந்திய நிலைமையில் புரட்சியை உருவாக்க முடியாதென்று கருதினர். இந்தியாவெங்கும் பரவிய புரட்சி இயக்கம் ஒன்று ரகசியமாக உருவாக்கப் பட்டுள்ளதை அவர் அறியார்; அதைப் பற்றிக் கேள்விப்பட்டபோதும் அவர் நம்ப மறுத்துவிட்டார். பரோடா மகாராஜாவும் அரவிந்த கோஷும் ஜெர்மனியின் அரசுடன் தொடர்பு கொண்டிருந்தார்கள். 1914-இல் ஒரு பெரும் போரைத் துவக்கிப் பிரிட்டிஷாரை அழித்து விடுவதெனப் பத்து வருஷமாகவே ஜெர்மனி தயார் செய்துகொண்டு வந்தது. ஜெர்மன் வெளிநாட்டிலாகா பரோடா மகாராஜா ஸாயாஜி ராவிடம் தொடர்பு கொண்டு இந்தியாவெங்கும் புரட்சி தோன்றுவதற்குப் பெரும் அளவில் ஆயுதங்கள் தருவதாக வாக்களித்தது. தேசபக்தி மிக்க ஸாயாஜி ராவ் ரகசியமாகப் புரட்சிக்கு ஏற்பாடு செய்துவந்தார்; வேறு சில சுதேச மன்னர்களும் ஒத்துழைத்தார்கள்; தெற்கே பாளையக்காரர் சந்ததி

களை இதற்குத் தயாரிக்கும் பணியை நான் செய்து வந்தேன்.

''இந்தியாவிலிருந்த வெடிகுண்டுவாதிகள் தனித்தனிக் கும்பலாக இயங்கினர்களே தவிர, அவர்களுக்கு அகில இந்தியத் திட்டம் ஏதுமில்லை. துப்பாக்கியால் சுட்டுத் தள்ளும் ஆசை மிக்க இளைஞர்கள் அவர்கள். வெடிகுண்டு இயக்கமும், தனிநபர் கொலையும் இந்தியாவில் வேரூன்ற வேயில்லை. வெளிநாடுகளில் வாழ்ந்த இந்திய தேச பக்தர்களே அதை ஆதரித்தார்கள். ஐயரைப் பொறுத்த மட்டில், அவர் வெடிகுண்டு வீசும் ருஷ்ய அராஜகவாதி கள் வழியில் போனர். இந்தியாவுக்கு அவர் வந்தபோது, இங்கே சாதிக்கப்பட்டுள்ள விஷயங்களை அவர் அறிய வில்லை. வடக்கே பரோடா மகாராஜாவாலும், தெற்கே என்னாலும் செய்யப்பட்டுள்ள ஏற்பாடுகளை நான் ஐயரிடம் சொன்னபோது, அவர் அதை நம்பவில்லை என்பது மட்டுமல்ல, அதெல்லாம் நடக்காது என்றும் அலட்சியப்படுத்தினர். லட்சியத்திலும் நடைமுறையிலும் எங்களுக்குள்ளே பலத்த கொள்கை வேறுபாடு இருந்தது. ஒரு நாள் நாங்கள் வாதப் முற்றிச் சண்டையே போட்டு விட்டோம்.''

இது இப்படியிருக்க, 1909-இல் ஒரு விஷயம் நடந்திருந் தது. வ. உ. சிதம்பரம் பிள்ளை கோயம்புத்தூர்ச் சிறையில் இருந்தார். அவரைப் பார்க்க அவரது நண்பரான பரலி சு. நெல்லையப்ப பிள்ளை புதுவையிலிருந்து போய்வந்தார். சிறையில் சிதம்பரம் பிள்ளை கொடுமைப்படுத்தப்படு வதைப் பற்றிப் புதுவை திரும்பிய நெல்லையப்ப பிள்ளை, எல்லாரிடமும் சொல்லிக்கொண் டிருந்தார். தாம் தொடர்ந்து கொடுமை படுத்தப்படுவதற்குக் கலெக்டர் ஆஷ் துரையே காரணமென நம்பிய சிதம்பரம் பிள்ளை, ''ஆஷ் துரை கொடுமைக்கு முடிவே கிடையாதா?'' என்று அங்கலாய்த்ததாக நெல்லையப்பர் சொன்னர்.

1908-இல் தூத்துக்குடியில் சிதம்பரம் பிள்ளையைப் பாடு படுத்திச் சிறையில் தள்ளியவர் ஸப் - கலெக்டர் ஆஷ் துரை. சிதம்பரம் பிள்ளையும், சுப்பிரமணிய சிவாவும்

கைதானது திருநெல்வேலிக் கலவரத்தை விளைவித்தது. கலெக்டர் விஞ்சும், ஸப்-கலெக்டர் ஆஷும் கலவரங்களை அடக்கக் குரூரமாக நடந்துகொண்டார்கள். ஆஷ் துரை, பிறகு பதவி ஏற்றம் பெற்றுத் திருநெல்வேலி கலெக்டர் ஆனான். அவனுக்குச் சென்னை அரசிடம் நல்ல செல்வாக்கு இருந்தது. அரசியல் கைதிகளின் மனத் திடத்தை முறிப்பது முக்கியம் என்று கருதி, சிறையில் இருந்த சிதம்பரம் பிள்ளையின் மனத்திடத்தை முறிக்க அவன் பல சில்லறை விஷமங்கள் செய்தான்.

சிதம்பரம் பிள்ளை நெல்லையப்பரிடம் சொன்னது, ஆஷ் துரையை ஒழித்துக்கட்ட வழி இல்லையா என்ற கருத்தில் வெளியிலிருந்த சிலரால் எடுத்துக் கொள்ளப் பட்டது. மாடசாமி போன்ற அவர்கள் சிதம்பரம் பிள்ளையின் கூட்டாளிகள். அவர்கள் இதைச் சாதிக்கத் திருநெல்வேலி மாவட்டத்தைச் சேர்ந்த மறவர் தலைவர்களை அணுகினார்கள். அம்மறக்குலத் தலைவர்களோ, தாங்கள் நீலகண்ட பிரம்மசாரிக்கு வாக்குக் கொடுத்துப் புரட்சிப் படை திரட்டுவதாயும், அவர் தனிநபர் கொலையை ஆதரிக்காததால் தாங்கள் இதில் ஈடுபடமுடியாது என்றும் தெரிவித்துவிட்டார்கள்.

ஐயர் புதுச்சேரிக்கு வந்தபின் இவ்விஷயத்தைப் பற்றிக் கேள்விப்பட்டபோது, ஆஷ் விஷயத்தில் தாம் ஏதாவது செய்ய முடியுமா என்று யோசனை செய்தார்.

*1911* ஜனவரி மாதம் இதற்கேற்ற சந்தர்ப்பம் நேர்ந்தது. நீலகண்ட பிரம்மசாரியின் புரட்சிக் குழுவைச் சேர்ந்த வாஞ்சி ஐயர் என்ற இளைஞர் நீலகண்டரைப் பார்ப்பதற்காகப் பாண்டிச்சேரிக்கு வந்தார். வாஞ்சி திருவாங்கூர் ஸம்ஸ்தானக் காட்டிலாகாவில் குமாஸ்தா. அவர் வந்த சமயம் நீலகண்டர் ஊரில் இல்லை. தொலை தூரத்திலிருந்து வந்த வாஞ்சி ஒரு வாரம் நீலகண்டருக்காகக் காத்திருக்கவேண்டியதாயிற்று. வாஞ்சி பாண்டிச் சேரியில் இவ்வாறு கட்டாயத்தின்பேரில் தங்க நேர்ந்த ஒரு வாரத்தில் அவர் பாண்டிச்சேரியிலிருந்த இதர பிரமுகர்களையும் சந்தித்தார். ஐயர் அவரைச் சந்தித்த

போது, ஆஷ் விஷயத்தை முடிக்க இவர் சிறந்த கருவி என ஐயர் முடிவு கட்டினர். இதனல், ஐயர் வாஞ்சியின் மனத்தைக் கவர்ந்து, அவர் ஆஷ் துரையைச் சுட்டுக் கொல்வதற்கு இசையும்படி செய்தார். வாஞ்சி தமது ஊருக்குத் திரும்பிச் சென்று, பிறகு பயிற்சிக்காக மறுபடி பாண்டிச்சேரிக்கு வந்தார். ஐயரின் துணையாளர் நாகசாமி சொல்கிறர்:

"தர்மாலயம் வாஞ்சியை மிகுந்த அனுதாபத்துடன் வரவேற்றது. அவர் அங்கே ஒரு மாதம் தங்கியிருப்பதற்கு வேண்டிய வசதியும் செய்துகொடுத்தது. வ.வே.ஸு. ஐயர் இந்த ஒரு மாதமும் தினம் தினம் தர்மாலயம் வந்து வாஞ்சிக்குத் தனியே போதித்து வந்தார். அதிகாலையில் சுமார் நாலு மணிக்கு ரிவால்வருடன் நான் வாஞ்சியை அழைத்துக்கொண்டு போய்ப் புதுவைக்கு அருகே உள்ள கரடிக்குப்பம் ஓடை வெள்ளவாரியில் கை நடுங்காமலும் குறி தவருமலும் சுடுவதற்குக் கற்றுக் கொடுத்தேன்... ஃபிரான்ஸிலிருந்து காமா அம்மையார் அனுப்பிய பிரௌனிங் பிஸ்டல் வந்துவிட்டது. 'ஆரியர் கடமை' என்ற தமிழ்த் துண்டுப் பிரசுரம் அச்சாகிவிட்டது. யாவும் தயார்...

"1911-ஆம் ஆண்டு மே மாதம் இறுதியில் இரவு சுமார் பதினெரு மணிக்கு நானும் கண்ணுப் பிள்ளையும் வாஞ்சியை அழைத்துக்கொண்டு பிஸ்டல், துண்டுப் பிரசுரங்களுடன் தர்மாலயத்திலிருந்து கால்நடையாகப் புறப்பட்டு முதலில் வில்லியனூர் போய், அங்கிருந்து பாகூர் வழியாய் ஆற்றைக் கடந்து, திருப்பாப்புலியூர் சென்று வாஞ்சியை ரெயிலில் ஏற்றி அனுப்பினேம்.

1911 ஜுலை 17-ஆம் தேதி வாஞ்சி காரியத்தை நிறைவேற்றினர். ஆஷ் துரை கொலையுண்ட செய்தி இந்தியா வெங்கும் பரபரப்பை உண்டாக்கியது.

ராபர்ட் வில்லியம் டெஸ்டிகார்ட் ஆஷ், திருநெல்வேலி கலெக்டர் திருநெல்வேலியிலிருந்து கோடைக்கானலுக்கு விடுமுறையில் சென்றுகொண் டிருந்தான். மணியாச்சி ஜங்ஷனில் ஆஷ் ரெயில் மாறவேண்டி யிருந்தது. ஆஷ் வந்த அதே ரெயிலில் வாஞ்சியும் வந்தார்: ஆஷ் மீது

கவனம் செலுத்தியபடி, சரியான சந்தர்ப்பத்துக்காகப் பார்த்துக்கொண் டிருந்தார்.

ரெயில் மணியாச்சியை அடைந்ததும் ஆஷும் அவனது மனைவியும் தங்கள் முதல் வகுப்புப் பெட்டியிலிருந்து இறங்கி, வேறொரு பிளாட்பாரத்தில் இருந்த கோடைக் கானல் போகும் வண்டியில் ஏறினார்கள். ஆஷ் எதையோ படித்துக்கொண் டிருந்தான்; பக்கத்துப் பிளாட்பாரம் ஒன்றில் ஒரு மெயில் டிரெயின் வந்தது. ஜனங்கள் இங்குமங்கும் ஓடினார்கள். அந்தச் சமயம், ஒரு துப்பாக்கிக் குண்டு வெடிச் சத்தம் கேட்டது. ஆஷ் துரையின் இடது மார்பில், மார்புக்கூட்டின் மேல் எலும்புக்குக் கீழே குண்டு பாய்ந்துவிட்டது. சுட்டவர் ஓர் இளைஞர். மேலும் சில குண்டுகள் பாய்ந்தன. ரத்தம் பெருக, ஆஷ் ரெயில் பெட்டியின் தரையில் சாய்ந்தான். சில நிமிடங்களில் காலமாகிவிட்டான்.

ஆஷ் இறந்தான் என்று தெரிந்து கொண்டதும், வாஞ்சி ஐயர்–அவர்தான் சுட்டது–அவ்விடத்தை விட்டு வேகமாய் நகர்ந்தார். ஆஷ் துரையின் காவலன் வாஞ்சியைப் பிடித்தான்; அவர் திமிறிக்கொண்டு தப்பிப் போய்விட்டார். புகை கக்கிய துப்பாக்கியை நீட்டிப் பிடித்தவண்ணம் அவர் பிளாட்பாரத்தில் நடந்து சென்றார். தம்மை யாரேனும் நெருங்கினால் சுட்டுவிடப்போவதாய் எச்சரித்தார். பிளாட்பாரம் கோடியில் இருந்த கழிவறைக்குள் சென்றார் வாஞ்சி. பிறகு தம்மைச் சுட்டு மாய்த்துக் கொண்டார்.

போலீஸார் கழிவறைக்குள் நுழையவும் யோசனை செய்ய வேண்டியிருந்தது. வெகு நேரத்துக்குப் பின் அவர்கள் துணிந்து நுழைந்தபோது, வாஞ்சி தரையில் இறந்து கிடந்தார். வலது கை ரிவால்வரைப் பிடித்தபடியே இருந்தது.

இந்தியாவில் பயங்கர இயக்கம் பற்றி விசாரித்து ரவுலட் கமிட்டியின் அறிக்கைப்படி, தமிழில் எழுதிய ஓர் அறிக்கை வாஞ்சியின் பையில் இருந்ததாம். இந்த அறிக்கை, ஒவ்வோர் இந்தியனும் ஆங்கிலேயரை விரட்டி

இந்தியாவில் சுயராஜ்யம் ஸ்தாபிக்க முயல்வதாகத் தெரி வித்தது. ராமபிரானும், கிருஷ்ணனும், குரு கோவிந்தும், குரு அர்ஜுனும் எல்லா மதத்தினரையும் சமமாகப் பாவித்து ஆட்சி புரிந்தார்கள். ஆனால் இப்போதோ இந்தப் பாரத நாட்டில், பசுமாட்டு மாமிசம் உண்ணும் ஒரு மிலேச்சனுக்கு டெல்லியில் முடிசூட்டு விழா நடத்த ஆங்கிலேயர் தயார் செய்துகொண் டிருக்கிறார்கள். முடிசூட்டலுக்காக ஐந்தாம் ஜார்ஜ் மன்னர் இந்தியாவில் காலடி வைத்தவுடனே அவரைக் கொல்வதென மூவாயிரம் பேர் சபதம் கொண்டிருக்கிறார்கள். அவர்களுடைய கருத்தை வெளிப்படுத்தும் சின்னம் போல, அவர்களில் மிகவும் தாழ்ந்தவனான தாம்—வாஞ்சி ஐயர் அன்று அக்காரியம் செய்துள்ளார். இவ்வாறு வாஞ்சியின் பையிலிருந்த அறிக்கை கூறியதாம்.

வாஞ்சியின் மைத்துனர் சங்கரகிருஷ்ணனுடைய வீட்டையும், மற்றும் சிலரது வீடுகளையும் சோதனையிட்டதில், இரண்டு பிரசுரங்கள் கிடைத்தனவாம். ஒன்று, ''ஆரியர்களுக்கு ஒரு வார்த்தை'' (ஆரியர் கடமை) என்ற பிரசுரம், வெள்ளைப் பரங்கியரைக் கண்ட இடத்தில் கொல்லும்படி இது உபதேசித்தது. மற்றது, ''அபிநவ பாரத் சங்கத்தில் சேருவதற்கான பிரதிக்ஞை.'' ஒவ்வொரு பிரசுரத்திலும் பத்துப் பத்துப் பிரதிகள் பாண்டிச்சேரி 'தர்மம்' பத்திரிகை அலுவலகத்தால் அனுப்பப்பட்டு அவர்களிடம் இருந்தது.

ஆஷ் கொலையைத் திட்டமிட்டு நடத்தி வைத்தவர் நீலகண்ட பிரம்மசாரி என்று போலீஸார் நம்பினார்கள். அவர் இதற்கு விரோதமாக இருக்க, அவரது சீடன் வாஞ்சியை ஐயர் வசப்படுத்தி இவ்வாறு செய்யச் சொல்லிவிட்டது, நீலகண்டருக்குக் குழப்பம் உண்டாக்கியது. தமக்குச் சம்பந்தமில்லாத இக் கொலையில் போலீஸிடம் மாட்டிக் கொள்ளாதிருக்க அவர் இந்தச் சம்பவத்துக்குப் பல வாரங்கள் முன்பே வட இந்தியா போய்விட்டார். அவர் காசியில் சில நண்பர்களுடன் தங்கியிருந்த சமயம் ஆஷ் கொலைச் செய்தி வந்தது.

நீலகண்ட பிரம்மசாரியின் நண்பர்களில் நெருக்கமான பலர் சங்கரகிருஷ்ணன் உட்பட, கைதாகிவிட்ட செய்தியும் வந்தது. அவர்களுடைய வீடுகள் சோதனை செய்யப்பட்டதாயும், கொலையில் அவர்களைச் சம்பந்தப் படுத்தும் சில கடிதங்கள் கிடைத்துள்ளதாயும் செய்திகள் கூறின. போலீஸார் நீலகண்ட பிரம்மசாரியைத் தேடிக் கொண்டிருப்பதாகவும் தெரிந்தது.

நீலகண்ட பிரம்மசாரி கல்கத்தாவிலுள்ள மூத்த தலைவர் களைக் கலந்து பேச அங்கே போனார்; ஆஷ் கொலைக்கும் அவருக்கும் சம்பந்தமே இல்லை: அரசாங்கத்துக்கெதிராகக் கலகம் உண்டாக்க முயன்றதென்னவோ உண்மை. ஆகையால், அவர் போலீஸாரிடம் வலியத் தம்மை ஒப்புவித்துவிடுவதே அவருக்கு நல்லதெனத் தலைவர்கள் புத்திமதி கூறினார்கள். அதன்படியே அவர் போலீஸாரிடம் தம்மை ஒப்புவித்துக் கொண்டார்.

விசித்திரம் என்னவென்றால், ஆஷ் கொலை வழக்கில் சென்னை ராஜதானிப் போலீஸார் வ. வே. ஸு. ஐயரைத் துளியும் சம்பந்தப்படுத்தாததுதான்! அவர்களுக்குப் போதிய தகவல்தான் இல்லையோ, சாட்சியம்தான் இல்லையோ, எதோ ஆஷ் கொலைக்கு அவர் காரணமானதைப் போலீஸார் வழக்கில் குறிப்பிடக்கூட இல்லை. இக்குற்றத்திற்கு விரோதமாக இருந்த நீலகண்ட பிரம்ம சாரியை ஆஷ் கொலை வழக்கில் முதல் எதிரி ஆக்கினார்கள். ஐயர் மீது எவ்விதக் குற்றச்சாட்டும் இல்லை.

ஆஷ் கொலை விசாரணை விஸ்தாரமாக, ஆற அமர நடந்தது; ஏராளமான சாட்சிகள் விசாரிக்கப்பட்டார்கள். அப்படியிருந்தும், ஆஷ் துரையைக் கொலை செய்யச் சதி நடத்தியதாகப் போலீஸார் கொண்டுவந்த குற்றச் சாட்டை நீதிபதிகள் ஏற்கவில்லை; அடியோடு நிராகரித் தார்கள். ராஜநிந்தனை, கலகம் முதலிய குற்றங்களை நிரூபணமானதாகத் தீர்ப்பளித்து, நீலகண்டபிரம்மசாரிக்கு 7 வருஷம் கடுங்காவலும், மற்றவர்களுக்குக் குறைவான தண்டனையும் கொடுத்தார்கள்; சிலரை விடுவித்தார்கள்.

கொலையில் சம்பந்தமில்லாத ஒருவர் 7 வருஷம் சிறை

வாசம் அனுபவிக்கப் போனார்; கொலையைத் தூண்டியவர் மீது வாரன்ட் கூட இல்லை! அது மட்டுமல்ல, ஐயர் மீது பிரிட்டனில் இருந்ததாகக் கருதப்பட்ட வாரன்டையும் சென்னைப் போலீஸார் மறந்துபோய்விட்டது போலத் தோன்றியது!

அப்படியென்றால் பிரிட்டிஷ் அரசின் கண்ணில் ஐயர் நல்லவர் ஆகிவிட்டாரா? அது ஒன்றும் இல்லை. அவருக்கு அவர்களால் வேண்டிய தொல்லைகள் இருந்தன. அதையும் பின்னால் பார்ப்போம்.

ஆஷ் கொலை வழக்கு பிரிட்டிஷ் அதிகார வர்க்கத்துக்குப் பெரிய அதிர்ச்சி தந்திருந்தது. சென்னை ராஜதானி சாதுவான மக்கள் வாழும் பிரதேசம்; அங்கே பலாத்கார நடவடிக்கைகள் நிகழமாட்டா என்று அதிகாரவர்க்கம் சொப்பனம் கண்டுகொண் டிருந்தது. இக்கனவு கலைந்ததனால் இக்கொலையில் பிற பாண்டிச்சேரிச் சுதேசிகளைச் சம்பந்தப்படுத்த முடியாவிட்டாலும், அவர்களது நடவடிக்கைகளைக் கூர்ந்து கவனிப்பதென்று முடிவு செய்தார்கள். அஞ்ஞாதவாசம் செய்யும் தலைவர்களும் சீடர்களும் பலர் அங்கே இருந்ததால் அவர்கள் ஏதாவது சதி செய்வார்கள் என்பது அதிகார வர்க்கத்தின் எண்ணம். ஐரோப்பாவில் யுத்த மேகங்கள் மூண்டுகொண் டிருந்தன. ஜாக்கிரதையாக இருப்பது அவசியம் என்று அவர்கள் நினைத்தார்கள்.

இதனால் வெளிப்படையான, சட்டபூர்வமான வாழ்க்கை வாழ்ந்து வந்த பாரதியார், ஸ்ரீநிவாசாச்சாரியார் முதலியவர்களுக்கும், ஓரளவு அரவிந்தருக்கும்கூட இது முதல் போலீஸ் தொல்லை அதிகரித்தது. ஐயரைப் பற்றிச் சொல்லத் தேவையில்லை. பிரிட்டிஷ் இந்திய அரசாங்கத்துக்கும் ஃபிரெஞ்சிந்திய அரசாங்கத்துக்கும் என்ன ரகசிய உடன்பாடோ, சென்னைப் போலீஸாரில் 200 பேருக்கும் அதிகமாகப் பாண்டிச்சேரியிலேயே முகாமிட்டார்கள். அரவிந்தர் தவிர மற்றெல்லாச் சுதேசிகள் பெயரையும், "தேடப்படுபவர்கள்" என அறிவித்து இவர்களில் யாரைப் பிடித்துக் கொடுத்தாலும் தலா ஆயிரம் ரூபாய் பரிசு

கிடைக்கும் என்று நோட்டீஸ் ஒட்டினார்கள். ஐயர், பாரதி முதலானவர்கள் எங்கே போனாலும் வேவுகாரர்கள் நிழல் போலத் தொடர்ந்தார்கள். பாண்டிச்சேரியைப் பிரிட்டிஷார் எடுத்துக்கொண்டுவிடப் போவதாக வதந்தி கிளப்பினார்கள். சுதேசிகளுக்கு யாராவது உதவி செய்தால் அவ்வாறு உதவியவர்கள் ஏதாவது காரியமாகப் பிரிட்டிஷ் இந்திய எல்லையில் கால் வைக்க நேரும்போது கைது செய்யப்படுவார்கள் என்று மிரட்டினார்கள்! அது மாதிரி ஒரு சிலரைக் கைது செய்யவும் செய்தார்கள்.

இவ்விவரங்களையெல்லாம் பாரதியார் சென்னை கவர்னருக்குத் தெரிவித்து ஒரு நீண்ட கடிதம் எழுதினார். பலாத்கார முயற்சிகளில் சிறிதும் நம்பிக்கையில்லாத தம்மை இப்பாடு படுத்துவது சரியல்ல என்று முறையிட்டார்; பயன்படவில்லை. பாரதியார் உடனே பிரிட்டிஷ் எதிர்க் கட்சித் தலைவரும் தொழிற்கட்சிப் பிரமுகருமான ராம்ஸே மக்டானல்டுக்கு எல்லாவற்றையும் விவரித்து நீண்டதொரு கடிதம் வரைந்தார். அதனாலும் பலன் ஏற்படவில்லை. புதுவைச் சுதேசிகளுக்கும் உள்ளூர் ஃபிரெஞ்சு அதிகாரிகளுக்கும் விரோதம் உண்டாக்கப் பிரிட்டிஷ் வேவுகாரர்கள் பல முயற்சிகள் செய்தனர். நல்ல வேளையாக அவை ஏதும் பலிக்காமற்போனது அதிசயத்திலும் அதிசயமே.

பாரதியின் இளம் நண்பராக அக்காலத்தில் பாண்டிச்சேரியில் வசித்தவரும், புகழ் பெற்ற எழுத்தாளரும், பாரதியின் வாழ்க்கைச் சரிதத்தை விரிவாக எழுதியுள்ளவருமான வ.ரா. (வ. ராமஸ்வாமி ஐயங்கார்) சென்னைப் போலீஸார் புதுச்சேரிச் சுதேசிகளுக்கு விளைவித்த இன்னல்களைச் சுவையுடன் விவரித்திருக்கிறார். வ. ரா. சொல்லுகிறார் :

"இந்த (ஆஷ்) கொலைக்குப் பிறகு சென்னை மாகாணப் போலீஸார் புதுச்சேரியை முற்றுகை போட்டார்கள் என்றே சொல்ல வேண்டும். புதுச்சேரிக்குள்ளேயே நூற்றுக்கணக்கான பிரிட்டிஷ் இந்தியப் போலீஸார். பாரதியார் வீடு, ஐயர் வீடு, அரவிந்தர் வீடு இவைகளின்

பக்கத்திலே போலீஸார் கும்பல் கும்பலாக உட்கார்ந்திருப்பதை அக்காலத்தில் காணலாம்.

"பொம்மலாட்ட வேடிக்கை போல நடக்கும். தேச பக்தர்கள் வீட்டுக்குள்ளாகவே இருந்தால் போலீஸார் பக்கத்து வீடுகளில் உட்கார்ந்திருப்பார்கள். அவர்கள் வெளியே சென்றால், போலீஸார் எழுந்திருந்து அவர்களைப் பின்தொடர ஆரம்பித்துவிடுவார்கள். தேசபக்தர்களுக்கு முதலில் நேர்ந்த அவஸ்தை, பின்னர் அவர்களுடைய புதுச்சேரி நண்பர்களுக்கும் ஏற்பட்டது ..

"பிரிட்டிஷ் இந்தியப் போலீஸார் தனியாக ஒரு பங்களாவை வாடகைக்கு பிடித்துக் கொண்டார்கள். இவர்களுக்குத் தலைமையாக ஒரு டெபுடி சூப்பிரண்டு. இந்தப் பதவியில் அப்துல் கரீம் என்பவர் இருந்தார். இவருக்குக் கீழே குருவப்ப நாயுடு, ரங்கஸ்வாமி ஐயங்கார் என்ற இரண்டு கெட்டிக்காரப் போலீஸ் இன்ஸ்பெக்டர்கள். புதுச்சேரி தேசபக்தர்களை வளைத்து நசுக்கிவிடுவதற்காக, கற்பனைக் கடங்காத அபார வேலை செய்தார்கள். இவர்களுக்குக் கீழ், ஸப்-இன்ஸ்பெக்டர்கள், 'ஏட்டு அய்யாக்கள்', கான்ஸ்டபிள்கள்-மொத்தம் இருநூறு பேர்களுக்குக் குறையாது....

"தேசபக்தர்கள் வெளியே சென்றால் பின்தொடர்பவர்கள் போகப் பாக்கியுள்ளவர்கள் பிரிந்து பிரிந்து, புதுச்சேரி நகரத்தில் வேலை செய்து வந்தார்கள். தங்கள் உத்தியோக மதிப்புக்குத் தக்கபடி அவர்கள் புதுச்சேரிவாசிகளைக் கண்டு பேசுவார்கள். சாதாரணக் கான்ஸ்டபிள்கள், வெற்றிலை பாக்குக் கடைக்காரன் 'புஸ் வண்டி'க்காரன் முதலியவர்களுடன் பழகி, தேச பக்தர்களிடம் எவ்வித உறவும் வைத்துக் கொள்ளக் கூடாது என்று பிரசாரம் செய்வார்கள், பயமுறுத்தவும் செய்வார்கள். ஸப்-இன்ஸ்பெக்டர்கள்,பெரிய பெரிய கனவான்களைப் பேட்டிகண்டு தேசபக்தர்கள் பிரிட்டிஷ் அரசாங்கத்துக்கு விரோதமாக வேலை செய்கிறார்கள் என்று சொல்லிச் 'சுதேசிகளுக்கு' இவர்கள் எந்த வகையிலும் ஒத்தாசை செய்யலாகாது என்று எச்சரிப்பார்கள் . . .

"குருவப்ப நாயுடுவும் ரங்கஸ்வாமி ஐயங்காரும் பாரதி யாரைக் கண்டு பேசுவார்கள். இவர்களிரண்டு பேர்களிலும் ரங்கஸ்வாமி ஐயங்கார் அடிக்கடி பாரதியாரின் வீட்டுக்கு வந்துவிடுவார். பாரதியாரை ஏய்த்து உளவு சம்பாதித்து விடலாம் என்ற நோக்கமோ, அல்லது பாரதியாரின் கவிதைத் திறமையிலே, பேச்சுத் திறமையிலே அவருக்குப் பிரேமையோ, அது இன்னதென்று தெரியவில்லை.

"உளவு என்று சொன்னேனே, அது எதைப் பற்றி? ஆஷ் கொலைக்கும் புதுச்சேரிச் சுதேசிகளுக்கும் சம்பந்த இழை இருப்பதாகப் பிரிட்டிஷ் இந்தியப் போலீஸாருக்குச் சந்தேகம். மேலும், புதுச்சேரிச் சுதேசிகள், துப்பாக்கி முதலிய ஆயுதங்களை ஃபிரான்ஸ் முதலிய அந்நிய நாடு களிலிருந்து தருவித்து, எங்கேயோ மறைவிடத்தில் ஒளித்து வைத்துச் சேகரித்து வருகிறார்கள் என்ற அபத்த வதந்தி யும் போலீஸாரின் சுறுசுறுப்புக்குக் காரணம். இது காரணம் பற்றியே, ரத்னவியாபாரியாகவும், வக்கீலாகவும், தேச பக்தராகவும், சன்னியாசியாகவும், காவிய ரசிகராயும் வேஷம் போட்டுக்கொண்டு பாரதியாரையும் மற்றுமுள்ள சுதேசிகளையும் போலீஸார் பேட்டி கண்டார்கள்..."

சுதேசிகள் பற்றிப் பொய் வதந்திகளைப் பரப்புவதிலும் போலீஸார் தங்கள் கற்பனை முழுவதையும் காட்டினார்கள். வ. ரா. சொல்கிறார்:

"புதுச்சேரியில் அந்தக் காலத்தில் சகஜமாய்க் கிளப்பிய புரளிகளை நீங்கள் கேட்டால், உங்களுக்குச் சிரிப்பு வரும். சுதேசிகளை அப்படியே மோட்டார் கார்களில் வைத்துப் பிரிட்டிஷ் இந்தியாவுக்குத் தூக்கிக்கொண்டு போகும் படியாகப் போலீஸ்காரர்கள் ஏற்பாடு செய்துவிட்டார் கள் என்று ஒருவன் வியர்க்க வியர்க்க வந்து சேதி சொல்லுவான்... சுதேசிகள் புதுச்சேரியிலிருந்து இருபத்து நான்கு மணி நேரத்துக்குள் வெளியே போய்விட வேண்டு மென்று ஃபிரெஞ்சு கவர்னர் உத்தரவு போட்டுவிட்டார்; அந்த உத்தரவை அமல்படுத்த ஃபிரெஞ்சுப் போலீஸ் காரர்கள் இதோ வந்துகொண் டிருக்கிறார்கள்; அவர்களை

வருகிற வழியில் பார்த்தேன் என்று ஒருவன் கோட்டைக் குந்தானிப் புளுகு அளப்பான்...

"நந்தகோபாலு செட்டியார் என்பவர் புதுச்சேரி அரசியல் கட்சி ஒன்றுக்குத் தலைவர். அவர் செம்படவச் செட்டியார். கப்பல் கந்திராட்டு, கடலைக்கொட்டை வியாபாரம் அவரது தொழில்கள். நந்தகோபாலுவின் பெயரைச் சொன்னால் புதுச்சேரி நடுங்கும். அவருக்கு 'அடியாள்' ஜமா ரொம்ப ஜாஸ்தி என்று பிரஸ்தாபம். சுதேசிகளைப் பலவந்தமாகப் பிடித்துக் கொடுப்பதாக நந்தகோபாலு பிரிட்டிஷ் இந்தியப் போலீஸாருடன் ஒப்பந்தம் செய்துகொண்டதாகவும், அந்தக் காரியம் இரண்டு மூன்று நாட்களுக்குள் கட்டாயம் நடந்து விடுமென்றும் ஒருவன் கிலி பிடித்த கண்களோடு வாய் குளறித் தடுமாறும்படி வந்து சொல்லுவான்.

"ஆச்சரியம் என்னவெனில், சற்று முன்னர்தான் பாரதியாரையும் ஸ்ரீநிவாசாச்சாரியாரையும் பார்த்துப் பேசி, சல்லாபம் செய்துவிட்டு நந்தகோபாலு போயிருப்பார். நந்தகோபாலு சல்லாபப் பேட்டிக்கு விபரீத அர்த்தம் கொடுத்துப் புரளியைக் கட்டிவிடுவார்கள் போலீஸ்காரர்கள்."

பாண்டிச்சேரிச் சுதேசிகளைப் பிடித்துத் தந்தால் ஆயிரம் ரூபாய் தருவதாக அறிவித்தது, சுதேசிகளுக்கு வந்த தபால்களையும் மணியார்டர்களையும் இடைமறித்தது முதலிய பிரிட்டிஷ் வேவுகாரர்களின் அட்டூழியங்களை மண்டயம் ஸ்ரீநிவாசாச்சாரியாரும் குறிப்பிட்டுள்ளார்.

பாண்டிச்சேரிச் சுதேசிகளுக்குள், பிரிட்டிஷ் இந்தியப் போலீஸார் கடத்திச் செல்ல அதிகம் விரும்பியது ஐயரையே. அவர்தாம் சுதேசிகளுள் மிகவும் துணிச்சலானவர்; அவரே மிகவும் எச்சரிக்கையாக இருந்தவர். அவர் எப்போதும் கைத்துப்பாக்கி வைத்திருந்தார்; இரவு தூங்கும்போதும் தலைமாட்டில் கைத்துப்பாக்கி வைத்திருப்பார். தாம் வெளியே போகும்போது எங்கே போகிறார், எப்போது திரும்புவார், தாம்தான் கதவைத் தட்டுகிறார் என்று தெரியக் கதவை எத்தனை தட்டுத் தட்டுவார்

என்றெல்லாம் தமது மனைவியிடம் சொல்லிவிட்டுச் செல்வார். அத்துடன், அவர் தமக்கே உரித்தான ஒரு முறையில் எச்சிலைக் காறி உமிழ்வார்; இதுவும் அவரது மனைவிக்கு ஓர் அடையாளம்.

ஐயருக்கு நேர்ந்த மயிர்க்கூச்செறியும் சம்பவங்கள் ஏராளமானவை.

ஒரு நாள் மாலை ஐயர் கடற்கரையிலிருந்து திரும்பிக் கொண்டிருந்தார். பிரிட்டிஷ் போலீஸ் கையாட்கள் சிலர் அவரை வழி மறித்து, ஒரு ஜட்கா வண்டியில் வைத்துப் பிரிட்டிஷ் இந்திய எல்லைக்குள் கொண்டு போய்விட வழியில் நின்றார்கள். தூரத்திலேயே வழி மறித்து நின்ற காலிகளை ஐயர் கவனித்துவிட்டார். திடீரென அவர் ஒரு சந்தில் நுழைந்து, வேகமாக நடந்து புகழ் பெற்ற மணக் குள விநாயகர் கோயிலில் புகுந்து, சிலைக்குப் பின் போய் ஒளிந்து கொண்டார். இரவு முழுவதும் பூட்டிய கர்ப்பக் கிருகத்திலேயே இருந்து, காலையில் வெளியேறிப் பத்திர மாக வீடு சேர்ந்தார்.

மற்றொரு நாள், ஐயர் நண்பர் ஒருவர் வீட்டில் இருந்த போது, காலிகள் அவ்வீட்டைச் சூழ்ந்துகொண்டனர், வெளியே வந்தால் அவரை மடக்கிவிடலாமென்று. சிறிது நேரத்திற்கெல்லாம் அந்த வீட்டில் அழுகை ஓலம் கேட்டது. யாரோ இறந்துவிட்டதால் அவரது உடலைச் சுடுகாட்டுக்கு எடுத்துச் செல்ல ஏற்பாடாயிற்று. சுடு காட்டில், 'பிணத்'தைத் தூக்கி வந்தவர்கள் சுற்றுமுற்றும் பார்த்தார்கள். யாரும் தொடர்ந்து வரவில்லை என்று தெரிந்ததும், 'பிணத்'தை அவிழ்த்தார்கள். ஐயர் எழுந்து நின்று நண்பர்கள் துணையுடன் வீடு சேர்ந்தார்.

மற்றொரு ஆபத்தான சம்பவத்தில் தாம் தப்பிய விவரத்தை ஐயரே சொல்லியிருக்கிறார்.

பாண்டிச்சேரியில் தேர்தல் சமயம். வழக்கம்போல ஊர் அல்லோல கல்லோலப் பட்டது. இரவு எட்டு மணி இருக் கும். ஐயர் தமது வீட்டில் உணவு அருந்திக்கொண்டிருந் தார். வெளியே ஒரு கும்பல் கூடியிருந்தது; மூடித் தாளிட் டிருந்த முன் கதவைப் பலமாக இடித்தார்கள். குடிவெறி

யில் சிலர் ஐயரைப் பற்றி மிரட்டலாகப் பேசினார்கள்; அவரை வெளியே வரும்படி கூச்சலிட்டு அழைத்தார்கள். ஐயருடைய கைக்குழந்தை சுபத்திரை தூளியில் தூங்கிக்கொண் டிருந்தாள். ஐயர் சட்டென்று உணவை முடித்து எழுந்தார். அவரும் அவருடைய மனைவியும் சேர்ந்து கனமான கல்லுரல் ஒன்றை முன்வாசல் கதவுக்குப் பின் புரட்டிப் போட்டார்கள். பாக்கியலட்சுமி அம்மாள் தைரியமாகக் கதவருகில் சென்று ஒரு துவாரம் வழியே வெளியே பார்த்தார். வெளியே இருபது முப்பது காலிகள் இருந்தார்கள். கள், சாராய நாற்றம் மூக்கைத் துளைத்தது. ஐயர் சொல்லியபடி, பாக்கியலட்சுமி அம்மாள், "ஐயர் சாப்பிட்டுக்கொண் டிருக்கிறார்; சீக்கிரம் வந்து விடுவார்" என்று உரக்கச் சொன்னார்.

காலிக் கும்பல் மகிழ்ச்சியுடன் 'இன்று ஐயர் நம்மிடம் அகப்பட்டுக் கொண்டார்' என்று எக்களித்துக் காத்திருந் தது. வீட்டுக்குள்ளே ஐயர் வீட்டின் கொல்லைப் புறத் துக்குப் போய், பின் சுவரில் ஏறி, அதன்மேல் நடந்து சென்று அடுத்த வீட்டுக்கு அடுத்த வீட்டில் குதித்தார்.

இனி நடந்தவற்றை ஐயரது வாக்கிலேயே கவனிப் போம்:

"அந்த மூன்றாம் வீட்டுக்கு ஒரு பள்ளிக்கூட உபாத்தி யாயர் புதிதாகக் குடி வந்திருந்தார். அவருக்குக் குழந்தை கள் இல்லை. பந்துக்களின் குழந்தை ஒன்றை அவர் வளர்த்துக்கொண் டிருந்தார். நான் அவர் வீட்டின் பின் கதவை மெள்ளத் தட்டினேன். அவரது சம்சாரம் கதவைத் திறந்தாள். என்னைப் பார்த்துக் கூச்சலிடும் சமயம், 'அம்மா,' தயவு செய்து கூச்சலிட வேண்டாம். என் வீட்டை இருபது இருபத்தைந்து பேர்கள் முற்றுகை போட்டிருக்கிறார்கள். இளம் குழந்தை, என் அகத்துக்காரி இவர்களுக்குக் கொஞ்சம் இடம் கொடுக்கவேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்' என்றேன்.

"உடனே அந்த அம்மாள், தம் புருஷனையும் அழைத்துக் கொண்டு, அவர்களது வீட்டுச் சின்னச் சுவரண்டை நின்றார்கள். நான் என் வீட்டுக்குத் திரும்பினேன். அங்கே

முன் வாசல் கதவை ஒருவர் மாற்றி ஒருவர் தட்டிக் கொண்டிருந்தார்கள். குழந்தை அந்த ஓசை கேட்டு, அழுகிறது. பாக்கியம் ஒன்றும் செய்யத் தோன்றாமல் தத்தளித்தாள். முதலில் குழந்தையைச் சமாதானம் பண்ணும்படி சொன்னேன். குழந்தை கொஞ்சம் தூங்கியதும், அதை எடுத்துக்கொண்டு, சுவரைத் தாண்டி மூன்றாம் வீட்டை அடைந்து, அந்த அம்மாளிடம் கொடுத்தேன். அவள் குழந்தையை மார்போடு அணைத்துக் கொண்டு உள்ளே சென்றாள். பாக்கியத்தால் சுவர் ஏற முடியவில்லை. உடம்பு ரொம்பப் பலவீனம். அவளையும் அப்படியே தூக்கிக்கொண்டு, மெல்ல, ஓசைப்படாமல் அவர்கள் வீட்டில் கொண்டுபோய்ச் சேர்த்தேன். என்னை எல்லோரும் அங்கேயே இருந்துவிடும்படி சொன்னார்கள். நான் மறுபடி என் வீட்டுக்குத்திரும்பி, என் பெட்டியையும் மதாம் காமாவின் படத்தையும் மூன்றாம் வீட்டில் சேர்த்தேன்.

"பிறகு நான் மீண்டும் என் வீட்டிற்குத் திரும்பி, என் கைத்துப்பாக்கியைக் கையில் எடுத்துக்கொண்டு, வீட்டின் மொட்டை மாடிக்குச் சென்றேன். அங்கிருந்து, கீழே நின்ற குடிகாரக் கும்பலைப் பார்த்தேன். கையை மேலே தூக்கி வானத்தில் மூன்று வேட்டுகள் விட்டேன். துப்பாக்கி வெடிச் சத்தம் கேட்ட மாத்திரத்தில், கும்பல் நடுங்கிப் போய் ஓட்டமெடுத்தது. அன்று ஏற்பட்ட நெருக்கடி இவ்வாறு முடிந்தது."

மறுநாள் ஐயரும் ஸ்ரீநிவாசாச்சாரியும் ஃபிரெஞ்சிந்தியா கவர்னர் துப்ரேயிடம் ஒரு மனு சமர்ப்பித்தார்கள். இந்த மாதிரிச் சம்பவங்களுக்கெல்லாம் பிரிட்டிஷ் இந்தியப் போலீஸின் கைக்கூலிகளே காரணம் என்றும், பகிரங்கமான அரசியல் வாழ்வு வாழ்ந்துவரும் தங்களது பெயர்களை நோட்டீஸில் ஒட்டி, தங்களைப் பிடித்துத் தந்தால் வெகுமதி கிடைக்கும் என்று பிரிட்டிஷ் இந்தியப் போலீஸார் அறிவித்துள்ளதே இந்த மாதிரிச் சங்கடங்களுக்குக் காரணமாகிறது என்றும் தெரிவித்தார்கள்.

கவர்னர் தாம் ஏற்கனவே அந்த 'வெகுமதி' நோட்டீஸைத் தடை செய்துள்ளதாகவும், பாண்டிச்சேரியை விட்டுப் பிரிட்டிஷ் போலீஸாரை வெளியேற்றக் கொஞ்சகாலமாகும் என்றும் தெரிவித்தார். சுதேசிகள் பாதுகாப்புக்காக, அவர்களுடைய வீடுகளிலெல்லாம் இரண்டு காவலாட்களை அனுப்பிப் பாரா இருக்கச் செய்வதாகவும் கவர்னர் வாக்களித்தார். அவர் அவ்வாறே செய்யவும் செய்தார். சுதேசிகள் பயமின்றி இருக்க முடிந்தது.

இருந்த போதிலும், சில வாரங்கள் வரையில், ஐயர் ஸ்ரீநிவாசாச்சாரியாருடன் அவரது வீட்டிலேயே தம் மனைவி, குழந்தையோடு இருந்துவந்தார். ஸ்ரீநிவாசாச்சாரியாருடன் தங்கிய காலத்தை ஐயர் வீணடிக்காமல் உபயோகமான வழியில் பயன்படுத்தினர். ஃபிரெஞ்சுப் புரொபஸராக இருந்துள்ள ஸ்ரீநிவாசாச்சாரியாருடன் உட்கார்ந்து தமது ஃபிரெஞ்சு ஞானத்தை விருத்திசெய்து கொண்டு, போர்த் தந்திரங்கள் பற்றி நெப்போலியன் எழுதிய கடிதங்கள் கொண்ட ஒரு ஃபிரெஞ்சு நூலைப் படிக்கலானர். விரைவில் ஸ்ரீநிவாசாச்சாரியாரின் உதவியின்றியே இந்நூலைப் படித்து முடித்து, போர்க்கலை பற்றிய பிற ஃபிரெஞ்சு நூல்களையும் படிக்கத் தொடங்கினர் ஐயர்.

# 11. கிணற்றில் ஒரு ஜாடி

பாண்டிச்சேரிச் சுதேசித் தலைவர்களை முரட்டுத்தனமான வழிகளில் பிரிட்டிஷ் இந்தியாவுக்குள் கடத்திக் கொண்டுவரத் தாங்கள் செய்த முயற்சிகள் பலனற்றுப் போகவே, சென்னைப் போலீஸார் இதே காரியத்தை 'நாகரிகமான' வழிகளில் சாதிக்க முடியுமா என்று பார்த்தார்கள். காலிகளைக் கொண்டு ஐயர் முதலிய சுதேசிகளைப் பயமுறுத்த அவர்கள் முயன்றது, பொது மக்களிடையே சுதேசிகளுக்கு அனுதாபம் எழச் செய்து விட்டது. ஆதலால், இந்த முறைகளைக் கைவிட்டுவிட்டு, அரசாங்க மட்டத்தில் தங்கள் காரியத்தைச் சாதிக்க அவர்கள் முயன்றார்கள்.

பாண்டிச்சேரியிலிருந்த பிரிட்டிஷ் இந்தியப் போலீஸ் உயர் அதிகாரிகள் அடிக்கடி ஃபிரெஞ்சிந்தியா கவர்னரை பேட்டி கண்டு, சுதேசிகளைப் பற்றிப் பொய்யும் புளுகும் சொல்லி அவரது மனம் பேதலிக்கச் செய்தார்கள். சுதேசிகள் அராஜகவாதிகள் என்றும், எல்லா வெள்ளை யருக்கும், எல்லா அரசுகளுக்கும் விரோதிகள் என்றும் ஒரு சமயம் பிரசாரம் செய்தார்கள். ஆனால், ஃபிரெஞ்சிந் தியா கவர்னர் நீதிமான்; இதற்கு ஆதாரம் கேட்டார். ஆதாரம் தரப்படாததால், சுதேசிகளை நாடுகடத்த மறுத்துவிட்டார்.

சாதுரியம் கொண்ட போலீஸ் அதிகாரிகள் அடுத்தபடி வேறொரு தந்திரத்தைக் கையாண்டார்கள். சுதேசிகள் அனைவரும் ஃபிரெஞ்சிந்தியாவில் அந்நியர்களாதலால், இத்தகைய அந்நியர்கள் ஃபிரெஞ்சிந்தியாவில் வாழலாகா தென்று கட்டுப்படுத்தும் சட்டம் ஒன்றைக் கொண்டு வரச் செய்ய முயன்றார்கள். இத்தகைய மசோதா ஒன்றும் இவர்களது அனுதாபிகளால் கொண்டு வரப்பட்டது; இதை ஃபிரெஞ்சிந்தியா கவர்னர் தடுத்துவிடாமல்

மசோதா கொண்டுவர அனுமதி கொடுக்கும்படி பிரிட்டிஷ் இந்தியப் போலீஸார் செய்தார்கள்.

இது நடந்த சமயம், ஃபிரெஞ்சிந்தியாவின் நிலைமை தர்மசங்கடமானதாக இருந்தது. ஐரோப்பாவில் ஃபிரான்ஸின் பரம்பரை விரோதியான ஜெர்மனி பெரிய போருக்கு முழு மூச்சுடன் ஆயத்தம் செய்துகொண் டிருந்தது. உலகெங்கும் ஃபிரான்ஸின் செல்வாக்கைக் குறைப்பதில் கண்ணும் கருத்துமாக இருந்தது. ஃபிரான்ஸ் வசமிருந்த மொராக்கோ பகுதியில் அகாதிர் துறைமுகத்துக்குள்ளே ஜெர்மனி தன்னுடைய யுத்தக் கப்பல்களை அத்துமீறி அனுப்பிப் பெரிய களேபரத்தை உண்டாக்கியது. ஜெர்மன் ஆபத்தைச் சரிகட்டப் பிரிட்டனுடைய நட்பை நாடவேண்டி வந்தது. இதனால், பிரிட்டனுக்குச் சந்தோஷம் தரக்கூடிய நடவடிக்கைகளை ஃபிரெஞ்சு வெளிநாட்டிலாகா வரவேற்றது. இக்காரணத்தினால்தான், ஃபிரெஞ்சிந்தியா கவர்னர் புதுவையில் இருந்த, பிரிட்டிஷாருக்கு விரோதமான சுதேசிகள் பற்றிய மசோதாவைக் கொண்டு வர அனுமதி வழங்க நேர்ந்தது. இது பிரிட்டிஷாருக்குத் திருப்தியாயிருக்குமல்லவா ?

ஆனால் ஃபிரெஞ்சிந்தியச் சட்டசபையின் அங்கத்தினர்கள் பாண்டிச்சேரியிலுள்ள இந்திய தேசபக்தர்களை ஒரேயடியாய்க் கைவிட்டுவிட விரும்பவில்லை. சுதேசித் தலைவர்களும் தங்கள் நண்பர்கள் மூலமாக மசோதாவில் சில மாறுதல்களைக் கொண்டுவரச் செய்தார்கள். மசோதா சட்டமானால், சட்டம் வருவதற்கு ஒரு வருஷத்துக்கு முன்னதாக ஃபிரெஞ்சிந்தியாவில் வசித்து வந்துள்ளவர்கள் அங்கிருந்து வெளியேற வேண்டிய அவசியமில்லை என்றும், ஆனால் அவர்கள் ஐந்து கௌரவ மாஜிஸ்டிரேட்களிடமிருந்து கையெழுத்து வாங்கித் தங்களைப் பதிவு செய்துகொள்ள வேண்டும் என்றும் நிபந்தனை ஏற்பட்டது. சுதேசிகள் அந்த ஐந்து கையெழுத்துக்களை ஒரு நாளும் பெற முடியாது என்று நினைத்து, பிரிட்டிஷ் போலீஸார் இந்தத் திருத்தம் நிறைவேறுவதைத் தடுக்காமல் விட்டு விட்டார்கள். 'அந்நியர் சட்டம்' நிறைவேறிவிட்டது.

சுதேசிகள் உடனே தங்களைப் பதிவு செய்துகொள்வதில் கவனம் செலுத்தினார்கள். பிரிட்டிஷ் போலீஸாரோ மூன்றும் மனிதர்களால் கௌரவ மாஜிஸ்டிரேட்டுகள் எல்லாரையும் அணுகி அவர்கள் கையெழுத்துப் போடக் கூடாதென்று வற்புறுத்தியிருந்தார்கள்.

சுதேசித் தலைவர்கள் அரவிந்தர் இல்லத்தில் கூடினார்கள். என்ன செய்வதென்று ஆலோசனை செய்தார்கள். செய்வதறியாமல் கூட்டம் கலைந்தது. அவர்களுக்கு எதிர்பாராத உதவி கிடைத்து அவர்களது தொல்லைகளெல்லாம் மறுநாள் மாலைக்குள் தீர்ந்து போகுமென அவர்கள் கனவிலும் நினைக்கவில்லை!

இந்த அதிசயம் எப்படி நடந்தது என்று வ. ரா. விவரித்திருக்கிறார். அவர் சொல்கிறார்:

"'சரி! நாளைக்கு சாயங்காலம் பேசிக் கொள்வோம்" என்றார் பாரதியார். இரவு ஒன்பது மணியிருக்கும்; பாரதியார் வீட்டுக்குத் திரும்பிப் போனார். அப்போது அரவிந்தர் பங்களாவில் எனக்கு ஜாகை.

"'ஓய்' என்று என் பெயரைச் சொல்லிக் கூப்பிட்டு, 'நாளைக்குக் காலமே எட்டு மணிக்கு என் வீட்டுக்கு வாரும்' என்று சொல்லிவிட்டுப் பாரதியார் போய்விட்டார்.

"மறுநாள் காலையில் குறித்த நேரத்துக்கு நான் பாரதியாரின் வீட்டுக்குப் போனதும், 'புறப்படுவோமா?' என்றார் பாரதியார். முதல் நாள் இரவு பாரதியாரின் முகத்தில் காணப்பட்ட அதைரியம் இருந்த இடம் தெரியவில்லை.

"'எங்கே போகிறது?' என்றேன். 'கேள்வி கேட்காமல் கூட வரவேணும்' என்றார் பாரதியார்.

"இரண்டு பேரும் கலவை சங்கர செட்டியாரின் வீட்டுக்குப் போய்ச் சேர்ந்தோம். செட்டியார் நடுக்கூடத்தில் ஊஞ்சலில் உட்கார்ந்துகொண்டிருந்தார்.

"'சுவாமி' என்று எழுந்துநின்று கும்பிட்டார் செட்டியார்.

"'நீங்கள் எல்லோரும் இருந்தும் நாங்கள் புதுச்சேரியை விட்டுப் போகவேண்டுமா? புதுச்சட்டம், செய்திருப்பது உங்களுக்குத் தெரியுமோ, இல்லையோ?' என்றார் பாரதியார்.

"சட்டம் செய்யும் காலத்தில் செட்டியார் புதுச்சேரியில் இல்லை. அவர் சென்னைக்குச் சென்றிருந்தார். யாதொரு தகவலும் அவருக்குத் தெரியாது.

"பாரதியார் அந்நியர் சட்டத்தின் ஷரத்துக்களை எடுத்து விரிவாகச் சொன்னார். 'இவ்வளவுதானே?. . . ஐந்து பேர் கையெழுத்துக்களும் வாங்கித் தருகிறேன், பிரமாதமான காரியமில்லை. நானும் ஒரு கௌரவ மாஜிஸ்டிரேட்' என்றார் செட்டியார்....

"கையெழுத்தாகி, அன்று பிற்பகல் மூன்று மணிக்குள் அரவிந்தர், ஐயர், பாரதியார், ஸ்ரீநிவாசாச்சாரியார் மற்றும் நாங்கள் எல்லோரும் ஃபிரெஞ்சுப் போலீஸாரிடம் பதிவு செய்துகொண்டோம்.''

இத்துடன் சுதேசிகளின் தொல்லைகள் தீர்ந்தனவா? இல்லை. தற்சமயத்துக்குத் தங்கள் எண்ணம் பலிக்கவில்லையென்றாலும் சுதேசிகளை வெளியேற்றப் பிரிட்டிஷ் இந்தியப் போலீஸார் வேறு முயற்சிகளைக் கைக்கொண்டார்கள். சட்டசபை மூலம் ஆகாததை, மித்திரபேதத்தின் மூலம் சாதிக்க முயன்றார்கள். சுதேசிகள் ஃபிரெஞ்சுக்காரர்களுக்கும் விரோதமானவர்கள் என்று அவர்கள் நினைக்கச் செய்தாலென்ன? அப்படியொரு முயற்சி செய்தார்கள்.

1910-இல், பாரதியாரை ஆசிரியராகக் கொண்ட 'இந்தியா' பத்திரிகை வெளிவந்து கொண்டிருந்த சமயம், பிரிட்டிஷ் இந்தியப் போலீஸார் மயூரேசன் என்ற பாண்டிச்சேரி இளைஞனைத் தங்கள் கையாளாக்கிக் கொண்டு பலவிதப் பொய் புரட்டு அபாண்டங்களைச் சுதேசிகள் மீது சாட்ட முயன்றார்கள். மயூரேசனுக்கு இதற்காக நிறையப் பணம் தந்தார்கள். ஆனால், திருடர்கள் தங்களுக்குள் சண்டையிட்டது போல், மயூரேசனுக்கும் பிரிட்டிஷ் இந்தியப் போலீஸாருக்கும் ஏதோ சண்டை வந்துவிட்டது. மயூரேசன், அவர்கள் எப்படித் தன்னை உபயோகித்துப் பலவிதமான பொய்ப் புகார்களைச் செய்தார்கள் என்று 'இந்தியா' பத்திரிகைக்கு நீண்ட கடிதம் எழுதிவிட்டான். அதை அவர்கள் வெளியிட்டிருந்தார்கள்.

இப்போது, மூன்று வருஷத்துக்குப் பிறகு, அதே மயூரேசனையும், அவனது தகப்பனையும் வசம் செய்து, பாண்டிச்சேரியிலுள்ள சுதேசிகள் காளிக்கு வெள்ளையர் தலைகளைப் பலி கொடுக்கச் சதி செய்வதாக ஃபிரெஞ்சுப் போலீஸாரிடம் தெரிவிக்கச் செய்தார்கள். இதற்காகச் சுதேசிகள் கத்திகளுடன் காளிக்குப் பூஜை செய்வதாகவும், அவர்கள் வீடுகளைத் திடீரென்று சோதனைபோட்டால் இதற்கு ஆதாரங்கள் கிடைக்கும் என்றும், முக்கியமாக ஐயர் வீட்டுக் கிணற்றைச் சோதனை செய்ய வேண்டும் என்றும் ஃபிரெஞ்சுப் போலீஸாரிடம் மயூரேசன் சொன்னான். இது ஐயருக்கும் பிறருக்கும் தெரியாது.

இந்தச் சமயம், ஒரு நாள் காலையில், ஐயர் வீட்டு வேலைக்காரி கிணற்றில் நீர் இறைத்துக்கொண்டிருக்கும் போது கிணற்றில் ஒரு மூடிய ஜாடி மிதப்பதைக் கண்டாள். பில்லி சூனியத்துக்காக யாரோ என்னவோ செய்திருக்கிறார்கள் என்று வேலைக்காரி கூக்குரலிட்டாள். ஐயர் கிணற்றில் ஒரு கூடையைக் கட்டிவிட்டு ஜாடியை எடுக்க முயன்றார். ஜாடி கூடையில் வந்ததே தவிர, மேலே இழுக்கும்போது கீழே விழுந்தது. ஜாடியைச் சுற்றி ஒரு கயிறு கட்டியிருந்தது, கயிற்று நுனியில் ஒரு கல் இருந்தது. கிணற்றடியில் ஒரு பையனைக் கிணற்றுள் இறங்கச் சொல்லி, ஜாடிக் கயிற்றைத் துண்டித்து, ஜாடியை மேலே எடுத்தார்கள். யாரோ ஜாடியை மூடி, ஒரு கல்லைக் கட்டிக் கிணற்றுக்குள் போட்டிருக்க வேண்டும் என்று தெரிந்தது. ஐயர் ஸ்ரீநிவாசாச்சாரியாரிடம் அந்த ஜாடியை எடுத்துச் சென்றார். அவர்கள் பாரதியாரைக்கூட்டிக்கொண்டு மூடின ஜாடியுடன் கவர்னரிடம் போனார்கள். அங்கே ஜாடியைக் கவர்னரிடம் கொடுத்து, அது கண்டுபிடிக்கப்பட்ட விவரம் சொன்னார்கள். ஜாடியின் மூடி கெட்டியாகப் பற்றவைக்கப்பட்டிருந்தது. கவர்னர் மூடியை உடைத்துத் திறக்க வைத்தார். ஜாடியின் உள்ளே சில காகிதங்களும் ஒரு ரப்பர் ஸ்டாம்பும் இருந்தன. கையில் பல அரிந்த தலைகளைப் பிடித்திருக்கும் பயங்கரக் காளியின் படம் ஒன்று இருந்தது. ஒரு புரட்சிச் சங்கத்தின் அங்கத்தினராவதற்

கான நமூனக்கள் சில இருந்தன. அந்தப் புரட்சிச் சங்கத்தின் தலைவர் ஷாம்ஜி கிருஷ்ண வர்மா என்றும், உள்ளூரில் அதன் பிரதிநிதி ஸ்ரீநிவாசாச்சாரியார் என்றும் அந்த அச்சடித்த நமூனக்கள் கூறின. ஸ்ரீநிவாசாச்சாரியாரின் கையெழுத்து ரப்பர் ஸ்டாம்பு என்று ஒரு ரப்பர் ஸ்டாம்பு இருந்தது. அது அவரது கையெழுத்தல்ல. நீலகண்ட பிரம்மசாரி சங்கத்தில் சேர விரும்பிக் கொடுத்த விண்ணப்பம் ஒன்றும், அவர் சேர்க்கப்பட்டுள்ளதாக ஒரு நமூனவும் இருந்தன.

மயூரேசன் ஏற்கனவே கொடுத்திருந்த மனுவைப் பற்றிக் கவர்னருக்குத் தெரியுமோ என்னவோ, அவர் இந்தியத் தலைவர்களுடன் மனம் விட்டுப் பேசவில்லை. போலீஸாரிடம் புகார் செய்யுங்கள் என்றார். பாண்டிச்சேரியில் பிரிட்டிஷ் இந்தியப் போலீஸாரை அனுமதித்ததே இவ்வளவு வம்பு தும்புக்கும் காரணம் என்றும், பிரிட்டிஷ் இந்தியப் போலீஸாரின் விஷம வேலையே இது என்றும் சுதேசிகள் சொல்லிவிட்டு, கவர்னரிடம் விடை பெற்றார்கள்.

கவர்னர் விரும்பியபடியே, ஐயர் ஜாடி விஷயத்தைப் பாண்டிச்சேரி ஃபிரெஞ்சுப் போலீஸாருக்குத் தெரிவித்தார். ஐயர், பாரதி, ஸ்ரீநிவாசாச்சாரி மூவரையும் மறுநாள் மாஜிஸ்டிரேட் கோர்ட்டில் ஆஜராகும்படி போலீஸார் சொன்னார்கள்.

மறுநாள் கோர்ட்டில், மாஜிஸ்டிரேட் அவர்களிடம் ஒரு காகிதத்தைக் காட்டி, "நீங்கள் எல்லோரும் ஏதோ பயங்கரமான காரியத்தில் ஈடுபடச் சதி செய்துவருவதாய் எங்களுக்கு ஒரு மனு வந்திருக்கிறது. என்ன சொல்கிறீர்கள் ?" என்று கேட்டார்.

மனு கொடுத்தவர் யாரென்று ஐயர் முதலியவர்களுக்குத் தெரியாது. தங்களைப் பற்றிய கட்டுக்கதைகளெல்லாம் பிரிட்டிஷ் இந்தியப்போலீஸாரும், அவருடைய கைக்கூலிகளுமே கட்டிவிடுகிறார்கள் என்று ஐயர் பதிலளித்தார்.

"மனுவைக் கொடுத்தவர் பிரிட்டிஷ் இந்தியப் போலீஸாரோ அவர்கள் ஆட்களோ அல்ல. ஃபிரெஞ்சுப் பிரஜை

அவர். அவர் இப்போதுகூட இந்தக் கோர்ட்டில் ஆஜராகியிருக்கிறார்'' என்று சொல்லி, மயூரேசனையும் அவனுடைய தகப்பனாரையும் மாஜிஸ்டிரேட் சுட்டிக் காட்டினார்.

இதைக் கேட்டவுடன் ஐயரும் மற்றவர்களும் 'கொல்' என்று சிரித்தார்கள். ஸ்ரீநிவாசாச்சாரியார் சொன்னார்: ''இந்த நபரை எனக்கு நன்றாகத் தெரியும் இவன் பிரிட்டிஷ் இந்தியப் போலீஸாரின் கைக்கூலி. நெடுங்காலமாகவே இவ்வாறு இருந்துள்ளான். நான் முன்பு 'இந்தியா' பத்திரிகை நடத்திவந்த சமயமும் இதே போலப் பணம் வாங்கிக்கொண்டு பொய்க் கதைகள் கட்டிவிடுவான். இவனுடைய பேராசைக்குத் தகுந்தபடி பிரிட்டிஷ் போலீஸார் பணம் தரவில்லை. ஆகையால், இவன் திடீரென்று அவர்களுக்கு விரோதமாக மாறி, அவர்களுடைய சூழ்ச்சிகளை அம்பலப்படுத்தி எங்களுக்கு ஒரு கடிதம் எழுதினான். அந்தக் கடிதம் 'இந்தியா' பத்திரிகையில் வெளிவந்தது'' என்றார்.

இது உண்மைதானா என்று மாஜிஸ்டிரேட் மயூரேசனைக் கேட்டார். அவன் தான் ஏதுமே எழுதவில்லை என்றும், 'இந்தியா' பத்திரிகையில் அவர்களாக ஏதேனும் தன் பெயரில் வெளியிட்டிருக்கக்கூடும் என்றும் சொன்னான். ஸ்ரீநிவாசாச்சாரியார் நகைத்துக்கொண்டே, மயூரேசன் தன் கைப்பட எழுதின கடிதத்தையே பிற்பகலில் கோர்ட்டில் சமர்ப்பிப்பதாகச் சொன்னார். கோர்ட் கலைந்தது. ஆனால், சுதேசிகள் எல்லாருடைய வீடுகளையும் உடனே நன்றாகச் சோதனை செய்யும்படி மாஜிஸ்டிரேட் உத்தரவிட்டார். போலீஸார் நடத்திய சோதனையில் தவறான விஷயம் ஏதுமே கிடைக்கவில்லை.

பிற்பகலில் கோர்ட் கூடியபோது, ஐயரும் மற்றவர்களும் கோர்ட்டில் ஆஜராயிருந்தார்கள். மயூரேசனும், அவனது தகப்பனும் வரவில்லை. பொய் மனு கொடுத்ததற்காகத் தங்களைத் தண்டித்துவிடுவார்களோ என்று பயந்தார்கள் போலும்.

மயூரேசன் அத்துடன் நிற்கவில்லை. விசாரணை நடத்திய

மாஜிஸ்டிரேட் மீதே புகார் செய்து கவர்னருக்கு ஒரு மனு அனுப்பினான். இந்தியத் தலைவர்களுடன் ஒன்று சேர்ந்து, அவர் தன்னைப் பயமுறுத்தியதாயும், ஆகையால் தானும் தன் தகப்பனும் அநீதியாய்க் கைது செய்யப் படக் கூடுமெனப் பயந்து பிரிட்டிஷ் இந்தியாவிலுள்ள கடலூருக்குத் தாங்கள் போய்விடுவதாயும் மனுவில் மயூரேசன் சொல்லியிருந்தான்.

கவர்னர் தீர விசாரித்து மயூரேசனது மனுவை நிராகரித்தார்.

மாஜிஸ்டிரேட், சுதேசிகள் யாவரும் நிரபராதிகள் என்று தீர்ப்பளித்தார். கிணற்றில் போட்ட 'மர்ம ஜாடி' சம்பவமும் பிரிட்டிஷ் போலீஸாருக்கு அவர்கள் எதிர் பார்த்த பலனளிக்கவில்லை.

நிலைமை தனக்கு எதிராக மாறிவிட்டதை உணர்ந்த மயூரேசன் சிங்கப்பூருக்கு ஓடிப்போனான். அவன் வெகு நாளுக்குப் பாண்டிச்சேரிக்குத் திரும்பவேயில்லை.

# 12. அல்ஜியர்ஸுக்கு நாடுகடத்தலா?

பாண்டிச்சேரிச் சுதேசிகளை வெளியேற்றப் பலாத்கார முறைகளோ, சட்டபூர்வ வழிகளோ பலன் தரவில்லை. இனி, மேல்மட்டத்தில், அரசுக்கு அரசு உதவி என்ற வகையில்தான் நடவடிக்கை எடுத்துப் பார்க்க வேண்டும் என்று சென்னை அரசாங்கத்தார் நினைத்தார்கள். டெல்லிக் கும் லண்டனுக்கும் தந்திகள் பறந்தன. இந்தியாவிலுள்ள ஃபிரெஞ்சுப் பிரதேசங்களுக்குப் பதிலாக ஃபிரான்ஸுக்கு மேற்கிந்தியத் தீவுகளில் சில பிரதேசங்களைக் கொடுத்துப் பரிவர்த்தனை செய்துகொள்ளலாமென்று பிரிட்டிஷ் மந்திரிகள் பேசலானார்கள்.

ஃபிரெஞ்சு அரசும் இதற்குச் சம்மதித்த மாதிரி இருந்தது. பரிவர்த்தனை நடந்துவிடும் போலிருந்தது. பாண்டிச்சேரி யிலிருந்த சுதேசிகளுக்கு இது பெருங் கவலையை உண்டாக்கியது.

அரவிந்த கோஷ் பாரிஸிலிருந்த நண்பர்கள் லா போர்ட், பால் ப்ருஸன் இருவருக்கும் எழுதினார். பாரதியார் தமது நண்பர் பொன்னு முருகேசம் பிள்ளை யைத் தமது பாரிஸ் நண்பர்களுக்கு எழுதச் செய்தார். பாரிஸில் ஃபிரெஞ்சு மந்திரிசபை மாறும்போல் இருந்தது. தற்போதைக்கு விஷயத்தை ஒத்திப்போட வைத்து விட்டால், பின்னால் அது நடக்காமலே போகலாம். ஃபிரெஞ்சிந்திய மக்கள் ஃபிரான்ஸுடன் இருக்க விரும்பு கிறார்களே தவிர, பிரிட்டிஷ் ஆட்சிக்கு மாறச் சற்றும் விரும்பவில்லை என்று ஃபிரெஞ்சுத் தலைவர்களுக்கு எடுத் துரைக்கப்பட்டது.

பாண்டிச்சேரியில் ஒரு பொதுக்கூட்டம் நடந்தது. பாண்டிச்சேரி கைமாறுவதைத் தாங்கள் விரும்பவில்லை யென்று கண்டனத் தீர்மானம் ஒன்று நிறைவேறியது.

பாரிஸில் இருந்த ஃபிரெஞ்சு அன்பர்கள் பாண்டிச்சேரி மக்கள் சார்பில் தீவிர முயற்சி செய்தார்கள். நல்ல வேளை யாக இச்சமயம் ஃபிரெஞ்சு மந்திரிசபை மாறியது.

புதிய ஃபிரெஞ்சுப் பிரதமமந்திரி புவான்கரே, பாண்டிச் சேரியைக் கைவிடும் யோசனையைக் கடுமையாக எதிர்த் தார். கணீரென்ற குரலில், ஃபிரெஞ்சுப் பார்லிமென்டில் அவர் சொன்னார்: "ஃபிரெஞ்சுக் கொடி பறக்கும் எந்தப் பிரதேசத்தையும் வேறு எந்தப் பிரதேசத்துக்காகவும் நான் கைவிட மாட்டேன். ஃபிரெஞ்சு ரத்தம் சிந்தப்பட்ட நிலம் ஃபிரெஞ்சு மக்களுக்குப் புனிதமானது. ஃபிரெஞ்சுப் பிரதேசம் எதைக் கைவிடவும் ஃபிரெஞ்சு மக்கள் இசைய மாட்டார்கள். அதுவும், தூப்ளே சிலை நிற்கும் பாண்டிச் சேரியை விடவே மாட்டார்கள்."

பாண்டிச்சேரி மக்களுக்கும், சுதேசிகளுக்கும் இந்தப் பேச்சு பெரும் ஆறுதலாக இருந்தது.

ஆனால், பிரிட்டிஷ் இந்தியா அதிகாரிகள், தங்கள் கீழ் மட்டப் போலீஸ்காரர்களின் கட்டுக்கதைகளை நம்பிப் பாண்டியிலுள்ள சுதேசிகளைப் பற்றித் தொடர்ந்து கவலைப் பட்டு வந்தார்கள். அடுத்த ஒரு வருஷத்துக்குள் முதல் மகாயுத்தம் தொடங்கிவிட்டது (1914-இல்). ஜெர்மனியின் நீர்மூழ்கிக் கப்பல்கள் கடல்களில் அட்டகாசம் செய்தன. வங்காள விரிகுடாவில் ஜெர்மன் யுத்தக் கப்பல் 'எம்டன்' செய்த கெடுபிடி, சென்னையில் போட்ட சில குண்டுகள் எல்லாம் சேர்ந்து கரையோரமெங்கும் பீதியைக் கிளப்பின. ராயபுரத்தில் மண்ணெண்ணெய்க் கிடங்குகள் இரண்டு தீப்பிடித்து எரிந்தன; அணைக்கச் சில தினங்களாயிற்று. சென்னை ஜனங்கள் பயத்தால் ஊரைக் காலி செய்ய ஆரம்பித்தனர்.

பாண்டிச்சேரியிலுள்ள சுதேசிகள் 'எம்டன்' கப்பலுடன் தொடர்பு கொண்டிருப்பதாக ஒரு சரடைப் பிரிட்டிஷ் போலீஸார் கிளப்பிவிட்டார்கள். ஐயர் ஒரு சிறிய டெலஸ்கோப் வழியாகக் கடல் திசையில் 'எம்டன்' கப்பலும், அதனுடன் வேறு கப்பல்களும் வந்த சமயம் பார்த்துக்கொண் டிருந்தார். எவ்வித நோக்கமும் இன்றி

வெறுமனே பார்த்துக்கொண் டிருந்தாரே தவிர வேறில்லை. ஆனால், அரண்டவன் கண்ணுக்கு இருண்டதெல்லாம் பேய். பிரிட்டிஷ் இந்தியா அதிகாரிகள், இந்தியச் சுதேசிகளைப் பாண்டிச்சேரியிலிருந்து வெளியேற்றித் தொலை தூரத்தில் ஃபிரான்ஸ் வசமிருந்த வட ஆப்பிரிக்க நாடான அல்ஜியர்ஸுக்கு அனுப்பிவிடச் செய்தாலென்ன என்று புதிதாக முயற்சி செய்தார்கள். இதற்காக ஃபிரெஞ்சு அரசாங்கத்துடன் தொடர்பு கொண்டார்கள். இவ்வாறு செய்த முயற்சியும் பயனற்றுப் போயிற்று, சுதேசிகள் பாண்டிச்சேரியிலேயே தொடர்ந்து இருந்தவண்ணமிருந்தனர்.

கணகாணாத நாடொன்றிற்கு நாடு கடத்தப்படக் கூடும் என்ற அபாயம், தமிழுக்குப் பெரிய லாபமாக முடிந்தது. தம்மை நாடுகடத்திவிட்டால், தமது நினைவாக நல்ல இலக்கிய நூல் ஒன்றை விட்டுச் செல்லவேண்டுமென ஐயர் தீர்மானித்தார். இத்தகைய நூல் எவ்வாறு இருப்பது நலமென யோசனை செய்து, தெய்வத் திருமறையாம் 'திருக்குற'ளின் ஆங்கில மொழிபெயர்ப்புச் செய்துமுடிக்கத் தீர்மானித்தார் ஐயர்.

இந்த அல்ஜியர்ஸ் விவகாரத்தை ஐயரே, தமது குறள் ஆங்கில மொழிபெயர்ப்பான, "Kural or the Maxims of Tiruvalluvar" என்ற நூலின் இரண்டாவது பதிப்பில் விவரித்துள்ளார். அவர் கூறுகிறார் :

"முதல் மகாயுத்தம் ஆரம்பமான கொஞ்ச நாளில் 'எம்டன்' யுத்தக் கப்பல் வங்காள விரிகுடாவில் அட்டகாசம் செய்த சமயம். பாண்டிச்சேரியில் சுதேசிகளின் நடவடிக்கைகளைக் கவனிக்க நிறுத்திவைக்கப்பட்டிருந்த பிரிட்டிஷ் இந்தியப் போலீஸார், சுதேசிகளுக்கும் 'எம்ட'னுக்கும் தொடர்பு இருப்பதாய்க் காட்டினால் தங்களுக்கு உத்யோக உயர்வு கிடைக்குமென்ற நைப்பாசை கொண்டார்கள். இப்படி அவர்கள் சூழ்ச்சி செய்ததன் பயனாக, பாண்டிச்சேரிச் சுதேசிகளை வட ஆப்பிரிக்காவுக்கு நாடு கடத்தும்படி சென்னை அரசாங்கம் புதுச்சேரி ஃபிரெஞ்சிந்திய அரசாங்கத்துக்குச் சிபாரிசு செய்தது.

இதன் தொடர்பாக, ஃபிரெஞ்சுப் போலீஸார் ஐயர் உள்ளிட்ட சுதேசிகள் மீது பல குற்றச்சாட்டுகளைக் கொண்டு வந்தனர். அவை யாவும் விசாரணையில் தள்ளுபடியாயின. இருந்தபோதிலும், அப்போதிருந்த ஃபிரெஞ்சு கவர்னர் சுதேசிகளை வட ஆப்பிரிக்காவிலுள்ள அல்ஜியர்ஸுக்கு அனுப்பிவிடத் தீர்மானித்தார். ஆனால் அவர்களைத் தாம் கட்டாயப்படுத்தி வெளியேற்றியதாக இருக்கக் கூடாது என்று தோன்ற விரும்பினார் அவர். அதற்காக, சுதேசிகள் தாங்களாகவே அல்ஜியர்ஸுக்குப் போய்விட வேண்டும் என்றும், அப்படிப் போகாவிட்டால் என்ன நேருமென்று சொல்ல முடியாதென்றும் பயமுறுத்தினார். இந்தப் பேரங்கள் நாலைந்து மாதங்கள் நடந்தன...."

இந்தப் பேரம் துவங்கிய உடனே ஐயர், ஃபிரெஞ்சு அரசாங்கம் என்று வேண்டுமானாலும் தம்மை நாடுகடத்தி விடக் கூடுமாதலால், தமது அருமைத் தமிழ் நாட்டினின்று தமது உடல் வெளியேற்றப்பட்டாலும், தமது தமிழ்ச் சகோதரர்கள் நினைவில் தம் பெயர் பசுமையாக நிலைத்து நிற்க என்ன செய்யலாம் என்று சிந்தனை செய்தார்.

இந்த நிலைமையில் காலம் குறுகியதாக இருக்கையில் என்ன செய்வதென்று யோசித்து, தமிழ் இலக்கியத்தில் குறுகியதும் அதே சமயம் பரிபூர்ணமானதுமான குறளைத் தாம் ஆங்கிலத்தில் மொழி பெயர்த்து வைத்தால், தமது தமிழக மக்கள் நினைவில் தம் பெயர் தங்கும் என்று தீர்மானித்தார். அதன்படி அதிவேகமாக வேலையில் ஈடுபட்டார்.

*1914* நவம்பர் முதல் தேதி அவர் வேலை துவங்கினார். ஒவ்வொரு நாள் மாலையும் நாளை காலை வெளியேற்ற உத்தரவு வந்துவிட்டால் என்ன செய்வதென்று, அதிவேகத்தில் மொழி பெயர்ப்புச் செய்தார். தலைக்கு மேலே கத்தி தொங்குவது போல, ஆபத்து எந்த நிமிடமும் வருமென்று இருந்ததால் தினமும் கூடுமான அளவு அதிகமான குறள்களைச் செம்மையாக மொழிபெயர்த்து வைக்க முயன்றார். தம்முடைய வீட்டில் குற்றவாளி ஒருவன்

ஒளிந்துகொண் டிருக்கிருஞ என்று ஃபிரெஞ்சுப் போலீஸ் தமது வீட்டைச் சோதனையிட்ட சமயம்கூட அவர் தமது வேலையை நிறுத்தவில்லை; தமது அறையைச் சோதிக்கும் வரை பொறுத்தார்; அவர்கள் அப்பால் வேறு அறைகளைச் சோதிக்கப் போனதும் தமது மொழிபெயர்ப்பு வேலையைத் தொடர்ந்துவிட்டார். 1915-ஆம் ஆண்டு மார்ச் மாதம் 15-ஆம் தேதி, நூலின் முகவுரையின் கடைசி வரி பிரதியெடுக்கப்பட்டு, நூல் அச்சகம் போகத் தயாராக இருந்தபோது, அவர் அடைந்த மகிழ்ச்சிக்கு அளவில்லை.

திருக்குறள் பற்றி ஐயர் காலத்தில் அறிந்ததைவிட அதிகமாக இப்போது உலகம் அறிந்துள்ளது. தமது திருக்குறள் மொழிபெயர்ப்புக்கு ஐயர் அளித்த முகவுரை சிறப்பானது. ஐயர் கூறுகிருர்:

"இங்கே ஆங்கில மொழியில் தரப்பட்டுள்ள தமிழ்க் கவியைத் தமிழகத்துக்கு வெளியே வெகு சிலரே அறிவர். ஆனல் அக்கவியோ, தமது காலத்துக்கும் தமது நாட்டுக் கும் அன்றி, எல்லாக் காலத்துக்கும் எல்லா நாட்டினர்க் கும் பொருத்தமான தத்துவங்களை வெளியிட்டுள்ள பெருந்தகையாவர்... திருவள்ளுவர் தந்துள்ள நூல் உருவ அமைதி கொண்டது. சிந்தனை ஆழம் கொண்டது. கருத்து உயர்வு நிறைந்தது. நடத்தைக்கு இணையற்ற வழிகாட்டி யானது. உலகின் மதநூல்களைத் தவிரப் பிற நூல்களில் இதனுடன் ஒப்பிடத்தக்க நூல்கள் வெகு சிலவே. இதைத் தமிழ் மக்கள் 'தமிழ் வேதம், தெய்வத் திருமறை, உலகப் பொதுமறை' என்றெல்லாம் போற்றியுள்ளனர். இவ்வளவு உயர்ந்த இலக்கிய மணியானது இவ்வளவு காலம் பாரதத்தில்கூட எல்லாரும் அறியாமல் தமிழ கத்தில் அடங்கிக் கிடப்பது வருந்தத் தக்கது."

திருக்குறளின் பெருமையைப் பற்றிக் கூறுகையில், "நடத்தை பற்றிப் பேசினுலும் சரி, ராஜாங்கக் கொள்கை பற்றிப் பேசினுலும் சரி, வாழ்க்கையில் வெற்றி கொள் வதற்கான முறைகளைப் பற்றிப் பேசினுலும் சரி, அல்லது காதலர் நெஞ்சின் நடுக்கமுறும் சிந்தனைகளை வர்ணிப்ப தானுலும் சரி, திருவள்ளுவர் எதிலும் மனித நெஞ்சத்தின்

ஆழத்தை அளவிட்டுக் காட்டுகிருர். நீதியின் மேன்மையை இவரைவிட அதிக அழுத்தத்துடனே வன்மையுடனே மதாசாரியர்கள்கூட வற்புறுத்தியதில்லை. பீஷ்மரோ, கௌடில்யரோ (சாணக்கியரோ), கமந்தகனே, ராம தாஸோ, விஷ்ணு சர்மனே, மாக்கியவெலியோ அல்லது கொன்-புத்ஸனே ராஜாங்கம் நடத்துவது பற்றி இவரை விடச் சிறப்பாகப் புத்திமதி கூறிவிடவில்லை; வர்த்தக முன்னேற்றத்துக்கு இவரைவிடச் சிறந்த யுக்திகளை 'ஏழை ரிச்சர்டு' (பெஞ்சமின் ஃபிராங்கிலினுடைய படைப்பு) சொல்லிவிடவில்லை; காதலர் நெஞ்சத்தில் அலைமோதும் எண்ணங்களைத் திருமயிலையின் இந்தக் கீழ் வகுப்பு நெசவாளரைவிடக் காளிதாஸனே, ஷேக்ஸ் பியரோ ஆழ்ந்து துருவியெடுத்துக் காட்டிவிடவில்லை! இத்தகைய உலகப் பொதுத் தன்மை கொண்டது தமிழ் நாட்டில் பிறந்த, உலகத்துக்கே பொதுவான இந்த ஞானி யின் சிந்தனை . . .'' என்று ஐயர் விவரிக்கிருர்.

அல்ஜியர்ஸ் நெருக்கடி தாண்டிவிட்டது. இது ஒரு விதத்தில் ஐயர் வாழ்வில் புது வழி வகுத்தது எனலாம். திருக்குறள் மொழி பெயர்ப்பைத் தொடர்ந்து ஐயர் இலக்கியப் பணியில் திட்டவட்டமாக ஈடுபடலானுர். வருவாய்க்காகவும் சரி, தேசப் பணியாகவும் சரி, இரண்டு வகையிலும் பயன்படும்படி ஐயர் இலக்கியப் பணியில் முனைந்தார்.

ஏற்கனவே குறிப்பிட்டுள்ளது போல, பாண்டிச்சேரித் தபால் அதிகாரிகள் சுதேசிகளுக்கு வந்த கடிதங்களையும் மணியார்டர்களையும் கூட இடைமறித்து வந்ததால், சுதேசி கள் பிரிட்டிஷ் இந்தியாவிலிருந்து உறவினரிடமிருந்தும், அனுதாபிகளிடமிருந்தும் உதவிபெறப் பல தந்திரங்களைக் கையாளவேண்டியிருந்தது. சில சமயம் புத்தகங்களின் கெட்டி அட்டைக்குள் ரூபாய் நோட்டு வைத்து வரும்; சில சமயம் ரூபாய்க் காசுகள் வேறு பொருள்களில் கலந்து வரும். பாரதி, ஐயர், ஸ்ரீநிவாசாச்சாரியார் முதலியவர்களின் நெருங்கிய நண்பராக இருந்த ஆறுமுகம் செட்டியார் என்ற வர்த்தகர், தாம் பிரிட்டிஷ் இந்தியாவி

லிருந்து நெய் தருவிப்பாரென்றும், அந்த நெய் டின்களில் நெய்க்குள்ளே ரூபாய்க் காசுகள் போட்டு வரும் என்றும் இந்நூலாசிரியரிடம் தெரிவித்துள்ளார்.

பாரதிக்கும் ஐயருக்கும் இக்காலத்தில் நூல்கள் வெளி யாகி விற்பனையாவதில் கிடைக்கும் வருவாய் முக்கிய வருவாயாக இருந்தது. பாரதியின் 'கண்ணன் பாட்டு' சென்னையில் ஒரு நண்பரால் வெளியிடப்பட்டது; ஐயர் தமது குறள் ஆங்கில மொழி பெயர்ப்பைத் தாமே அச் சிட்டு வெளியிட்டார். தமது நூல்களின் விற்பனைக்காகக் 'கம்ப நிலையம்' என்ற நிறுவனத்தைத் தோற்றுவித்தார். சிறிது காலத்துக்குப் பிறகு, ஸ்ரீநிவாசாச்சாரியாரையும் பாகஸ்தராகச் சேர்த்துக்கொண்டு அவரது நூல்களையும் 'கம்ப நிலையம்' வெளியிட்டது.

'கம்ப நிலைய' வெளியீடுகளில் முதலாவதாக வெளிவந் தது, 'கம்பராமாயணம் – பால காண்டம்' பதிப்பாகும். 'பால காண்டம்' கவிதைகளை ஐயர் தேர்ந்தெடுத்ததும், பதிப்பித்ததும், நூலுக்கு அவர் அளித்த முகவுரையும், ஐயருக்கு இலக்கியத்தில் உள்ள ஆழ்ந்த பற்றுதலும், புலமையும், விமர்சனத்தில் உள்ள திறனும், சாதாரண வாசகரும் கம்பன் காவிய நயங்களை அனுபவிக்கும்படி செய்யும் திறமையும் நன்கு புலப்படும்படி செய்தன.

அடுத்து வெளியானது ஒரு சிறுகதைத் தொகுதி–தமிழில் வெளிவந்த முதற் சிறுகதைகள் என்றும், முதல் சிறுகதைத் தொகுதி என்றும் இது போற்றப்பட்டுள்ளது. 'மங்கை யர்க்கரசியின் காதல் முதலிய கதைகள்' தமிழ் மக்களின் பண்டை வீரத்தை நினைவுபடுத்தும் வகையில் மேற் கொள்ளப்பட்டதாக ஐயர் நூலின் முகவுரையில் கூறு கிறார். அவர் சொல்கிறார்:

"மங்கயர்க்கரசியின் காத'லும், 'காங்கேய'னும், கயேலிக் (ஐரிஷ்) மகாகவியான ஒஸ்ஸியனுடைய காவியங்களின் பந்தாவில் எழுதப்பட்டிருக்கின்றன. இவை தமிழ் நாட்டுப் பழைய வீரத்தன்மையையும் பழக்க வழக்கங் களையும் ஒருவாறு விளக்கிக் காட்டும். 'அழேன் முக்கே' யின் சரித்திரம் இந்த லோக யுத்தத்தில் நிகழ்ந்த ஓர்

உண்மைக் கதை. 'கமல விஜயம்' என்பது இந்த யுத்தத்தில் நடந்ததாகக் கற்பித்தெழுதிய கதை."

இந்நூலில் வீரம், காதல், பிரிவு முதலிய பலவித ரஸங்களில் சம்பவங்கள் உள்ளன. 'அனார்க்கலி' என்பது வரலாற்றுக் கதை; 'லைலா மஜ்னு' பாரசீக கவி நிஜாமியிடமிருந்து எடுத்தாளப்பட்ட கதை; 'எதிரொலியாள்' கிரேக்கப் புராணத்திலிருந்து எடுத்தது. ஆனால் நூலுக்கு அழியாப் புகழ் தந்தது, நூலின் கடைசியில் வெளியாகியுள்ள 'குளத்தங்கரை அரசமரம்' என்ற கதையேயாகும். இதைப் பற்றி, ஐயர் தமது முகவுரையில் சொல்கிறார் :

"கடைசி கதையானது எங்கள் ஊர்க் குளத்தங்கரை அரசமரத்தால் சொல்லப்பட்டது. அது நன்னூல் முதலிய இலக்கணங்கள் படித்ததில்லை. கிட்டத்தட்ட அது பேசிய படியே எழுதியிருக்கிறேனாதலால் படிப்போர் அக்கதையில் செந்தமிழை எதிர்பார்க்க மாட்டார்கள் என நம்புகிறேன். இக்கதையைப் படிப்போர் ருக்மிணியை மறவாமல் நினைத்துக்கொண்டிருப்பார்கள் என்று பூரணமாய் நம்புகிறேன்."

சிறுகதை லட்சணம் என்னவென்பதையும் ஐயர் குறிப்பிடுகிறார். "கதைகள் கவிதை நிரம்பியவையாய், ரஸ பாவோபேதமாய் இருக்க வேண்டும் என்பது எனது அபிப்பிராயம்" என்கிறார் அவர்.

ரவீந்திரநாத டாகுரின் 'காபூலிவாலா' கதையையும் ஐயர் தமிழில் தந்துள்ளார்.

'சந்திரகுப்த சக்கரவர்த்தி சரித்திரம்' என்ற சிறு நூல் இரண்டு பதிப்புகள் விரைவில் வெளிவந்தது. இந்த நூலை எழுதி வெளியிட்ட நோக்கம் பற்றி ஐயர், நூல் முகவுரையில், "நம் ஆரிய ஜாதியின் மகாவீரர்களின் சரித்திரங்களை ஒவ்வொன்றாக எழுதி வெளிப்படுத்த வேண்டும் என்கிற உத்தேசத்துடன்" இந்நூலை எழுதியுள்ளதாகத் தெரிவிக்கிறார், சந்திரகுப்தனுடைய வீரம், ஆட்சி முறை, காலம் முதலிய பல விஷயங்கள் எளிய நடையில் இந்நூலில் தரப்பட்டிருந்தன.

'நீக்ரோ மகான் புக்கர் டி. வாஷிங்டன்' என்ற நூல், அமெரிக்காவில் அடிமையாக இருந்து கல்வியாளராகி, அலபாமாவில் 1881–இல் டஸ்கஜீ இன்ஸ்டிட்யூட் என்ற புகழ் பெற்ற கல்வி நிலையத்தை நிறுவிய நீக்ரோ தலைவர் புக்கர் டி. வாஷிங்டனின் சரிதமாகும். டஸ்கஜீ இன்ஸ்டிட்யூட் நீக்ரோ கல்வியில் ஒரு ஒளிவிளக்காக விளங்கியது. இங்கே கையாளப்பட்ட செயல்முறைக் கல்வி ஏற்பாடுகளை ஐயர், பின்னர், 1922-23–இல் சேரன் மாதேவியில் தாம் அமைத்த 'தமிழ்க் குருகுல'த்தில் கையாண்டார். புக்கர் வாஷிங்டனது கல்விக் கொள்கை மகாத்மா காந்தியடிகளின் 'வர்தா கல்வித் திட்டம்' (பின்னர் 'ஆதாரக் கல்வித் திட்ட'மாகியது) போன்றது.

'கம்ப நிலையம்' வெளியிட்ட கடைசி நூல், 'தன்னம்பிக்கை' என்ற எமர்ஸன் கட்டுரையாகும். அமெரிக்க மகாபண்டிதன் எமர்ஸனுடைய கட்டுரைகளில் சிறந்தது 'Self Reliance' என்ற கட்டுரை. அதற்கு, விளக்கங்களுடனும், பல இந்திய மேற்கோள்களுடனும் ஐயர் செய்த தமிழாக்கம் சிறப்பானது. பத்தொன்பதாம் நூற்றுண்டின் சிந்தனையை மெருகிட்ட எமர்ஸன், கார்லைல், ரஸ்கின் என்ற மூவரையும் ஒப்பிட்டு, "கார்லைல் எழுதுவதானது உலகம் அனைத்தையும் பள்ளிக்கூட மாணுக்கராகவும் தன்னை அவர்களுக்குப் போதிக்கும் உபாத்தியாயனுகவும் பாவித்து எழுதுவது போல் இருக்கும். . . ரஸ்கினுடைய நடை மிக அழகானது. ஆனுல் அவனுடைய அறிவு பெண் சுபாவமுள்ளது. . , எமர்ஸனிடத்திலோ காம்பீர்யம் ஆவேசமான உரப்புதலின்றியும, சொல்நயம் பிரௌடதிக்கு இடையூறின்றியும் மலிந்திருக்கும்" என்று கூறுகிருர்.

எமர்ஸன் மகாபண்டிதன்; உலகத்தின் மேலான நூல்கள் அனைத்தையும் படித்துக் கிரகித்தவன். நமது வேத புராணங்கள், மனுதர்மம், கீதை, ராமாயணம், பாரதம், சாகுந்தலம், முகம்மதியரின் குரான்ஷரீஃப், யூதருடைய வேதமான தால்மூது, கிறிஸ்தவ வேதமான விவிலியம், கிரேக்க, ரோம, பாரஸீக, அராபிய, பிறநாட்டு நூல்கள்

யாவற்றையும் அறிந்தவன் எமர்ஸன். அத்தனை நூல்களினின்றும் அவன் மேற்கோள் காட்டுவது இதைக் காட்டும் என்கிறார் ஐயர்.

''எமர்ஸன் தன் ஆயுள் முழுவதிலும் செய்து வந்த உபதேசங்களின் சாராம்சம் அனைத்தும் இந்தத் 'தன்னம்பிக்கை' என்னும் வியாசத்தில் பொதிந்து கிடக்கிறது... தமிழ் மக்கள் விரும்பினால் எமர்ஸனது பிற வியாசங்களையும் தமிழில் தருவ''தாக ஐயர் சொன்னார். ஆனால் 'சந்திரகுப்தன்' விற்றதுபோல 'எமர்ஸன்' விற்கவில்லை.

பாண்டிச்சேரியில் இதே காலத்தில் வாழ்ந்த பாரதியார் தமது அரிய காவியமான 'பாஞ்சாலி சபத'த்தை வைத்துக் கொண்டு அதை வெளியிட முடியாமற் தவித்ததையும், முடிவில் கைக்கு வந்த ஒரு தொகையைக் கொண்டு நூலின் முதல் பாகத்தை அச்சிட்டுவிட்டு அதை விற்க முடியாமல் தவித்ததையும் பார்க்கும்போது ஐயர் தமது நூல்களை ஓரளவேனும் விற்க முடிந்ததற்குச் சந்தோஷப் பட வேண்டும் என்று தோன்றுகிறது.

பாண்டிச்சேரியில் ஐயர் பிரசுரித்த நூல்களில் மணியான ஒரு நூல் நமக்குக் கிடைக்காமற் போய்விட்டது. அது தான் 'நெப்போலியன்' என்ற நூல். இந்நூலை எழுதுவதற்கென ஃபிரெஞ்சு மொழியில் நெப்போலியனது கடிதங்களை ஐயர் படித்த விவரம் முன்பே கண்டோம். இந்நூல் பிரிட்டிஷ் அரசால் பறிமுதல் செய்யப்பட்டு அழிக்கப் பட்டது. இதன் பிரதி எங்கும் கிடைக்காதது துரதிர்ஷ்டமே.

'அகஸ்தீன் முனிவரது விண்ணப்பம்', 'பிரயோக இலக்கணம்' என்ற சிறு நூல்கள் அக்காலத்திய பத்திரிகைகளில் தொடர்ந்து வெளிவந்தன. 'அகஸ்தீன்' சுப்பிரமணிய சிவாவின் 'ஞானபாநு' பத்திரிகையிலும், 'பிரயோக இலக்கணம்' வித்வான் பங்காரு பத்தரை ஆசிரியராகக் கொண்டு புதுச்சேரியிலிருந்து வந்த 'கலைமகள்' என்ற பத்திரிகையிலும் தொடர்ந்து வெளிவந்தன. இவை நூலாகவில்லை.

# 13. காந்திஜியால் மனமாற்றம்

பாரிஸ்டர் மோகன்தாஸ் கரம்சந்த் காந்தி தென் ஆப்பிரிக்காவை விட்டு, இந்தியாவுக்கு 1915–ஆம் ஆண்டு ஜனவரி 9–ஆம் தேதி வந்து சேர்ந்தார்.

முதல் மகாயுத்தம் நடந்துகொண் டிருந்த காலம். இந்தியாவில் அரசியல் தேக்க நிலைமை கண்டிருந்தது.

இந்தியாவில் வந்து சேர்ந்ததும் காந்தி சுதேச உடை தரிக்கலானார். வேஷ்டி, ஜிப்பா, பெரிய காத்தியவாடு முண்டாசு, மேலே ஓர் அங்கவஸ்திரம்.

தமது குருநாதர் கோக்கலேயின் யோசனைப்படி, தாம் கொஞ்சகாலம் நாட்டைச் சுற்றிப் பார்த்து, நிலைமையை நன்கு அறிந்த பின்னரே அரசியலில் ஈடுபடப் போவதாகத் தெரிவித்தார். இவ்வாறு இரண்டாண்டுகள் அவர் ஒதுங்கி யிருந்தார்.

கோக்கலேயும் காந்தியும் இருவருமே, காந்தி இந்திய ஊழியர் சங்கத்தில் சேருவதை விரும்பினார்கள். ஆனால் சங்கத்தில் இருந்த பிறர், காந்தியின் செயல்முறைகள் சங்கத்தின் முறைகளுக்கு ஒத்து வருமா என்று தயங்கினார் கள். தாற்காலிக அங்கத்தினராக ஏற்கப்பட்ட காலத்தில் காந்தி, கழிவறைகளைச் சுத்தம் செய்யும் பணியில் ஈடு பட்டார். சங்க அங்கத்தினர்கள் அதிர்ச்சியடைந்தனர். கோக்கலே, காந்தியிடம், இந்த வேலையை விட்டுவிடச் சொல்லி, இந்தியாவைச் சுற்றிப் பார்த்து வருமாறு யோசனை சொன்னார்.

காந்தி பம்பாய், புனா, காத்தியவாடு, சாந்தி நிகேதனம் (வங்காளம்), ரங்கூன, ஹரித்துவார், ரிஷீகேசம் முதலிய இடங்களுக்குப் போய்விட்டு 1915 ஏப்ரல் மாதம் சென்னை வந்து சேர்ந்தார். காந்தியின் வரலாற்று நூலில் டெண்டுல்கர் என்ற ஆசிரியர் கூறுகிறார்: ‘‘காந்தியும்

கஸ்தூர் பாவும் ஏழைக் கிராமவாசிகள் போல் கையில் மூட்டையுடன் மூன்றும் வகுப்புப் பெட்டி ஒன்றிலிருந்து இறங்கினுர்கள். சென்னை நகரின் பிரமுகர்கள் பலர் பிளாட்பாரத்தில் அவரை வரவேற்று மாலை அணிவித்தார் கள். கூட்டம் கோஷமிட்டு அவரை வாழ்த்தியது. ஜி.ஏ. நடேசன் வீட்டில் காந்தி தங்கினுர். அவருக்கு அளிக்கப் பட்ட அறையில் இரண்டு கட்டில், ஒரு நாற்காலி, ஒரு மேஜை, ஒரு சாய்வு மேஜை – இவையே இருந்தன. குறைந்த அளவு வசதிகள்தான். ஆனுல், காந்தியோ இவை செல்வத்தின் சின்னங்கள் என்று கருதினுர்; அவை யாவும் அப்புறப்படுத்தப்பட்டன.”

விக்டோரியா பப்ளிக் ஹாலில் சென்னை மக்கள் சார்பில் ஒரு வரவேற்பு நடந்தது. தென்ஆப்பிரிக்கா பற்றிய இந்திய சங்கத்தின் செயலாளரான ஜி. ஏ. நடேசன் வரவேற்புரை வாசித்தார். வக்கீல்கள் விருந்து, ஒய். எம். சி.ஏ. யில் கூட்டம், அடையாற்றில் பரந்த ஆலமரத்துக்கு அடியில் பெஸன்ட் அம்மையார் அளித்த தேநீர் விருந்து இவையும் நடந்தன.

சென்னையை விட்டுக் கிளம்பி, காந்தி தென்இந்தியா வில் ஒரு மாதம் பயணம் செய்தார். பாண்டிச்சேரிக்கும் வந்தார். அங்கே அவர் ஸ்ரீ அரவிந்தரைச் சந்திக்க விரும்பி ஞராம்; அரவிந்தர் சந்திக்க மறுத்துவிட்டார். காந்தியும் ஐயரும் மீண்டும் சந்தித்தார்கள். காந்தியும் பாரதியும் சந்திக்கவில்லை.

அரவிந்தர் அரசியலில் கலக்க விரும்பாததால் காந்தி விரும்பியபடி அவரைச் சந்திக்க மறுத்துவிட்டார் போலும். பாரதியாரைப் பொறுத்த மட்டில், பாரதியார் காந்தியை 1919-இல்தான் முதல் தடவையாகச் சென்னையில் சந்திக்கிருர். 1909 முதலே காந்தியைப் பாராட்டியுள்ளவர் பாரதி. தென்ஆப்பிரிக்கச் சத்தியாக்கிரகத்துக்கு நிதி வசூலித்து அனுப்பியவர் அவர். காந்தியை, கன்றுக்குப் பால் தருவதற்காக வீடு சென்று, வாக்குப்படி புலி யிடம் இரையாவதற்குத் திரும்பி வந்த பசுமாட்டுடன் ஒப்பிட்டு ‘இந்தியா’ பத்திரிகையில் சித்திரத்துடன்

விளக்கம் எழுதியுள்ளவர் பாரதி. பலாத்கார முயற்சிகளை அடியோடு வெறுத்தவர் அவர். அப்படிப்பட்ட பாரதி *1915*-இலேயே பாண்டிச்சேரியில் காந்தியைச் சந்திக்க முடியாமல் போயிற்றென்பது அதிசயமே.

*1909*-க்குப் பிறகு காந்தியை இரண்டாவது தடவையாகச் சந்தித்த ஐயர், ஒரு வேளை தாமாக வலியக் காந்தியைத் தேடிப் போனாரோ என்னவோ தெரியாது. காந்தி மனிதரில் உயர்ந்தவர் என்ற எண்ணம் ஐயருக்கு இருந்திருக்கவேண்டும். அவ்விருவரும் சந்தித்தார்கள். ஐயர் அப்போதும் பலாத்காரவாதியேதான். அவர்கள் என்ன பேசினார்களோ தெரியவில்லை; ஆனால் ஐயர் அடியோடு மனம் மாறிவிட்டார்! பரிபூர்ண காந்தீயவாதி ஆகிவிட்டார்.

துப்பாக்கி எடுத்த கை தக்ளி எடுத்தது. கொலைக்கு அஞ்சாத ஐயர் சாந்த ஸ்வரூபியானார்.

*1923–25*-இல் சேரமாதேவி குருகுலத்தில் ஐயருடன் உழைத்த இளம் கவிஞர் சுத்தானந்த பாரதி. ஐயரைப் பற்றிச் சுத்தானந்தர் *1947*-இல் எழுதியுள்ள நூலில், காந்தியின் அஹிம்ஸா மார்க்கமே மார்க்கம் என ஐயர் ஏற்றுக் கொண்டதாகச் சொல்கிறார்.

தாம் மகாத்மா காந்தியைப் பாண்டிச்சேரியில் சந்தித்தது பற்றி ஐயர் தம்மிடம் சொன்னதாகச் சுத்தானந்த பாரதியார் கூறுவதாவது: " 'தென்ஆப்பிரிக்காவில் காந்தி பெற்ற வெற்றியைக் கண்டேன். அப்போதே அவரிடம் பற்றிருந்தது. லண்டனில் அவரைப் பார்த்தபோது சத்தியவான், தேஜஸ்வி என்று நினைத்தேன். அப்போது கத்தியில் நம்பிக்கையிருந்த காலம். அதற்கு மேல் ஆத்ம சக்தியொன்று உண்டென்று மகாத்மா விளக்கினார். தமது சாத்விக எதிர்ப்பைப் பற்றியும் யோசிக்கத் தூண்டினார். அதில் நம்பிக்கை வரப் பத்தாண்டுகள் ஆயின. மகாத்மாவின் வழியால் ரத்தம் சிந்தாது நமது காரியம் முன்னேறும் எனத் தெரிந்ததும் மனம் அவரையே தலைவராகப் பின்பற்றியது. மகாத்மா இணையற்ற தலைவர்!' என்று ஐயர் ஒருமுறை சொன்னார். ஆனால் பிற்காலம்,

'நாட்டின் பாதுகாப்பிற்கு ஆயுதபலம் இல்லாமல் தீராது; அதையும் நாம் வளர்க்கவேண்டும். இந்தக் கன்னத்தில் அடித்தால், அந்தக் கன்னத்தையும் காட்டும் காலம் மலையேறியது. பலவானுக, தீரனுக, தருமவானுக இருக்க வேண்டும்' என்றுர். ''

தமது வாழ்வின் இறுதி ஆண்டுகளில் தமிழ்ச் சமுதாயத்தில் உள்ள பிரிவுகளை நீக்க, 'சீக்கியர்களைப் போன்ற' ஜாதியற்ற, ஐக்கியமான, ஒற்றுமை நிறைந்த ஒரு புதிய சமுதாயத்தை உருவாக்க வேண்டும் என்று ஐயர் ஓயாமல் சொல்லிக்கொண் டிருந்தார். வலிமையுள்ள, துணிவு மிக்க, தேசபக்தி நிறைந்த, நாட்டுக்கு உயிரையே தரக் கூடிய சமுதாயம் உருவாகவேண்டும் என்பது ஐயரது விருப்பம்.

1915 -இல் ஐயர் அஹிம்ஸாவாதியாக, காந்தி பக்தராக மாறியது பலருக்கு வியப்பளித்தது. அஞ்சா நெஞ்சம் படைத்த புரட்சிவீரரான அவர், 1911 -இல் கலெக்டர் ஆஷ் கொலைக்கு ஏற்பாடு செய்த அவர், திடீரென அஹிம்ஸாவாதியாக மாறிவிட்டது ஆச்சரியமான செய்தியாக இருந்தது. ஆனல், ஐயரது எழுத்துக்களைப் பார்ப்போமானல், பயங்கர இயக்கப் புரட்சியாளரான ஐயர் படிப்படியாகத் துப்பாக்கிக்குப் பதிலாகப் பேனவை மதித்து, மக்கள் மனத்தைப் படிப்படியாக மாற்றியமைக்கும் அமைதியான வழியை மேற்கொள்ள ஆரம்பித்துள்ளது தெரியவரும்.

ஐயரது மனத்தில் என்னதான் மாறுதல் ஏற்பட்டிருந்தாலும் அரசாங்கம் மட்டும் அவர் அபாயம் இல்லாதவர் என்றே, அபாயம் குறைந்தவராகக் கூடவோ ஏற்க விரும்பவில்லை. இந்தியாவில் பயங்கர இயக்கம், புரட்சிச் சதிகள் முதலியவை பற்றி விரிவாக விசாரணை செய்த ரவுலட் கமிட்டி, 1918-இல் வெளியிட்ட தனது அறிக்கையில், பாண்டிச்சேரியில் நடந்த இத்தகைய நடவடிக்கைகள் எல்லாவற்றிற்கும் ஐயரே காரணமாக இருந்தார் என்று ஐயமற்றத் தெரிவிக்கிறது.

ரவுலட் கமிட்டிக்கு நீதிபதி எஸ். ஏ. டி. ரவுலட் தலைமை வகித்தார். இந்திய அரசாங்கம் இக்கமிட்டியை நியமித்திருந்தது. இந்தக் கமிட்டி இந்தியாவெங்கும் அதிகாரிகளை விசாரித்து, தனது அறிக்கையை 1918 ஜுலை மாதம் வெளியிட்டது. இந்த அறிக்கை வந்த ஒரு வாரத்தில் மாண்டேகு-செம்ஸ்ஃபோர்டு சீர்திருத்தங்கள் அறிவிக்கப்பட்டன. பயங்கர இயக்கத்தையும் புரட்சி நடவடிக்கைகளையும் ஒடுக்க, இந்தியாவில் தண்டனைக் கொப்பத் தடுப்பு நடவடிக்கைகள் ஆங்காங்கே எடுக்கலாம் என்று ரவுலட் கமிட்டி சிபாரிசு செய்திருந்தது. இதற்காக, மத்திய அரசு டெல்லி சட்டசபையில் சட்டம் கொண்டுவர முனைந்தது. இந்தச் சட்டங்களை எதிர்த்தே மகாத்மா காந்தி ஒத்துழையாமை இயக்கம் (1919) துவக்கினர்.

ரவுலட் கமிட்டி (இதன் அதிகாரபூர்வமான பெயர், 'ராஜத் துரோக நடவடிக்கைகள் விசாரணைக் கமிட்டி') இந்தியாவில் மாகாணம் மாகாணமாகப் பயங்கர இயக்கப் புரட்சி வேலைகள் பற்றி விவரம் தந்தது. சென்னை ராஜதானி பற்றிய சுருக்கமான அத்தியாயத்தில், சென்னையில் மிதவாதம் நீங்கித் தீவிரமான நடவடிக்கைகள் தோன்ற ஆதி காரணம் 1907-இல் சென்னைக்கு விஜயம் செய்து கடற்கரையில் பேசிய விபின் சந்திர பாலின் 'எரிமலைப் பேச்சுக்களேயாகும்' என்று கூறியிருக்கிறது. சென்னை ராஜதானியில் புரட்சி வேலைகளுக்கு நீலகண்ட பிரம்மசாரியும் வி. வி. எஸ். ஐயருமே காரணம் என்றும், 'இந்தியா' பத்திரிகை மானேஜராக இருந்து, லண்டனுக்குப் போய் இந்திய விடுதியில் சேர்ந்த எம். பி. திருமலாச்சாரி பாரிஸ் நகரிலிருந்து இவர்களைத் தூண்டிவிட்டுக்கொண்டிருந்தார் என்றும் கமிட்டி அறிக்கை சொல்கிறது.

ரவுலட் அறிக்கையில் சம்பந்தப்பட்ட பகுதிகள் வருமாறு:

"1910 ஸெப்டம்பரில் அவர் (எம். பி. திருமலாச்சாரி) பாரிஸிலிருந்து பாண்டிச்சேரி 'இந்தியா' பத்திரிகை ஊழியர் ஒருவருக்கு ஒரு கடிதம் எழுதினர். அதில், அவர்கள் செய்ய விரும்பும் விஷயத்தைப் பாண்டிச்சேரியில் செய்வது ஆபத்தாக முடியுமென்று கருதும் பட்சத்தில், அதே

காரியத்தை வேறு வசதியான இடம் எதிலாவது செய்து முடிப்பதே சரி என்றும், விரைவிலேயே இதைச் செய்து முடிப்பார்கள் என்று நம்புவதாகவும் (திருமலாச்சாரி) சொல்லியிருந்தார்.

"**கொலைத் திட்டம் உதயம்:** ஆச்சாரியா இவ்வாறு கடிதம் எழுதிய சமயம், பிரிட்டிஷ் அரசாங்கத்துக்கு விரோதமாக ஒரு சதியை (ஆஷ் வழக்கில் முதல் எதிரியான) நீலகண்ட பிரம்மசாரி என்பவர் உருவாக்கி வந்தார். அவர் 1910–இலும், முந்தைய ஆண்டுகளிலும் சங்கரகிருஷ்ண ஐயர் என்பவருடன் தென்இந்தியா எங்கும் சுற்றுப் பயணம் செய்துவந்து, சுதேசி, ராஜத் துரோகம் முதலியவற்றைப் பிரசாரம் செய்து வந்தார். சுயராஜ்யம் பெறுவதற்காகப் பலர் ரத்தப் பிரதிக்ஞை எடுத்துக் கொள்ளும்படி அவர் செய்தார். ஜூன், 1910–இல் சங்கரகிருஷ்ணன் தன் மைத்துனர் வாஞ்சி ஐயரை நீலகண்டருக்கு அறிமுகம் செய்து வைத்தார். வாஞ்சி ஐயர் திருவாங்கூர் காட்டிலாகாவில் குமாஸ்தாவாக இருந்தார். முன்பு லண்டன் இந்திய விடுதியில் விநயக ஸாவர்க்கரின் வலது கையாக இருந்தவரும், பின்னர் பாரிஸுக்குச் சென்று அங்கே ஷாம்ஜி கிருஷ்ண வர்மா, மதாம் காமா முதலிய சூழ்ச்சிக்காரர்களுடன் உழைத்த வருமான வி. வி. எஸ். ஐயர் 1910 டிசம்பர் மாதம் பாண்டிச்சேரி வந்து சேர்ந்தார். உடனே அவர் சில தோப்புத் தோட்டங்களில் இளைஞர்களுக்குத் துப்பாக்கிப் பயிற்சி கொடுத்தார்; நாட்டை விடுவிக்க அரசியல் கொலைகள் அவசியம் என்றும், பலாத்காரம் தேவை என்றும் பிரசாரம் செய்யலானார்.

"1911 ஜனவரி மாதம் 9–ஆம் தேதி வாஞ்சி ஐயர் மூன்று மாத ரஜா எடுத்துக்கொண்டு பாண்டிச்சேரிக்கு வந்தார். அங்கே அவர் வி. வி. எஸ். ஐயருடன் சம்பந்தப் பட்டு அவரது மேற்பார்வையில் துப்பாக்கி சுடும் பயிற்சி பெற்றார். ஆங்கிலேயர் ஆட்சி நாட்டைப் பாழ் படுத்துகிறது என்றும், அந்த ஆட்சியை நீக்குவது எல்லா வெள்ளையர்களையும் கொன்றாலே சாத்தியமாகுமென்றும்,

அதனால் திருநெல்வேலி கலெக்டரான ஆஷ் துரையை முதலில் கொல்லலாமென்றும், 1908-இல் பல நடவடிக்கைகள் எடுத்த இவரைக் கொல்வது பொருத்தம் என்றும் வாஞ்சி ஒரு சாட்சியிடம் கூறியதாகத் திருநெல்வேலிச் சதிவழக்கு (ஆஷ் வழக்கு ) விசாரணையில் தெரிய வந்தது. சரியான சமயத்தில் பாண்டிச்சேரியிலிருந்து ஆயுதங்கள் பெறலாமென்றும் வாஞ்சி சொன்னதாக அந்தச் சாட்சி கூறினார்.

"திருநெல்வேலி வழக்கில் குற்றம் சாட்டப்பட்ட சதிகாரர்கள் வீடுகளில் சோதனையிட்டதில் இரண்டு பிரசுரங்கள் கிடைத்தன; இரண்டுமே 'பறங்கி ஒழிப்பு அச்சகம்' என்ற அச்சகத்தில் அச்சடித்தவை. 'ஆசியர்களுக்கு ஒரு வார்த்தை' என்று தலைப்பிட்ட ஒரு துண்டுப் பிரசுரம் சொன்னதாவது : இந்தப் படுபாவியான பறங்கியை நமது நாட்டிலிருந்து ஒழித்து, சுயராஜ்யம் உறுதியாக நிலை நாட்டுவோமென்று தெய்வத்தின் முன்னிலையில் சபதம் செய்யுங்கள். நமது பாரத நாட்டில் பறங்கி ஆட்சி நடக்கும் வரை உங்கள் உயிரை மதிப்பதில்லை என்று சபதம் செய்து கொள்ளுங்கள். உங்களிடம் அகப்படும் பறங்கியை நாயை அடிப்பது போல அடியுங்கள். கத்தியாலோ கழியாலோ கல்லாலோ, ஆண்டவன் கொடுத்த வெறுங் கையாலோ குத்திக் கொல்லுங்கள். இரண்டாவது பிரசுரம் 'அபிநவ பாரத சங்கத்தில் சேருவதற்கான சபதம்' என்ற தலைப்புக் கொண்டது; இந்த இரு பிரசுரங்களிலும் பத்துப் பத்துப் பிரதிகள் பாண்டிச்சேரி 'தர்மம்' ஆபீஸ் ஊழியர் ஒருவரால் யாரோ ஒருவருக்கு அனுப்பப்பட்டு அவர் மூலம் பரப்பப்பட்டன; அவர் இது பற்றி வழக்கில் குற்றம் சாட்டப்பட்டவர்களுடன் விவாதித்துள்ளார்."

'ஆஷ் கொலை நடந்தது எப்படி?' என ரவுலட் அறிக்கை கூறுகிறது :

"**பாரிஸ் அராஜகவாதிகளுடன் தொடர்பு** : மதாம் காமாவின் 'வந்தே மாதரம்' பத்திரிகையின் ஏப்ரல் இதழில் (இது பாரிஸில் மே மாத இறுதியில் வெளியாயிற்று) ஒரு கட்டுரையில் இத்தகைய கொலையொன்று திட்டமிடப்

பட்டுள்ளது தெரிந்தது. அந்தக் கட்டுரையின் முடிவான பகுதி வருமாறு : 'பொதுக் கூட்டத்திலோ, பங்களாவிலோ, ரெயிலிலோ, 'வண்டியிலோ, கடையிலோ, கிறிஸ்தவ ஆலயத்திலோ, தோட்டத்திலோ, திருவிழாவிலோ, எங் கெங்கெல்லாம் சந்தர்ப்பம் கிடைக்கிறதோ அங்கெல்லாம், ஆங்கிலேயர் கொல்லப்பட வேண்டும். அதிகாரிகள், தனிப்பட்டவர்கள் என்று அவர்களில் பேதம் பார்க்க லாகாது. பெருந்தலைவர் நானு ஸாகேபுக்கு இது தெரிந்திருந் தது. நமது வங்காள நண்பர்களும் இதைப் புரிந்துகொண் டிருக்கிறார்கள். அவர்களது முயற்சிகள் புனிதமானவை. அவை வெற்றி கொள்ளட்டும். நாம் இப்போது ஆங்கி லேயருக்குச் சொல்கிறோம் ; 'ஆபத்து நீங்கும் வரை கூச்சல் போடாதீர்கள்!' என்று. இதே பத்திரிகையில், இதற்குப் பிறகு, 1911 ஜூலை இதழில், மதாம் காமா எழுதிய கட்டுரை ஒன்றில், அவர் சமீபகால அரசியல் கொலைகள் பகவத் கீதையின் உபதேசத்துக்குப் பொருத்தமானவை என்று சொல்லியிருக்கிறார். அவர் சொல்வதாவது : 'ஹிந்துஸ்தானத்தின் மணிமுடி தரித்த அடிமைகள் (சுதேச மன்னர்கள்) லண்டனில் நடந்த கோமாளிக் கூத்தில் (ஜார்ஜ் மன்னர் முடிசூட்டு விழாவில்) நடிகர்கள் போல நகரத் தெருக்களில் ஊர்வலம் வந்து, மாடுகளைப் போல இங்கிலாந்து மன்னர் காலடியில் வீழ்ந்து வணங்கிக் கொண்டிருக்கையில், நமது நாட்டில் வீரமிக்க இளைஞர் இருவர் தங்களது தீரத்தைத் திருநெல்வேலியிலும், மைமன்ஸிங்கிலும் காட்டி, ஹிந்துஸ்தானம் தூங்கிக் கொண்டிருக்கவில்லை என்று நிரூபித்தார்கள்.' (ஜூன் 19-ஆம் தேதி மைமன்ஸிங்கில் ஸப்-இன்ஸ்பெக்டர் ராஜ் குமார் ராய் சுட்டுக் கொல்லப்பட்டார்.)

"இந்தக் கட்டுரையும், குற்றவாளியின் உடையில் அகப்பட்ட கடிதமும், இக்கொலை முடிசூட்டு விழாநாளில் நடக்க வேண்டுமென்று திட்டமிடப்பட்டுள்ளதைத் தெரிவிக்கின்றன.

"முடிவுகள் : திருநெல்வேலிச் சதி வழக்கின் குற்றவாளி கள் பல்வேறு ஜாதியராக, பல்வேறு அந்தஸ்திலும் இருந்த

போதிலும் ராஜத் துரோகமாகச் சதி செய்யவே ஒன்று பட்டார்கள் என்றும், ஆஷ் கொலையில் சதி செய்யவில்லை என்றும் தீர்ப்பளிக்கப்பட்டது. சதிகாரர்கள் எடுத்துக் கொண்ட ரத்த ஒப்பந்தம், அவர்களுடைய ஜாதிப் பாகு பாடுகளை மீறி, அவர்கள் நெருக்கமாக உழைக்க வகை செய்தது. தென்னாட்டில் ஜாதிக் கட்டுப்பாடுகள் இத்தகைய ஒற்றுமைக்கு இடைஞ்சலாக இருக்கும்; இதை இந்த ஒப்பந்தம் மீறி, ஒற்றுமையை நிலைநாட்டி யுள்ளது குறிப்பிடத் தக்கது.

"திருநெல்வேலிச் சதி விசாரணைக்குப் பிறகு சென்னை ராஜதானியில் புரட்சியாளர்களின் தொல்லை ஏதும் இருந்ததாகத் தெரியவில்லை. சென்னையில் இயற்கையாகப் புரட்சிச் சதிகள் தோன்றவில்லை; விபின் சந்திர பால், பாரிஸ் புரட்சியாளர்கள், பாண்டிச்சேரிப் புரட்சி யாளர்கள், இவர்களது தூண்டுதல் இல்லாமலிருந்தால் தென்இந்தியாவில் எவ்விதத் தொந்தரவுமே இருந்திராது."

இவ்வாறு ரவுலட் கமிட்டி அறிக்கை கூறுகிறது. ஐயரைப் பற்றி இவ்வளவு சாட்சியங்கள் இருந்தும், ஆஷ் கொலை வழக்கில் அவர் மீது ஏன் வாரன்ட் பிறப்பிக்கவில்லை என்பது வியப்பான விஷயமே. ரவுலட் கமிட்டி அறிக்கை 1918-இல் வெளியாயிற்று. ஆதலால், ஒரு வேளை இவ்விஷயங்களெல்லாம் 1918-இல் தெரிய வந்து, 1911-இல் தெரியாமல் இருந்திருக்குமோ?

# 14. ஆசிரியர், 'தேச பக்தன்', சென்னை

எழுத்தாளர் என்ற வகையில் ஐயரின் புகழ் பாண்டிச்சேரியில் இருந்தபோதே சென்னைப் பத்திரிகை உலகில் பரவியிருந்தது. தங்கள் பத்திரிகைகளுக்கு எழுதும்படி பல தமிழ்ப் பத்திரிகைகளின் ஆசிரியர்கள் அடிக்கடி அவருக்கு எழுதி வந்தார்கள். ஒரு பத்திரிகை, சென்னை 'தேச பக்தன்' நாளிதழ், அவருடைய கட்டுரைகளைத் தொடர்ந்து வெளியிட்டது. பாண்டிச்சேரியில் உள்ளூர்ப் பத்திரிகையான 'கலைமக'ளிலும் அவர் தொடர்ந்து எழுதி வந்தார்.

சென்னை 'தேச பக்தன்' நாளிதழ் அன்னி பெஸன்ட் அம்மையாரின் சீடரான எம். சுப்பராய காமத்தினால் அம்மையாரின் உதவியுடனும் ஆசியுடனும் ஆரம்பிக்கப் பட்டது. பெஸன்ட் அம்மையார் 1917-இல் இந்திய அரசியலில் தீவிரமாகப் பிரவேசித்தார். லோகமான்ய திலகரின் உதவியுடன் ஹோம் ரூல் இயக்கம் துவக்கினார். தமது அரசியல் பிரசாரத்துக்காக அவர் 'மெட்ராஸ் ஸ்டாண்டர்டு' என்ற பழைய ஆங்கில நாளிதழை விலைக்கு வாங்கி 'நியூ இந்தியா' என்ற பெயர் தந்து, தமது மேற்பார்வையில் வெளியிட்டார். அவருடைய திறமையான நிர்வாகத்தினால், 'நியூ இந்தியா' விரைவில், நீண்ட நாளாக நன்கு நடந்து வந்துள்ள 'ஹிந்து' போன்ற பத்திரிகைகளையும்விட அதிக விற்பனை உள்ள பத்திரிகை ஆகியது. பிழை திருத்துதல் முதல் நிதி நிர்வாகம் வரை எல்லா விஷயங்களையும் தாமே கூர்ந்து கவனித்து நிர்வகித்தார் அன்னி பெஸன்ட் அம்மையார்.

ஹோம் ரூல் இயக்கம் ஆரம்பமானதும், அதை ஆதரித்து ஒரு தமிழ் நாளிதழ் நடத்த சுப்பராய காமத் விரும்பினார். பெஸன்ட் அம்மையார் இதை ஆசீர்வதித்து 3,000 ரூபாய்

நன்கொடையும் வழங்கினர். எம். எஸ். காமத் 'தேச பக்தன்' நாளிதழை 1917 டிஸம்பர் முதலாக வெளியிடலானர்.

காமத், திலகருடைய அத்தியந்த பக்தர். சிறந்த தேசீய வாதி. கவி பாரதியாருடைய நெருங்கிய நண்பர். சமூக சேவையில் திளைத்தவர். முதல் மகாயுத்தம் நடந்தபோது விலைவாசிகள் கட்டுக்கும் மீறி உயர்ந்த சமயம், அவர் தமது சொந்தப் பொறுப்பில் நியாய விலைக் கடைகள் நடத்தினர்.

பெஸன்ட் அம்மையாரின் கீழ் 'நியூ இந்தியா'வில் பத்திரிகைத் தொழிலும் பத்திரிகை நிர்வாகமும் கற்ற எம். எஸ். காமத், 'தேச பக்த'னை நடத்திய பிறகு 'ஸண்டே டைம்ஸ்' என்ற ஆங்கில வாரப்பத்திரிகையைத் துவக்கினர். இந்தியாவில், நாளிதழ்கள் போன்ற அமைப்பில் தோன்றிய முதல் வாரப் பத்திரிகை அது. 'ஸண்டே டைம்ஸ்' மூலம் காமத் தேசீயத்தை வளர்ப்பதிலும், ஸ்ரீ ரமண மகரிஷி, ஸ்ரீ அரவிந்தர், ஸ்ரீ சீரடி ஸாயி பாபா முதலிய மகான்களின் போதனைகளைப் பரப்புவதிலும் இணையற்ற சேவை புரிந்துள்ளார். 'ஸண்டே டைம்'ஸுக்குத் துணையாக, காமத் ஆரம்பித்த 'ஹிந்துஸ்தான்' என்ற தமிழ் வாரப் பதிப்பில் அவர் தமது நண்பர்களான பாரதி, வ. வே. ஸு. ஐயர் பற்றிய சிறப்பு மலர்கள் வெளியிட்டு அவர்களைப் பற்றி அதுவரை வெளியாகாதிருந்த பல அரிய தகவல்கள் வெளியாகச் செய்தார்.

'தேச பக்தன்' மாலையில் வெளிவந்த நாளிதழ். அதன் முதல் ஆசிரியராக, தமிழறிஞர் திரு. வி. கல்யாணசுந்தர முதலியார் இருந்தார். பத்திரிகை ஆரம்பிக்கும்போதே பல தொல்லைகளுக்கு ஆளாகியது. பெஸன்ட் அம்மையாரின் அரசியலை வரவேற்காத பிரிட்டிஷ் அரசாங்கம் அவர் 'நியூ இந்தியா' துவங்கியபோது 20,000 ருபாய் ஜாமீன் கட்டச் சொன்னது. அதைக் கட்டிவிட்டும், அவர் துணிவுடன் பிரிட்டிஷ் அரசைக் கண்டித்து எழுதினர். அந்த ஜாமீனைப் பறிமுதல் செய்து, பெஸன்ட் அம்மையாரையும், அவருடைய உதவியாளர்கள்

இருவரையும் தடுப்புக் காவலில் வைத்தார்கள். இந்த நடவடிக்கை நாடெங்கும் பரபரப்பை உண்டாக்கியது.

இது நடந்து ஆறு மாதத்துக்குப் பின் 'தேச பக்தன்' துவக்கப்பட்டது. பிரிட்டிஷ் அரசு சும்மா விடுமா? 1,000 ரூபாய் ஜாமீன் கட்டச் சொல்லியது. 1919-இல் ஜலியன் வாலா பாக் பற்றிய விஷயம் ஒன்றை வெளியிட்டதற் காக ஜாமீனைப் பறிமுதல் செய்து, 6,000 ரூபாய் புது ஜாமீன் கட்டச் சொல்லியது. அவ்வாறே கட்டியது 'தேச பக்தன்.'

பாண்டிச்சேரியில் அஞ்ஞாதவாசம் புரிந்த தேசபக்தர் களிடம் 'தேச பக்த'னுக்குத் தனி வாஞ்சை. அவர்கள் மீதிருந்த தடைகள் நீக்கப்பட்டு அவர்கள் இஷ்டப்படி திரும்பிவர அனுமதிக்கவேண்டும் என்று அப்பத்திரிகை வற்புறுத்தியது. இவ்விஷயம் சென்னைச் சட்டசபையில் கிளப்பப்படுவதற்கு 'தேச பக்தன்' தூண்டுதலாக இருந் தது. முடிவில், 1920-இல் பொது மன்னிப்பு உத்தரவு பிறப்பிக்கப்பட்டது. பாரதியார் இந்த உத்தரவு வரும் வரை காத்திராமல், 1918 நவம்பரிலேயே பாண்டிச்சேரியை விட்டுக்கிளம்பினார். அவர் கைது செய்யப்பட்டு, கடலூரில் மூன்று வாரம் சிறையில் வைக்கப்பட்டார். அரசாங்கம் கோரியபடி வாக்குறுதி அளித்து விடுதலையானார் பாரதி. பிறகு தெற்கே தமது மனைவியின் ஊரான கடயத்துக்குச் சென்றார்.

ஐயர் 1920-இல் பொதுமன்னிப்பு வந்த பின்பே பிரிட் டிஷ் இந்தியாவுக்குத் திரும்பினார். பதினைந்து ஆண்டுகளுக் குப் பின் திருச்சிராப்பள்ளிக்குத் திரும்பிய அவர் புதிதாக எதிலும் ஈடுபடுவதற்கு முன் இந்தியா முழுதும் யாத்திரை போய் வருவதென்று தீர்மானித்தார். புனா, பம்பாய், நாஸிக், ஸாபர்மதி (அஹமதாபாதில் காந்தி ஆசிரமம் உள்ள இடம்), டெல்லி, ஹரித்துவாரம், காங்டி (சிரத்தானந்தரின் குருகுலம் உள்ள இடம்), மதுரா, ஆக்ரா, அயோத்தி, கயை, காசி முதலிய ஊர்களுக்குப் போய் வந்தார் ஐயர். காசியில் அவர் இரண்டு விரதங்கள் எடுத்துக் கொண்டார்; ஒன்று தமிழ் மொழியின்

வளர்ச்சிக்குத் தம்மை அர்ப்பணித்துக் கொள்ளுவது; இரண்டு காங்டியில் ஆரிய ஸமாஜ குருகுலம் போலத் தமிழ் நாட்டில் ஒரு கல்வி நிலையம் துவக்குவது.

காசியில் ஐயர் போன சமயம் அகில இந்திய காங்கிரஸ் கமிட்டிக் கூட்டம் நடந்தது. ஐயர் அக்கூட்டத்துக்குச் சென்று, திலகர் உள்ளிட்ட பல தலைவர்களைச் சந்தித்தார்.

தமது யாத்திரை முடிந்து 1920 ஜூன் மாதம் சென்னை திரும்பினார் ஐயர். அப்போது 'தேச பக்தன்' ஆசிரியர் திரு. வி. க. வுக்கும், நிர்வாகி காமத்துக்கும் அபிப்பிராய பேதங்கள் ஏற்பட்டிருந்தன. திரு. வி. க. 'தேச பக்தனை' விட்டு விலகினார். அவருக்குப் பதிலாக, ஐயர் ஆசிரியப் பொறுப்பை ஏற்கவேண்டுமெனக் காமத் விரும்பினார். ஐயர் சற்று யோசனை செய்து, பிறகு அப்பொறுப்பை ஏற்றார். 1920 ஜூலை 31-ஆம் தேதி வ. வே. ஸு. ஐயர் 'தேச பக்தன்' நாளிதழ் ஆசிரியராக, 150 ரூபாய் சம்பளத்தில் பொறுப்பேற்றார்.

ஐயரது 'தேச பக்தன்' காங்கிரஸுக்கும் கிலாஃபத் இயக்கத்துக்கும் துணிவான ஆதரவு அளித்தது. ஐயருடைய தலையங்கங்களைப் பிற பத்திரிகைகள் எடுத்து வெளியிட்டன. பெஸன்ட் அம்மையார் தமது, 'நியூ இந்தியா'வில் ஐயரது தலையங்கங்களை மொழி பெயர்த்து வெளியிட்டார். முன்னர் பாரதியாரை ஆசிரியராகக் கொண்ட 'இந்தியா' வாரப் பத்திரிகைக்குப் பிறகு, அதற்கு இணையான செல்வாக்குப் பெற்றது 'தேச பக்தன்' நாளிதழ். விற்பனையிலும் அது முதலிடம் பெற்றது. 'தேச பக்தன்' நாளிதழானாலும் அதில் மாத வாரப் பத்திரிகைகளுக்குரிய பகுதிகளும் இருந்தன. இலக்கிய விஷயங்கள் பற்றிய கட்டுரைகளும் இடம் பெற்றன. ஐயர் பாண்டிச்சேரியில் இருந்த 'கம்ப நிலைய'த்துடன் தொடர்ந்து தொடர்பு கொண்டிருந்தார். அதற்கென அவர் அடிக்கடி பாண்டிச்சேரி போய் வந்தார். தமிழில் உயர்தரமான மாதப் பத்திரிகை ஒன்று ஆங்கிலத்தில் உள்ள 'மாடர்ன் ரெவ்யூ' போல் வெளியிடவேண்டும் என்ற ஆசை ஐயருக்கு இருந்துவந்தது.

தமது நண்பரும் வழிகாட்டியுமான ஸாவர்க்கரைப் போல, ஐயரும், ஹிந்து தேச சரித்திரம் சரிவர எழுதப் படவில்லை என்று வருந்துவார். மேற்கத்திய ஆசிரியர்கள் வரலாற்று உண்மைகளைத் தங்கள் மனப்போக்குப்படி பார்த்துச் சரித்திரம் சொல்லி, இந்தியப் பண்பாட்டின் மேன்மையையும், இந்திய வீரர்களின் சாகஸங்களையும் மறைத்து, இழிவாகக் காட்டிவிட்டார்கள் என்பது ஐயர் கருத்து. இந்தக் குறையை நீக்க, ஐயர் ஆங்கிலத்தில் ஒரு நூல் எழுதிவந்தார். "A History of India" (இந்திய சரித்திரம்) என்ற இந்த நூலில் பல அத்தியாயங்கள் எழுதியிருந்தார். மாணவர் நோட்டுப் புத்தகங்களில் இவற்றை எழுதிவந்தார் அவர். போகுமிடமெல்லாம் இந்த நோட்டுப் புத்தகங்களைத் தூக்கிக்கொண்டு அலைவார் ஐயர். சிரத்தை காட்டும் நண்பர்களுக்கு நூலின் பகுதி களைப் படித்துக் காட்டுவார் அவர். துரதிர்ஷ்டவசமாக இந்த நூல் அச்சாகவில்லை; இதன் கையெழுத்துப் பிரதி யும் தொலைந்து போய்விட்டது.

'தேச பக்தன்' அலுவலகம் சென்னையில் ஜார்ஜ் டவுனில் இருந்தது. ஐயர் திருவல்லிக்கேணியில் குடியிருந் தார். அவர் எப்போதும் பஞ்சகச்சம் அணிவார். மேலே பூப்போட்ட பெரிய கதர் அங்கவஸ்திரம் போர்த்தியிருப் பார். இடது தோளிலிருந்து கதர் 'தொங்கட்டான்' பை ஒன்று தொங்கும். ஐயரது நடை 'குஞ்சர நடை'. தமது அலுவலகத்துக்கு அவர் கடற்கரை வழியாக நடந்தே போய்வருவார். அவருக்கு நடை பிடிக்கும். ஜட்காவில் ஏற விரும்பமாட்டார்.

அலுவலகத்தில் நுழைந்ததும், தமது சக ஊழியர்களைப் பார்த்துப் புன்முறுவலித்துக்கொண்டே தமது அறைக்குப் போவார். தபாலும் அவசர விஷயங்களும் தீர்த்துவிட்டு, ஆங்கில நாளிதழ்களையும் பத்திரிகைகளையும் கண்ணோட்ட மாகப் பார்ப்பார். வந்துள்ள செய்திகளையும் பார்ப்பார். அக்காலத்தில் 'டெலிபிரின்டர்' யந்திரம் கிடையாது. செய்திகளெல்லாம் தந்தி ஆபீஸில் கையால் எழுதப்பட்டு வரும். தந்திகளை உதவி ஆசிரியர்களுக்குப் பிரித்தளித்து

விட்டு அவர்கள் செய்திகளை மொழி பெயர்க்கையில் ஐயர் தலையங்கக் குறிப்புகளும் தலையங்கங்களும் எழுத முற்படு வார். அவர் எழுத ஆரம்பித்தால் எழுதிய தாள்கள் அச்சகத் துக்கு ஒரே சீரான வேகத்தில் போகும். அவருடைய கையெழுத்து சங்கிலியெழுத்து; ஆனாலும் அது தெளிவாக இருக்கும்.

தமது எழுத்து வேலை முடிந்ததும் ஐயர் தமது உதவி ஆசிரியர்களின் வேலை எப்படி நடக்கிறதென்று அவர்களு டைய அறையைச் சுற்றிப் பார்த்து வருவார். செய்தி மொழி பெயர்ப்பில் ஏதாவது சிக்கல் இருந்தால் சரி செய்ய உதவுவார்; பிறகு தமது அறைக்குத் திரும்பி செய்திகளின் அச்சுக்கோத்த படிகளைத் திருத்துவார். முடிவான படிகள் அவர் பார்த்தபின்தான், எந்தச் செய்தியும் பத்திரிகையில் வெளியாகலாம். மாலை நான்கு மணிக்கு, ஆசிரியருக்கும் உதவியாளர்களுக்கும் வேலை முடிந்து போகும். சிறிது நேரத்தில் பத்திரிகையின் முதல் பிரதிகள் வரும். எல்லாம் சரிவர இருக்கிறதா என்று பார்த்தபின் மறுநாள் வேலைக்கு உதவியாளர்களுக்குச் சொல்ல வேண்டியதைச் சொல்வார் ஐயர். அதன்பின், ஐயர் பொதுக் கூட்டமோ வேறு நிகழ்ச்சியோ இருந்தால் அதில் கலந்துகொள்ளப் போவார்; இல்லையெனில் கடற் கரை வழியாக நடந்துகொண்டே வீடு திரும்புவார். காங்கிரஸ் கூட்டங்களிலும் கிலாஃபத் கூட்டங்களிலும் ஐயர் பேசுவார். அவர் பேச்சு விஷயமுள்ள பேச்சாக இருக்கும்.

'தேச பக்த'னில் உதவியாசிரியராக இருந்த வெ. சாமி நாத சர்மா, ஐயரைப் பற்றி அழகான சித்திரம் தந்துள்ளார்.

"பொறுப்பேற்றுக் கொள்வதற்கு முந்திய நாளோ அதற்கு முந்திய நாளோ, ஐயர் 'தேச பக்தன்' காரியால யத்திற்கு வந்தார். முற்பகல் சுமார் பத்தரை மணி இருக்கும். அப்பொழுதுதான் முதன் முதலாக ஐயரைப் பார்த்தேன். கோடிட்ட நெற்றி; அதில் பிறைவடிவமான சந்தனப் பொட்டு; புன்சிரிப்புத் தவழும் உதடுகள்; ஒழுங்காகச் சீவிவிட்ட தலைமயிரும் தாடி மீசையும்; கட்டுமஸ்தான

சரீரம். அதை ஓர் உத்தரியம் மறைத்துக்கொண் டிருந்தது ; இடுப்பிலே பஞ்சகச்ச வேஷ்டி; கையிலே ஒரு புத்தகக் கட்டு ; இந்தத் திருக்கோலத்தில் காட்சியளித்தார் ஐயர்.

"வந்ததும் உதவி ஆசிரியர்களாகிய எங்கள் எல்லோ ருக்கும் கைகூப்பி வணக்கஞ் செய்தார்; நாங்களும் பிரதி வணக்கஞ் செய்தோம். சு. நெல்லையப்பர் அனைவரையும் அறிமுகப்படுத்தி வைத்தார். 'உங்களோடு சேர்ந்து பணியாற்ற வந்திருக்கிறேன்' என்றார் ஐயர். 'எங்கள் பாக்கியம்' என்றார் நெல்லையப்பர்.

"அப்பொழுது அவர் வந்து நின்ற திருக்கோலத்தையும் சிரித்தமுகத்துடன் இரண்டு மூன்று வார்த்தைகள் சொன்ன தையும் என்னால் மறக்கவே முடியாது. அவருடைய உட லுறுப்பு ஒவ்வொன்றும் வஜ்ரக்கட்டுடையதாக இருந்தது. அகன்ற மார்பு ; வளையாத முதுகெலும்பு; 'கர்லா' கட்டை கள் மாதிரி கைகளும் கால்களும் ; ஒளியும், அருளும் நிறைந்த கண்கள்; இவைகளை எவ்வளவு நேரம் வேண்டு மானாலும் பார்த்துக்கொண் டிருக்கலாம். ஓவியனோ சிற்பியோ தனது கைத்திறனைக் காட்டுவதற்கேற்ற உருவம். ஐயர் ஒரு தரமாவது கலகலவென்று உரக்கச் சிரித்து நான் பார்த்ததில்லை. எப்பொழுதும்ஒரே மாதிரியான புன்சிரிப்புதான். அவருடைய நடையிலும் வாழ்க்கையில் ஒவ்வொரு போக்கிலும் எப்படி ஒருவித நிதானமும் கம்பீரமும் இருந்தனவோ அப்படியே அவருடைய புன் சிரிப்பிலும் ஒருவித அடக்கமும் கம்பீரமும் கலந்து விளங் கின. அவர் சிரித்துக்கொண்டே நம்மிடம் சம்பாஷிக்கிற போது, 'ஓ இந்த ஆத்மா எத்தனையோ கஷ்டங்களை மகா அலட்சியத்துடன் சமாளித்திருக்க வேண்டும்; எப்படிப் பட்ட துன்பங்கள் வந்த காலத்திலும் கொஞ்சங்கூடக் கலங்காத மனம் இந்த வஜ்ர தேகத்திற்குள் இருக்க வேண்டும்' என்பன போன்ற எண்ணங்களே நமக்கு உண்டாகும்."

பத்து மொழிகள் தெரிந்தவர் ஐயர். ஆனால் அவர் தமது நண்பர்களுடன் அநேகமாகத் தமிழிலேயே பேசு வார். பேசும்போது, இடையிடையே ஆங்கிலச் சொற்கள்

கலக்கமாட்டார். பேச்சில் அவர் கம்பன், காளிதாசன், வள்ளுவர், வால்மீகி, ஹோமர், விர்கில், ஷேக்ஸ்பியர், தாந்தே முதலிய மகாகவிகளினின்றும் மேற்கோள் காட்டுவார். ஆனால், அவருக்குக் கம்பனிடம்தான் மிக அதிகப் பற்று.

மத விஷயங்களில் ஐயர் ஆசாரசீலரே தவிர வைதிகர் அல்லர். அவரைப் பற்றிப் பிற்காலத்தில் தவறான கருத்துக்கள் பரப்பப்பட்டன. வெ. சாமிநாத சர்மா இதுபற்றிக் கூறுகிறார் :

''தீண்டாதாருக்கு உபநயனம் முதலிய சம்ஸ்காரங்களைச் செய்வித்து அவர்களைப் பல வழிகளிலும் உயர்த்த வேண்டும் என்று ஐயர் சில திட்டங்கள் வகுத்திருந்தார். தமிழைத் தாய்மொழியாகக் கொண்ட அனைவரும் ஒரு குலமாக, ஓரினமாக வாழ வேண்டுமென்று அடிக்கடி பேசுவார். அவர்களுக்குள் உயர்வுதாழ்வு இல்லையென்பது அவர் கருத்து. ஜாதி என்ற சொல்லை, விரிந்த பொருளிலேயே அவர் உபயோகித்து வந்தார். உணவு உட்கொள்ளும் விஷயத்தில் அவர் ஒதுக்கல் முறையைக் கையாண்டதில்லை.

'தேச பக்தன்' ஆசிரியராயிருந்த காலத்தில் இடைவேளைச் சிற்றுண்டிக்காக, காரியாலயத்திற்குச் சுமார் ஒரு பர்லாங்கு தூரத்திலிருந்த ஒரு ஹோட்டலிலிருந்து தோசை தருவிப்பார். ஒரே ஒரு தோசைதான். ஆனால் அது நெய்த் தோசையாக இருக்க வேண்டும். அதுதான் அவருக்கு நிரம்பப் பிடிக்கும். காரியாலயத்துப் பையன் ஒருவன்தான் — அநேகமாக அச்சுக் கோப்பவர்களில் ஒருவன்தான் — அதை வாங்கிக்கொண்டு வருவான். அவனுடைய குலம், கோத்திரம் முதலியவைகளைப் பற்றி அவர் கவலைப்பட்டதேயில்லை. 'தம்பீ, கை கால்களைக் கழுவிக்கொண்டு சுத்தமாகப் போகவேண்டும், தெரியுமா ?' என்று மட்டும் சொல்லி அவனிடம் காசு கொடுத்தனுப்புவார்.''

ஐயர் திருவல்லிக்கேணியில் வசித்த பகுதியில் முஸ்லிம்கள் அதிகம். அவர்களுடன் அவர் நெருங்கிப் பழகுவார்

ஹிந்து—முஸ்லிம் ஒற்றுமையில் ஆழ்ந்த நம்பிக்கை உள்ளவர் அவர். கிலாஃபத் பொதுக் கூட்டங்களில் அவர் அடிக்கடி பேசுவார். மாலையில், அலுவலக வேலை முடிந்ததும் ஐயர் திருவல்லிக்கேணியில் மேரி ராணி கல்லூரிக்கு எதிரில் மணலில் உட்கார்ந்து நண்பர்களுடன் பேசி மகிழ்வார். பேச்சு அரசியல் அல்லது இலக்கியம் பற்றியே பெரும்பாலும் இருக்கும்.

ஐயர் வேகமாக நடப்பார். கூட வருபவர்களைவிட முந்திப் போய்விடுவார். கடற்கரையின் ஈர மணலில் நடப்பது அவருக்கு மிகவும் பிடிக்கும். இயற்கையின் அழகுகளை அவர் மிகவும் ரசிப்பார். மகள் சுபத்ராவையும், மகன் கிருஷ்ணமூர்த்தியையும் கடற்கரையின் இயற்கை அழகுகளை ரசிக்க அழைத்து வருவார் ஐயர்.

ஐயர் நடிப்பில் தேர்ந்தவர். அந்நிய வேவுகாரர்கள் முன்னால் வாழ நேர்ந்த புரட்சியாளர் நடிப்பில் திறம் கொண்டவராக இருந்தது வியப்பில்லை. ஒரு சமயம் 'தேச பக்தன்' அலுவலகத்தினர் 'போஜராஜன்' நாடகம் போட விரும்பினார்கள். ஐயர் ஒத்திகைகளை நடத்தினார். ஆனால், நாடகம் மேடையேறுவதற்குள் பத்திரிகை கைமாறியது, பல ஊழியர்கள் விலகிவிட்டனர்.

விவாதம் என்றால்கூட ஐயர் நிதானமாகப் பேசுவார். கடுமையான சொற்கள் அவர் வாயில் வரமாட்டா. அலுவலகத்தில் யாரையேனும் திருத்துவதானால்கூட அவர் கோபமின்றி, சலிப்பின்றி தவறு செய்தவனும் தவற்றை உணரும் வகையில் பேசுவார். இதனால் சக ஊழியர்களுக்கு அவரிடம் அன்பும், மரியாதையும் இருந்தன. 'தேச பக்த'னுக்குக் கீர்த்தி இருந்ததே தவிர, அது லாபத்தில் நடக்கவில்லை. காகித விலையில் ஏற்றம், அரசாங்கம் கோரிய ஜாமீன் தொகைகள் இவைகளால் கடனே அதிகரித்தது. ஐயர் பத்திரிகையில் சேர்ந்த இரண்டு மாதங்களில், எம். எஸ். காமத் பத்திரிகையை, அதன் அச்சகம் உட்பட, எஸ். நாகேசுவர சாஸ்திரி என்ற ஒருவருக்கு விற்றுவிட நேர்ந்தது. சாஸ்திரி நிலபுலம்

உள்ளவர்; காமத்துக்குப் பத்திரிகை மீது கடன் கொடுத்திருந்தார்.

புதிய சொந்தக்காரர் நாகேசுவர சாஸ்திரியால் ஐயருக்கு ஏற்பட்ட தொல்லைகள் கொஞ்சநஞ்சமல்ல. 'தேச பக்த'னை விட்டு ஐயர் விலகினார்; அப்போதும் தொல்லை விடவில்லை; அவரைச் சிறைச்சாலைக்கு அனுப்பியது!

# 15. சிறைவாசம்

'தேச பக்தன்' புதிய சொந்தக்காரர் பத்திரிகையைப் பழைய ஆட்களை வைத்துக்கொண்டே சில மாதங்கள் நடத்தினர். ஆனால், 1921 பிப்ரவரி மாதம், அவர் அச்சகத்தின் பெயரை - கமர்ஷியல் பிரின்டிங் அண்டு பப்ளிஷிங் கம்பெனி லிமிடெட்' என்று மாற்றி, தமது நண்பர் பி. வி. ராஜகோபாலாச்சாரி என்பவரைப் பத்திரிகையின் ஆசிரியராக நியமித்தார். இந்த மாற்றங்களை அரசாங்கத்துக்குத் தெரிவிக்கும் கடிதத்தில், "ராஜத்துரோகமான எவ்விஷயமும் பத்திரிகையில் வெளியிடப்படமாட்டாது" என்று தெரிவித்தார். புதிய சொந்தக்காரர் கதர் அணிந்து, ஒருபுறம் காந்தீயவாதியாக விளங்கினர்; மறுபுறம் இது போலச் சர்க்காருக்குப் பயந்து அவர்களுக்குக் கோபம் வராமல் நடக்க விரும்பினர்.

புதிய ஆசிரியர் நியமித்ததாக அரசாங்கத்துக்குத் தெரிவித்தாரே தவிர, அலுவலகத்தில் ஐயரை ஆசிரியப் பதவியிலிருந்து நீக்கிவிட்டதாக உத்தரவு ஒன்றுமில்லை ; தெளிவற்ற நிலையில் ஐயர் தொடர்ந்து வேலை செய்து வந்தார்.

பி.வி.ராஜகோபாலாச்சாரிக்கு உடல் நலமின்றிப் போய் விட்டது. ஆதலால் ராஜகோபாலாச்சாரி, ஐயர், மகாலிங்க ஐயர் என்ற மற்றொருவர் ஆக மூன்று பேர் கொண்ட 'ஆசிரியர் குழு' ஒன்று அமைக்கப்பட்டது. இதனல் வ.வே.ஸு. ஐயருக்கும் மற்றவர்களுக்குமிடையில் உறவு முறியலாயிற்று. பத்திரிகைச் சொந்தக்காரர் நாகேசுவர சாஸ்திரி, வ.வே.ஸு. ஐயரை வேலையிலிருந்து நீக்க விரும்பினர்; ஐயரைக் கண்டால் அரசாங்கத்துக்குப் பிடிக்கவில்லை என்ற காரணத்துக்காக. அதே சமயம், ஐயரை வீட்டுக்குப் போகச் சொல்லவும் அவருக்குத் தைரியமில்லை.

புதிய சொந்தக்காரர் பொறுப்பேற்ற நாளிலிருந்து தமது பதவி தெளிவாக இல்லை என்பதால், ஐயர் அதிகாரபூர்வமாகத் தம்மை ஆசிரியராக நியமித்து ஓர் உத்தரவு பிறப்பிக்கும்படி புது சொந்தக்காரரை வற்புறுத்தி வந்தார். அவரோ இதைச் செய்யாமல் தட்டிப் போட்டுக் கொண்டே யிருந்தார். 1921 ஜூலை மாதம், ஐயர் அலுப்படைந்து, எந்த நிபந்தனைகளின் பேரில், தாம் ஆசிரியர் வேலையில் தொடர்ந்து பணிபுரிய முடியும் என்று ஒரு கடிதத்தைப் பத்திரிகைச் சொந்தக்காரர் சாஸ்திரிக்கு அனுப்பினார்.

இந்தச் சமயத்தில் ராஜகோபாலாச்சாரிக்கும் நாகேசுவர சாஸ்திரிக்கும் ஏதோ சச்சரவு உண்டாகிவிட்டது. ராஜகோபாலாச்சாரி இப்போது 'இணை சொந்தக்காரர்' ஆகியிருந்தார். அவர், தமது கையெழுத்திட்டு வ.வே.ஸு. ஐயரை வேலையை விட்டு நீக்குவதாக ஓர் உத்தரவு பிறப்பித்தார்; மறு சொந்தக்காரரான நாகேசுவர சாஸ்திரி தமது பங்குக்கு, ஐயரை ஆசிரியராக நியமிப்பதாக ஓர் உத்தரவு போட்டார்!

சொந்தக்காரர்கள் இருவரிடையே இவ்விதம் சண்டை நடப்பதைக் கவனித்த ஐயர், ஒரு மாதம் நோட்டீஸ் கொடுத்துவிட்டு, 1921 ஆகஸ்ட் 28 – ஆம் தேதி வேலையை விட்டு விலகினார். தாம் விலகும் செய்தியைப் பத்திரிகையில் அதே தேதியில் வெளியிடவும் செய்தார்.

இத்துடன் ஐயருக்குத் தொல்லை விடவில்லை.

1921 செப்டம்பர் 9–ஆம் தேதி, சர்க்கார் தரப்புப் புகார் ஒன்றின் பேரில், சென்னை பிரதம பிரஸிடென்ஸி மாஜிஸ்டிரேட் 'தேச பக்தன்' கூட்டு ஆசிரியர்களான பி. வி. ராஜகோபாலாச்சாரி, வி. வி. எஸ். ஐயர், டி. மகாலிங்க ஐயர் மூவர் மீதும், சொந்தக்காரர் நாகேசுவர சாஸ்திரி மீதும் ஜாமீனில்லாத பிடி வாரன்ட் பிறப்பித்தார். 'தேச பக்தன்' 1921 மே 6 – ஆம் தேதி வெளியான 'அடக்குமுறை' என்ற தலையங்கத்தில் இ.பி.கோ.124—ஏ பிரிவின்படி ராஜத்துவேஷமான குற்றம் செய்திருப்பதாக அவர்கள் மீது குற்றம் சாட்டப்பட்டது. போலீஸார் ஐயர்

தவிர மற்றவர்களை 9–ஆம் தேதியும், வெளியூர் சென்றிருந்த ஐயரை 11–ஆம் தேதியும் கைது செய்தார்கள்.

ஐயர் கைதான விஷயம் திருவல்லிக்கேணியில் பரவியதும், ஒரு பெரிய கூட்டம் அவர் பின்னே போலீஸ் ஸ்டேஷனுக்குப் போயிற்று. "மகாத்மா காந்தி – கி–ஜே !", "அல்லா–ஹோ–அக்பர் !" என்று கூட்டம் கோஷித்தது. தம்மைப் போலீஸார் அழைத்துச் செல்லுமுன், காங்கிரஸ் தலைவர் யாகுப் ஹஸனையும், கடுமையாக நோய்வாய்ப் பட்டிருந்த கவி பாரதியாரையும் ஐயர் பார்த்துவிட்டுப் போனார். மரணத் தறுவாயிலிருந்த பாரதியாரிடம், ஐயர் அன்பு கனிய, "பாரதி, நீ மருந்து சாப்பிட மாட்டேனென்கிறாயாமே? சாப்பிட்டு உடம்பைத் தேற்றிக்கொள்ள வேண்டாமா?" என்று நல்ல வார்த்தை சொல்லிச் சென்றார். அன்றிரவு பாரதி காலமானார்.

'தேச பக்தன்' ராஜத்துவேஷ வழக்கு விசாரணை ஸெப்டம்பர் 12–ஆம் தேதி துவங்கியது. கோர்ட்டில் பொது மக்களும் சட்டப் பிரமுகர்களும் நிறைந்திருந்தனர். குற்றம் சாட்டப்பட்டிருந்த யாவரும் கதர் உடை அணிந்திருந்தார்கள். களிப்புடன் இருந்தார்கள். முதல் எதிரி பி. வி. ராஜகோபாலாச்சாரிக்கு எஸ். சத்திய மூர்த்தியும், 3-வது, 4–வது எதிரிகள் டி. மகாலிங்க ஐயர், எஸ். நாகேசுவர சாஸ்திரி இருவருக்கும் டி.எஸ். வேங்கடேச ஐயரும் வக்கீல்களாக ஆஜரானார்கள். இரண்டாவது எதிரி வ. வே.ஸு. ஐயருக்கு வக்கீல் இல்லை. 1, 3, 4 எதிரிகளின் இரண்டு வக்கீல்களும்கூட, வழக்கு நடந்துகொண்டிருக்கையில், "ஒத்துழையாமை இயக்கக் கொள்கைகளுக்கு ஒப்ப வழக்கின் எதிரிகள் எதிர் வழக்காட விரும்பாததால்" தாங்கள் வழக்கிலிருந்து விலகிக்கொள்வதாக அறிவித்தார்கள்.

பிராஸிகியூட்டர் கே. பி. எம். மேனன் அரசாங்கத் தரப்பில் வழக்கைத் துவக்கினார். அவருக்குச் சாம்பசிவ ராவ், கே. எஸ். ஜயராம ஐயர் இருவரும் உதவி புரிந்தனர்.

'தேச பக்த'னில் வெளியான 'அடக்குமுறை' என்ற ஆட்சேபகரமான தலையங்கத்தில் ராஜத்துவேஷம் மிகுந்த வாக்கியங்கள் நிறைய உள்ளன; அரசாங்கம் நேர்மையில்லாதது, கருணையற்றது என்றும்; ஆங்கில மக்கள் ராட்சஸ குணமுள்ளவர்கள் என்றும் அதில் கூறப்பட்டுள்ளது என்றார் பிராஸிகியூட்டர்.

குறிப்பிட்ட தலையங்கத்தின் ஆங்கில மொழியாக்கம் கோர்ட்டில் சமர்ப்பிக்கப்பட்டது. புதிதாகப் பதவியேற்றிருந்த வைஸ்ராய் ரெடிங் பிரபுவின் ஆட்சியைத் தாக்கியிருந்தது தலையங்கம். இந்த நீதி மிகுந்த பிரபு பதவி ஏற்ற முதல் மாதத்திலேயே, அகம்பாவம் பிடித்த அதிகாரம் தடுப்பாரின்றிப் பாய்கிறது; போகப் போக இவரது ஆட்சி எப்படி இருக்குமோ! அறுபத்து மூன்று கோடி ரூபாய் செலவில் படைகளும், பீரங்கிகளும் வைத்திருப்பது எதற்கு? அடக்குமுறை ஆட்சி நடத்தவே. டையர் என்ற ஒரு கொலைகாரனைக் காக்க அறுபத்து மூன்று கோடி ரூபாய் செலவிடும் இந்த மோசமான அரசாங்கம், ராட்சஸ ஜாதியாரைச் சேர்ந்த உபயோகமற்ற டையரைக் காப்பாற்ற இந்தியாவைக் கூட இழந்துவிடத் தயாராக இருக்கும் இந்த அரசாங்கம், இந்நாட்டுக்கு என்ன தீமை நேர்ந்தாலும் கவலைப்படாது; தனது படாடோபப் பெருமையே பெரிதாக நினைக்கும். இப்படிப்பட்ட ஆட்சியில் இப்போது அடக்குமுறைத் தாண்டவம் தொடங்கியுள்ளதையே காண்கிறோம்.

இவ்வாறு 'தேச பக்தன்' தலையங்கம் கூறியதாம்.

டையர் என்று தலையங்கம் குறிப்பிடுவது ஜலியன்வாலா பாகில் படுகொலை நடத்திய தளபதி டையராகும்.

இந்தத் தலையங்கத்துக்கு இன்னொரு மொழிபெயர்ப்பை அரசாங்கத் தமிழ் மொழிபெயர்ப்பாளர் சரவண முதலியார் கோர்ட்டில் சமர்ப்பித்தார். அத்துடன், 'தேச பக்தன்' பத்திரிகையில் வந்த வேறு சில தலையங்கங்கள், செய்திகள் முதலியவற்றிலும் ஆட்சேபகரமான விஷயம் இருந்ததைக் காட்டும் நோக்கத்துடன் அவற்றின் மொழிபெயர்ப்புகளையும் எக்ஸிபிட்டுகளாகத் தாக்கல் செய்தார். அதாவது

ஒரு தலையங்கம் மட்டுமல்ல, பொதுவாகப் பத்திரிகையில் வந்த விஷயங்கள் யாவுமே ஆட்சேபகரமான தன்மை கொண்டதாக இருந்தன என்று காட்ட முயன்றார் அவர்.

ஆட்சேபிக்கத் தக்கவை என்று அவர் வழக்கில் எக்ஸிபிட்டுகளாகத் தாக்கல் செய்தவற்றில் ஒரு தலையங்கம் - உதாரணத்துக்காக :

**ஸ்ரீராமநவமி** : பஞ்சமும் கொள்ளை நோய்களும் நாட்டைக் கவ்வியுள்ளன. நியாய அநியாயப் பாகுபாடு செய்யும் உணர்ச்சியே மக்களுக்கு இல்லாமல் போய்விட்டது. சுதந்தர உணர்ச்சியைக் காட்டினாலும் சரி, உண்மையை உரைத்தாலும் சரி, அரசாங்கத்துக்கு ஆத்திரம் வருகிறது. இந்த நிலையில்தான் பாரத மாதா தனது மனத்துக்கினிய தெய்வத்தை இன்று கொண்டாடுகிறாள். அண்ட சராசரங்களின் தாயார் தனது குழந்தைகளின் குரலுக்காகக் காத்திருக்கிறாளோ? ... ஆகையால் நாம் இன்று, ராட்சஸர்களை வதம் செய்யும் ஸ்ரீராமபிரானை உலகில் மீண்டும் அவதரித்துப் பாபிகளை ஒழித்து நீதியை நிலைநாட்டும்படி பிரார்த்திப்போமாக. *(15-4-1921)*

வழக்கின் விசாரணை ஸெப்டம்பர் 17-ஆம் தேதி தொடர்ந்தது. ஸெப்டம்பர் 12-ஆம் தேதி பெரிய காந்தி பக்தர்கள் போல நடந்த மூன்று எதிரிகள், ஸெப்டம்பர் 19-ஆம் தேதி தங்களுக்கென வக்கீல் வைத்துக்கொண்டு, தாங்கள் மனப்பூர்வமாக மன்னிப்புக் கோருவதாக அறிவித்தார்கள்! அவர்கள் சார்பில், வக்கீல் வி. என். சாமராவ் தோன்றி, 'அடக்குமுறை' என்ற தலையங்கத்தை வெளியிட்டதன் மூலம் தாங்கள் குற்றமிழைத்திருந்தால் அதற்காக அரசாங்கத்திடம் மன்னிப்புக் கோருவதாகவும், இனிமேல் இவ்விதம் குற்றமிழைக்க மாட்டோம் என்பதாகவும் தெரிவித்தார்.

அவர்களது மன்னிப்புக் கோரிக்கையை அரசாங்கம் ஏற்றுக்கொண்டு, அவர்கள் மீது வழக்குகளை வாபஸ் பெற்றுக்கொண்டுவிட்டதாகக் கிரௌன் பிராஸிகியூட்டர் அறிவித்தார். அம்மூவரையும் மாஜிஸ்டிரேட் விடுதலை செய்தார்.

இனி, வ. வே. ஸு. ஐயர் ஒருவர் மீதுதான் வழக்கு மீதமிருந்தது.

பிராஸிகியூஷன் தரப்பு அறிக்கைக்குப் பிறகு, ஐயர் தமது நிலையை விளக்கி வாக்குமூலம் சமர்ப்பித்தார். அந்த வாக்குமூலத்தில், ஐயர் கூறினர்: "1. இந்தியாவின் பாரமார்த்திகப் பெருமையை நிலைநாட்ட முயற்சி செய்து வரும் ஆயிரக்கணக்கான ஜனங்களுடன் நானும் சேர்ந்து உழைத்து வருகிறேன். இத்தேசத்திற்குச் சுய ராஜ்யம் ஏற்படுகிற வரையில் அத்தகைய பாரமார்த்திக விழிப்பு ஏற்பட முடியாதென்று நான் நம்புவதால் ராஜியத் துறையிலும் நான் உழைத்து வருகிறேன்.

"2. எனது தேசம் சுயராஜ்யம் பெற இதுவரையில் செய்துவந்த பலவிதக் கிளர்ச்சிகளும் பயனற்றுப் போய் விட்டதால், காங்கிரஸ் மகாசபையின் கட்டளையை அனு சரித்து அரசாங்கத்துடன் ஒத்துழையாமை தர்மத்தைக் கைக்கொண் டிருக்கிறேன். எனது தாய்நாடு விடுதலை பெற அதுவே மார்க்கமென்பது எனது நம்பிக்கை. இங்கிலாந்துக்கும், இந்தியாவுக்கும் நீண்ட காலமாக இருந்து வந்திருக்கும் சம்பந்தத்தை வைத்துக்கொள்வதும் விட்டுவிடுவதும் இங்கிலாந்தையே பொறுத்தது ..."

இதன்பின், தாம் 'தேச பக்தன்' பத்திரிகையில் பணி புரிந்துவந்த சூழ்நிலையை விவரித்துவிட்டுத் தாம் முடிவில் விலக நேர்ந்ததையும் கூறினர். ஆட்சேபிக்கப்பட்ட மே 6-ஆம் தேதித் தலையங்கத்தைத் தாம் எழுதவில்லை என்றும், தாம் மே 1-ஆம் தேதி சென்னையை விட்டுக் கிளம்பிச் சென்று 2, 3 தேதிகளில் உய்யக்கொண்டான் சிறுவயலில் (ராமநாதபுரம் மாவட்டம்) ஒரு வருஷாந்தரக் கூட்டத்தில் தலைமை வகித்ததாயும், மே 4, 5 தேதி களில் காரைக்குடியில் பிரசங்கம் செய்ததாயும், பிறகு திருச்சியில் சில தினங்கள் தங்கியிருந்து திரும்பியதாயும், 9-ஆம் தேதி வரையில் தாம் 'தேச பக்த'னுக்கு எவ்வித விஷயமும் எழுதவில்லை என்றும் ஐயர் கூறினர்.

ஆட்சேபிக்கப்பட்ட தலையங்கத்தின் கையெழுத்துப் பிரதி எம். கே. சீனிவாஸன் என்பவரிடம் தரப்பட்டுள்ளது

என்றும், நீதித் தவறு ஏற்படாமலிருக்க (ஐயர் அதை எழுதவில்லை என்பதை ருசுவாக்கும்) அந்தக் கையெழுத்துப் பிரதியைப் பார்க்கலாம் என்றும் ஐயர் தெரிவித்தார்.

முடிவாக, அவர் குறிப்பிடத்தக்க ஒரு விஷயமும் சொன்னார். அவரது வாக்குமூலம் சொல்வதாவது:

"15. பிரஸ்தாப வியாசத்தை நான் இப்பால் வாசித்துப் பார்த்தேன். அதில் இ.பி.கோ. 124-ஏ பிரிவின்படியாவது, வேறு பிரிவுகளின்படியாவது வரக்கூடியது எதுவுமில்லை. மொழிபெயர்ப்பும் பல இடங்களில் சரி இல்லை...

"16. எனவே பிரியாதில் கண்ட குற்றங்களை நான் செய்யவில்லை. ஆயினும் நான் குற்றவாளியென்று கோர்ட்டார் அபிப்பிராயப்படும் பட்சத்தில் எனக்குக் கொடுக்கப்படும் சிட்சையை ஸந்தோஷத்துடன் ஏற்றுக் கொள்கிறேன்."

அரசாங்க வக்கீல், ஐயர் குறிப்பிட்ட தலையங்கத்தை எழுதவில்லை என்பதை ஏற்பதாகவும், அப்படியிருந்தாலும் ஐயருக்கு ஆசிரியக் குழுவில் ஒருவர் என்ற முறையில் பொறுப்பு உண்டு என்றும் கூறினர்.

வழக்கில் 1921 ஸெப்டம்பர் 19-ஆம் தேதி தீர்ப்புக் கூறப்பட்டது. ஐயர் அஹிம்சையை வற்புறுத்தினாலும், அரசாங்கத்தை மக்கள் வெறுக்கவும், அரசாங்கத்திடம் அதிருப்தி கொள்ளவும் செய்துள்ளார் என்பதில் சந்தேகமில்லை என்று மாஜிஸ்டிரேட் கூறினர். ஒன்பது மாதம் வெறும் காவலே போதுமென்று தண்டனை விதித்தார்.

அன்றைய 'ஹிந்து' பத்திரிகை கோர்ட் காட்சியை வர்ணிக்கிறது: "கோர்ட் ஹாலில் கூட்டம் குழுமியிருந்தது. ஐயரின் மகளும், மகனும், மனைவியும் கோர்ட்டில் இருந்தார்கள். தீர்ப்பு அறிவிக்கப்பட்டதும், ஸ்ரீ வி.வி.எஸ். ஐயர் கோர்ட்டிலிருந்து அழைத்துச் செல்லப்பட்டார். போலீஸ் லாக்கப் அறைக்குப் பக்கத்தில், ஐயரது மனைவியும், ஏராளமான ஹிந்து, முஸ்லிம் நண்பர்களும் ஐயருக்கு மாலையிட்டார்கள். தமது கணவர் நாட்டுக்குச் செய்துள்ள தொண்டுக்காகச் சிறை செல்வது பற்றித் தாம்

மகிழ்வதாக ஐயரது மனைவி கூறினர். ஐயரது புதல்வி அவர் காலில் விழுந்து நமஸ்கரித்து, அவர் சிறைக்குச் செல்வ தால் சுயராஜ்யம் நெருங்கிக்கொண் டிருக்கிறது என்றாள். 'மகாத்மா காந்தி-கி-ஜே!' என்று கோஷத்துக்கிடையே ஐயர் போலீஸாரால் ஒரு மோட்டார் காரில் கொண்டு செல்லப்பட்டார்."

குற்றம் செய்தவர் மன்னிப்புக் கோரி விடுதலை பெற்றார்; குற்றம் செய்யாதவரோ, அதில் குற்றமில்லை என்று சொல்லி, பொதுவான பொறுப்புக்காகச் சிறைச் சென்றார்! ஒரு குறிப்பிட்ட தலையங்கத்துக்காக இவ்வழக்குத் தொட ரப்பட்டது என்றாலும், 'தேச பக்தன்' வெளியிட்டு வந்த காரசாரமான கண்டனங்கள் வெளிவராமல் ஒடுக்க வேண்டும் என்பதே அரசாங்கத்தின் நோக்கம் என்பது வெளிப்படை. ஐயர் மன்னிப்புக் கேட்க மறுத்தது, அரசாங்கத்துக்கு வசதியாக இருந்தது.

ஐயர் முதலில் 'பெனிடென்ஷியரி' (சென்னை நகரச் சிறைச்சாலை)க்குக் கொண்டு போகப்பட்டார். பின்னர் பெள்ளாரி மத்தியச் சிறைச்சாலைக்கு மாற்றப்பட்டார்.

ஐயருடைய ஜெயில் வாசமும் தமிழ் இலக்கியத்துக்குப் பெரிய லாபமாக முடிந்தது. பெள்ளாரியில் அவர் சிறை வாசம் அனுபவித்த சமயத்தில்தான் தமது நெடுநாள் ஆவல் ஒன்றைப் பூர்த்தி செய்தார். தமிழிலுள்ள கம்ப ராமாயணத்துக்கு உயர்தரமான இலக்கிய விமர்சனம் ஒன்று ஆங்கிலத்தில் எழுதவேண்டும் என்றும் அந்நூலில் கம்பன் காவியத்திலிருந்து கணிசமான தொகைப் பாடல் களை ஆங்கிலப்படுத்தித் தரவேண்டும் என்றும் ஐயர் வெகுநாளாக விரும்பினர்.

கவிச்சக்கரவர்த்தி கம்பனிடம் ஐயருக்கு இளமை முதலே ஆர்வம் அதிகம். 1907-இல் லண்டனுக்குப் போய்ச் சேர்ந்த முதல் வாரத்தில்கூட அவர் கம்பன் கவிதைகள் சிலவற்றை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்துத் தமது லண்டன் நோட்டுப் புத்தகத்தில் எழுதி வைத் திருந்தார். 1910-இல், தம்மைக் கைது செய்யும் அபாயத்தி னின்றும் தப்ப நள்ளிரவில் சிறு கைப்பெட்டியுடன்

வெளியேறியபோதுகூட ஐயர் கம்ப ராமாயண நூலை எடுத்துச் சென்றார். ஐரோப்பாவிலிருந்து பல்லாயிர மைல் தூரம் கடந்து பாண்டிச்சேரிக்கு வந்தபோது, கம்ப ராமாயணமும் கூடவே வந்தது!

பெள்ளாரி ஜெயிலில் அவர் கம்ப ராமாயண ஆங்கில விமர்சன நூல் எழுதுவதில் முனைந்திருக்கிறார் என்ற விஷயம், அவர் ஜெயிலுக்குப் போய்ச் சில மாதங்களுக்குப் பிறகு காசி நகர நண்பர் பா. ஆதிமூர்த்தி என்பவருக்கு எழுதிய கடிதத்தின் மூலம் தெரியவந்தது. சிறைவாசத்தின் முதல் மூன்று மாதங்கள் இலக்கிய விஷயத்தில் கழிந்தன, தமது ஆங்கில நூலில் சுமார் நூறு பக்கங்கள் தயாராகியுள்ளன என்று அக்கடிதத்தில் ஐயர் கூறினார். ஆனால், தமது வேலைக்கு 'கிரிஃபித்' என்ற அறிஞர் செய்துள்ள துளசி ராமாயண ஆங்கில மொழிபெயர்ப்பும், வால்மீகி ராமாயண ஆங்கில மொழிபெயர்ப்பும், திலகரது 'கீதா ரகஸ்யம்' நூலும் வேண்டியிருக்கிறதென்றும், அவைகளை வாங்கியனுப்ப முடியுமா என்றும் நண்பர் ஆதிமூர்த்தியை அவர் கேட்டிருந்தார்.

ஆதிமூர்த்தி அந்நூல்களை வாங்கி அனுப்பினார். பிற இந்திய மொழிகளிலுள்ள ராமாயண காவியங்களையும் ஐயர் பார்த்தார். தெலுங்கிலுள்ள பாஸ்கர ராமாயணத்திற்கு அவர் குறிப்பெடுத்துக் கொண்டார்.

ஐயர் கட்டுத் திட்டப்படி வேலை செய்பவர். தினமும் இவ்வளவு வேலை செய்யவேண்டும் என்று பிடிவாதமாக உழைப்பார். "அவருடைய நூலின் கையெழுத்துப் பிரதியில் ஒரு பழுப்பேறிய பத்திரிகை விள்ளல் இருந்தது. அதில், பல்வேறு புகழ்பெற்ற ஆசிரியர்கள் தினசரி எவ்வளவு எழுதினார்கள் என்ற கணக்கு இருந்தது. டாக்டர் ஜான்ஸன் 'ராஸிலஸ்' என்ற 20,000 சொல் நூலை ஒரே வாரத்தில் எழுதினார்; மார்க் ட்வெயின் தினம் 4,000 சொல் அளவு எழுதினார்; ஸ்டீவன்ஸன், கை டி மாப்பஸான், பால்ஸாக், ஹச்சின்ஸன், ஆப்பன்ஹேம், எச். ஜி. வெல்ஸ் முதலியோரது எழுத்து வேகமும் ஐயரைக் கவர்ந்தன. அவருடைய கையெழுத்துப் பிரதியில்

ஒவ்வொரு நாளின் தேதியும், எழுதப்பட்ட சொல் அள வின் விவரமும் இருக்கின்றன. ஒன்பது மாதத்தில் சிறையில் ஐயர் அந்தப் பெரும் ஆசிரியர்களது எழுத்து வேகத்துக் குச் சளைக்கவில்லை. அந்த ஒன்பது மாதத்தில் அவர் 1,40,000 சொற்கள் எழுதினர்; இதில் மூன்றில் ஒரு பகுதி கவிதை." இவ்வாறு ஐயரது வாழ்க்கையை விவரித்து ஓர் ஆசிரியர் பாராட்டுகிறர்.

## 16. 'கம்ப ராமாயணம் - ஓர் ஆராய்ச்சி'

ஐயரது நூல்களில் தலையாய நூல் என்று கருதப்படுகிறது பெள்ளாரி சிறையில் அவர் எழுதிய 'கம்ப ராமாயணம்-ஓர் ஆராய்ச்சி' ('Kamba Ramayanam - A Study') என்ற ஆங்கில நூல்.

இந்நூல் இலக்கியத் துறையில் சவால் விடும் ஒரு நூல் ஆகும்.

நூலில் முதல் வாக்கியமே போர்க் கொடியை எழுப்புகிறது :

"இவ்வளவு நாள் வாளாவிருந்துவிட்டு, இப்பொழுது உலக இலக்கியங்களில் மிகச்சிறந்த மகாகவிகளுக்கு இணையாக விளங்குகிற ஒரு மகாகவி தமிழில் இருக்கிறார் ; இதை உலகம் உணரவில்லை என்று சொன்னால், அதை உலகம் எளிதில் ஏற்காது. ஆனாலும், தமிழ்க் கவி கம்பனுடைய ராமாயண காவியமானது 'இலியத்', 'ஈனீத்', 'சொர்க்க நீக்கம்', 'சொர்க்க மீட்சி', 'மகாபாரதம்' முதலிய புகழ்பெற்ற நூல்களை விஞ்சக் கூடியது மட்டுமல்ல ; ஆதி காவியமான வால்மீகியின் ராமாயணத்தையும் விஞ்சக் கூடியதாகும் என்று நிரூபிப்பதுதான் எனது இந்நூலின் நோக்கமாகும். சொந்தமொழி அபிமானத்தால் சொல்லும் உற்சாகப் பேச்சல்ல இது. பல வருஷங்களாக ஆழ்ந்த ஆராய்ச்சி செய்த தன் பயனாக என்னுள் முதிர்ந்து கனிந்துள்ள அபிப்பிராயம் இது. பாரபட்சமில்லாத வாசகர் இந்த நூலைப் படித்தபின் என்னுடைய அபிப்ராயம் எவ்வளவு சரியானது என்பதை ஏற்கும்படி செய்வேன் என்ற நம்பிக்கை எனக்கு உண்டு. இந்த நூலில் கண்டதற்கும் அதிகமாகவே அந்த மகாகவியைப் பற்றி மேலும் தெரிந்துகொள்ள விரும்புவார் என்று நம்புகிறேன்."

இந்தத் துணிச்சலான வாக்கியங்களுக்குத் தொடர்ச்சியாக வருவது இன்னும் உறுதியான சவாலாக இருக்கிறது.

கம்பனுடைய ராமாயணம் வால்மீகியின் ராமாயணக் கதையைத் தழுவியது. ஆனால், கம்பன் வால்மீகியை மொழி பெயர்க்கவில்லை. அந்த ஆரியமுனியின் அழியாக் காவியத்தின் கதையை மட்டும் எடுத்துக் கொண்டான். கதையை அப்படியே பின்பற்றினன் என்றாலும் அவன் எழுதியிருப்பது முற்றிலும் சொந்தமான காவியமாகும். போப் என்ற ஆங்கிலக் கவி, 'இலியத்' காவியத்துக்குச் செய்த மொழிபெயர்ப்பைப் பற்றி, பெண்ட்லி என்பவர், 'காவியம் அருமையாக இருக்கிறது ; ஆனால் ஹோமர் எழுதிய இலியத் அல்ல இது!' என்றார். நாமும், இதைத் தலைகீழாகத் திருப்பி, கம்பனது ராமாயணத்தைப் பற்றி, 'அது வால்மீகியின் ராமாயணமன்று ; அதைவிடச் சிறந்ததொரு காவியம்' என்று சொல்லலாம்.''

சாதாரணப் பேச்சிலோ அல்லது கட்டுரையிலோ இம்மாதிரி அடித்துப் பேசித் தப்பித்துக்கொண்டு போய்விடலாம். ஆனால் ஐயரோ இந்தக் கருத்துக்களை ஒரு புத்தகத்தில், தரமான அறிஞர்களுக்கான ஒரு புத்தகத்தில் சொல்லுகிறார். சொல்வதற்கு ஆதாரமாகப் பல மேற்கோள்களையும் காட்டுகிறார். கதை சொல்லுதல், கதையின் கட்டுக்கோப்பு, காவியங்களில் மனித சக்திக்கு அப்பாற்பட்ட சம்பவங்கள், கதையின் பல்வேறு பாத்திரங்களின் படைப்பு—இவ்வாறு பல விஷயங்கள் பற்றிய இலக்கியக் கொள்கையை அவர் விமர்சிக்கிறார். அவரது பார்வை பரந்து பாய்கிறது. கிரேக்க மொழி வல்லுநர்கள், ஆங்கில மேதாவிகள், ஸம்ஸ்கிருத மகாபண்டிதர்கள், தமிழ் அறிஞர்கள் எல்லாரிடமிருந்தும் அவர் மேற்கோள் கையாளுகிறார். தாம் எக்கருத்து வெளியிட்டாலும் உலக இலக்கியங்களில் அதற்கு ஆதாரம் காட்டுகிறார்.

பிறநாட்டுக் காவியங்களில் காணும் பாத்திரங்களை விவரித்து, கம்பனுடைய காவியப் பாத்திரங்களுடன் அவைகளை ஒப்பிட்டு, கம்பன் எவ்வாறு அவர்களை விஞ்சுகிறான் என்று காட்டுகிறார் ஐயர். நூலில் கம்ப

ராமாயணத்திலிருந்து சுமார் நாலாயிரம் பாடல்களை ஆங்கிலக் கவிதையாகக் கொடுத்துள்ளார் ஐயர். இது கம்ப ராமாயணத்தின் மூன்றில் ஒரு பங்கை மொழி பெயர்த்ததாகிறது. இந்த ஒரு காரியமே செயற்கரிய சாதனை. இது தவிர, தமது வாதங்களுக்கு ஆதரவாக ஐயர் எழுதியுள்ளது, இந்தச் சாதனைக்கு முத்தாய்ப்பு வைக்கிறது. ஐயருடைய விரிவான, ஆழமான, பன்மொழிப் புலமை ஒவ்வொரு பக்கத்திலும் தெரிகிறது. தம்முடைய நூலில் அவர் மேற்கோள் காட்டியுள்ள ஆசிரியர்களில் அரிஸ்டாட்டில், ஹோரேஸ், மில்ட்டன், ப்வாலோ, வால்மீகி, தண்டின், ஷாட்டூபியான், விர்கில் முதலியோர் உள்ளனர். கம்ப ராமாயணத்தைப் பிற ராமாயணங்களுடனும் ஒப்பிடுகிறார் அவர். வால்மீகி, துளசிதாஸ், பாஸ்கரர் (தெலுங்குக் கவி) முதலியவர்களது ராமாயணங்களுடன் ஒப்பிடுவதுடன், கம்ப ராமாயணத்தை ஹோமர், விர்கில், மில்ட்டன் முதலியவர்களுடைய காவியங்களோடும் ஐயர் ஒப்பிடுகிறார்.

ஒரு காவியம் கால வளர்ச்சிப்படி படிப்படியாக வளர வேண்டுமா, அல்லது மேலை நாடுகளில் அனாதிகாலம் முதலாக விரும்பப்படுகிறபடி திடீர் என்று ஆரம்பித்து முன்னும் பின்னும் போகவேண்டுமா?

ஐயர் கூறுகிறார்: "ராமாயணம் கதாநாயகனின் பிறப்பு, இளமை, வளர்ச்சி என்ற இயற்கையான வளர்ச்சி முறையில் அமைக்கப்பட்டுள்ளது என்பதை வாசகர் கவனித்திருக்கலாம். ஐரோப்பியக் கவிஞர்களோ தங்களுக்கு முன்னுதாரணமான 'இலியத்'தில் உள்ளது போல் காவியத்தைக் கதையின் முடிவுக்கு எவ்வளவு அருகில் ஆரம்பிக்க முடியுமோ அவ்வளவு கதை முடிவுக்கு அருகில் தொடங்குகிறார்கள். கதையின் முந்திய பகுதிகளை நேரடியான சம்பவ வர்ணனையாலும், ஆங்காங்கே பேச்சில் குறிப்பிடுவதன் மூலமும் காட்டுகிறார்கள்.

இந்த மேலைக் காவியங்கள் இந்திய மகாகாவியங்களை விட இவ்விஷயத்தில் அதிர்ஷ்டசாலிகள். காவியத்தின் ஆரம்பத்திலேயே சுவாரஸ்யமான கதை வாசகரது

கவனத்தை ஈர்க்கிறது. இந்திய மகாகாவியங்களோ இந்தக் காலத்து வாசகரது கவனத்தை இழுப்பதற்குமுன் அவை மெதுவாக ஆரம்பத்திலிருந்து வளர்ந்து வர வேண்டியிருக்கிறது. ஆனல் நமது மகாகவிகள் ஆரம்பத்திலிருந்து கால வரிசைப்படி சம்பவங்களை விவரித்தும் கூட, காலத்தை மீறி நிற்கும் காவியங்களைச் சமைக்க முடியுமென்று காட்டியிருக்கிறர்கள்.

காவிய லட்சணம் பற்றி மேலைநாடுகள், கீழைநாடுகள் இவற்றின் அறிஞர்கள் கூறுவதை எடுத்துக் காட்டி விட்டு, காவியத்தின் கட்டுக்கோப்பு பற்றி ஐயர் விவாதிக்கிறர். கம்பனுடைய ராமாயணத்தின் அமைப்பும் கட்டுக்கோப்பும் அற்புதமானவை; கம்பனது கவிதையில் காவியத்தின் பகுதிகளும் முழுமை பெற்று விளங்குகின்றன; பகுதிகள் யாவும் ஒற்றுமை அழகுடன் ஒன்று சேர இணைகின்றன.........வால்மீகியைப் பின்பற்றும் இடங்களிலும் சரி, வால்மீகியிலிருந்து மாறுபடும் இடங்களிலும் சரி கம்பன் கவிதையின் அமைப்பும் கட்டுக்கோப்பும் அழகுடன் மிளிரச் செய்கிறன் என்று ஐயர் கூறுகிறர்.

ராமாயணக் கதையைக் கம்பன் கையாளும் விதத்தைப் பற்றி ஐயர் சொல்வதாவது: "கதை அநேகமாக வால்மீகி வகுத்த கதைதான். சம்பவங்களை வால்மீகியிடமிருந்து எடுத்திருந்தாலும், அவைகளைக் கம்பன் விவரிக்கும் விதமோ முற்றிலும் அவனுடைய சொந்தக் கற்பனையாகும். சம்பவத்துக்குச் சம்பவம் கதைப் போக்கை வளர்த்துக் கொண்டு போகும் விதம், ஒவ்வொரு சம்பவமும் படிப்படியாக வளர்ந்து உச்சநிலையை அடைவது, ஒவ்வொரு சம்பவத்தின் சுவையையும் முற்றும் பிழிந்து காவியத்திற்கு இனிமை கூட்டும் திறமை—இவை எல்லாவற்றிலும் கம்பன்தான் முதல்தரமான சித்திரகாரன் என்று காட்டுகிறன். சம்பவங்களை இணைத்துக் காவியக் கதையை உருவாக்குவதிலும் அவன் காட்டியுள்ள திறமை சாதாரணமானதல்ல. கம்பன் கையாளும் ராமாயண சம்பவம் ஒவ்வொன்றும் வால்மீகியின் வாசகர்களுக்கும் தெரிந்ததேதான். ஆனல், கம்ப ராமாயணம்

முழுவதையும் சுவைத்தால், 'ஆஹா, இந்தக் கவியும் அதே அமைப்பில்தான் காவியம் புனைந்தான்; அதே கதைதான்; ஆயினும் இவனது காவியத்துக்கு உள்ள தனித்தன்மைதான் எவ்வளவு ஜொலிப்பாக இருக்கிறது!' என்று சொல்லத் தோன்றுகிறது.''

பாத்திரப் படைப்பில் கம்பன் தலைசிறந்து விளங்குகிறான் என்பது ஐயர் அபிப்பிராயம். "பாத்திரப் படைப்பில் கம்பன் உலக மகாகவிகளுக்கு இணையாக நிற்கிறான். அவனது பாத்திரங்களின் லட்சணங்கள் தெளிவாக, உறுதியாக வரையப்படுகின்றன. பாத்திரங்களின் படைப்பு எவ்வளவு சிறப்பாக, தவறின்றி இருக்கிறதென்றால், ஒரு வாக்கியம் அல்லது ஒரு சொல்லிலிருந்து கூடப் பேசுவது யார் என்று சந்தேகத்துக்கிடமின்றிக் கண்டுகொள்ள முடிகிறது'' என்று ஐயர் சொல்கிறார்.

மேலும், "ராமாயணக் கதாபாத்திரங்களுக்கு வால்மீகி திட்டவட்டமான உருவம் கொடுத்திருக்கிறார். ஆனால் அதே கதாபாத்திரங்கள், கம்பன் கையில் கம்பீரமாகக் காட்சியளிக்கிறார்கள்.

"வால்மீகியைப் படித்தவர்கள், வால்மீகியின் ராமனையோ, பரதனையோ, ராவணனையோ, கும்பகர்ணனையோ, வாலியையோ, ஹநுமானையோ, சீதையையோ, கௌசல்யையையோ, மற்றவர்களையோ அதைவிட உயர்வாக எப்படிச் சித்திரிக்க முடியும் என்று யோசிக்கக் கூடும். ஆனால், உண்மை என்னவென்றால், கம்பனுடைய கதாநாயகர்களும், கதாநாயகிகளும் வால்மீகியின் கதாநாயகர்களையும் கதாநாயகிகளையும்விடச் சந்தேகத்துக்கு இடமில்லாமல் உயர்ந்தவர்கள்தாம்.''

இப்படி ஒருவர் சொல்லிவிட்டால், மற்றவர்கள் சும்மா விட்டுவிடுவார்களா? ஆதலால்தான் தமது கூற்றுக்களுக்கு நேரடி ஆதாரம் போல் கம்ப ராமாயணக் கவிதைகளில் மூன்றில் ஒரு பங்கை ஆங்கிலப்படுத்தித் தந்தார் ஐயர். வாசகர் தாமே படித்து, ஒப்பிட்டுத் திருப்தியடையலாமே.

தமது மொழி வெறியால் தமிழ்க்கவி ஒருவனை வானளாவப் புகழ்பவரல்லர் ஐயர். அவருக்குக் கைதட்டல்,

பாராட்டு வாங்கும் வழக்கம் கிடையாது. அவரது லட்சியமெல்லாம் இலக்கிய மேம்பாடே. இலக்கிய விவாதம், அதுவும் தரமான முறையில் இருக்கவேண்டும். அதுதான் ஐயரது நோக்கம். அவர் சொன்னதைப் பிறர் ஏற்ருலும் சரி, ஏற்காவிடினும் சரி கம்பனது மேம் பாட்டை இலக்கிய வட்டங்களில் அறிஞர்கள் பட்சபாத மின்றி விவாதிக்கவேண்டும் என்ற அளவிலாவது தமது நோக்கம் பலித்தால் போதுமென்பது ஐயர் கருத்து.

கவிதையை மொழிபெயர்ப்பது கடினமானது. கவிதை யைக் கவிதையாகவே மொழிபெயர்ப்பது அதைவிடக் கடினம். அந்த விதத்தில், தமது ஆங்கில மொழிபெயர்ப்புக் கவிதைகள் ஆங்கில மொழியின் மரபுக்கேற்ப நயம் குறையாமல் இருக்குமாறு ஐயர் தமது மொழிபெயர்ப் பைச் சாதித்துள்ளார்.

கம்பனிலுள்ள ராமனின் அழகு, காதல் புரியும் மென்மை, அநீதியைக் கண்டு அவன் பொருமி வெடிக்கும் வெடிப்பு, லக்ஷ்மணன் வீழ்ந்ததும் சகோதர வாஞ்சையால் துடிக்கும் துடிப்பு! - இன்னும் நூற்றுக் கணக்கான இடங்களில் கம்பனது ராமனை நம் கண்முன்னே கொண்டுவந்து நிறுத்துகிருர் ஐயர். கம்ப ராமாயணத்தில், சீதையைத் தேடப் புறப்படும் ஹநுமானிடம், அவன் கிளம்பும் முன், சீதைபற்றி ராமன் வர்ணிக்கும் அழகே அழகு. பொன் மான் வந்தபோது, 'ராமன் போக வேண்டாம், நானே போய்க் கொண்டு வருகிறேன்' என்று லக்ஷ்மணன் சொல்ல, தனது கணவனை இளப்பம் செய்துவிட்டதாகச் சீதை வெகுண்ட பெண்மைச் சுவை கம்பனது ரசனைக்கு உதாரணம்.

ஜடாயுவைக் கண்ட ராமன், அவனை வீழ்த்தியவனை ஒரே பாணத்தில் வீழ்த்திவிடுகிறேன் என்று உலகம் நடுங்க உரைக்கிருன். கம்பன் இதைக் கையாள்வது தனிச் சிறப்புடையது. இந்திரஜித்துக்கும், லக்ஷ்மணனுக்கும் யுத்தம் நடப்பதைக் கம்பன் விவரிப்பது யுத்தகளத்தின் ஒலிகள் நம் காதில் ஒலிக்கும்படி செய்கிறது.

வால்மீகியில் இல்லாத ஒரு சில சேர்க்கைகளில், கம்ப ராமாயணத்தில் உள்ள ஹிரணியகசிபு வதம் குறிப்பிடத் தக்கது. இந்தக் கதையை ராவண தர்பாரில் விபீஷணன் எடுத்துரைப்பதாகக் கம்பன் கதையில் சேர்க்கிறுன். 'ராவணு, உன்னைவிட மகாபலவானுன ஹிரணியகசிபுவே மகாவிஷ்ணுவிடம் பட்ட பாட்டை நினைவில் வை' என்கிறுன் விபீஷணன்.

கம்பனுடைய வாலி வதமும், வால்மீகியின் வாலி வதத்தைவிடச் சிறப்பாக அமைந்துள்ளதென ஐயர் கூறுகிறுர். கம்பனுடைய வாலி-ராமன் சம்வாதம் வால்மீகி யின் அதே சம்வாதத்தைவிட உயர்வானது.

'கம்ப ராமாயணம்–ஓர் ஆராய்ச்சி' என்ற ஆங்கிலநூல் 1922–இல் எழுதப்பெற்றதென்றுலும், ஐயர் காலத்தில் அது அச்சேறவில்லை. அவர் காலமாகிக் கால் நூற்றுண்டு ஆன பிறகுதான், 1950–இல் அது புத்தகமாக வெளிவந்தது. நூல் பூர்த்தியாக இல்லாமலிருந்ததே காரணம்.

தமது நூலில், கம்பன் சமைத்த காவிய பாத்திரங்கள் ஒவ்வொன்றையும் ஐயர் தனித் தனி அத்தியாயங்களில் விமர்சித்தார். இந்தப் பாத்திர லட்சண விவாதத்தில் சீதையைப் பற்றிய அத்தியாயத்தைக் கடைசியாக எழுத இருந்தார் ஐயர். பெள்ளாரி சிறையில் அதை எழுதி முடிக்க முடியவில்லை. வெளியில் வந்த பிறகோ, அதை எடுக்கக்கூட அவருக்கு அவகாசம் கிடைக்கவில்லை. முற்றுப் பெருத நூல் வெளியாகாமலே நின்றது.

1950–இல் அகஸ்மாத்தாக, இந்த நூலில் தில்லித் தமிழ்ச் சங்கம் சிரத்தை கொண்டது. தனது உறுப்பினர் ஒருவரைக் கொண்டு சீதை அத்தியாயத்தை எழுதுவித்து, நூலை முடித்து, சங்கம் தன் சொந்தப் பொறுப்பில் நூலை வெளியிட்டது. அதன்பின் நூல் இரண்டு பதிப்புகள் வந்தது.

ஐயர் காலத்தில் இருந்ததைவிட இன்று கவிச்சக்கரவர்த்தி கம்பனது புகழ் உலகில் அதிகம் பரவியுள்ளது. கம்ப ராமாயணத்தில் சில பகுதிகளை உலக இலக்கியங்கள் வரிசையில், யுனெஸ்கோ ஸ்தாபன ஆதரவில், சி. ராஜகோபாலச்சாரியார் (ராஜாஜி) ஆங்கிலப் படுத்தியுள்ளார்.

ஐயருடைய நூல் கம்பனுடைய கவிதைகளில் மூன்றில் ஒரு பங்கை ஆங்கிலத்தில் தருவது தவிர, அவனது ராமாயண காவியத்தைத் தற்கால ஒப்புமை முறையில் விவரித்துள்ளதால், அந்நூல் நாளுக்கு நாள் உலக அறிஞர்களால் பாராட்டி வரவேற்கப் படுகிறது.

# 17. தமிழ்க் குருகுலம்

பெள்ளாரி சிறையிலிருந்து வ. வே ஸு. ஐயர் விடுதலை ஆனதும் அவரது மனைவியும் குழந்தைகளும் அவரை வந்து கண்டார்கள். அவர்கள் ஐயரது சிறைவாச காலத்தில் பெள்ளாரிக்குச் சமீபத்தில் துங்கபத்திரை நதிக்கரையில் அமைந்த ஸ்வாமி தாரகநாதரின் துங்கபத்திரா ஆசிரமத்தில் தங்கியிருந்தார்கள். ஒன்று சேர்ந்த குடும்பம் ஹம்பி, விஜயநகரம் முதலிய புராதன ஸ்தலங்களைப் பார்த்து விட்டு வந்தது. கலைகளில் பற்றுள்ள ஐயர், சில நூற்றாண்டுகளுக்கு முன் விஜயநகரப் பேரரசின் கீழ்ச் சிற்பக்கலை அடைந்திருந்த சிறப்பை ரசித்தார்.

இதன்பின், அவர்கள் நேரே திருச்சிக்குச் சென்றனர். அங்கே வரகனேரியில், பூர்விக வீட்டில் கொஞ்சகாலம் வசித்தனர். காங்கிரஸ் நடவடிக்கைகளில் தீவிரமாக ஈடுபட்டார் ஐயர்; திருச்சி ஜில்லா காங்கிரஸ் கமிட்டியின் நிர்வாகக் கமிட்டி அங்கத்தினரானார்.

'தேச பக்தன்' வேலையைச் சிறைச்சாலைக்குப் போவதற்கு முன்பே விட்டுவிட்டாராதலால், ஐயருக்கு இப்போது வேலை என்று ஒன்றும் இல்லை. காசியில் தாம் மேற்கொண்ட இரண்டு சபதங்களில், தமிழை வளர்ப்பது பற்றி அவரது கவனம் சென்றது. ஏற்கனவே 'தேச பக்தன்' பத்திரிகையில் உழைத்தது மூலமும், கம்ப ராமாயணம் பற்றிய தமது ஆங்கில ஆராய்ச்சி நூலின் மூலமும் தமிழ் வளர்ப்புப் பணியில் ஒரு பங்கைத் தாம் செய்திருப்பதாக ஐயர் கருதினார். ஆனால் அவருக்கு இது போதுமென்று தோன்றவில்லை. ஒரு சிறந்த தமிழ் மாதப் பத்திரிகை நடத்தி அதன் மூலம் உயர்ந்த கட்டுரை, கவிதை, கதைகளைத் தோற்றுவிக்க வேண்டும் என்று ஐயர் மிக்க ஆவல் கொண்டார்.

இந்தப் பத்திரிகை துவங்குவது தவிர, கல்விக் கூடம் ஒன்று அமைப்பதென்ற மற்ருெரு பிரதிக்ஞை இருப்பதை யும் ஐயர் மறக்கவில்லை. இத்தகைய குருகுலம் ஒன்று அமைத்தால், அதில் மாதப் பத்திரிகையையும் நடத்தலாம் என்று ஐயர் தீர்மானித்தார்.

புதிய முறையில் பயனுள்ள கல்வி போதிக்கும் குருகுலம் அமைக்கவேண்டும் என்று ஐயர் கருதியதன் காரணங்கள் இரண்டு. அமெரிக்க நீக்ரோ தலைவர் புக்கர் வாஷிங்டன், தாம் உருவாக்கிய டஸ்கஜீ இன்ஸ்டிட்யூட்டில் படிப்பை யும் தொழிற் பயிற்சியையும் இணைத்துக் கல்வி போதித் தார். இந்த முன்மாதிரியைப் பின்பற்ற விரும்பினுர் ஐயர்.

மற்ருெரு காரணம், மகாத்மா காந்தியின் ஒத்துழை யாமை இயக்கத்திஞல் ஏற்பட்ட அவசியங்கள் சில ஆகும். அரசாங்க உத்தியோகங்கள், கல்விக் கூடங்கள், கோர்ட்டுகள் மூன்றையும் பகிஷ்கரிக்க வேண்டும் என்பது ஒத்துழையாமை நெறி. ஆதலால், தேசீயக் கல்வி போதிக்க, காந்தியே 1920 நவம்பர் மாதம் 'குஜராத் வித்தியாபீடம்' என்ற 'குஜராத் தேசீயப் பல்கலைக் கழகம்' ஆரம்பித்தார். அங்கே கல்வி சம்பந்தமாக, போதனை யிலும் சரி, லட்சியங்களிலும் சரி சுயேச்சையான துணிகர முயற்சிகள் நடைபெற வேண்டும் என்பது காந்தியின் விருப்பம். நாடு பரவிய தொழிற் கல்வி முறை உருவாக வேண்டும் என்றும் அவர் விரும்பினுர். படிப்படியாக உயர்நிலைப் பள்ளிக்கூடங்களும் அமைத்து, நகரங்களிலும் கிராமங்களிலும் பயனுள்ள கல்வி பரவி, படித்தவர் படியாதவர் என்பவர்களுக்கிடையில் உள்ள பேதம் இல்லாதபடி செய்ய விரும்பினுர். "மேல் வகுப்பு மக்களுக்குக் கைத்தொழில் பயிற்சியும், கைத்தொழில் செய்வோருக்கு இலக்கிய போதனையும் சேருவதால் சமூகத்தில் அதிருப்தி குறையும்; செல்வப் பங்கீடு சமமாகும்" என்று காந்தி கூறினுர்.

தாம் ஆரம்பிக்க விரும்பிய கல்விக் கூடத்துக்குத் தக்க இடம் தேடி, ஐயர் பல இடங்களைப் பார்த்தார். சென்னை யில் கோடம்பாக்கம், மன்ஞர்குடி, வெண்ணுற்றங்கரை

(தஞ்சாவூர்) முதலிய ஊர்களில் அவர் பார்த்த இடங்கள் திருப்தி தரவில்லை.

இந்தச் சமயம், திருநெல்வேலி ஜில்லாவில் கோயில் பட்டியில் ஒரு காங்கிரஸ் மகாநாட்டில் தலைமை வகிக்கும்படி ஐயரை அழைத்தார்கள். மகாநாடு முடிந்தபின், அவர் அதே ஜில்லாவில் உள்ள கல்லிடைக்குறிச்சி என்ற ஊருக்குப் போக நேர்ந்தது. கல்லிடைக்குறிச்சி தாலுக்கா போர்டு பள்ளிக்கூட ஆசிரியர்கள், காந்தியின் ஒத்துழையாமை இயக்கத்தில் சேர்ந்து, அந்தப் பள்ளியில் வேலை செய்வதில்லை என்று தீர்மானித்துவிட்டார்கள். அவர்கள் பிறகு தாங்களே சொந்தமாக, 'திலகர் வித்தியாலயம்' என்ற தேசியப் பள்ளிக்கூடத்தை ஆரம்பித்தார்கள். ஐயர் கல்லிடைக்குறிச்சிக்குப் போனபோது, 'திலகர் வித்தியாலய'த்தை எடுத்துக்கொண்டு நடத்தும்படி எல்லாரும் அவரை வேண்டினார்கள்.

ஐயர் சம்மதித்தார். கல்லிடைக்குறிச்சி ராமலிங்க ஐயர் தோட்டத்தில் நடந்துவந்த 'திலகர் வித்தியாலய'மே பின்னர் சேரமாதேவியில் ஐயரது 'தமிழ்க் குருகுல'மாகப் பரிமளித்தது. ஐயர் 'தமிழ்க் குருகுலத்'தையும், அதை நடத்திவைக்க, 'பாரத்வாஜ ஆசிரம'த்தையும் தோற்றுவித்தார். 'திலகர் வித்தியாலயம்' குருகுலத்தில் இணைந்தது.

தாம் விரும்பிய கல்விக் கூடமொன்று தோன்றியதென்றாலும் 'திலகர் வித்தியாலயம்' ஐயருடைய லட்சியத்தின் முதல் படியாகவே இருந்தது. ஏனெனில். தேசீயக் கல்விக்கூடம் என்பதைத் தவிர அடிப்படையான மாறுதல் ஏதும் அதில் இருக்கவில்லை. கல்வி போதனை வழக்கமான முறையிலேயே இருந்தது. ஒரே வித்தியாசம், ஹாஸ்டலில் இருந்த மாணவர்கள் கட்டுப்பாடாக வாழ்ந்தனர்; விடியற்காலையில் எழுந்து தங்களுடைய பாத்திரங்களைத் தாங்களே துலக்கி, தங்கள் உடைகளைத் தாங்களே துவைத்து வந்தனர். வேளை தவறாமல் பிரார்த்தனை செய்தார்கள். பாரதமாதாவுக்கு அஞ்சலி செய்தார்கள். வித்தியாலய மாணவர்கள் காலையில் தேசீய பஜனை செய்துகொண்டு வெளியே சென்று வித்தியாலயச் செலவுக்காக அரிசி

சேர்த்து வந்தார்கள். அருகிலுள்ள கல்யாணி அருவிக்கு அடிக்கடி மாணவர்கள் போய்வந்தார்கள்; தாமிரவருணி நதியில் நீச்சல் போட்டிகள் நடந்தன.

தமது குருகுலத்துக்குத் தக்க இடம் ஒன்றை ஐயர் இன்னும் தேடிக்கொண் டிருந்தார். பல இடங்களைப் பார்த்தார். தாம் தேர்ந்தெடுக்கும் இடம் இயற்கை அழகுள்ளதாக இருக்க வேண்டும் என்றும், அமைதியாகப் படிப்பதற்கு வசதியாக இருக்க வேண்டும் என்றும் அவர் விரும்பினார். கடைசியில், இத்தகைய இடம் ஒன்று தெரியவந்தது. சேரமாதேவியில், ரெயில்வே ஸ்டேஷனிலிருந்து ஒன்றரை மைல் தூரத்திலும், தாமிரவருணி நதிக்கு மூன்று மைல் தூரத்திலும் முப்பது ஏக்கர் நிலம் ஒன்று விற்பனைக்கு வந்தது. செழுமையான நிலம். நிறைய மரங்கள் உள்ளது. பெரிய கிணறு. தெற்கே ஒரு மைல் தூரத்தில் கொழுந்தியா மலை அழகாகத் தெரிந்தது. இன்று போய்ப் பார்க்கும் போதுகூட இயற்கை அழகு குன்றமல் இருக்கும் இந்த இடம், ஐம்பது ஆண்டுகளுக்கு முன் எவ்வளவு அழகாக இருந்திருக்க வேண்டும்!

முப்பது ஏக்கர் நிலம் 3,000 ரூபாய் விலைக்கு வந்தது. நல்ல விலை. ஆனால் ஐயரிடம் ரொக்கம் இல்லை. அவரிடம் கையில் பணமே இல்லை. பத்திரிகைகளில் ஒரு வேண்டுகோள் விடுத்தார். அதிர்ஷ்டவசமாக, நாட்டுக் கோட்டை நகரத்தார் சமூகத்தில் கொடைவள்ளல் எனப் பெயரெடுத்த கானாடுகாத்தான் வயி. சு. சண்முகன் செட்டியார் இத்தொகையை நன்கொடையாக அளித்தார். இடம் வாங்கப்பட்டது. நல்ல நாளில் ஐயர் தமது 'தமிழ்க் குருகுல'த்தைச் சேரமாதேவிக்கு மாற்றினார்.

குருகுலம் பற்றி ஐயரது சிந்தனை லட்சியம் நிறைந்தது. குருகுலம் தனது செலவுகளில் பெரும்பாலானவற்றைத் தனது வரவிலிருந்தே சமாளிக்க வேண்டும் என்பது ஐயரது முடிவான ஆசை. அமெரிக்க நீக்ரோ தலைவர் புக்கர் வாஷிங்டனுடைய முன்னுதாரணம் இதில் அவருக்கு வழிகாட்டியாக இருந்தது. குருகுலத்துக்கு வரவு எப்படி? முப்பது ஏக்கரில் ஒரு பகுதியை நெல் வயலாக வைத்துச்

சாகுபடி நடத்திஞர்கள். ஒரு பகுதியைப் பருப்புச் சாகு படிக்கு ஒதுக்கிஞர்கள். சாகுபடி வேலை முழுவதும் குருகுல மாணவர்களே செய்தார்கள்; அவசியமானபோது அனு பவமுள்ள விவசாயிகளின் மேற்பார்வையை ஏற்ருர்கள்.

முப்பது ஏக்கரில் மாமரங்கள், வாழைமரங்கள், தென்னை மரங்களும் நிறைய இருந்தன. தேங்காய் சமையலுக்கும், எண்ணெய்க்கும் பயன்பட்டது. மாங்காய் ஊறுகாய்க்கும் கனியாக உண்பதற்கும் பயன்பட்டது.

ஒரு பெரிய ஆலமரமும் குருகுலத்தில் இருந்தது. அதன் பரந்த கிளைகளுக்குக் கீழே, திறந்தவெளி வகுப்புகள் நடந்தன.

செடி கொடிகளைப் பேணி வளர்த்தல் அவசியம் என்பவர் ஐயர். தோட்டவேலை மாணவர்களுக்குப் பாட மாயிற்று. அதன் மூலம், அவர்கள் தாவர இயலும் கற்ருர் கள். நிலத்தின் தன்மை, உரங்கள், நீரின் உபயோகம், கட்டுப்படியான விவசாயம்- இவ்வாறு பல விஷயங்களை மாணவர்கள் நேரடியாகக் கற்ருர்கள்.

குருகுலத்துக்குப் புதிய கட்டடங்கள் கட்டிச் சேர்க்க வேண்டியிருந்தது. இதிலும் புக்கர் வாஷிங்டன் முன்னு தாரணத்தை ஐயர் பின்பற்றிஞர். வாஷிங்டன் தமது பள்ளி ஆசிரியர்களும், மாணவர்களும் தாமே செங்கல் சூளை யிட்டு, கட்டடம் கட்டச் செய்தார். சேரமாதேவி குரு குலத்தின் முதல் கட்டடங்கள் வெறும் கூரைக் குடிசை களே. தரையும் சுவர்களும் செங்கல்லால் ஆனவை. இவைகளைக் கட்ட, ஆசிரியர்களும் மாணவர்களும் தாங்களே அஸ்திவாரம் தோண்டிஞர்கள். தாங்களே அஸ்திவாரச் சுவர் எழுப்பிஞர்கள். தாங்களே செங்கல் சூளை போட்டுச் செங்கல் அறுத்தார்கள். தாங்களே காரை அரைத்தார்கள். தாங்களே செங்கல் சுவர் எழுப்பிக் காரை பூசிஞர்கள். தாங்களே சுண்ணும்பு அடித்தார்கள்.

இதேபோல, ஆசிரமத்தின் பிற வேலைகளும் ஆசிரியர் களாலும், மாணவர்களாலும் நடந்தன. ஆசிரம உணவுச் சமையல் வேலையை ஆசிரம வாசிகளே செய்தனர்.

மணமான ஆசிரியர்களது மனைவியர் யோசனை சொல்லி உதவினார்கள். எல்லாம் கூட்டுறவு முறையில் நடந்தது.

முதலில் கட்டப்பட்டது நூல் நிலையக் கட்டடமாகும். ஐயர் தம்மிடம் இருந்த மூவாயிரம் நூல்களைக் குருகுல நூல் நிலையத்துக்கு அன்பளிப்பாகக் கொடுத்தார். அவைகள் மூங்கில் 'ஷெல்பு'களில் வைக்கப்பட்டன. கறையான்கள் வராதிருக்கத் தக்க பாதுகாப்புச் செய்யப் பட்டது. ராமபாணப் பூச்சி வராதிருக்க நூல்களின் அட்டைக்கு அடுத்த பக்கங்களில் வேப்பிலை வைக்கப் பட்டது.

சேரமாதேவியில் குருகுலம் இயங்க ஆரம்பித்த சிறிது காலத்தில், அச்சகம் அமைக்கப்பட்டது. 'கிளி பிரஸ்' என்ற பழைய கால ப்ரூஃப் மெஷினும், ஒரு 'டிரெடில்' அச்சு மெஷினும், அச்சு எழுத்துகளும் வாங்கிச் சேர்க்கப் பட்டன. இந்த அச்சகத்திலிருந்துதான் பின்னர் 'பால பாரதி' பத்திரிகை அச்சாகி வெளிவந்தது; இதில்தான் 'குருகோவிந்த சிங்க்' நூல் அச்சாகியது. ஐயரது குறள் ஆங்கில மொழிபெயர்ப்பு நூலின் ஒரு பதிப்பும் இந்த அச்சகத்தில் அச்சாயிற்று.

ஐயர் தமது நூல்கள் அனைத்தையும் பாரத்வாஜ ஆசிரமத்துக்கு வழங்கிவிட்டார், இந்த நூல்களின் மூலம் வரும் வருமானம் ஆசிரமத்துக்கு உதவட்டும் என்று.

ஐயர் தமது குருகுலத்தை ஆரம்பித்ததன் நோக்கம் 'தீரமுள்ள புதிய தமிழ் ஜாதி'யை உற்பத்தி செய்வது தான், கல்விச் செல்வமும். பண்புச் செல்வமும் நிறைந் தவர்களாய், அரசாங்கத்தில் உத்தியோகத்துக்குக் கெஞ்சிக்கொண்டிராமல் சொந்தத் தொழில் மூலம் வாழக் கூடியவர்களான இந்தப் புதிய தமிழ் ஜாதியைக் குருகுலம் தோற்றுவிக்க உதவியது. 'குமாஸ்தாக்கள் உற்பத்தி நிலைய'மாக இராமல், மாணவர்கள் கல்வி கற்கும்போதே தொழிற் பயிற்சியும் பெறுவதற்கு குருகுலம் வசதி செய்து தந்தது. தமிழ் இளைஞர்கள் வீரமிக்கவர்களாக வாழவும் குருகுலம் பயிற்சி தந்தது.

தொழிற் கல்வி தவிர, இலக்கியம், தத்துவம், கலைகள், விஞ்ஞானம், பூகோளம், சரித்திரம், வைத்தியம், சமூக நலம் முதலிய பாடங்களும் இருந்தன குருகுல விளம்பரம் ஒன்று கூறுகிறது. "பாடபோதனை ஆங்கிலத்தில் இருக்கும். மாணவர்கள் பி.ஏ. வகுப்பு அளவுக்குப் பாட போதனை பெறுவர். தமிழில், இலக்கிய பாடத்தில் சங்க நூல்கள், தொல்காப்பியம் முதலியவை கற்றுத் தரப்படும். மேனாட்டு முறையில் விஞ்ஞான சோதனைகளும் பாடமும் நடக்கும். கணிதம், சரித்திரம், சம்ஸ்கிருதம், தேசீயமொழி ஹிந்தி முதலியவையும் போதிக்கப்படும். தொழில்களில் நூற்றல், நெசவு, தச்சு வேலை, விவசாயம் முதலியவற்றை மாணவர்கள் கற்பார்கள்."

அச்சகம் செயல்படத் துவங்கியபின் அச்சுக் கோத்தலும் அச்சடித்தலும்கூடக் கற்றுத்தரப்பட்டன.

தமது குருகுலம் செலவுக்கு வெளி உதவியை நாடாமல் நடக்க வேண்டும் என்பது ஐயரது லட்சியம். என்றாலும் அது ஆரம்பகாலத்தில் கைகூடவில்லை. கட்டடங்கள், யந்திரங்கள், சாமான்கள், முதலிய பெருஞ்செலவுகள் இருந்துவந்தன. சாப்பாட்டுச் செலவும் ஆரம்பத்தில் சுயதேவையைப் பூர்த்தியாக்க முடியவில்லை. நிதி திரட்டும் வேலை ஐயருக்கு ஓயாமல் இருந்து வந்தது. பத்திரிகைகளிலும், மாணவர்கள் மூலமும் நிதி கோரினார். 'நவசக்தி', 'தமிழ் நாடு', 'குமரன்' முதலிய வாரப் பத்திரிகைகளும், 'சுதேசமித்திரன்' தமிழ்த் தினசரியும், 'ஹிந்து' ஆங்கிலத் தினசரியும் ஐயருக்கு ஆதரவாக எழுதின.

ஐயர் பல தலைவர்களைச் சந்தித்தார். பலர் உதவ வாக்களித்தனர்; சிலர் உதவியளித்தனர். லண்டன் காலத்துத் தோழர் டாக்டர் டி.எஸ்.எஸ். ராஜன் அப்போது திருச்சியில் பெரிய டாக்டராக இருந்தார். அவர் கணிசமான தொகை உதவினார். காங்கிரஸ் தலைவரும், கொடை வள்ளலுமான எஸ். ஸ்ரீநிவாஸ ஐயங்கார் உதவி செய்வதாக வாக்களித்தார்.

தமது குருகுலம் ஒரு தேசீய ஸ்தாபனமாதலால், காங்கிரஸ் கமிட்டி நிதி உதவலாம் என்று ஐயர் கருதினார்.

இந்த உதவி கோரவேண்டாம் என்று ராஜாஜி தடுத்துப் பார்த்தார். இதனால் சிக்கல் வருமென்றும், ஐயர் தமது குருகுலத்தைச் சுதந்தரமாக நடத்துவதற்கு இடைஞ்சல் ஏற்படும் என்றும் ராஜாஜி சொன்னார். ஐயர் இதை ஏற்க வில்லை. தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டி 10,000 ரூபாய் நன்கொடை வழங்க முடிவு செய்தது. முதல் தவணை 5,000 ரூபாய்க்கு 'செக்'கும் தந்தது. இதில் கூட, கமிட்டி யில் சில மாறுபட்ட கருத்துகள் இருந்தன. ராஜாஜி பயந்த படியே, நன்கொடை கொடுத்துள்ளதால் குருகுலத்தில் தனக்குத் தனிச் சிரத்தை உண்டு என்று தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டி பின்னர் கருதலாயிற்று. இதனால், ஒரு சிறிய விஷயம் சம்பந்தமாக ஒரு பெருங் கிளர்ச்சியைத் தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டியின் தலைவர் துவக்கச் சந்தர்ப்பமும் ஏற்பட்டது.

தமிழ்க் குருகுலத்தில் மாணவர்கள் 12 ரூபாய் சம்பளம் தந்தார்கள். ஏழை மாணவர்களிடம் சம்பளம் வசூலிக்கப் படவில்லை. நிதி அவசரமாகத் தேவைப்பட்டபோதெல் லாம், ஐயர், சென்னைக்கோ பிற இடங்களுக்கோ போய்ப் பண வசூல் செய்துவந்தார். பண வசூல் தவிர, நிறையப் புத்தகங்களும் கொண்டு சேர்த்தார். இவ்விதம் வெளியே போய் வந்த ஐயர் உற்சாகமாக இருந்தார். "என்னுடைய குருகுலத்தை இன்னொரு நாலந்தாவாகவோ, தக்ஷசீல மாகவோ செய்துவிட விரும்புகிறேன்" என்று அவர் ஆர்வத்துடன் கூறுவார்.

சேரமாதேவி தமிழ்க் குருகுலத்தில் தினசரி அலுவல் கள். காலை 4 மணிக்கே ஆரம்பமாகிவிடும். முதலில் ஐயர் எழுந்துவிடுவார். கை, கால்களைச் சுத்தம் செய்து கொண்டு, 4-30 மணிக்கு ஒரு 'விசில்' மூலம் ஒலி எழுப்பி மாணவர்களைக் கிளப்புவார். எல்லாரும் எழுந்து பல் துலக்கி, தேகப் பயிற்சி செய்வார்கள். பிறகு வெளிப்புறம் சென்று திரும்புவர். கண்ட இடங்களில் மலம் கழிக்க லாகாதென்று ஐயர் கண்டிப்பாக இருப்பார். குறிப்பிட்ட இடங்களில்தான் மலம் கழிக்கலாம். கையில் ஒரு சிறு மண்வெட்டியுடன் போகவேண்டும். அரை அடி

ஆழத்துக்குக் குழி வெட்டி, அதில் மலம் கழித்து, மண் போட்டு மூடிவிடவேண்டும். இந்த மாதிரியான ஓர் ஏற்பாடு, காந்தியடிகளின் ஆசிரமங்களிலும் கையாளப் பட்டு வந்தது.

தேகப் பயிற்சியில், உடலுறுதிக்கான மேனாட்டுப் பயிற்சிகளும் கவாத்து அணி வகுப்புப் பயிற்சிகளும், மல் யுத்தமும், யோகாசனங்களும் கற்றுக் கொடுக்கப் பட்டன, தேகப் பயிற்சியில் ஆர்வமுள்ளவரான ஐயர், தாமும் பல பயிற்சிகளில் கலந்து கொள்ளுவார்.

ஆசிரமவாசிகள் தங்கள் பாத்திரங்களைத் துலக்கி விட்டு, துணிகளைத் துவைத்து ஸ்நானம் செய்து முடித்த பின் காலை 7-30 மணிக்குப் பெரிய ஹாலில் கூடுவார்கள். ஒரு மணி நேரம் நல்ல சிந்தனைக்காக ஒதுக்கப்பட்டது. ஐயர், அவர்களுக்குப் பெரியோர் வாழ்க்கையிலிருந்து ஊக்கமூட்டும் சம்பவங்களை எடுத்துரைப்பார்.

உணவு 'சத்துவ உணவு' தான். அதாவது காபி, தேநீர் ஏதும் யாருக்கும் கிடையாது. எல்லாரும் புஷ்டியான கஞ்சி குடிப்பார்கள். சமையலில் புளியும் மிளகாயும் சேர்க்கமாட்டார்கள். மிளகும் எலுமிச்சம்பழமுமே சேர்ப்பார்கள்.

சாதாரண நாட்களில் ஐயர் பலத்த ஆகாரம் சாப்பிட மாட்டார். காலை 11 மணிக்கு, தேங்காய் சிறிதும், வாழைப்பழமும், சிறிதளவு வேர்க்கடலையும், கொஞ்சம் சாதமும், சாப்பிடுவார். இரவில் கொஞ்சம் பழம், தேங்காய், வேர்க்கடலை இவ்வளவுதான். அமாவாசை தினங்களிலோ அல்லது விருந்துச் சாப்பாடு உள்ள நாட்களிலோ தான் ஐயர் முழுச் சாப்பாடு சாப்பிடுவார். எல்லாருடனும் சமபந்தியாக உட்கார்ந்தே சாப்பிடுவார்.

குருகுலத்தில் வைத்திய சிகிச்சை இயற்கை வைத்திய முறைகளைத் தழுவியிருந்தது.

வ.வே.ஸு. ஐயருக்கு இராமலிங்க ஸ்வாமிகளின் 'அருட்பா'க்களில் ஆர்வம் அதிகம். காலை வணக்கத்துக்கு அருட்பாவே பாடுவார். காலைக் கூட்டத்தில், ஐயர் திலகரது 'கீதா ரகசியம்' என்ற நூலில் சில பகுதிகளைப் படித்துக்

காட்டி விளக்கியுள்ளார்; தாம் 'குருகோவிந்த சிங்க்' என்ற நூலை எழுதி வந்தபோது, அச்சகத்துக்குப் போகும் முன் நூலை மாணவர்களுக்குப் படித்துக் காட்டினர். ராமாயணக் கதைகளும் அடிக்கடி சொல்லுவார்.

தாம் மேற்கொண்ட இரண்டாவது சபதத்தின் நிறைவாக ஐயர் துவக்கிய மாதப் பத்திரிகை 1924 அக்டோபர் மாதம் வெளிவந்தது. பத்திரிகைக்கு 'பால பாரதி' என்று பெயர் சூட்டினர். இப்பத்திரிகை பதினொரு மாதங்களே நடந்த தென்றாலும், ஐயரது 'பால பாரதி' தமிழ்ப் பத்திரிகை உலகில் பிரகாசமான ஒரு சுடராக இன்றளவும் விளங்குகிறது.

மாதப் பத்திரிகை ஆரம்பிக்க வேண்டித் தாம் விரும்புவதன் காரணங்களை, 1920 – லேயே ஐயர் தமது நண்பர் காசிவாசி பா. ஆதிமூர்த்திக்கு விளக்கியிருக்கிறர். இக் கடிதத்தில் ஐயருடைய இலக்கிய லட்சியம், அனுபவ சங்கடங்கள், தளராத நம்பிக்கை யாவும் நன்கு வெளியாகின்றன. ஐயர் எழுதுகிறர் :

''சந்திர குப்த சக்கரவர்த்தி சரித்திரத்தைத் தவிர, மற்ற நூல்களெல்லாம் முதல் பதிப்பிலேயே நிற்கின்றன. அவற்றை வாங்க ஐந்நூறு பேர் முன்வரவில்லை. அதனல் தான் ஜீவிதத்துக்காக, ஆங்கில நூல்களை வெளிப்படுத்த உத்தேசித்துள்ளேன். குறுந்தொகையிலும், கலித்தொகையிலும் சில செய்யுள்கள் தெரிந்தெடுத்து, ஆங்கிலத்தில் மொழி பெயர்த்திருக்கிறேன். . . ஆனல் என் விருப்பம் இந்நூல்களில் ஆழமாக இல்லை. உலகத்தில் அறியக்கூடிய, அனுபவிக்கக்கூடிய சகல அறிவுகளையும், சுவைகளையும் ஆங்கிலம் முதலிய அன்னிய பாஷைகளுக்குச் செல்லாமல் தமிழ் மூலமாகவே ஒவ்வொருவரும் அறியும்படிக்கும், அனுபவிக்கும்படிக்கும் செய்துவிடவேண்டியது நம் போன்ற தேசபக்தரது கடமை. அந்தப் பிரதான காரியத்தைச் செய்வதற்குச் சீவனமும் செலவும் வேறு மாதிரி சம்பாதிக்க இயலாமலே ஆங்கில நூல்களை இடையிடையே எழுதி வெளியிடுகிறேன்... சிலப்பதிகாரம், மணிமேகலை, சிந்தாமணி மாத்திரமில்லை. சங்க நூல்கள் யாவும், கம்பன்

பால காண்டத்தைப் போலவே பதிப்பித்து வெளியிட வேண்டும் என்ற சுவப்பனமும் இருந்து வருகிறது...

"எல்லாவற்றையும்விட ஒரு பெரிய நோக்கம் வைத்திருக்கிறேன். அதாவது, தூமாஸ் ஃபிரெஞ்சு சரித்திரமனைத்தையுமே கற்பனைக் கதைகளாகச் செய்து சரிபண்ணி ஒவ்வொரு ஃபிரெஞ்சுக்காரனையும் தன் தேச சரித்திர விஷயத்தில் கற்றவனையும், உற்சாகியாயும் ஆக்கிவிட்டதைப் போல, தமிழ் நாட்டுச் சரித்திரமனைத்தையும் கற்பனைக் கதைகளாகச் செய்யவேண்டு மென்றிருக்கிறேன். பாரியும், நன்னனும், கபிலரும், நக்கீரரும், கரிகாலனும், செங்குட்டுவனும், ராஜராஜனும், ராஜேந்திரனும், விஜயாலயனும், சுந்தரமூர்த்தி நாயனார் முதலிய சைவ நாயன்மார்களும், குலசேகரன், ராமாநுஜர், தேசிகன் முதலிய வைஷ்ணவ ஆசாரிய மகான்களும் நமது கதைத் தொடரில் நாயகர்களாக விளங்கி, காம்பீர்யம் முதலிய பௌருஷமான ரசங்களுக்கு நிலையமாக நின்றால், அடுத்த தலைமுறை முதல் தமிழ் இலக்கியத்தையும் தமிழ்ச் சரித்திரத்தையும் யார் அவமதிப்பர்? .. இந்த நோக்கத்துடனேயே 'மங்கையர்க்கரசியின் காதல்' முதலிய கதைகளை வெளிப்படுத்தியதோடு, லைலா மஜ்னூன், அனார்க்கலி முதலிய கதைகளும் கைப்பழக்கத்துக்காக எழுதி வருகிறேன். நாளாவட்டத்தில் பெரிய சரித்திரத்தை எழுதும் நிலைமைக்கு வரும் என்று நினைத்தே சிறுகதைகளை எழுதி வருகிறேன்."

தமது இலக்கிய லட்சியங்களை விவரித்த ஐயர், இதற்கு மாதப் பத்திரிகை ஒன்று நடத்துவதன் அவசியத்தையும் விவரிக்கிறார்: "இதற்கெல்லாம் நமக்குத் தமிழ்ப் பத்திரிகை அவசியம். வங்காளியில் 'ப்ரவாசி' என்றும், ஆங்கிலத்தில் 'மாடர்ன் ரிவ்யூ' என்றும் மாதப் பத்திரிகை போல் ஒன்று இருந்தால், தங்களைப் போன்ற தமிழபிமானிகளுடன் ஒன்று சேர்ந்து உழைத்துத் தமிழில் எல்லாத் துறைகளிலும் இலக்கியங்கள் உண்டாக்கலாம். ஆனால் இதற்குக் குறைந்தது ரூபாய் மூவாயிரமாவது முதல் வேண்டும். முப்பது பேர், ஆளுக்கு நூறு ரூபாய் வீதம்

ஒரு பங்கு எடுத்துக்கொண்டால் போதும். இந்த வருஷம் முயன்றதில், நான்கு பேர்கள்தான் யோசிப்பதாகச் சொல்லியிருக்கிறார்கள். விஷாதமடைவது என் வழக்க மில்லை. ஆகையால் காரியம் நிறைவேறும் என்ற நம்பிக்கையோடு இருக்கிறேன். ஆனால் பெரிய விஷயம் நிறைவேறுகிற வரையில் எதிரிலுள்ள சிறு காரியங்களைப் பாராமலிருப்பது தவறு என்று, மேலே சொல்லியவாறு முயற்சி செய்திருக்கிறோம்...''

இவ்வாறு உயர்ந்த லட்சியங்களை மனத்தில் கொண்டு ஐயர் தொடங்கிய 'பால பாரதி' மிகச் சிறந்தபடி அச்சடிக்கப்பட்டது. நல்ல உயர்ந்த காகிதம். மூவர்ண மேலட்டை, கெட்டித் தாளில். உள்ளே நல்ல தாளில் முகப்புப் படம் ஒன்று. தமிழ்ப் பத்திரிகைகளில் மூவர்ண மேலட்டையுடன் வந்த முதல் பத்திரிகை 'பால பாரதி'யே. அதன் மேலட்டையில் வெளியான ஸரஸ்வதி படமும் கலைச் சுவையுடன் வரையப்பட்டிருந்தது.

பத்திரிகை கிரவுன் குவார்ட்டோ (18 × 24 செ.மீ.) அளவில், 64 பக்கங்கள் கொண்டதாக இருந்தது.

'பால பாரதி'யின் முதல் இதழ்த் தலையங்கத்தில் பத்திரிகையின் பெயருக்குக் காரணம், பத்திரிகையின் நோக்கம் முதலியவை தெளிவாக்கப்பட்டிருந்தன.

''வெண்டாமரையில் வீற்றிருக்கும் எம்பிராட்டியின் பேரை இப்பத்திரிகைக்கு வைத்துள்ளோம்... எம்பிராட்டிக்கு ஆயிரம் ஆயிரம் நாமங்கள் இருக்கையில் 'பாரதி' என்ற பெயரை ஏன் தெரிந்து கொண்டோமென்றால், அத் திருநாமம் எமது நண்பரும், இன்றைக்கு இருபது வருஷங்களுக்குமுன் தமிழ்நாட்டுக்குப் புத்துயிர் அளிக்க முயன்ற புண்ணியாத்மாக்களில் ஓர் பிரமுகருமான காலம் சென்ற சி. ஸுப்ரஹ்மண்ய பாரதியின் ஞாபகம் இம் மாஸிகையைப் படிக்கும் அனைவர் மனத்திலும் என்றும் அழியாமல் பசுமையாக இருந்து வரவேண்டுமென்றே யாகும்.'' இவ்வாறு பெயர் விளக்கம் அமைந்திருந்தது.

''இப்பத்திரிகையில் சீனத்தினின்று பெரு தேசம் வரையிலுள்ள சகல நாடுகளிலும் பூத்த இலக்கியங்களைப்

பற்றிய ஆராய்ச்சிகளை வெளியிடுவோம்'' என்று பத்திரிகையில் வர இருக்கும் விஷயங்களைப் பற்றிய விளக்கம் தலையங்கத்தில் காண்கிறோம். மேலும் தமிழ் இலக்கிய விமர்சனங்கள், வீர தீரச் செயல்கள், வைத்திய சாதனைகள், புதிய கதைகள், மத விமர்சனங்கள், திவ்விய சரித்திரங்கள் முதலிய பலவிதமான விஷயங்கள் பத்திரிகையில் வருமென 'பால பாரதி'யின் முதல் தலையங்கம் குறிப்பிட்டது. அத்துடன்—

"ராஜதந்திரத்தையும் நாம் மறக்க மாட்டோம். ராஜதந்திர சாஸ்திரத்தைப் பற்றி அப்போதைக்கப்போது எழுதி வருவதுடன், ஒவ்வொரு மாதத்திலும் உலகத்திலும் நம் நாட்டிலும் நடைபெறும் சம்பவங்களைப் பற்றி நமது அபிப்பிராயத்தைக் குறித்து வருவோம் சுருங்கச் சொல்லின் உலகத்தில் அறிய வேண்டிய விஷயங்களனைத்தையும் பற்றிப் பெரிய வித்வான்களும், நாவலர்களும் 'பால பாரதி'யில் எழுதி அதை ஓர் விசுவ வித்தியா நிலயமாக ஆக்குவார்கள்.''

முதல் இதழில் ஐந்து கட்டுரைகள், இரண்டு கதைகள், ஒரு தொடர்கதை, இரண்டு கவிதைகள் முதலியன இருந்தன.

'பால பாரதி' தமிழ்ப் பத்திரிகை உலகில் புதிய ஜோதியென வரவேற்கப்பட்டது. எல்லா இடங்களிலும் அதற்கு அமோகமான வரவேற்பு இருந்தது, ஓரிடம் தவிர.

தாம் ஏற்கனவே ஒன்பது மாதம் இருந்த நினைவிலோ என்னவோ, ஐயர் தமது பத்திரிகையின் பிரதி ஒன்றை பெள்ளாரி சிறைச்சாலைக்கு அனுப்பினார், அனுமதிக்கப்பட்ட கைதிகள் படிப்பதற்கு. பத்திரிகையைச் சென்னை அரசின் சி.ஐ.டி. (குற்ற விசாரணைப் போலீஸ்) இலாகாவிற்கு அனுப்பி அவர்கள் ஆலோசனை கேட்டார்கள் அரசினர். சி.ஐ. டி. இலாகாவினர் தங்களுக்குள்ள இணையற்ற புத்தி தீட்சணியத்துடன் தீர ஆலோசித்து, இந்தப் பத்திரிகை சிறைவாசிகள் பார்க்கத் தகுந்ததல்ல என்று அதை நிராகரித்துவிட்டார்கள் !

## 18. ஸாவர்க்கருடன் மீண்டும் சந்திப்பு

ஐயருக்கு 1922, 1923 ஆண்டுகளில் நிறைய வேலை இருந்தது. 1922-இல் துவக்கப்பட்ட தமிழ்க் குருகுலம் அவரது கவனம் முழுவதையும் கவர்ந்தது. வழக்கமான கல்வியுடன் தொழிற் கல்வியும், விவசாயக் கல்வியும் போதிக்கும் பள்ளி அக்காலத்தில் அதிசயமானது. ஐயருக்கோ சாதாரண கல்விக் கூடத்தை நடத்திக்கூடப் பழக்கமில்லை. ஆனால் பொறுமைக் கடலான அவர் தெரியாத விஷயங்களைச் சிரத்தையுடன் தெரிந்துகொண்டார். எவ்விஷயமானாலும் சிறு நுணுக்கங்கள் உட்படக் கவனிப்பார். மரங்களை அறுத்துக் கதவுக்குப் பலகை போடுவதானாலும் சரி, செங்கல் செய்ய மண்வெட்டி எடுப்பதானாலும் சரி எல்லா வேலையும் அளவுப்படி நடக்கவேண்டும் என்பார். இவற்றின் விவரங்களைத் தமது நாட்குறிப்பில் குறித்து வைப்பார்.

ஒரு மரத்திலிருந்து எவ்வளவு பலகை, சட்டம் கிடைத்தது என்பது முதல், ஒரு குறிப்பிட்ட அளவுக் குழியின் மண்ணிலிருந்து எவ்வளவு செங்கல் கிடைத்தது என்பது வரை எல்லா விவரங்களையும் அவரது நாட்குறிப்பில் காணமுடிகிறது. திறமைசாலியான தொழிலாளி தேவைப்படாத எல்லாக் காரியங்களையும் ஆசிரமவாசிகளே செய்தார்கள். ஐயரும் அவகாசம் கிடைக்கும் போதெல்லாம் இவ்வேலைகளில் சேர்ந்துகொள்வார். பெரிய இறை கிணற்றைத் தூரெடுக்கும் வேலைகூட ஆசிரமவாசிகளாலேயே செய்யப்பட்டது. இவ்வாறு செலவை மிச்சப்படுத்தினார்கள்.

ஐயர் அடிக்கடி வெளியூர்ப் பயணம் போய்வந்தார். பயணத்தின்போது தாம் சந்தித்தவர்களுக் கெல்லாம் தமது குருகுலம் பற்றி உற்சாகமாக எடுத்துரைப்பார்.

அவர்களும் உற்சாகத்துடன் கையிலுள்ள சிறு தொகைகளைக் கொடுப்பார்கள். அவர்களுடைய பெயர்கள், விலாசங்கள், தொழில் முதலிய சகல விவரங்களையும் அவர் நாட்குறிப்பில் குறித்து வைத்திருக்கிறார், அவர்களுடன் மீண்டும் பின்னால் தொடர்பு கொள்ள.

இந்தச் சமயத்தில், மலேயாவில் பல அன்பர்கள் உதவி செய்யத் தயாராக இருப்பதாகவும், ஐயர் யாரையாவது அனுப்புவது நலம் என்றும் தெரிவிக்கப்பட்டது. அதற்கிணங்க, தமது உதவியாளர்களில் தலையாயவரான டி.ஆர். மகாதேவ ஐயரை மலேயாவுக்கு அனுப்பினார். மகாதேவ ஐயர் வக்கீல் தொழிலுக்குப் படித்தவர்; காந்தியடிகளின் ஒத்துழையாமை இயக்கத்தில் தொழிலைத் துறந்து தேசீய வேலைகளில் ஈடுபட்டவர். குருகுலத்தில் அவரை 'உப ஆசாரியர்' பதவியில், தமக்கு அடுத்தபடி நியமித்தார் ஐயர்.

மகாதேவ ஐயருக்கு மலேயாவில் உற்சாகமான வரவேற்புக் கிடைத்தது, ஓரளவு தொகை வசூலாயிற்று; நிறையப் பேர் வாக்களித்தார்கள். வாக்களித்த பணத்தை வசூல் செய்து இந்தியாவுக்கு அனுப்ப ஏற்பாடு செய்துவிட்டு மகாதேவ ஐயர் தமிழகம் திரும்பினார்.

1923 டிசம்பரில் வ. வே. ஸு. ஐயர் காக்கினாடா காங்கிரஸுக்குப் போய் வந்தார். மௌலானா முகம்மது அலி தலைமை வகித்த அந்தக் காங்கிரஸ் பேரவைக் கூட்டத்தில், இந்தியாவின் லட்சியம் பரிபூரண சுதந்தரமே என்று ஒரு தீர்மானம் கொண்டுவர ஐயர் விரும்பினார். காங்கிரஸ் அக்கிராசனர் முகம்மது அலி தீர்மானத்தை விரும்பவில்லை. தீர்மானம் கொண்டுவர வேண்டாமென்று ஐயரிடம் சொல்லிப் பார்த்தார். ஐயர் பிடிவாதமாக இருந்தார். ஐயர் தீர்மானத்தைப் பிரேரேபித்துப் பேசினார். ஆனால் அந்தத் தீர்மானம் கொண்டு வருவதை ஆதரித்து எவரும் பேச முன்வராததால் தீர்மானம் சபைமுன் வராமலே நிராகரிக்கப்பட்டது. ஐயர் விரும்பிய இதே 'பரிபூரண சுதந்தர'த் தீர்மானத்தைக் காங்கிரஸ் மகாசபை நிறைவேற்ற ஆறு வருஷமாயிற்று.

காக்கிஞடாவிலிருந்து திரும்பிய ஐயர் தமது குரு குலத்தின் கல்வி முறைக்கு முன்ஞள் நீதிபதி டி. வி. சேஷகிரி ஐயர் ஆதரவளித்துள்ளதை வெளியிட்டார். சமூகநலச் சேவகரான சேஷகிரி ஐயரின் ஆதரவு ஐயருக்கு மகிழ்ச்சி தந்தது. "குருகுலம் தரும் கல்வியினுல் நாட்டின் எதிர்காலம் வளமாகிறது ; இது உங்கள் குழந்தைகளின் எதிர்காலத்தையும் வளமாக்க உதவும். ஆதலால், குரு குலத்துக்குச் சிறு தொகையேனும் நன்கொடை தாருங்கள்" என்று ஐயர் வேண்டினுர். தங்கள் காபிச் செலவை ஒரு வாரம் நிறுத்திவைத்து, ஒரு ரூபாய் மிச்சம் செய்து அதைக் குருகுலத்துக்கு அனுப்புவதையும் வரவேற்பதாக ஐயர் சொன்ஞர். மாதம் பதினைந்து ரூபாய் நன்கொடை அளிப்ப வர்களுக்குக் குருகுலத்தில் படிக்க ஒரு மாணக்கனை அனுப்பும் உரிமை இருக்கும் என்றும் அவர் அறிவித்தார்.

நாளாக ஆக, வெவ்வேறு துறையில் உள்ளவர்களும் குருகுலத்தின் உபயோகத்தை உணர ஆரம்பித்தார்கள். தமிழ்நாட்டில் ஒரு பெரிய கல்வி நிலையம் உருவாகி விட்டது போலவே தோன்றியது,

பெல்காம் நகரில் 1924 டிசம்பரில் நடந்த காங்கிரஸுக் கும் ஐயர் போய் வந்தார். அந்தக் காங்கிரஸ் பேரவைக்கு மகாத்மா காந்தி தலைமை வகித்தார். அந்தக் காங்கிரஸ் முக்கியமான சூழ்நிலையில் கூடியது. ஹிந்து-முஸ்லிம் ஒற்றுமைக்காக இருபத்தொரு நாள் உண்ஞவிரதமிருந்து யமன் வாயிலிருந்து மீண்டு வந்திருந்தார் காந்தி. ஒத்துழையாமை இயக்கத்தை நிறுத்திவைத்துவிட்டு, காங் கிரஸ்காரர்களில் விருப்பமுள்ளவர்கள் சட்டசபைகளுக் குப் போட்டியிடலாம் என்று அனுமதிப்பது பற்றிப் பலத்த விவாதம் இருந்துவந்த சமயம் அது.

ஐயர் பெல்காம் காங்கிரஸில் மகாத்மா காந்தியை மீண்டும் சந்தித்திருக்கலாம். இந்தக் காங்கிரஸ் முடிந்ததும் ஐயர் தமது ஆப்த நண்பர் ஸாவர்க்கரைச் சந்தித்தார். ஸாவர்க்கர் அப்பொழுது பம்பாய் மாகாணத்தில் ரத்தின கிரி என்ற கடலோரச் சிற்றூரில் பாதுகாப்புக் காவலில் இருந்தார்.

அந்தமானிலிருந்து ஸாவர்க்கர் இந்தியாவுக்குக் கொண்டு வரப்பட்டது, கனம் கே. வி. ரங்கஸ்வாமி ஐயங்காரது முயற்சியால் நடந்தது. டெல்லி ராஜாங்கசபை அங்கத்தினரான அவர், 1921 மார்ச் மாதம், ஸாவர்க்கர் சகோதரர்களை விடுதலை செய்ய வேண்டும் என்று ஒரு தீர்மானம் கொண்டு வந்தார். அவர்கள் இருவரும் ராஜத் துவேஷக் குற்றத்துக்காக அந்தமானில் ஆயுள் தண்டனை அனுபவித்துவந்தார்கள். அவர்களை விடுவிக்க அரசாங்கம் இசையவில்லை. ஆதலால் ஸாவர்க்கர் சகோதரர்களின் சார்பில் தாம் ஜாமீன் இருக்கத் தயார் என்று கே. வி. ரங்கஸ்வாமி ஐயங்கார் தெரிவித்தார். இதன் பேரில் அரசாங்கம் மனம் கனிந்து ஸாவர்க்கர் சகோதரர்களை இந்தியாவுக்குக் கொண்டுவர இசைந்தது. 1922-இல் சகோதரர்களின் மூத்தவரான கணேஷ் ஸாவர்க்கருக்குக் கடுமையான நோய் கண்டதால் அரசாங்கம் அவரை விடுவித்தது. இளையவரான விநாயக தாமோதர ஸாவர்க்கரை ரத்தினகிரியில் வீட்டுக் காவலில் வைத்தார்கள். அவர் ஐந்து வருஷ காலத்துக்கு அரசியலில் கலக்கலாகாது என்றும், ரத்தினகிரியை விட்டு வெளியேறலாகாது என்றும் அரசு நிபந்தனை விதித்தது.

ரத்தினகிரி மகாராஷ்டிரக் கடற்கரையில், பம்பாய்க்கு சுமார் நூற்றிருபத்தைந்து மைல் தூரத்தில் உள்ளது.

பெல்காம் காங்கிரஸ் முடிந்ததும், வ.வே.ஸு. ஐயரும் அவருடைய இளம் நண்பர் ஒருவரும் கோவாவுக்குப் போனார்கள். அங்கே பொழுதுபோக்காக ஊர்சுற்றிப் பார்த்தார்கள். ஐயருடன் சென்ற இளம் நண்பர் டி. சதாசிவம் (பிற்காலத்தில் 'கல்கி' பிரசுரகர்த்தராக விளங்கியவர்) ஐயருடன் தாம் பயணம் செய்த நினைவுகளை அக்காலத்திய 'ஸ்வராஜ்யா' என்ற தமிழ்த் தினசரியில் வெளியிட்டார்.

டி. சதாசிவம் கூறுகிறார் : "இப்பெரியாருடன் நெருங்கிப் பழகும் பாக்கியம் பெற்றவர்களுள் நானும் ஒருவன். முதன் முதலாக அவரைப் புதுவை வனவாசங் கடந்து திருச்சிக்குப் போந்த காலத்துக் கண்டேன். ஆயினும்

பெல்காம் காங்கிரஸுக்குப் பின்புதான், நாங்கள் இருவரும் மர்மகோவா, பஞ்சி வழியாக ரத்தினகிரி, பம்பாய் சென்றிருந்த காலத்து அவரை உள்ளவாறு அறிந்தேன். அவருடன் ஒவ்வொரு விஞடியும் ஆனந்தமே. ஆழ்ந்த, அரிய எண்ணங்கள் நிறைந்தவர் அம்மகான். சதா காலமும் தேசபக்தியைப் பற்றியும், தமிழ் மொழியைப் பற்றியுமே பேசிக்கொண் டிருப்பார். அவரினும் மிகுதியாகக் கம்பநாட்டாழ்வாரிடம் பிரேமை கொண்ட யாரையும் யான் கண்டிலன். அவரையும் ஒரு கவியென்றே சொல்லுதல் வேண்டும். பாரதியாரிடம் கவி வெள்ளம் அகத்தே கிடக்க முடியாது புறத்தே புரண்டு பெருகியோடிற்று. இவரிடமோவெனில், உள்ளே சற்றே அடங்கிக் கிடந்தது. இக்காரணம் பற்றியே சில பாக்களின் நயம் காண அறிந்து அவைகளின் சுவையை இனிது நுகரும் தன்மையையும் பெற்றிருந்தார்.

"ஸ்ரீமான் ஐயர் அடிவானத்தில் ஒளிரும் கதிரவனையும், வெண்ணிலாவையும், ஜ்வலிக்கின்ற நட்சத்திரங்களையும், பரந்த வானையும், விரிந்த கடலையும், உன்னத மலையை யும், அடர்ந்த வனத்தையும், ஓடிவரும் நதியின் பிரவாகத் தையும், அலறி விழும் அருவியையும் கண்டு பேரானந்தம் அடைந்தவர். பஞ்சியில், கடற்கரையில் பின் மாலைப் போதில், யாங்களிருவரும் தனித்துலாவிக்கொண்டே, ஆழ்ந்த சம்பாஷணையில் இருந்த சமயம், திடீரென ஸ்ரீமான் ஐயர், 'சதாசிவம், நம் ஜனங்கள் ஆகாயத்தையே பார்ப்பதில்லை. இதோ நட்சத்திரங்களைப் பார்' என்றார். பிறகு எனக்கு, 'இது அசுவினி, இது பரணி...!' என்ப தாகக் காண்பித்தார். பின்னர் புராதன கோவாவில் உள்ள பிரசித்தி பெற்ற கிறிஸ்தவக் கோயிலைக் கண்டோம்."

அதன் பிறகு, சதாசிவமும் ஐயரும் ரத்தினகிரி சென்று ஸாவர்க்கரைச் சந்தித்தார்கள். சதாசிவம் இதை விவரிப் பதாவது :

"1925 ஜனவரி 2 வெள்ளிக்கிழமையன்று நாங்கள் உத்தம தேசபக்தரும், சிறந்த வீரருமான ஸ்ரீஜத் விநாயக தாமோதர ஸாவர்க்கரைக் காணும்பொருட்டு ரத்தினகிரிக்கு

அருகிலுள்ள அவரது வாசஸ்தலத்திற்குச் சென்றோம். சுமார் பதினைந்து நீண்ட ஆண்டுகள் கழித்தே இவ்விரு பெரியார்களும் மறுபடி ஒருவரை ஒருவர் காண்பதால், பண்டைக்காலத்து இரண்டு ரிஷிகளைப் போல ஒருவரை ஒருவர் ஆலிங்கனம் செய்துகொண்டனர். அவர்கள் இருவரையும் ஒருமிக்கப் பார்ப்பதே ஒரு காட்சியாகும்.

"அன்று பகல் முழுவதும் அங்கிருந்துவிட்டு, மாலையில் விடை பெற்றுக்கொண்டோம். ஸாவர்க்கரும், சிறிது தூரம் வெளியே வந்தார். போலீஸாரும் எங்களைத் தேடிக் கொண்டு மோட்டாரில் வந்தனர். உடனே ஸாவர்க்கர் கூறினர், 'ஐயர் போலீஸ்-ப்ரூஃப் அல்லவோ!' என்று. (அதாவது, போலீஸார் கண்ணில் படாமல் ஐயர் வந்து விட்டார் என்று.) கடைசியில், பிரியுங்கால், இனியதோர் புன்னகையுடன் அவர் ஸ்ரீமான் ஐயரைப் பார்த்து, 'இன்னும் எத்தனை ஆண்டுக்குப் பின் யாம் மீண்டும் சந்திப்பது?' என்றார். ஐயர், 'இல்லை, இல்லை. இனி அடிக்கடி சந்திப்போம்' என்றார்."

"உடனே இருவரும் மீண்டுமொரு முறை பிரிவாற்றாமையினால் ஆலிங்கனம் செய்து கொண்டனர். அந்தோ, இதுவே கடைசி ஆலிங்கனம் என்பதை அவர்களில் ஒருவரும் அறியவில்லை!

"பின்னர் பம்பாய் சென்றோம். கணேஷ் ஸாவர்க்கருடன் சில நாட்கள் தங்கினோம். அங்கு நாங்கள் பிரிந்தோம். பின்னர், பிப்ரவரி மாதம் 27–ஆம் தேதி மதுரையில் சந்தித்து, சுமார் 2 மணி நேரம் பேசிக்கொண் டிருந்தோம். அதுவே எங்களுடைய கடைசி சந்திப்பு."

சதாசிவத்தைப் போலவே, ஸாவர்க்கரும் இந்தக் கடைசி சந்திப்புபற்றி எழுதியிருக்கிறார். ஐயர் 1925–இல் அருவியில் காலமானபோது 'மராட்டா' ஆங்கில வாரப் பத்திரிகையில் ஸாவர்க்கர் எழுதிய உருக்கமான நினைவுக் குறிப்புகளில் லண்டன் சிறையில் ஐயர் தம்மைச் சந்தித்ததைக் குறிப்பிட்டுவிட்டு மேலும் சொல்லுகிறார் :

"அது 1910–இல் நடந்தது. பதினான்கு ஆண்டுகள் ஓடி விட்டன. நடக்க முடியாததும் நடந்துள்ளது. வாழ்க்கை

யின் அபாயம் நிறைந்த சந்து பொந்துகளிலும், தலைமறைவான பாதைகளிலும் சுற்றிச் சுழன்று சாவின் நிழலில் பன்முறை ஒதுங்கி, முடிவில் ஸ்ரீஜத் ஐயரைச் சில மாதங்கள் முன்பு, மீண்டும் சந்தித்தேன். சென்னையிலிருந்து பம்பாய் மாகாணத்துக்கு, அவ்வளவு தூரமும் நாங்கள் ஒரு சில மணிநேரம் அளவளாவி மகிழலாம் என்ற ஒரே காரணத்துக்காக வந்திருந்தார். துயருற்றவர்களின் பண்டை நினைவுகளது கசப்பையும் மனத்தாங்கலையும் சிறிது காலம் மறந்துவிட்டு நீண்ட விடுமுறைக்குப் பின் கூடும் பள்ளிப் பிள்ளைகள் போல லேசான விஷயங்களைப் பற்றி அரட்டை அடித்துக்கொண் டிருந்தோம். பிறகு அவர் விடை பெற்றார். அவர் என் பார்வையிலிருந்து மறையும்போது, 'இனி எப்போது வேண்டுமானாலும் இவரை அழைத்து மகிழலாம்' என்று எனக்குள் சொல்லிக் கொண்டேன்.

''அவர் இப்படி மனிதரது கூப்பிடு குரலுக்கு அப்பால் போய்விடப்போகிறார் என்று நான் சிறிதும் நினைக்கவில்லை. மனித புத்தி, 'இனிமேல் நடக்கவே நடக்காது!' என்று தலையை ஆட்டியபோது, நாங்கள் சந்திப்பது சாத்தியமாயிற்று. 'இனி எப்போது வேண்டுமானாலும் சந்திப்போம்' என்று மனிதர் கொக்கரித்தபோது, விதி கடுமையான குரலில் 'ஒரு போதும் இல்லை!' என்று உறுமியது. மனித யத்தனங்களைப் பொய்யாக்கி அவமானப் படுத்துவதைத் தவிர வேறு உயர்ந்த நோக்கம் விதிக்கு இருப்பதாகத் தெரியவில்லை!''

## 19. ‘ குருகுலக் கிளர்ச்சி ’

வ. வே. ஸு. ஐயருடைய தமிழ்க் குருகுலம் தன் ஆரம்ப காலச் சங்கடங்களை ஒவ்வொன்றாகச் சமாளித்து ஒருவாறு முன்னேறிக்கொண் டிருந்தபோது, எதிர்பாராத விதமாகக் குருகுலம் சம்பந்தமாக ஒரு புயல் வீசத் தொடங்கியது. குருகுல வளர்ச்சி இதனால் மிகவும் பாதிக்கப்பட்டது.

சிறிய விஷயம் பெரிய புயலாக உருவாகிவிட்டது. ஆனால், சிறிய விஷயமானாலும், அது அடிப்படை விஷயம் சம்பந்தப்பட்டது ; மேலும் உணர்ச்சிவசப்பட வைக்கும் விஷயமும்கூட. ஜாதி உயர்வு தாழ்வு பற்றிய சமூகப் பிரச்னை அது.

குருகுலத்தில் சமபந்தி போஜன ஏற்பாட்டிலிருந்து இரண்டு இளைஞர்களுக்கு விதிவிலக்கு அளித்ததில் இந்தப் புயல் தோன்றலாயிற்று. கிளர்ச்சி வளர்ந்து, பெரிய பிரச்னை ஆகி, மகாத்மா காந்தியின் தீர்ப்புக்குப் போகும் அளவுக்குச் சிக்கல் பெரிதாகிவிட்டது. காந்தியின் தீர்ப்பும் சமரசம் உண்டாக்கவில்லை. மனக்கசப்புதான் அதிகரித்தது. விஷயம், குருகுலத்துக்குப் பண உதவி புரிந்துள்ள தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டியில் விவாதத்துக்கு வந்தது. கமிட்டியில் கருத்து வேற்றுமை பலமாக இருந்தது. பெரும்பான்மை அங்கத்தினர் தங்கள் இஷ்டத்துக்கு ஒரு தீர்மானம் நிறைவேற்றினார்கள். சிறுபான்மைக் கட்சியைச் சேர்ந்த சி. ராஜகோபாலாச்சாரியார் (ராஜாஜி) முதலியோர் கமிட்டியிலிருந்து ராஜீநாமா செய்தார்கள்.

இவை யாவுமே துயர்ப்படத்தக்க விளைவுகள் என்றால் விஷயம் முடிந்த விதமோ இதனினும் துயரம் நிறைந்ததாக இருந்தது. மாதக்கணக்கில் மனக்கசப்பான சண்டை சச்சரவுகள், வாதப் பிரதிவாதங்கள், பயமுறுத்தல்கள், வசவுகளுக்குப் பிறகு, விஷயத்தில் அமைதியான ஒரு

முடிவை இரு தரப்பினரும் ஏற்றுக்கொண்டனர். ஆனால் சமரச ஏற்பாட்டை அமல் செய்வதற்குள்–

விதி தன்னுடைய பங்குக்கு ஒரு வெடிகுண்டை வீசியது.

ஐயர் திடீரென அருவியில் மறைந்தார். எல்லாவற்றையும் குழப்பம் ஆட்கொண்டது. ஐயரின் பெயர் காப்பாற்றப் பட்டது; ஆனால், அவருக்குப் பின்னால் குருகுலத்தை நிர்வகித்தவர்கள் அதை வெற்றிகரமாக நடத்த முடியவில்லை. முடிவில் குருகுலம் மூடப்பட்டது.

குருகுலக் கிளர்ச்சி முடிந்ததென்றாலும், இதன் விளைவாகத் தலைவிரித்தாடிய பிராம்மணர், அல்லாதார் பகைமை எளிதில் மறையவில்லை. வெகுகாலத்துக்குத் தமிழ்நாட்டின் பொதுவாழ்வை இந்தப் புண்ணேய் கெடுத்து வந்துள்ளது.

குருகுலம் தோன்றியது 1922-இல். ஐம்பத்தெட்டு ஆண்டுகளுக்கு முன் தமிழகத்தில் இருந்த அரசியல், சமூகச் சூழ்நிலையில், எல்லாப் பள்ளிக்கூடங்கள், கல்லூரிகளிலும் உணவு ஏற்பாடு பிராம்மணருக்குத் தனியாகவும், மற்றவர்களுக்குத் தனியாகவுமே இருந்து வந்தது. அரசாங்கக் கல்விக் கூடங்களிலும் சரி, தனியார் கல்விக் கூடங்களிலும் சரி எங்கும் இதே நிலை. சில தேசீய ஸ்தாபனங்களில் மட்டும் ஜாதி பேதமற்ற சமபந்தி உணவு முறை அமல் செய்ய முயற்சி நடந்தது.

ஐயரும் தமது தமிழ்க் குருகுலத்தில் சமபந்தி உணவு முறையையே நடத்தலானார். ஆனால், சின்னாட்களில் இரண்டு பிராம்மணச் சிறுவர்களின் வீட்டார் ஆட்சேபித்தார்கள். தங்கள் சிறுவர்களுக்குத் தனியாக உணவு பரிமாற ஏற்பாடு செய்யும்படி கோரினார்கள்.

ஐயர் ஆரம்பத்திலேயே சாப்பாடு சமபந்தி போஜனமாக இருக்குமென்று சொல்லவில்லை; பந்தியைப் பற்றி அவர் ஏதுமே முன்கூட்டிச் சொல்லவில்லை. அந்த இரு சிறுவர்களின் வீட்டினரேர, குருகுலத்துக்கு உற்சாகமாக உதவியவர்கள். இருதலைக் கொள்ளி எறும்பு போல ஐயர் தவித்தார். அந்த இரண்டு மாணவர்கள் தனியே சாப்பிட விதிவிலக்கு அனுமதி கொடுத்தார். தாற்காலிக

ஏற்பாடாக, அவர்களுக்குச் சமையல் அறையிலிருந்து போஜன கூடத்துக்கு வரும் வழியில் இருந்த உக்கிராண அறை (ஸ்டோர் ரூம்) பாதையில் உணவு பரிமாறினார்கள்.

இதனால் சச்சரவு நேர இடமில்லை. ஆனால், விடுமுறை யின்போது வீட்டுக்குப் போன சிறுவர்கள் தங்கள் குரு குலத்தைப் பற்றிப் பெருமையாகப் பேசினார்கள். அத்துடன் இரண்டு பிராம்மணச் சிறுவர்களுக்கு சமபந்தி போஜனத்திலிருந்து விலக்களித்து, தனியே சாப்பாடு போடுகிறார்கள் என்ற செய்தியையும் சொன்னார்கள். சமூகச் சீர்திருத்தத்தில் ஆர்வமுள்ள சில பெற்றோர்களுக்கு இச்செய்தி வருத்தம் தந்தது. சமபந்தி போஜனம் என்ற முன்னேற்றத்திலிருந்து நழுவிவிட்ட பிற்போக்கான ஏற்பாடு இது என்று அவர்கள் கருதினார்கள்.

ஐயரும் நிலைமையைத் தெளிவாக்கத் தவறிவிட்டார். மாணவர்களின் பெற்றோர் விரும்பினால் தனியாக உணவு பரிமாற வசதி செய்து தருவதே குருகுலத்தின் விதி என்று அவர் சொன்னார். இது சீர்திருத்தவாதிகளுக்கு அபாய கரமான போக்காகத் தோன்றியது. 'இன்று இரண்டு பிராம்மணச் சிறுவர்களுக்கு விதிவிலக்குத் தந்தால், இதே போல நாள்தோறும் மற்றவர்களுக்கு விதிவிலக்குத் தரமாட்டார்கள் என்று என்ன நிச்சயம்?' என்று அவர்கள் பொருமினார்கள்.

விதிவிலக்களிக்கப்பட்டது இரண்டு பையன்களுக்கு மட்டும்தான்; மற்ற பிராம்மணச் சிறுவர்களும், ஐயர் உட்பட எல்லா பிராம்மண உபாத்தியாயர்களும் சமபந்தி யிலேயே சாப்பிட்டு வந்தார்கள் என்பதை அவர்கள் நினைவில் வைக்கவில்லை. தமக்குப் பந்திப் பிரிவினையில் நம்பிக்கை இல்லையென்று, தாம் சமபந்தியில் போஜனம் செய்வதன்மூலம் ஐயர் காட்டினார். இந்த வழக்கத்தைப் பிறர் மீது கட்டாயமாகத் திணிப்பது கூடாது என்பது ஐயர் கருத்து. விதிவிலக்குப் பெற்றவர்கள்கூட, காலப் போக்கில், தமது முன்னுதாரணத்தினால் சமபந்திக்கு வந்து விடுவார்கள் என்ற நம்பிக்கை ஐயருக்கு இருந்தது. சீர்திருத்தவாதிகளோ, விதிவிலக்கை ரத்து செய்து,

விலக்கைக் கோரியவர்கள் மீதும் சமபந்தி ஏற்பாட்டைக் கட்டாயமாக அமலாக்க வேண்டும் என்றார்கள்.

ஒரு வருஷம் ஆகியிருக்கும். வதந்தி, பேச்சுப் போய், விஷயம் பத்திரிகை விவாதமாயிற்று. தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டி அக்கிராசனர் டாக்டர் பி. வரதராஜுலு நாயுடு இவ்விஷயத்தில் தீவிர கவனம் செலுத்தினர். தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டியின் செயலாளர் இருவரில் ஒருவரான ஈ. வே. ராமசாமி நாய்க்கர் (பெரியார்) டாக்டர் நாயுடுவை வலுவாக ஆதரித்தார். சமூகச் சீர்திருத்தங்களை அமல் செய்வதில் நிர்ப்பந்தம் தவறில்லை, அவசியம்கூட என்ற கருத்துடையவர் ராமசாமி நாய்க்கர்.

இந்தச் சமயம் டாக்டர் நாயுடு தமது 'தமிழ் நாடு' பத்திரிகையில் குருகுலம் பற்றி ஒரு கட்டுரை எழுதினர். "குருகுலத்தில் பிராம்மணர் அல்லாதார் மீது வேற்றுமை பாராட்டுகிறார்கள்" என்று டாக்டர் நாயுடு குறிப்பிட்டிருந்தார். இது சரியல்ல. இரண்டு விதிவிலக்குப் பெற்ற பிராம்மண மாணவர் தவிர மற்றபடி பிராம்மணர், அல்லாதார் யாவருமே, மாணவரும், ஆசிரியரும், ஒன்றாக வேற்றுமையின்றி சமபந்தியில் சாப்பிட்டு வருகையில் 'வேற்றுமை பாராட்டுவதாக' எப்படிச் சொல்ல முடியும்?

டாக்டர் நாயுடுவின் கட்டுரைக்கு ஐயர் மறுப்பு விட்டார். அதில், இந்தச் சிறிய சமபந்தி போஜன விஷயம் ஒருபுறமிருக்க, ஜாதிபேதம் என்ற அடிப்படையான விஷயத்துக்கே தாம் முடிவு காண முயன்று வருவதாகத் தெரிவித்தார். குருகுலத்தைப் பொறுத்த மட்டில், பெற்றோர்கள் விருப்பப்படி சமபந்தியோ, தனிப் பந்தியோ அளிக்கப்படுகிறது என்று தெரிவித்துவிட்டு, இந்தத் தொல்லை பிடித்த ஜாதிப் பிரச்னையில் தமக்கு நீண்ட நாளாகவே கவனம் உண்டு என்றும், சீக்கியர்களுக்குள்ளே ஜாதியற்ற சமூகம் இருப்பதைத் தாம் மகிழ்ச்சியுடன் கவனித்துள்ளார் என்றும், அத்தகைய சமூகம் ஒன்றைத் தமிழ்நாட்டில் தோற்றுவிக்க விரும்புவதாயும் ஐயர் கூறினர். தமிழ்ச் சமூகத்தைப் பிறப்பினலன்றித் தொழில் வழியாக மறுபடி மாற்றியமைக்கலாம் என்ற

யோசனையையும் அவர் தெரிவித்தார். இதையெல்லாம் பற்றி ஆலோசனை செய்து ஒரு முடிவு செய்ய ஒரு மகாநாடு கூட்டும்படித் தாம் காவ்யகண்ட கணபதி சாஸ்திரிக்கு எழுதியிருப்பதாகவும், வடக்கே காசியிலிருக்கும் சாஸ்திரியார் தெற்கே வருவதற்காகத் தாம் காத்திருப்பதாகவும் ஐயர் கூறினார். காவ்யகண்ட கணபதி சாஸ்திரிகள் வேத சாஸ்திரங்கள் கரை கண்டவர்; ஆயினும் மிகவும் முற்போக்கான சிந்தனையுள்ளவர்.

ஜாதிபேதம் என்ற அடிப்படைப் பிரச்னைக்கே தாம் தீர்வு காண விரும்புவதானது எல்லாரும் வரவேற்கத் தக்கதாய் இருக்குமென ஐயர் நினைத்தார், அதற்கு மாறான விளைவுகளையே அது உண்டாக்கியது. ஹிந்து மதத்தின் அடிப்படைகளில் ஒன்றான வர்ணாசிரம தர்மப் பிரிவினையை ஏற்காதவர்களான டாக்டர் நாயுடுவும், ராமசாமி நாய்க்கரும் ஐயரது முயற்சியை, 'புதிய ஆபத்து' என்று விவரித்தார்கள். திராவிடர்கள் காலத்தில் ஜாதிப் பிரிவினைகள் கிடையா; அந்த நிலைக்குத் திரும்புவதே சரி என்று இருவரும் கூறினார்கள்.

*1924*-ஆம் ஆண்டு இறுதிக்குள் காவ்யகண்ட கணபதி சாஸ்திரியார் தெற்கே வந்துவிட்டார். அந்த ஆண்டு நவம்பர் மாதம் திருவண்ணாமலையில் கூடிய *30*-வது தமிழ் மாகாண மகாநாட்டில் உபசரணைக் கமிட்டித் தலைவராக அவர் தேர்ந்தெடுக்கப் பட்டார், மகாநாட்டுக்கு ஈ. வே. ராமசாமி நாய்க்கர் தலைமை வகித்தார். இருவருமே தத்தம் பிரசங்கங்களின் சமூகச் சீர்திருத்தத்தின் அவசர அவசியத்தை வற்புறுத்தினார்கள். சமபந்தி போஜனத்துக்குத் தமது முழு ஆதரவையும் தெரிவித்தார் காவ்ய கண்டர்.

*1925*-ஆம் ஆண்டு ஜனவரி *17*-ஆம் தேதி கூடிய தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டி, "இக்கமிட்டியிலிருந்தும், பொதுஜனங்களிடமிருந்தும் பொருள் உதவி பெற்று நடந்துவரும் சேரமாதேவி குருகுலத்தில் பிராம்மணர்-பிராம்மண ரல்லாதார் விஷயமாகப் பத்திரிகைகளில் வெளிவந்திருக்கும் விஷயங்களைக் குறித்து விசாரித்துத்

தெரிவிக்கும்படி" காவ்யகண்ட கணபதி சாஸ்திரி வி. தியாகராஜ செட்டியார், கே. எம். தங்கப்பெருமாள் பிள்ளை மூவர் கொண்ட கமிட்டியை நியமித்தது.

மூவர் கமிட்டி பிரச்னைக்குத் தீர்வு காணவில்லை.

அதன் பேரில் காங்கிரஸ் கமிட்டி குருகுலத்துக்கு மீத உதவி அளிப்பதை நிறுத்திவைக்க டாக்டர் நாயுடுவும், ராமசாமி நாயக்கரும் ஏற்பாடு செய்தார்கள். அத்துடன் பிற நன்கொடைகளும் – முக்கியமாக ஏற்கனவே மலேயாவில் வாக்களிக்கப்பட்டுள்ள 20,000 ரூபாய் நன்கொடை ஐயருக்கு வந்து சேராமல் தடுக்க வழி செய்தார்கள்.

குருகுலத்துக்கு நிதி உதவி செய்தவர்களின் கூட்டம் ஒன்றையும் டாக்டர் நாயுடு கூட்டினர். இந்தக் கூட்டத்திற்கு டாக்டர் டி. எஸ். எஸ். ராஜன் போன்ற முக்கியமான பிராம்மண நன்கொடையாளிகள் அழைக்கப்படவில்லை. இந்தக் கூட்டத்தில், இரு பிராம்மணச் சிறுவர்களுக்குத் தனிஉணவு அளிக்கப்படுவதை உடனே நிறுத்த வேண்டுமென்றும், ஐயர் இதற்குச் சம்மதிக்கவில்லையென்ருல் 'சத்தியாக்கிரகம்' நடத்திக் குருகுலம் 'கைப்பற்றப்படும்' என்றும் பயமுறுத்தல் தெரிவிக்கும் தீர்மானங்கள் நிறைவேறின. இதற்குத் தொடராக, பத்திரிகைகளிலும் மேடையிலும் கடுமையான எச்சரிக்கைகளும், வசவுகளும் ஐயர் மீது வாரி வீசப்பட்டன.

இந்தச் சந்தர்ப்பத்தில், அந்த ஆண்டுக் காங்கிரஸ் அக்கிராசனரான மகாத்மா காந்தி கேரளத்தில் வைக்கம் என்ற ஊருக்கு வர இருப்பதாகத் தகவல் வந்தது. வைக்கத்தில் ஒரு கோயிலை ஒட்டிய பொதுப்பாதையில் ஹரிஜனங்கள் போய்வர உரிமை கோரி, காந்தீய சத்தியாக்கிரகம் நடந்தது. இந்த சத்தியாக்கிரகத்தில் ராமசாமி நாய்க்கர் பின்னர் கலந்துகொண்டார்.

டாக்டர் நாயுடுவும், ஐயரும் காந்தியை வைக்கத்தில் சந்தித்தார்கள்; பிறகு சென்னையிலும் சந்தித்தார்கள். அவர்களுடைய பேச்சு முற்றிலும் ரகசியமாகவே நடந்தது. பொதுமக்களோ, பிறரோ, பத்திரிகை நிருபர்களோ அனுமதிக்கப்படவில்லை. காந்தி நான்கு

வரிகள் எழுதி அதன் அசலை டாக்டர் நாயுடுவிடமும், பிரதியை ஐயரிடமும் தந்தார். இந்த நான்கு வரிகளில் அவர் என்ன சொன்னார் என்பதைப் பற்றியும் விவாதம் இருந்தது. இந்த நான்கு வரிகள் 'அதிகார பூர்வமாக' வெளியிடப்படவில்லை.

காந்தியின் விருப்பத்துக்கு இணங்க ஐயர், குருகுலத்தில் இனிமேல் யாருக்கும் சமபந்தி போஜனத்திலிருந்து விலக்களிப்பதில்லை என்று அறிவித்தார்.

ஆக, இந்த நிலையில், குருகுலப் பிரச்னை அந்த இரண்டு பிராம்மணச் சிறுவர்களுக்கு அளித்திருந்த விதிவிலக்கில் நின்றது. சமபந்தி போஜனமே பொதுவிதி, இனி ஏதும் விதிவிலக்கு இராது என்று தீர்மானமாகிவிட்டதனால் டாக்டர் நாயுடுவும், ராமசாமி நாய்க்கரும் திருப்தியடைந்திருக்கலாம். அவர்கள் திருப்தியடையவில்லை. தத்தம் கட்சிக்கே காந்தி ஆதரவளித்ததாக இரு தரப்பினரும் சொல்லிக்கொண்டார்கள்.

சமபந்தி போஜனம் பற்றிக் காந்தியின் கொள்கைதான் என்ன? அவர் இதைத் தமது 'யங் இந்தியா' வாரப் பத்திரிகையில் 1925 ஏப்ரல் 15-ஆம் தேதி விளக்கினார். பொதுவான கொள்கை விளக்கமாக அமைந்த, 'சமபந்தி போஜனம்' என்ற இந்தக் குறிப்பு வருமாறு :

" 'ஒரு உணவு விடுதியில் வசிப்பவர்களில் பல ஜாதிச் சிறுவர்கள் இருக்கிறார்கள். இவர்களை ஒரே அறையில் சமபந்தியாகச் சாப்பிடச் செய்யவேண்டுமா?' என்று ஒரு அன்பர் கேட்கிறார். கேள்வி சரியாகக் கேட்கப்படவில்லை. ஆனால், கேட்கப்பட்டிருக்கும் கேள்விக்குப் பதில், அந்தக் குழந்தைகளைச் சமபந்தியில் உணவருந்தச் செய்யலாகாது என்பதேயாகும்.

"ஆனால், கேள்வி கேட்பவர், அந்த உணவு விடுதியில் சேருபவர்கள் சமபந்தியில் சாப்பிட்டாக வேண்டும் என்று விதி செய்ய விடுதிக்காரருக்கு உரிமை இல்லை என்று வாதிப்பாரானால், அது சமபந்தி பற்றிய நிபந்தனையின்றிச் சேர்க்கப்பட்ட சிறுவர்களைக் கட்டாயப்படுத்திப் பிற ஜாதியாருடன் உணவருந்தச் செய்வதாகும். ஆகையால்

விதி ஏதும் முன்கூட்டியே அறிவிக்கப்படாத சந்தர்ப்பத்தில், வழக்கமான தனிப் பந்தி முறைகளே சரியாகும்.

''இந்தச் சமபந்திப் பிரச்னை தொல்லை பிடித்தது. இதுபற்றிக் கண்டிப்பான விதிகள் ஏதும் செய்ய முடியாது என்பது என் கருத்து. இது அவசியமான சீர்திருத்தம் தானா என்றுகூட என்னால் சொல்ல முடியாது. அதே சமயம், இந்த பேதத்தை முற்றிலும் தகர்த்தெறிய விருப்பம் பெருகுவதை நான் உணருகிறேன். சமபந்திப் பாகுபாட்டுக்கு ஆதரவாகவும் சரி, எதிராகவும் சரி நான் காரணங்கள் கூற முடியும். இதில் வேகம் கூட்டுவதற்காக நான் வலுக் கட்டாயத்தை உபயோகிக்க மாட்டேன். ஒருவர் இன்னொருவருடன் சேர்ந்து சாப்பிட மறுப்பது பாவம் எனக் கருதமாட்டேன்; சமபந்தி போஜனம் செய்வது பாவம் என்பதையும் ஏற்க மாட்டேன். ஆனால், பிறரது உணர்ச்சிகளை மதிக்காமல் தனிப் பந்தி முறையை மாற்ற முயலும் எல்லா முயற்சிகளையும் நான் உறுதியாக எதிர்ப்பேன். மாறாக, பிறரது உணர்ச்சிகளைப் புறக்கணிக்காமல், அவர்களது உணர்ச்சிகளை மதித்து நடப்பேன்.''

மகாத்மாஜி தம் கருத்தைத் தெரிவித்துவிட்டார். சமபந்தி போஜனத்தை வலுக் கட்டாயமாக, நிர்ப்பந்தமாக அமலாக்கக் கூடாது என்பதை அவர் ஐயமறக் கூறிவிட்டார். மற்றவர்களின் உணர்ச்சிகளை மதிக்கவேண்டும் என்றும் அவர் வற்புறுத்தியுள்ளார். இவை, ஐயரது நிலையே சரியானது என்று சொன்னதற்கொப்பாகும்.

ஆனால், 'யங் இந்தியா' வில் இந்தக் குறிப்பு வெளியாவதற்கு முன்பே டாக்டர் நாயுடு, காந்தியின் யோசனைகளை ஐயர் புறக்கணித்துவிட்டார் என்று குற்றம் சாட்டலானார்; சமபந்தி போஜனத்தை நிர்ப்பந்தமாக அமல் செய்வது என்ற பழைய கோரிக்கை தவிர, கொடையாளர்களது நன்கொடைகளைத் திருப்பித் தருவது பற்றிய ஒரு புதுக் கோரிக்கையையும் டாக்டர் நாயுடு கிளப்பினார். திரு. வி. க. வும் இதில் டாக்டர் நாயுடுவுடன் சேர்ந்துகொண்டார்.

காந்தி நடத்திய ரகசியப் பேச்சுக்களின்போது, குருகுலத்துக்கு நன்கொடை அளித்தவர்களின் உணர்ச்சியை

ஐயர் மதிக்கவேண்டும் என்றும், அப்படியின்றித் தம் சுயேச்சைப்படி ஐயர் நடக்க விரும்பினால், நன்கொடைகளைத் திருப்பித் தந்துவிட வேண்டும் என்றும் காந்தி சொன்னதாக டாக்டர் நாயுடுவும், திரு. வி. க. வும் கூறினார்கள். ரகசியப் பேச்சுக்களில் அவர்கள் சொன்னபடிதான் காந்தி சொன்னாரா என்று அறிய வழியில்லாமற் போயிற்று. ஆனால் காந்தியின் யோசனைப்படியே நடப்பதாக ஒப்புக்கொண்ட சீர்திருத்தவாதிகளும், காந்தி 'யங் இந்தியா' வில் தெரிவித்த கருத்துக்களுக்கு விரோதமாகத் தங்கள் கிளர்ச்சியைத் தொடர்ந்து நடத்தினார்கள்.

அடுத்தபடியாக, 'குருகுலத்தைக் கைப்பற்ற' சத்தியாக்கிரகம் நடத்தப் போவதாக டாக்டர் நாயுடு அறிவித்தார். இதற்கான பிரசாரத்தை அவர் தம் சொந்த ஊரான சேலத்தில் துவக்கினார்.

சேலத்தில் நடந்த பொதுக்கூட்டத்தில் டாக்டர் நாயுடு, "குருகுலத்தில் பிராம்மணரல்லாத மாணவர் ஒதுக்கப்பட்டு வரும் அநீதி தாங்கமுடியாதது" என்றார். இரண்டில் ஒன்று முடிவு கண்டுவிட்ப்போவதாகச் சொன்னார். அவசியமானால் தாம் காங்கிரஸை விட்டு வெளியேறத் தயங்கப் போவதில்லை என்றும் கூறினார். "இம் மாதம் (1925 ஏப்ரல்) முடிவுக்குள் குருகுலச் சொத்துக்கள் அனைத்தையும் ஒப்படைக்காவிட்டால் சத்தியாக்கிரகம் நடத்தப்பட்டு, குருகுலம் கைப்பற்றப்படும்" என்று ஐயருக்கு அவர் எச்சரிக்கை விடுத்தார்.

டாக்டர் நாயுடு என்னதான் விரும்புகிறார் என்பது தெளிவாயில்லை. குருகுலத்தில் சமபந்தி பற்றி உடன்பாடு காண்பதில் அவருக்கு முக்கிய சிரத்தை இருப்பதாகத் தெரியவில்லை. மாறாக ஐயர் தோற்றுவித்த குருகுலத்தை வலியக் கைப்பற்றித் தம் இஷ்டப்படி நடத்த அவர் விரும்புகிறார் என்றே தோன்றியது. காந்தீய முறைகள் கைவிடப்பட்டன; ஒரு ஸ்தாபனத்தைப் பலாத்காரமாய்க் கைப்பற்றுவதற்குப் பிரசாரம் வலுத்தது.

எப்படி ஐயருடைய நிலையைக் காங்கிரஸிலிருந்த எல்லா பிராம்மணர்களும் ஆதரிக்கவில்லையோ, அதே போல

டாக்டர் நாயுடுவின் நிலையையும் காங்கிரஸிலிருந்த எல்லா பிராம்மணரல்லாதாரும் ஆதரித்ததாகச் சொல்ல முடியாது. வக்கீல் எம். பக்தவத்ஸலம் நீண்டதொரு அறிக்கையில், டாக்டர் நாயுடு, "உண்மையைத் திரித்துக் கூறி, பிராம்மணரல்லாதாரைத் தவருன வழியில் இழுத்துச் செல்ல முயலுகிருர்" என்று குற்றம் சாட்டினுர். வகுப்புத் துவேஷத்தைக் கண்டு நாடே அலுத்துப் போயிருக்கும் இந்தச் சமயம், டாக்டர் நாயுடு அதைக் கிளறி வளர்க்கிருர் என்ருர் பக்தவத்ஸலம். விதிவிலக்கு அளிக்கப்பட்ட மற்ற மாணவர்களுக்கெல்லாம் பொதுப் பந்தி என்று காந்தி அளித்த முடிவை ஐயர் ஏற்றுக்கொண்டு விட்டாரே; இனியும் எதற்காகக் கிளர்ச்சி என்று கேட்டார் பக்தவத்ஸலம்.

தம்மைப் பற்றியும், குருகுலம் பற்றியும் நடந்த தவருன பிரசாரத்தைப் பொருட்படுத்தாமல் மௌனமாக இருந்த ஐயர், முடிவில் ஒரு நீண்ட அறிக்கை விடுத்தார். "நான் முடிவாக, பகிரங்கமாக அறிவிக்கிறேன், குருகுலத்தில் பிராம்மணரல்லாத மாணவர்கள், பிராம்மண மாணவர்களுடன் சேர்ந்து சாப்பிட அனுமதிக்கப் படுவதில்லை என்பது உண்மையல்ல. இரண்டு மாணவர்களே முன்பு தந்த அனுமதிப்படி தனியாக உணவருந்த அனுமதிக்கப் படுகிருர்கள்.... இனிமேல் சேர்க்கப்படும் மாணவர் எவருக்கும் விதிவிலக்கு அளிக்கப்பட மாட்டாது!" என்று அறிக்கையில் அவர் கூறினுர்.

குருகுலச் சொத்துக்களைப் பற்றிய மட்டில், அவை தமதல்ல, தம்மிடம் ஒப்படைக்கப்பட்டுள்ள சொத்துகள்; அவைகளுக்காக விரைவில் ஒரு தர்மகர்த்தாக் குழு அமைக்கவிருக்கிறேன் என்ருர் ஐயர். நன்கொடை தந்தவர்களில் மனம் மாறியவர்களது தொகைகளைத் திருப்பித் தரவேண்டும் என்று டாக்டர் நாயுடுவும் பிறரும் கோருவது பற்றி ஐயர், குருகுலச் சொத்துக்கள் தமது சொந்த சொத்துக்களாக இருந்தால் தொகைகளைத் திருப்பித்தரத் தாம் கணமும் தயங்கமாட்டாரென்றும், அந்தச் சொத்துக்களின் தர்மகர்த்தா என்ற முறையில்

அந்தச் சொத்துக்களைத் தம் இஷ்டப்படி கையாள இயலாது என்றும் ஐயர் பதிலளித்தார்.

ஐயருடைய இந்த பதிலும், அகஸ்மாத்தாக காந்தியின் 'யங் இந்தியா' குறிப்பும் ஒரே தினத்தில் வெளிவந்தன. ஆனால் காந்தியின் குறிப்போ ஐயருடைய அறிக்கையோ ஐயரை எதிர்த்தவர்களுடைய விரோதத்தைத் தணிக்கவில்லை.

இந்த நிலையில் குருகுலம் நசித்துவிடாமலிருக்கத் தாம் விலகிவிடுவது நலமென ஐயர் நினைத்தார். 1925 ஏப்ரல் 21-ஆம் தேதி அவர் தமது ராஜீநாமாவைச் சமர்ப்பித்து, குருகுல ஆசிரியர்களும், ஊழியர்களும் தாங்களே ஒரு புது ஆசாரியரைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளும்படி கேட்டுக் கொண்டார். "எதிரிகள் குறிப்பாக என் மீது பகைமை பாராட்டுவதால், அவர்களுடன் சமரசம் செய்வது எளிதாகும்படி நான் விலகுகிறேன்" என்றார் ஐயர்.

சென்னை ஆங்கிலத் தினசரி 'ஹிந்து' ஐயருடைய ராஜீநாமாவை வரவேற்றது. ஆரம்ப முதலாகவே குருகுல விஷயத்தில் நடுநிலைமை வகித்து, கிளர்ச்சியின் இரு கட்சிச் செய்திகளையும் பட்சபாதமின்றி வெளியிட்டு டாக்டர் நாயுடுவினால் பாராட்டப்பெற்றிருந்தது 'ஹிந்து'. இனியாவது இரு தரப்பினரும் விட்டுக் கொடுத்து, "இந்த அசிங்கமான, தற்கொலைக்கொப்பான சச்சரவை" முடித்துக் கொள்வார்களென்று நம்புவதாக 'ஹிந்து' தலையங்கம் எதிர்பார்த்தது.

ஆனால் ஐயருடைய ராஜீநாமாவும், டாக்டர் நாயுடுவைத் திருப்தி செய்யவில்லை. குருகுலத்தைச் சண்டைக்காரர்கள் கையில் ஒப்படைக்க இது ஒரு சூழ்ச்சி என்று அவர் கருதினார். அவர் விடுத்த அறிக்கை ஒன்றில் கூறினார்: "ஸ்ரீ வி.வி.எஸ். ஐயரின் ராஜீநாமாவினால் நிலைமை மாறவில்லை...,, நான் மே மாதம் முதல் வாரம் சேரமாதேவி போகிறேன். நன்கொடையாளர்களில் முக்கியமானவர்களைச் சேரமாதேவிக்கு வந்து சொத்தைக் காப்பாற்றும்படி தந்தி அடித்திருக்கிறேன். பிராம்மணப் பத்திரிகைகளின் குறும்புத்தனமான திரித்தல்கள் பற்றி எச்சரிக்கையாக

இருக்கும்படி பொதுமக்களையும், வட இந்தியப் பத்திரிகைகளையும் கேட்டுக் கொள்கிறேன். கூடுமானவரை சரியான செய்திகளை வெளியிட்டுவரும் 'ஹிந்து', 'ஜஸ்டிஸ்' இரு பத்திரிகைகளுக்கும் எனது நன்றி உரித்தாகும். குருகுலக் கிளர்ச்சியில் எனக்குத் தீவிர உதவி புரியும் எல்லா வகுப்பினரையும் ஏப்ரல் 29, 30 தேதிகளில், திருச்சி, பிரசன்ன வேங்கடேசுவர ராவ் சத்திரத்தில் என்னைச் சந்திக்கும்படி வேண்டுகிறேன். பயணச் செலவுக்குத் தேவைப்படுபவர்களுக்குத் தொகை உதவப்படும்.''

பிரச்னை எப்படியெப்படி மாறிவிட்டது! சமரசமாகவோ கட்டாயமாகவோ சமபந்தி போஜன முறையை அமல் செய்வதென்பது போய், இப்போது, ''சொத்தைக் காப்பது'', தொகை வேண்டுவோருக்கு, ''பயணத் தொகை கிடைக்கும்'' என்று ஆகிவிட்டது!

இதில் இன்னொரு விசித்திரம் என்னவென்ருல், 'பிராம்மணப் பத்திரிகைகளை' ஒட்டு மொத்தமாகக் கண்டித்த அதே சமயம், டாக்டர் நாயுடு 'ஹிந்து' பத்திரிகையின் நேர்மையைப் பாராட்டியதுதான். பிராம்மணர்கள் நடத்தும் பத்திரிகைகளில் மிகப் பெரியது 'ஹிந்து' என்பதை அவர் மறந்துவிட்டார் போலும்!

திருச்சியில் குறிப்பிட்ட தேதிகளில் வந்து சேரும்படி ஆதரவாளர்களை டாக்டர் நாயுடு அழைத்ததற்குக் காரணம், அதே தேதிகளில் திருச்சியில் தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டி கூடுவதாக இருந்ததும், அந்தக் கமிட்டியிலும் குருகுலப் பிரச்னை விவாதத்துக்கு வர இருந்ததுமேயாகும்.

## 20. காங்கிரஸ் கமிட்டியில் பிளவு

தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டிக் கூட்டம் திருச்சியில் ஏப்ரல் 29–ஆம் தேதி மாலை 2 மணிக்குத் துவங்கியது. என்ன நேருமோ என்று கவலையான நிலை. கூட்ட நாள் நெருங்க நெருங்க இரு தரப்பினருமே தங்கள் ஆதரவாளர் களைத் திரட்டிக்கொண்டிருந்ததால் போருக்கான ஆயத்தம் போல இருதரப்பினரும் தயாராக இருந்தனர். அறிக்கை கள், நடவடிக்கைகள், ஆட்களை வசியம் செய்து கட்சி மாறச் செய்தல், 'இதைச் செய்; அதைச் செய்கிறேன்' என்று பேச்சுப் பரிவர்த்தனை இவையும் நடந்துவந்தன.

தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டி அங்கத்தினர் எம். கே. ஆச்சாரியா,"அரசியல் அல்லாத எல்லா விவகாரங்களிலும் கமிட்டி நடுநிலைமை வகிக்கவேண்டும். காங்கிரஸிடமிருந்து நிதி உதவி பெற்ற எல்லா ஸ்தாபனங்களுக்கும் அரசியல் அல்லாத விஷயங்களில் முழு சுதந்தரம் அளிக்க வேண் டும்" என்று வற்புறுத்தி ஒரு தீர்மானம் கொண்டுவர விருப்பம் தெரிவித்திருந்தார்.

காங்கிரஸின் மூத்த தலைவர்களுள் ஒருவரான யாகுப் ஹஸன், டாக்டர் நாயுடுவுக்கு எழுதிய நீண்டதோர் கடிதத்தில் குருகுல விவாதத்தினால் தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டியில் பிளவு ஏற்பட்டுவிட இடந்தரலாகாது என்று வற்புறுத்தினார். "இது எனது உறுதியான கருத்தாகும். இதையே நான் உங்களிடம் சொன்னேன். தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டி குருகுலத்துக்கு 5,000 ரூபாய் அளித் தது தேசீயக் கல்வி என்ற நோக்கத்துக்காகவே. பணம் பெற்றவர்கள் தொகையை வேறு எந்தக் காரியத்துக்கும் உபயோகிக்காத வரையில், கமிட்டி குருகுல நிர்வாகத்தில் தலையிடவோ, சமையல், சமபந்தி அல்லது மதபோதனை போன்ற இதர விஷயங்களைப் பற்றி ஆலோசிக்கவோ

இடமில்லை. பிராம்மணர், பிராம்மணரல்லாதாரிடையே குறுகிய வகுப்புவாத முறையில் இப் பிரச்னை முக்கியமான தாக அவர்களுக்குத் தோன்றலாம். ஆனால் காங்கிரஸ் கமிட்டியில் பிராம்மணர்களும் பிராம்மணரல்லாதவரும் மட்டுமல்ல, முஸ்லிம்களும் கிறிஸ்தவர்களும் அங்கம் வகிக்கிறார்கள். இத்தகைய கமிட்டி இந்தக் குறுகிய சண்டையில் கட்சி சேரமுடியாது...... ஆகையால் இந்த விஷயத்தைக் காங்கிரஸ் கமிட்டியில் விவாதிக்க அனு மதிக்க வேண்டாம் என அக்கிராசனராகிய உங்களை வேண்டிக் கொள்கிறேன். ஏனெனில், இது கமிட்டியில் விவாதிக்கப்பட்டு ஒரு சிறு பகுதியினரான சிறுபான்மை யினருக்குச் சம்மதமில்லாத வகையில் தீர்மானம் நிறை வேறுமானால், அது பெரும்பான்மையினரின் கொடுங் கோன்மை போலத் தோன்றும். கமிட்டிக்கு இந்த அவப் பெயர் வருவதை நீங்கள் சற்றும் விரும்பமாட்டீர்கள் என்று நான் உறுதியாக நம்புகிறேன்.''

மேலே கண்ட கடிதத்தை யாகுப் ஹஸன் டாக்டர் நாயுடு வுக்கு அனுப்பியபின், டாக்டரிடமிருந்து ஆறுதலாகச் செய்தி வந்தது போலும். யாகுப் ஹஸன் கடிதத்தைப் பத்திரிகைகளில் வெளியிட அனுப்பியதுடன், "குருகுலப் பிரச்னை பற்றி அபிப்பிராயம் கூறும்படியாகவோ, கமிட்டி குருகுலத்துக்குத் தந்த நன்கொடை பற்றி நடவடிக்கை ஏதேனும் எடுக்கும்படியாகவோ டாக்டர் நாயுடு காங்கிரஸ் கமிட்டியில் தீர்மானம் கொண்டு வரமாட்டார் என்று அறிந்து மகிழ்கிறேன்'' என்று யாகுப் ஹஸன் பத்திரிகை களுக்குத் தெரிவித்தார்.

ஆனால் இதன்படி நடக்கவில்லை.

ஏனெனில், தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டி கூடியபோது நிர்வாகக் கமிட்டியே, 'அதிகார பூர்வமான' தீர்மானம் ஒன்றைக் கொண்டுவந்து குருகுலத்தைக் கண்டிக்க முயன்றது.

"குருகுலத்துக்கு 5,000 ரூபாய் நன்கொடை தந்ததற்குக் கமிட்டி வருந்துகிறது; ஏனெனில், அந்த ஸ்தாபனம் தேசீயக் கொள்கைகள்படி நடக்கவில்லை; வகுப்புவாதச்

சண்டைகளுக்கு இடமளித்துவிட்டது" என்பது காரியக் கமிட்டி கொண்டு வந்த தீர்மானம்.

காங்கிரஸ் கமிட்டி திருச்சியில் கூடியதற்கு முதல் நாள், ஏப்ரல் 28-ஆம் தேதி சேரமாதேவியில், தமிழ்க் குருகுல ஆசிரமவாசிகள் யாவரும் கூடி ஆசாரிய ஸ்தானத்திலிருந்து விலகிய வ.வே.ஸு. ஐயருக்குப் பதிலாக அப்பதவிக்கு டி. ஆர். மகாதேவ ஐயரைத் தேர்ந்தெடுத்தனர். மகாதேவ ஐயர் இதுவரை உப ஆசாரியராக இருந்தவர். ஆசிரமவாசிகள், தாங்கள் குருகுலத்தின் சொத்துக்களைத் தங்களால் முடிந்தவரை காக்க உறுதிபூண்டிருப்பதாகவும் ஓர் அறிக்கையில் தெரிவித்தார்கள்.

இந்தச் சூழ்நிலையில் திருச்சியில் கூடிய தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டிக் கூட்டம் பெருந்துயரம் நிகழப்போவதற்கான தன்மையில் கூடியது. நாற்பது பேர் வந்திருந்தார்கள். கமிட்டி அக்கிராசனர் டாக்டர் நாயுடு காரியதரிசிகளில் ஒருவரான ஈ. வே. ராமசாமி நாய்க்கர் இவர்கள் தவிர, சி. ராஜகோபாலாச்சாரியார், டாக்டர் டி. எஸ். எஸ். ராஜன், பாரிஸ்டர் டி. ஆதிநாராயண செட்டியார், எம். கே. ஆச்சாரியா, திரு. வி. கல்யாணசுந்தர முதலியார், எஸ். ராமநாதன், என். எஸ். வரதாச்சாரி, மௌல்வி ஸையத் மூர்த்துஸா ஸாஹேப், கே. சந்தானம் முதலிய அங்கத்தினர்கள் கூட்டத்தில் கலந்துகொண்டனர்.

கமிட்டிக் கூட்டத்துக்குத் தலைமை வகித்த டாக்டர் வரதராஜுலு நாயுடு, குருகுல விஷயத்தைக் கமிட்டியில் தாம் பிறரது வற்புறுத்தலின் பேரில் கொண்டுவர நேருவதாகக் கூறினார். கமிட்டி 5,000 ரூபாய் நன்கொடை கொடுத்துள்ளது ஆகையால் குருகுலத்தின் நலனில் அதற்கு அக்கறை உண்டு. காரியக் கமிட்டியின் தீர்மானத்தை அவர்கள் அங்கீகரிக்காவிட்டால், தம் மீது கண்டனத் தீர்மானம் நிறைவேற்றலாம் என்றார் அவர்.

சமபந்தி போஜன முறையை அமல் செய்வதாக ஐயர் வாக்குறுதி தந்துள்ளாரா என்று சிறிது நேரம் விவாதம் நடந்தது. எழுத்தில் எவ்வித வாக்குறுதியும் இல்லை என்று உறுதியாயிற்று. டாக்டர் நாயுடுவும், ஈ. வே. ராமசாமி

நாய்க்கரும் மட்டும், ஐயர் எல்லாக் குழந்தைகளையும் சமமாக நடத்துவதாக வாய்மொழியாக வாக்களித்தார் என்று சொன்னார்கள். நன்கொடை 5,000 ரூபாய்க்கான 'செக்' கூட, தாம் இல்லாத சமயம் இணைக் காரியதரிசியான கே. எஸ். சுப்பிரமணியத்தினால் தரப்பட்டது என்றும், நாய்க்கரும் அவரது ஆதரவாளர்களும் இல்லாதபோது ஒரு கூட்டத்தில் இந்தச் 'செக்' தருவதெனத் தீர்மானம் செய்யப்பட்டது என்றும் ராமசாமி நாய்க்கர் புகார் செய்தார்.

காரியக் கமிட்டியின் தீர்மானத்துக்கு நான்கு திருத்தங்கள் வந்தன. முதல் திருத்தம் 5,000 ரூபாய் தந்ததற்கு "வருந்துகிறது" என்ற சொல்லுக்குப் பதில், தொகையை, "திரும்ப வசூலிக்கத் தீர்மானிக்கிறது" என்று கூறியது. இரண்டாவது திருத்தம், பணத்தைத் திரும்ப வசூலிப்பது பற்றி ஏதும் சொல்லாமல், குருகுல நிர்வாகிகளிடமிருந்து தெளிவான வாக்குறுதி பெறாமல் நன்கொடை அளித்ததற்குக் கமிட்டியைக் குறை கூறியது.

சி. ராஜகோபாலாச்சாரியார் கொண்டுவந்த மூன்றாவது திருத்தம் கூறியதாவது: "1. சேரமாதேவி குருகுலம் போன்ற ஸ்தாபனங்களின் உள் விவகாரங்களில் பொதுஜனத் தலையீடுகளைத் தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டி கண்டிக்கிறது. இத்தகைய ஸ்தாபனங்கள், தேசீய ஒற்றுமைக்கும், முன்னேற்றத்துக்கும் இடையூறான பழக்கவழக்கங்களை அந்தந்த இடத்து நிலைமைக்கேற்ப அவை அவையே தாமாகத் தீர்த்துக்கொள்ள விட்டுவிட வேண்டும். 2. ஆயினும், கிளர்ச்சி தோன்றியுள்ளதை முன்னிட்டு, சேரமாதேவி குருகுலத்தில் எல்லா மாணவர்களும் பேதமின்றிச் சேர்ந்து சாப்பிடக் குருகுல நிர்வாகிகள் வழி செய்ய வேண்டும் என்று தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டி குருகுல நிர்வாகிகளுக்கு ஆலோசனை கூறுகிறது."

நான்காவது திருத்தம், எஸ். ராமநாதன் கொண்டு வந்தது வருமாறு: "பிறப்பினால் கற்பிக்கப்படும் ஏற்றத் தாழ்வுகளை இந்திய சமூக வாழ்க்கையில் பாராட்டக்கூடாது என்று இந்தக் கமிட்டி கருதுகிறது. இந்தக் கொள்கையைத்

தேசீய இயக்கத்தில் சம்பந்தப்பட்ட எல்லா ஸ்தாபனங் களுக்கும் சிபார்சு செய்கிறது. சேரமாதேவி குருகுலத்தில் இந்தக் கொள்கையை அமல் செய்ய உதவும் பொருட்டுப் பின்வரும் நபர்களைக் கமிட்டி நியமிக்கிறது: தேவ கோட்டை வி. தியாகராஜ செட்டியார், மாயவரம் எஸ். ராமநாதன், ஈரோடு ஈ. வே. ராமசாமி நாய்க்கர்."

சி. ராஜகோபாலாச்சாரியார் தமது திருத்தத்தின் மீது பேசுகையில், சேரமாதேவியில் உள்ளது போன்ற ஒரு ஸ்தாபனத்தை உருவாக்குவது கடினம். ஆகையால் அதன் உள் நிர்வாகத்தை அதன் நிர்வாகிகளிடமே விட்டுவிட வேண்டும் என்ருர். அற்ப இடையூறுகளை நீக்கி முன்னேற வி. வி. எஸ். ஐயர் நிச்சயம் தயாராக இருப்பார். சமபந்தி போஜனம் என்ற பிரச்னை நாளாவட்டத்தில் சரியாகி விடும்; சந்தேகமில்லை. நாட்டில் இல்லாத வழக்கத்தைச் சீர்திருத்தம் என்பதற்காக அவசரப்படுத்துவதால் பய னில்லை. அரசாங்கத்திற்குச் சொந்தமானவையானுலும் சரி, தனிப்பட்டவர்களுக்குச் சொந்தமானவையானுலும் சரி பள்ளிக்கூடங்கள், காலேஜ்கள், கோயில்கள், சத்திரங்கள், எங்குமே தனிப் பந்தி முறையே அமலில் இருக்கிறது. அந்த வேறுபாடு நாடெங்கும் உள்ளபோது, ஒரு தனி ஸ்தாபனம் பற்றிக் குறை சொல்வது சரியல்ல என்ருர்.

தேசீயக் கல்விபற்றி, பெல்காம் காங்கிரஸின் தீர்மானத் தையும் ராஜாஜி படித்தார். அந்தத் தீர்மானத்தின் தேவை கள் யாவற்றையும் சேரமாதேவி குருகுலம் பூர்த்தி செய் கிறது என்ருர் அவர். அந்த ஸ்தாபனத்தின் தலைவர் லட்சியப் பாதையில் தமக்குத் தோன்றிய வழியில் முன் னேற அவரைச் சுயேச்சையாக விட்டுவிட வேண்டும். ஐயர் செய்துள்ள தியாகங்கள் ஏராளம்; குருகுலத்துக்காக அவர் தமது வாழ்க்கையையே அர்ப்பணித்துள்ளார். அவரிடம் நம்பிக்கை வைத்து, குருகுலத்தைச் சரியானபடி நடத்த அவருக்கு வாய்ப்புத் தர வேண்டும். இவ்வாறு ராஜகோபாலாச்சாரியார் கூறிஞர்.

ராஜாஜியின் திருத்தத்தை வழிமொழிந்த டாக்டர் டி.எஸ். எஸ். ராஜன் மற்ற யாவரையும்விட வ. வே.ஸு. ஐயரிடம்

மிக நெருங்கிய நட்புப் பூண்டவன் என்ற முறையில் பேசுவதாகச் சொன்னார். எந்த நாட்டின் முன்னேற்றத்துக்கும் சமபந்தி போஜனம் அவசியமான விஷயமல்ல. அது சம்பந்தமாக இப்போது கூறப்படும் புகார்களை ஆதாரமாகக் கொண்டு வகுப்புத் துவேஷங்களை வளர்த்தல் கூடாது. "என்னைப் பொறுத்த மட்டில் எனக்குப் பேதமே கிடையாது. சில வருஷங்களுக்குமுன் நான் சேரிகளுக்குப் போய், தீண்டாதாருக்குச் சுகாதாரக் கருத்துக்களை விளக்க முயன்றேன். ஆனால், ஆதி திராவிடர்கள் என் வருகையை ஏதோ தீமையின் வருகை போலக் கருதித் தங்கள் பானைகளை உடைத்துப் போட்டு ஓடிப் போனார்கள். இன்று பிராம்மணரும், பிராம்மணரல்லாதாரும் கலந்து உணவருந்தினால் எல்லாம் சரியாகிவிடுமா? அவர்கள் பஞ்சமர்களுடன் சாப்பிடத் தயாரா?" என்று டாக்டர் ராஜன் கேட்டார்.

வ. வே. ஸு. ஐயர் தனிப்பட்ட நன்கொடையாளர்களிடம் என்ன வாக்குறுதி அளித்தாரோ அளிக்கவில்லையோ, காங்கிரஸ் கமிட்டியிடம் அவர் எவ்வித வாக்குறுதியும் அளிக்கவில்லை. வாக்குறுதி கேட்கப்படவுமில்லை. ஆகையால் கமிட்டி சமபந்திதான் வேண்டுமென்று வற்புறுத்துவது கூடாது. மூன்று நான்கு மாதங்கள் சமபந்தி போஜன முறையே இருந்தது. அதன்பின் சில சிரமங்களினால் ஐயர் இரண்டு பிராம்மணப் பையன்களுக்கு விதிவிலக்குத் தந்தார், அவர்களுடைய பெற்றோர் விருப்பப்படி. குருகுலத்துக்கும், காங்கிரஸ் கமிட்டிக்கும் உள்ள ஒரே தொடர்பு கமிட்டி அளித்த 5,000 ரூபாய் நன்கொடையேயாகும். தமிழ் நாட்டில் கதர் வேலைக்காகச் சில பிரமுகர்களுக்குக் கமிட்டி 3 லட்சம் ரூபாய் தந்ததே, அதைப்பற்றி என்ன செய்தது? கொடுத்த தொகைகள் குறித்த காரியத்துக்காக உபயோகிக்கப்பட்டனவா என்று யாராவது பார்த்தார்களா? எந்தத் தொகையையாவது திரும்ப வசூல் செய்தார்களா? ஐயரைப் பொறுத்தமட்டில் அவர் தாம் பெற்ற ஒவ்வொரு பைசாவையும் குருகுலத்

துக்காகவே செலவிட்டிருக்கிறுர் என்பது யாவரும் அறிந்த விஷயமாகும். இவ்வாறு டாக்டர் ராஜன் பேசினுர்.

காரியக் கமிட்டியின் தீர்மானத்தை ஆதரித்துத் திரு வி. கல்யாணசுந்தர முதலியார் பேசினுர். தாமும் ஐயரும் நெருங்கிப் பழகியவர்கள் என்றும், ஐயரும் தாமும் யோசித்து யோசித்துப் பல மாதங்கள் சிந்தனைக்குப் பிறகே குருகுலத்தை உருவாக்கியதாகவும் திரு. வி. க. சொன்னுர். இப்போதும் ஐயரும் தாமும் நண்பர்களே. இப்போது கூட, தமிழ்ப் படிப்புபற்றி ஐயர் தமக்கு எழுதியுள்ளார். ஐயர் மகாத்மாஜியின் தீர்ப்பை ஏற்றிருந்தால் தொல்லை வளர்ந்திராது என்றுர் அவர்.

ஈ. வே. ராமசாமி நாய்க்கர், எஸ். ராமநாதனுடைய நான்காவது திருத்தத்தை ஆதரித்தார். தாங்கள் எல்லாரும் இவ் விஷயத்தில் டாக்டர் நாயுடுவை ஆதரிப்பது மட்டுமின்றி, அவரிடம் பரிபூரண நம்பிக்கையும் தெரிவிக்க வேண்டும் என்றுர். இது வெறும் சமபந்தி விஷயம் மட்டும் அல்ல. இது ஒரு ஜாதி இன்னொரு ஜாதியை விட உயர்ந்ததென்ற பிரச்னை. இந்த வேறுபாடு ஒழிய வேண்டும். பிராம்மணர், பிராம்மணரல்லாதாரிடையே ஏற்றத் தாழ்வுகள் நீங்கினுல் போதாது; அவர்கள் பஞ்சமர்களும் தங்களுக்குச் சமமானவர்கள் என்று ஏற்க வேண்டும். நாடு இதை ஏற்கத்தக்க நிலையில் இல்லையென்றுல், அதற்கான பொதுஜனக் கருத்தை உருவாக்குவது அவர்கள் கடமை என்றுர் ராமசாமி நாய்க்கர்.

குருகுலம் இருக்கும் இடத்தை வாங்கப் பணம் உதவிய வயி. சு. சண்முகன் செட்டியார் கமிட்டி அங்கத்தினரல்லவெனினும், விசேஷ அழைப்பின் பேரில் கூட்டத்தில் கலந்து கொண்டார். கமிட்டியில் அவர் பேசுகையில் குருகுலத்தில் மிகுந்த ஊக்கம் கொண்டவர்களில் தாமும் ஒருவர் என்றும், தாம் கொடுத்த 3,000 ரூபாயைக் கொண்டே குருகுலம் இருக்கும் இடம் வாங்கப்பட்டது என்றும் கூறினுர். ஐயரது மேற்பார்வையில் பிராம்மணரல்லாதார் பட்சபாதமின்றி நடத்தப்படுவார்கள் என்று எதிர்பார்த்ததாகவும், தாம் சமரசம் உண்டாக்கச் சேரமா

தேவிக்குச் சென்று வந்ததும் பயனளிக்கவில்லை யென்றும் அவர் சொன்னார். காரியக் கமிட்டித் தீர்மானத்தை நிறைவேற்றும்படி அவர் கோரினார்.

நாமக்கல் மகம்மது உஸ்மானும், சென்னை ஹமீத் கானும் காரியக் கமிட்டித் தீர்மானத்தை எதிர்த்தார்கள்.

கூட்டம் இரவு வெகுநேரம் நடந்தது. காரியக் கமிட்டித் தீர்மானமும், நான்கு திருத்தங்களும் ஒவ்வொன்றாக வாக் களிப்புக்கு விடப்பட்டன.

காரியக் கமிட்டித் தீர்மானம் தோல்வியுற்றது ; திருத்தங் களில் எஸ். ராமநாதன் கொண்டு வந்த தீர்மானம் மட்டும் நிறைவேறியது ; மற்றவை தோற்றுப் போயின. மூவர் கமிட்டி ஒன்றை நியமிப்பதென்ற இந்தத் திருத்தத் துக்கு ஆதரவாக 19 பேர்களும், எதிர்த்து 7 பேர்களும் வாக்களித்தார்கள்.

தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டிக் கூட்டம் முடிந்ததும் கமிட்டி அங்கத்தினர்களில் முக்கியமானவர்களான நான்கு பேர் – சி. ராஜகோபாலாச்சாரியார், டாக்டர் டி. எஸ். எஸ். ராஜன், கே. சந்தானம், டாக்டர் டி. வி. ஸ்வாமிநாத சாஸ்திரி — கமிட்டியிலிருந்து ராஜீநாமா செய்வதாக அறிவித்தார்கள்.

'ஹிந்து' பத்திரிகைக்கு அளித்த பேட்டியில், ராஜ கோபாலாச்சாரியார், கமிட்டியின் தலைவர் டாக்டர் நாயுடு பின்பற்றும் கொள்கைகள், கையாளும் முறைகள் இவற் றுக்கும் தமக்கும் சம்பந்தம் இல்லை என்று காட்டுவதற் காகத் தாம் கமிட்டியிலிருந்து ராஜீநாமா செய்வதாய்ச் சொன்னார். "டாக்டர் நாயுடுவின் எரிச்சலூட்டும் போக் கும், ஆத்திரமூட்டும் வழிமுறைகளும் வகுப்புத் துவேஷ மனக்கசப்பையும் பலாத்காரத்தையும் வளர்க்கின்றன" என்றார் ராஜகோபாலாச்சாரியார். உணவு அருந்துவதில் திருஷ்டி தோஷம் என்ற மூட வழக்கம் கூடாதென்பதே தமது கருத்து என்றும், குருகுல மாணவர்கள் ஒரே குடும்பம் போலச் சேர்ந்து உணவு உட்கொள்ள வேண்டும் என்றும் அவர் சொன்னார். ஆனால் இந்த ஏற்பாட்டைச் செய்யும் பொறுப்பை அந்த ஸ்தாபனத்தின்

நிர்வாகிகளது புத்திக் கூர்மைக்கு விட்டுவிட வேண்டும். வ. வே. ஸு. ஐயர் தங்கள் நம்பிக்கையை இழந்துவிட வில்லை. இத்தகைய ஸ்தாபனங்களின் உள் நிர்வாக விவகாரங்களில் வெளியார் தலையீடு கெடுதல் என்றார் ராஜாஜி.

டாக்டர் டி. எஸ். எஸ். ராஜன், பத்திரிகைகளுக்கு விடுத்ததோர் அறிக்கையில், ''பெல்காம் காங்கிரஸிற்குப் பிறகு சென்னை மாகாணத்தில் சரியான வேலை ஏதும் நடைபெறவில்லை ; இந்தத் தாமச குணத்தைக் கண்டு காங்கிரஸ்காரர்கள் எல்லோரும் வருந்த வேண்டியிருக்க, சேரமாதேவி குருகுலத்தில் சமபந்தி போஜனம் இல்லை யென்ற விஷயமாக டாக்டர் நாயுடுவும் அவருடைய தோழர்களும் புயல் எழுப்பியுள்ளதைக் கண்டு தமிழ்நாட்டினிடம் பற்றுதலுள்ள யாருமே துயரப்படாமலிருக்க முடியாது... இக்கிளர்ச்சியை எழுப்பியவர்கள் வகுப்புத் துவேஷத்தையும் அவநம்பிக்கையையும் மிகுதியாக எழுப்பி விட்டிருக்கிறார்கள் என்பது நிச்சயம்'' என்று கூறினார்.

டாக்டர் ராஜன் தமது அறிக்கையில் மேலும் சொன்னார்: ''சேர்ந்து சாப்பிட வேண்டும் என்பதற்காகச் சமபந்தி போஜனம் செய்வதில் நான் மோகங் கொண்டவனல்ல. எல்லாவித ஜாதியாருடனும் எல்லாவித உணவுகளும் சாப்பிட்டு உள்ளவன் நான். குருகுலத்தில் வ.வே.ஸு. ஐயர் கையாளுவதாகச் சொல்லப்படும் போஜன ஏற்பாடு களை ஆதரிப்பவனுமல்ல, நான். இத்தகைய குருகுலத்துக்கு என் குழந்தையைப் படிக்க அனுப்பமாட்டேன். குருகுலக் கிளர்ச்சி தோன்றியது முதல் ஐயர் விடுத்துள்ள குழப்பம் தரும் அறிக்கைகளை நான் ஆதரிக்கவில்லை. ஆனால், அவருடைய இந்தக் குழப்பத்திற்குக் காரணம் எல்லா வகுப்பினருக்கும் இசைவான ஒரு சமரசத் திட்டம் தயாரிப்பதில் அவருக்குள்ள ஊக்கமேயாகும்.

''அதே சமயத்தில், பொருளுதவி செய்தவர்களின் போக்கும் ஒரே சீராக இருக்கவில்லை. சமபந்தி போஜனம் வேண்டும் என்ற கோரிக்கையில் ஆரம்பித்து, குருகுல நிர்வாகத்தில் அவர்கள் தலையிட விரும்பினார்கள்.

அதன்பின், தங்கள் விருப்பப்படி நடக்கவில்லையென்றால் தங்கள் நன்கொடைகளைத் திருப்பித் தந்துவிட வேண்டும் என்று கோரினார்கள். குருகுலத்துக்குக் கணிசமான தொகை கொடுத்தவர்களில் ஒருவன் என்ற முறையில் சொல்லுகிறேன், நன்கொடையாளர்களில் ஒரு சிலர், அவர்கள் எவ்வளவு சக்தி வாய்ந்தவர்களாக இருந்தாலும் சரி, குருகுலத்துக்குத் தம்மாலான நன்கொடைகளை ஈந்த ஒரு குறிப்பிட்ட வகுப்பாரை மட்டும் ஒதுக்கிவிட்டுத் தங்களுக்குள்ளேயே தீர்மானம் நிறைவேற்றியிருக்கிறார்கள். இதை நான் ஏற்க முடியாது.''

டாக்டர் ராஜன் தமது அறிக்கையின் முடிவில் கூறினார்: ''ஸ்ரீ வ. வே. ஸு. ஐயரது செயல்கள் முற்றிலும் நியாயமானவையல்ல. இதைச் சரி செய்ய டாக்டர் நாயுடுவும் ஸ்ரீ நாய்க்கரும் கையாளும் முறைகளையும் நான் ஏற்கவில்லை. சிறு துரும்பை மலையாக்கி விட்டார்கள்...ஆகையால், ஆழ்ந்த வருத்தத்துடன் நான் சத்தியாக்கிரகத்தின்போதும், ஒத்துழையாமை இயக்கத்தின்போதும் ஒன்றாக உழைத்துக் கஷ்டம் அனுபவித்த சகாக்களிடமிருந்து விடை பெறுகிறேன். பிராம்மணர்கள் காங்கிரஸ் தொண்டு செய்ய விரும்பினால், அவர்கள் அமைதியாக அதைச் செய்ய முடியும். ராட்டைக்கு ஜாதிபேதம் கிடையாது; சமபந்தி போஜனம் பற்றிச் சண்டை போடாது. மகாத்மா காந்தி வழிகாட்டியிருக்கிறார்; அவரது ராட்டை நாட்டின் விதியைத் தீர்மானிக்கும்... இக்காரணங்களினால் நான் தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டியிலிருந்தும், தமிழ்நாடு காதி போர்டிலிருந்தும் விலகுகிறேன்.''

## 21. அருவியின் அழைப்பு

தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டியிலிருந்து சி, ராஜகோபாலாச்சாரியாரும் மற்றவர்களும் ராஜீநாமா செய்தது டாக்டர் வரதராஜுலு நாயுடுவையோ அவரது ஆதரவாளர்களையோ பாதிக்கவில்லை. சேரமாதேவி தமிழ்க் குருகுலத்தைக் 'கைப்பற்றுவதற்கான' போராட்ட விவரங்களைத் தடபுடலுடன் அறிவித்துக்கொண்டு போனார் டாக்டர் நாயுடு. ஆனல் அவருக்குச் சரியான எதிர்த்தரப்புத் தலைவராக விளங்கினர் குருகுலத்தின் புதிய ஆசாரியரான டி. ஆர். மகாதேவ ஐயர்.

யார் வேண்டுமானலும் வரட்டும்; குருகுலத்தின் சொத்துக்களைப் பாதுகாத்துக்கொள்ள நாங்கள் தயார் என்ருர் மகாதேவ ஐயர்.

டாக்டர் நாயுடுவின்போக்கை, குருகுலத்தின் பிராம்மணரல்லாத ஆசிரியர்களில் ஒருவரான கும்பலிங்கம் பிள்ளை வன்மையாகக் கண்டித்தார். குருகுலத்தில் பணிபுரியச் சேர்ந்த முதல் பிராம்மணரல்லாதார் தாம் என்றும், இரண்டு வருஷமாக வேலை பார்ப்பதாகவும், பிராம்மணரல்லாதாரைக் கீழ்ஜாதியாராக நடத்தும் எண்ணம் குருகுல நிர்வாகிகள் கனவில்கூட எழவில்லை என்று நான் மீண்டுமொரு முறை எனது பிராம்மணரல்லாத தோழர்களுக்குக் கூறுகிறேன் என்றும் கும்பலிங்கம் பிள்ளை ஓர் அறிக்கையில் கூறினர். பிராம்மணரல்லாதார் கமிட்டி குருகுலத்துக்கு வந்து நேரில் நிலைமையை அறியலாம்; அறிந்து இந்த ஸ்தாபனம் தேசீயக் கல்வியில் வழிகாட்டும் ஜோதியாக விளங்கச் செய்யலாம்'' என்ருர் அவர்.

தஞ்சாவூரில் சி. சுப்பிரமணிய முதலியார் தலைமையில் நடந்த ஒரு பொதுக்கூட்டம் ''குருகுலக் கிளர்ச்சி மூலம் வகுப்புத் துவேஷத்தைக் கிளறிவிடுவதற்காக'' டாக்டர்

நாயுடுவைக் கண்டித்தது. டாக்டர் நாயுடுவின் "சத்தியாக்கிரக மெனப்படும்" கிளர்ச்சிக்கு எதிராகத் தாமும் நண்பர்களும் ஓர் எதிர்ப்பு இயக்கம் துவக்கத் தயாராக இருப்பதாகக் கூட்டத் தலைவர் சொன்னார். இப்போதே 220 பேர்கள் இதற்குத் தயாராக இருக்கிறார்கள் ; இவர்கள் குருகுலத்துக்குச் சென்று, அங்கே வெளியார் தலையிடாமல் தடுப்பார்கள் என்றும் அவர் கூறினார்.

இதே போல, நாமக்கல் உஸ்மான் சாஹபும், திருச்சி ஹமீத்கானும், தாங்களும் டாக்டர் நாயுடுவுக்கு எதிர்ப்பு இயக்கம் நடத்தப் போவதாக எச்சரித்தார்கள். இவர்களுக்குத் திருச்சி வேங்கடாசல ரெட்டியார் ஆதரவு தெரிவித்தார்.

இத்தகைய நிலையில், தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டி நியமித்த மூவர் கமிட்டி-எஸ். ராமநாதன், ஈ.வே. ராமசாமி நாய்க்கர், வி. தியாகராஜ செட்டியார்- குருகுலத்துக்குப் போய்ச் சேர்ந்தது. அவர்கள் அங்கே போய்ச் சேர்ந்த தினம் 1925, மே 22-ஆம் தேதி, அமாவாசை தினம். அவர்கள் அங்கே போனபோது, ஐயர் அமாவாசைத் தர்ப்பணம் செய்துகொண் டிருந்தார். ராமநாதனோ, பகுத்தறிவுவாதி; ராமசாமி நாய்க்கரோ இத்தகைய சடங்குகளையெல்லாம் வெறுத்தவர். அவர்களுக்கு, தர்ப்பணம் முடியும்வரை காத்திருப்பதே சிரமமாயிருந்தது. அவர்கள் ஐயருடன் நடத்திய பேச்சிலும் நிலைமை திருந்தவில்லை. இருதரப்பினரும் பழைய நிலைகளையே வற்புறுத்தினார்கள்.

இதற்குச் சில தினங்களுக்குப் பிறகு, காவ்யகண்ட கணபதி சாஸ்திரிகள் சேரமாதேவி குருகுலத்துக்கு விஜயம் செய்தார். முற்போக்கான கருத்துள்ள இப்பெரியவரிடம் இரண்டு கட்சியினருக்கும் நன்மதிப்பு இருந்தது. அபிப்பிராய பேதமான பிரச்னைகள் மிகக் குறைவே என்றும், அவைகளுக்கு ஏற்றபடி நடப்பு ஏற்பாடு ஒன்று உண்டாக்க முடியும் என்றும் காவ்யகண்டர் நம்பினார்.

காவ்யகண்டரின் கோரிக்கைக்கு இணங்க டாக்டர் நாயுடுவும் தமது தீவிரக் கோரிக்கைகளில் சிலவற்றைக் கைவிட்டார்.

சமரச உடன்பாட்டுக்கான காலம் வந்துவிட்டதெனக் காவ்யகண்டர் கருதினர். எல்லோரும் பேச்சிலும் செயலிலும் நிதானம் கைக்கொள்ளவேண்டுமென அவர் கோரினர். ''சத்தியாக்கிரகம்'', ''எதிர்ப்பு இயக்கம்'' எல்லாவற்றையும் நிறுத்தி வைக்கும்படி அவர் கேட்டுக்கொண்டார். அதற்கிணங்க மகம்மது உஸ்மானும், வேங்கடாசல ரெட்டியாரும் தங்கள் பிரசாரத்தைத் தாற்காலிகமாக நிறுத்தி வைத்தார்கள். ஆனால், ''குருகுலத்தின் முன்னாள் ஆசாரியரும் தற்போதைய ஆசாரியரும் கொள்கைகளைப் பலியிட்டு விடலாகாது. குருகுல நிர்வாகத்தை வெளிக் கமிட்டியார் நடத்துவது ஆபத்து'' என்று எச்சரிக்கவும் செய்தார்கள்.

எப்படியோ, கடைசியாக, இரண்டு வருஷ காலமாக மொய்த்து வந்த கருமேகங்கள் விலகும் நாள் வந்து விட்டதாய்த் தோன்றியது. இடியும் மின்னலும், கசப்பான சொற்களும், குரோதம் வளர்க்கும் செயல்களும், பகையும் சந்தேகமும் — யாவுமே தீர்ந்து வானம் தெளியும் காலம் வந்துவிட்டதெனத் தோன்றியது.

காவ்யகண்டருடைய தலையீட்டினல் எங்கும் நிதானம் நிலவியது. முடிவான சமரசம் இதோ கைகூடிவிட்டது என்ற நம்பிக்கை எங்கும் உதயமாயிற்று.

இனி, குருகுலத்தை ஐக்கியமாக வளர்த்து, அதன் செழிப்பான வளர்ச்சியில் அதன் உபயோகம் பன்மடங்கு பெருகச் செய்யவேண்டியதுதான்; கண் எதிரே தெரிந்தது பொற்காலம்!

காரிருளுக்குப் பின் நம்பற்கரிய பொன்னிற உதயம் தோன்றியது.

ஆனல், அது மெய்யான உதயம்தானு?

எல்லாம் ஒளியும் நம்பிக்கையுமாக ஜொலித்த அந்தச் சமயம்—

கவலை நிறைந்த பயங்கர நாடகம் திடீரென மகிழ்ச்சி பொங்க முடிந்தது போல் தோன்றிய அந்த வேளையில்—

வல்விதி தான் இருப்பதை நினைவூட்டியது!

ஏற்கனவே குழம்பிக் கிடந்த சூழ்நிலையில், விதி, தன் பங்குக்கு, ஒரு நயவஞ்சக வெடிகுண்டை வீசியெறிந்தது.

வானத்தினின்று பேரிடி வீழ்ந்தது போல வந்தது ஐயர் அருவியில் மரணமடைந்த செய்தி!

செய்தி நம்பக்கூடியதாக இல்லை. அதிர்ச்சி தாங்க முடியாததாக இருந்தது.

வெளி உலகுக்கு, சென்னை 'ஹிந்து' பத்திரிகை, 1925 ஜூன் 4-ஆம் தேதி தெரிவித்தது:

## தமிழ்நாட்டின் புகழ்மிக்க புதல்வர்

### ஸ்ரீ வி. வி. எஸ். ஐயர்

**விபத்தில் உயிர் நீத்ததாகத் தகவல்**

(நமது திருநெல்வேலி நிருபரிடமிருந்து)

திருநெல்வேலி - ஜூன் 4.

ஸ்ரீ வி. வி. எஸ். ஐயர் பாபநாசம் அருவியில் ஒரு விபத்தில் உயிர் நீத்தாரென்று நம்பகமான செய்தி சேரமாதேவியிலிருந்து கிடைத்துள்ளது.

குருகுல மாணவர் கோஷ்டி ஒன்றுடன் ஐயர் கல்யாண தீர்த்தம் நதியைக் கடந்துகொண்டிருந்த சமயம் ஐயருடைய புதல்வி ஒரு பாறை வழுக்கி நீரில் விழுந்து விட்டாள். நீர் அவளை இழுத்துச் சென்றது. ஸ்ரீ ஐயர் தமது பெண்ணைக் காக்க நதியில் குதித்தார். இருவரும் நீரில் இழுத்துச் செல்லப்பட்டு, சற்றுக் கீழே இருந்த அருவியில் தள்ளப்பட்டார்கள் என்று சொல்லப்படுகிறது. அவர்களது உடல்கள் கிடைக்கவில்லை.

ஸ்ரீ ஐயரைக் காக்க ஆற்றில் குதித்த ஆசிரமச் சிறுவன் ஒருவனும் நீரில் அடித்துச் செல்லப்பட்டான். அவன் அதிசயமாகக் காப்பாற்றப் பட்டான்.

---

ஐயர் காலமானது பற்றி வந்த இந்த முதல் செய்தி சில சில்லறை விவரங்கள் தவிர, மற்றப்படி பொதுவாகச் சரியானதே.

பின்னர் வரும் செய்திகள் இதைப் பொய்யாக்க மாட்டாவோ என்று எல்லோரும் எதிர்பார்த்து ஏமாந்தனர். ஐயர் நீச்சலில் நிபுணர். விபத்து நடந்த இடத்தில் கல்யாண தீர்த்தம் ஆறு ஆழமில்லை; அகலமில்லை. ஆகையால் அவர் எப்படியாவது அருவிவரை அடித்துப் போகப்படாமல் தப்பியிருக்கமாட்டாரா என்று நினைத்தார்கள். எல்லாம் வீண் கனவாயிற்று.

இயற்கைப் பிரியரான ஐயர் குருகுல மாணவர்களுக்கும் அதே பற்றுதலை வளர்த்து வந்தார். முடிந்தபோதெல்லாம் அவர்களை வெளியே சுற்றுலா அழைத்துச் செல்வார் அவர். சுற்றுலா என்றால், சுகமாக வண்டிகளிலோ ரெயிலிலோ மட்டும் போய்வருவதல்ல; நடப்பது, மலை ஏறுவது, ஆறு குளங்களில் நீச்சலடிப்பது, தங்கள் மூட்டைகளைத் தாங்களே சுமந்து செல்வது போன்ற உடலுறுதிக்கான பயணங்கள். கொழுந்தியா மலை, பாபநாசம் அருவி, குற்றாலம் அருவி, கன்னியாகுமரி, திருச்செந்தூர் போன்ற இடங்களுக்கு ஏற்கனவே குருகுல மாணவர்கள் போய் வந்திருக்கிறார்கள். சாதாரணமாக ஆசிரியர் எவரேனும் சுத்தானந்த பாரதி போல - மாணவர்களை அழைத்துச் செல்வர். அடிக்கடி ஐயரும் சேர்ந்துகொள்வார்.

ஐயர் வந்துவிட்டால் பையன்களுக்குக் கொண்டாட்டம்தான். , நடை அலுப்போ, சாமான்களின் பளு அலுப்போ தெரியாதபடி ஓயாமல் ஏதாவது பேச்சுக் கொடுத்துக்கொண்டே இருப்பார். இயற்கை அழகைச் சுட்டிக் காட்டுவார்; தாவரங்களைப் பற்றி எடுத்துரைப்பார்; கையில் ஒரு பைனகுலர் வைத்துக்கொண்டு, தூரத்திலுள்ள மலைகளையும், காடுகளையும் மாணவர்கள் பார்க்கச் செய்வார்.

பசுமையான மலைச் சரிவுகள், வெள்ளி ஜரிகை போல மலைச்சரிவில் சூரிய ஒளியில் மின்னும் சிற்றருவிகள் மலை முகடுகளைத் தழுவிச்செல்லும்கார்மேகங்கள், நிமிடத்துக்கு நிமிடம் மரகதம், ஊதா, பொன்னிறம் என்று மாறும் மலைகளின் வண்ணம், காட்டுக் குரங்குகளின் சுபாவங்கள், பட்சிகளின் போக்கு—இவற்றையெல்லாம் ஐயர் காட்டி

விவரிக்க மாணவர்கள் ஆனந்தத்துடன் ரசிப்பார்கள். பையன்களின் நீச்சல் போட்டிகளில் ஐயரும் உற்சாகத்துடன் கலந்து கொள்வார். நல்ல நீச்சலுக்குப் பிறகு மாணவர்கள் உண்ணும் எளிய ஆகாரம் தேவாமிர்தமாக இருக்கும்.

1925-இல் மே மாதம் முடிவில் ஆண்டுத் தேர்வுகள் நடந்து முடிந்தபின், மலைக்குப் போகலாமென்று திட்டமாயிற்று. இந்தத் தடவை மறுபடி பாபநாசம் நீர்வீழ்ச்சிக்குப் போய் வரலாம் என்று தீர்மானித்தார்கள். சேரமாதேவியிலிருந்து பதினைந்து மைல் தொலைவில் உள்ள இந்த அருவியை மாணவர்களுக்கு ஐயர் ஏற்கனவே காட்டியிருக்கிறார். வனப்பு மிகுந்த மலைப் பிரதேசம். ஐயருக்கு பாபநாசம் மிகவும் பிடித்திருந்தது; இதுபற்றி ஒரு கட்டுரைகூட எழுதினார்.

ஆனால், இம்முறை ஐயர் மாணவர்களுடன் செல்லவில்லை. குருகுலத்தில் ஆசிரியர் ஒருவர் சுகமின்றி இருந்ததால், ஐயர் போகமுடியவில்லை. ஐயர் இல்லாமலே, குருகுல மாணவர்களும் ஆசிரியர்களும் பாபநாசத்துக்கு 1925 ஜூன் 1-ஆம் தேதி திங்களன்று கிளம்பினார்கள்.

ஆயினும், விதியின் அழைப்பு ஐயரை விட்டதா? அருவியின் அழைப்பு விட்டதா? அவருடைய பெண் சுபத்ரா உருவில் அன்று விதி வந்து அவரை இழுத்துச் சென்றது. மாணவர்களெல்லாம் போயிருக்க, தானும் தம்பியும் மட்டும் போகாமல் தங்க நேர்ந்தது சுபத்ராவுக்குப் பெருத்த ஏமாற்றமாக இருந்தது. ஐயர் போகாததால் அவளும், கிருஷ்ணமூர்த்தியும் போகவில்லை. சுபத்ரா தகப்பனாரை நச்சரித்தாள். இப்போதுகூட நாம் கிளம்பிச் சென்று மாணவர் கோஷ்டியுடன் சேர்ந்துகொள்ளலாம் என்று வேண்டினாள். பெண்ணின் பிடிவாதம், ஐயருக்குக் கஷ்டமாக இருந்தது. சரியென்று, ஜூன் 2-ஆம் தேதி செவ்வாய்க்கிழமை மாலை அவர் சுபத்ராவுடனும் கிருஷ்ணமூர்த்தியுடனும் கிளம்பினார். அம்பாசமுத்திரம் ரெயில்வே ஸ்டேஷன் வந்தடைந்து, இரவு அங்கே தங்கி, மறுநாள் காலை 8 மணிக்குப் பாபநாசத்தை அடைந்து,

அங்கே மற்றவர்களுடன் அவர்கள் சேர்ந்துகொண்டனர்.

தேதி – ஜூன் 3, புதன்கிழமை.

பாபநாசம் என்பது அதே பெயருள்ள அருவி இருக்கும் இடத்துக்குப் பெயர். குற்றாலம் அருவிக்கு அடுத்தபடி புகழ்வாய்ந்தது பாபநாசம் அருவி. திருநெல்வேலி மாவட்டத்தின் ஒரே பெருநதி தாமிரவருணி. அது 70 மைல் நீளமே உள்ளது. ஆனால் அனாதிகாலமாக, அந்தப் பிரதேசத்துக்குத் தனிப்புகழ் தந்துள்ளது அந்த நதி. தாமிரவருணி ஜீவநதி. அதில் எட்டுப் பெரிய அணைகள் உள்ளன. மலைச்சரிவுகளிலும், பள்ளத்தாக்குகளிலும், மலைக்காடுகளிலும், புதர்களிலும், பனந்தோப்புகளிலும் பாய்ந்து வரும் தாமிரவருணி பல இடங்களில் அருவியாக வீழ்கிறது. ஆகாயத்திலிருந்து இந்த மாவட்டத்தைப் பார்த்தால், வெள்ளி இழைத்தது போல நடுவில் தாமிரவருணி செல்ல இருபுறமும் பசுமையான சால்வை விரித்ததுபோல வயல்கள் தெரியும். இவ்வாறெல்லாம் பாராட்டப்பட்டுள்ளது தாமிரவருணி.

பாபநாசம் அருவி பொதிய மலையில் உள்ளது. பொதிய மலை அகஸ்திய முனிவரின் உறைவிடம். மலைமேலே கல்யாண தீர்த்தம் நதி ஓடுகிறது. அகலம் குறைவு; ஆழமும் இல்லை. ஆனால் வேகம் அதிகம். நதியை மக்கள் தாண்டிச் சென்று அக்கரை சேரும் அளவு குறுகலானது. இவ்வாறு நதியைத் தாண்டிச் செல்லும் இடத்திலிருந்து நூறு, நூற்றைம்பது அடி தூரத்தில், ஆறு மலைச்சரிவில் அருவியாகப் பாய்கிறது. ஒரேயடியாக நேராகக் கீழே விழாமல், மலைச்சரிவில் பாறைக்குப் பாறை தாவிப்பல சிற்றருவிகள் மலைச்சரிவைத் திரையிட்டு மறைக்கின்றன. வெண்மை நுரையும், நீர்த்திவலைகளும் காற்றில் மிதக்கின்றன. படிப்படியாகப் பல சிற்றருவிகளாகத் தாவும் நதி, மொத்தம் சுமார் 250 அடி கீழே விழுகிறது. நதி கீழே விழும் இடத்தில், நீர் ஓயாமல் பயங்கரமாகக் கொப்பளித்து எழும் குளம் ஒன்று இருக்கிறது. இதன் விளிம்பிலிருந்து வழிந்தோடும் நதியில் மக்கள் ஸ்நானம் செய்வர். இந்த இடத்தில் பாபவிநாசகருக்கும், லோகநாயகி

அம்மனுக்கும் கோயில்கள் இருக்கின்றன. அகஸ்தியர் கோயில் ஒன்றும் உண்டு.

பாபநாசம் காண வருபவர்கள் முதலில் அருவியின் கீழே உள்ள இந்தப் பகுதிக்கு வந்து, ஸ்நானம் செய்து கோயில்களில் வழிப்பட்டு, பிறகு இயற்கை அழகை ரசிப்பதற்காக மலை ஏறிச் செல்வது வழக்கம்.

ஐயர், மகள் சுபத்ரா, மகன் கிருஷ்ணமூர்த்தி மூவரும் பாபநாசத்தின் அருவியின் அடியில் சிறிது நேரம் கழித்தார்கள். ஐயர் தமது கதர்ப் பையை அகஸ்தியர் கோயிலில் தங்கியிருந்த ஒரு பிரம்மசாரியிடம் ஒப்படைத்துவிட்டு அருவியில் குளிக்க வந்தார். இந்தப் பிரம்மசாரி ராம கிருஷ்ண மடத்தைச் சேர்ந்தவர். பிற்காலத்தில் சித்பவானந்தர் என்று பெயர் பெற்றவர். அதிருஷ்டவசமாக இன்றும் நம்மிடையே வாழ்பவர். இந்தப் பிரம்மசாரியை ஐயர் முன்பே ஒருமுறை சந்தித்துள்ளார்.

இந்தப் பிரம்மசாரி பாபநாசத்தில் தங்க நேர்ந்ததும் ஐயரால்தான். சிறிது காலத்துக்கு முன்னால் ஒரு தினம் இவர் சென்னையில் ரெயிலேறினார். திருநெல்வேலியிலுள்ள குற்றால அருவிக்குச் சென்று, அதனருகே எங்கேனும் தனிமையான இடத்தில் தியானம் செய்ய விரும்பினார்.

ரெயிலில் அவர் அகஸ்மாத்தாக டி. ஆர். மகாதேவ ஐயரைச் சந்தித்தார். அதே பெட்டியில் பயணம் செய்து கொண்டிருந்த மகாதேவ ஐயர் சேரமாதேவி குருகுலத்துக்குப் போய்க்கொண் டிருந்தார். மகாதேவ ஐயர் அந்த இளைஞர் யார், அவர் எங்கே போகிறார் என்று விசாரித்தார். இளைஞருக்கோ தம்மைப் பற்றிச் சொல்லிக்கொள்ள விருப்பமில்லை. கிட்டத்தட்ட ஒரு தலைப்பட்சமாகவே பேச்சு நடந்தது. மகாதேவ ஐயர் வ. வே. ஸு. ஐயரைப் பற்றியும், அவருடைய குருகுலம்பற்றியும், அதில் தாம் உப ஆசாரியராக இருப்பது பற்றியும், குருகுலத்தின் லட்சியங்கள் பற்றியும் சொல்லிக்கொண்டே போனார். இளைஞர் பெரியவர் பேச்சை மௌனமாகக் கேட்டுக்கொண்டேயிருந்தார்.

சேரமாதேவியில் மகாதேவ ஐயர் இறங்கியபோது அவருடைய வற்புறுத்தலை மறுக்க முடியாமல் அந்தப் பிரம்மசாரியும் இறங்கினர். சேரமாதேவி குருகுலத்தில் ஐயரைச் சந்தித்துவிட்டு, பிறகு திருக்குற்ருலம் போகலாமென்று அவர் தீர்மானித்தார்.

ஐயரைக் கண்ட அதே கணம் அந்தப் பிரம்மசாரி அவரிடம் தம் உள்ளத்தைப் பறி கொடுத்துவிட்டார். ஐயருடைய கம்பீரமான தோற்றமும், கருணை விழிகளும் இவர் ஒரு முனிவர் என்று இளைஞருக்கு அறிவுறுத்தின.

மகாதேவ ஐயர் இளைஞரை அறிமுகப்படுத்தினர். ஐயர் அவருடைய பயணத்தின் நோக்கமென்ன என்றெல்லாம் விசாரித்தார். ஆத்மிகப் பற்றுடன் அமைதியாகத் தியானம் செய்வதற்காகக் குற்ருலம் செல்வதாக அறிந்ததும், ஐயர் குற்ருலம் பொருந்தாதே; பாபநாசம் தேவலை என்ருர். குற்ருலத்தில் கூட்டம் அதிகம்; அமைதி இராது; பாபநாசத்தில் மலைக்கு வருவோர் போவோர் குறைவு; அமைதியாக இருக்கும். அத்துடன் பாபநாசம் அடிவாரத்தில் அகஸ்தியர் கோயிலில் தங்கியிருக்க வசதியும் உண்டு.

ஐயர் பரிவுடன் கூறிய இம்மொழிகள் அந்த இளம் பிரம்மசாரியின் மனத்தை மாற்றிவிட்டன. குற்ருலம் போகும் திட்டதைதைக் கைவிட்டுவிட்டு, பாபநாசத்துக்குப் போனர் அந்த இளம் பிரம்மசாரி. பாபநாசத்தில் அவர் இவ்வாறு தங்கியிருந்த சமயத்தில்தான் பாபநாசத்துக்கு வந்த ஐயர் தம்முடைய கதர்ப் பையை அவரிடம் கொடுத்துவிட்டு, குருகுலத்திலிருந்து வந்த மற்றவர்களுடன் சேர்ந்துகொண்டார். அந்தப் பையைத் திரும்ப வாங்கிக்கொள்ள ஐயர் மறுபடி வரவேயில்லை.

ஐயர் தம் குழந்தைகளுடன் பாபநாசம் அருவியில் ஸ்நானம் செய்தார். ஆற்றின் நடுவே உள்ள ஒரு பாறைக்கு நீந்திச் சென்று அங்கே அமர்ந்து சுற்றும் முற்றும் இயற்கையின் வனப்பைப் பருகி மகிழ்ந்தார். ஸ்நானம் முடிந்தபின், காலைச் சிற்றுண்டி ஆயிற்று. ஐயரும் குருகுல மாணவர்களும் ஆசிரியரும் மலைமீது ஏறக் கிளம்பினர் கள். அன்று ஏகாதசி. ஐயர் உபவாசமிருப்பவர்; ஒன்றும்

உட்கொள்ளவில்லை. அப்படியிருந்தும் மற்றவர்களுக்குச் சரிக்குச் சரியானபடி நடந்தார் ஐயர். சேரமாதேவி ஸப்-டிவிஷனல் மாஜிஸ்டிரேட் குரு ராவ் பாபநாசத்தில் அந்தச் சமயம் முகாமிட்டிருந்தவர், குருகுல கோஷ்டியுடன் கொஞ்ச தூரம் மலை ஏறிவிட்டுப் பின் தமது முகாமுக்குத் திரும்பினார்.

குருகுல மாணவர்களும் மற்றோரும் பாபநாசம் அருவிக்கு மேலே உள்ள கல்யாண தீர்த்தம் ஆற்றை அடைந்தார்கள். இங்கு விதி மீண்டும் சுபத்ரா வாயிலாகத் தன் சதியை நிறைவேற்றிக் கொண்டது. கல்யாண தீர்த்தம் நதியின் குறுகலான பகுதியில் அந்த நதியைக் கடந்து அக்கரை போய்ப் பார்ப்போமென்று சுபத்ரா தந்தையைக் கோரினாள். ஆற்றில் அதிக ஜலம் இல்லை. ஆனால் நீரின் வேகம் அதிகம். குறுகலான ஆற்றிலும் நடுநடுவே பாறைகள் நீருக்கு மேல் தலைதூக்கி நின்றன. இவைகளில் கால் வைத்து அக்கரை தாவுவது வழக்கம். ஆனால் பாறைகள் வழுக்கலாக இருந்தன. இந்த இடத்தில் ஆற்றைக் கடப்பதை ஐயர் விரும்பவில்லை. ஒரு பெரிய கோஷ்டியாயிற்றே, அத்தனை பேரும் கடக்க வேண்டுமல்லவா?

விதியின் சூழ்ச்சியைத் தவிர்க்க வல்லவர் யார்? இந்த இடத்தில் கடப்போமென்று சுபத்ரா பிடிவாதமாகக் கேட்டாள். ஐயர் மனம் கனிந்து, சரியென்று சொல்லிவிட்டார்.

ஆற்றில் இறங்கி உறுதியாக ஒரு பாறையில் நின்று கொண்டு சிறுவர்களை இக்கரையிலிருந்து அக்கரை தாண்ட உதவி செய்தார் ஐயர். சிறுவர்கள் ஒவ்வொருவராக ஐயரின் உதவியோடு தாவிச் சென்று அக்கரை சேர்ந்தார்கள். இந்தச் சமயம், சுபத்ரா பையன்களைப் போலவே தானும் தாவிக் குதித்து ஆற்றின் அக்கரை சேர விரும்பினாள். ஐயருக்கு அது சம்மதமில்லை. அவளைத் தூக்கி அக்கரையில் வைக்க விரும்பினார் அவர். அவளுடைய பாவாடை குதிப்பதற்கு இடைஞ்சலாக இருக்குமென்பது அவரது கவலை.

சுபத்ராவுக்கு முணுக்கென்று கோபம் வந்துவிட்டது. பெண்ணென்று தன்னை இரண்டாம் பட்சமாக்கிவிட்டதை அவள் பொறுக்கவில்லை. "இன்னொரு ஜான்ஸிராணியாக வாழவேண்டுமென்று ஓயாமல் சொல்லுகிற அப்பாவா இப்படிச் சொல்வது?" என்று கேட்டுவிட்டாள். கொடிய விதியின் வாக்கு அது.

ஐயருக்குப் பதில் பேச நாவெழவில்லை. வேறு பேச்சின்றி சுபத்ரா ஆற்றைத் தாண்ட உதவி செய்து, அக்கரையில் உறுதியான பாறை ஒன்றில் அவள் ஏறியதும், அடுத்த சிறுவன் ஒருவனுக்கு உதவி செய்யத் திரும்பினார். "அப்பா!" என்ற குரல் கேட்டது. ஐயர் திரும்பிப் பார்த்தார். சுபத்ரா ஆற்றின் நீரில் தத்தளித்துக் கொண்டிருந்தாள். கால் சறுக்கி அவள் நீருக்குள் விழுந்திருக்கிறாள்.

நொடியில், நீரில் அடித்து செல்லப்படும் தமது மகளைக் காக்க ஐயர் ஆற்றில் தாவினார்.

நீர் வேகமாகச் சென்ற போதிலும், ஐயர் தமது பெண்ணைப் பிடித்துவிட்டார். ஒரு கணம் அவளுடைய கூந்தலைப் பிடித்து அவளை வெளியே தூக்கினார். ஒரு கணம்தான்; கூந்தல் நழுவியது. சுபத்ரா மீண்டும் ஆற்றில் மூழ்கிப் போனாள். கொப்பளிக்கும் நீரின் குமிழிகள்தான் தெரிந்தன. இதற்குள் ஆறு அருவியை நெருங்கிவிட்டதால் வேகம் அதிகமாயிற்று. ஐயரால் சமாளிக்க முடியவில்லை. ஓவென்று தாவிச் செல்லும் அருவியோடு அடித்துச் செல்லப்பட்டார் அவர்.

ஐயர், சுபத்ரா இருவருமே ஆற்றில் அடித்துச் செல்லப்பட்டவர்கள் அருவியில் கீழே தள்ளப்பட்டார்கள் என்று முதலில் நினைத்தார்கள். ஆனால் சுபத்ரா அருவியில் தள்ளப்படவில்லை. அவளுடைய உடல் கல்யாண தீர்த்தம் நதியிலேயே, அருவிக்கு மேலேயே ஒரு பாறை இடுக்கில் சிக்கிக்கொண் டிருந்தது.

ஐயர் அருவியில் வீழ்ந்ததும் அவரைக் காக்க ஆற்றில் குதித்ததாகச் சொல்லப்பட்ட சிறுவன் அப்படியொன்றும் தானாகக் குதித்துவிடவில்லை. திடீரென்று நேர்ந்த சம்பவங்களால் கலங்கிப்போன அச்சிறுவன்,

கால் தவறி ஆற்றில் விழுந்துவிட்டான்; நல்லவேளையாக அவன் ஒரு பாறையைப் பிடித்துக்கொண்டு உயிருக்கு மன்றுடியவண்ணம் தவித்தான். ராகவ பொதுவாள் என்ற அச்சிறுவனை, குலாம் கௌஸ் என்ற வழிப்போக்கர் ஒருவர், மிகுந்த பிரயாசையின் பேரில் காப்பாற்றினர்.

இந்த இரட்டை மரணச் செய்தி தெரிந்ததும் சேர மாதேவி, கல்லிடைக்குறிச்சி, அம்பாசமுத்திரம் முதலிய அண்டை ஊர்களெல்லாம் துக்கத்தில் மூழ்கின. திருநெல்வேலி மாவட்டமே துயரில் ஆழ்ந்தது. கல்லிடைக்குறிச்சியில் இருந்த டி. ஆர். மகாதேவ ஐயர், செய்தி கேட்டதும் பாபநாசத்துக்கு விரைந்தார். ஸப்-டிவிஷனல் மாஜிஸ்டிரேட் குரு ராவும் (குருகுல மாணவர்களையும் ஐயரையும் சிறிது தூரம் கூடவந்து வழியனுப்பியவர்) விபத்து நடந்த இடத்துக்கு விரைந்தார்.

இறந்தவர்களின் உடல்கள் கிடைக்கவில்லை. கல்யாண தீர்த்தம் ஆறுமுதல் கீழே பாபநாசம் அருவியின் அடிவரை ஓரிடம் விடாமல் தேடினர்கள். இதற்கு உதவியாக, ஆற்றின் ஜலத்தைக் கட்டுப்படுத்தினர்கள்.

ஐயர் மறைவுச் செய்தி அவருடைய மனைவி பாக்கிய லட்சுமி அம்மாளுக்குக் கிடைத்தபோது அவர் திருச்சி மாவட்டம் குளித்தலையில் சில உறவினருடன் இருந்தார். தந்தி வந்ததும், ஒரு 'கூட்ஸ்' வண்டியில் திருச்சிக்கு வந்து, அங்கிருந்து பாஸஞ்சர் ரெயில் ஏறி, விபத்துக்கு மறுநாளைக்கு மறுநாள் வந்து சேர்ந்தார் அவர்.

சுபத்ராவின் உடல் நான்கு நாட்களுக்குப் பிறகுதான் கிடைத்தது. கல்யாண தீர்த்தம் ஆற்றில் ஒரு பாறையில் செருகியிருந்தது. ஐயருடைய உடல் ஜூன் 8-ஆம் தேதிதான் பாபநாசம் அருவியின் அடியிலுள்ள குளத்தில் கிடைத்தது.

## 22. "சளைக்காமல் உழைத்த தேசத்தொண்டர்"

ஐயரின் மறைவு அவரது சொந்த ஊரான திருச்சியிலும் துயரம் விளைவித்தது.

பாலிய சிநேகிதரும், ரங்கூன் தோழரும், லண்டன் இந்திய விடுதிப் புரட்சிக் குழுவில் கூட்டாளியுமான **டாக்டர் டி. எஸ். எஸ். ராஜன்,** செய்தி கேட்டதும் ஐந்து நிமிஷம் பேச்சின்றி அசந்து நின்றார்; கன்னத்தில் நீர் வழிந்தது.

சென்னைப் பல்கலைக் கழகத்தின் பி. ஏ. பரீட்சையில் முதல் வகுப்பில் தேர்ந்தவர் ஐயர் என்றார் டாக்டர் ராஜன். திருச்சி ஸெயின்ட் ஜோசப் காலேஜ் மாணவர் அவர். லத்தீன் மொழியைப் படிப்பில் மேற்கொண்ட வெகு சில பிராம்மணச் சிறுவர்களில் ஐயர் ஒருவர். அவர் ஸம்ஸ்கிருதம், தமிழ், ஃபிரஞ்சு முதலிய பல மொழிகளில் பாண்டித்யம் பெற்றவர். லண்டன் லிங்கன்ஸ் இன்னில் ரோமானியர் சட்டப் பரீட்சையில் முதன்மையாக நின்றவர் ஐயர். எல்லாப் பரீட்சைகளிலும் அவர் சுலபமாகத் தேறுவார். ஆனால் புரட்சி இயக்கத்தில் அவருக்கிருந்த ஆழ்ந்த ஈடுபாட்டினால், அவர், பரீட்சைகளை மதிக்கவில்லை என்று டாக்டர் ராஜன் சொன்னார்.

ஐயருடைய பெற்றோர்கள் பணக்காரர்களல்ல. ஆயினும் ஐயர் தமக்கென ஒரு தனிவழி வகுத்துக் கொண்டார் என்று டாக்டர் ராஜன் கூறினார். அவருடைய சொந்த வாழ்க்கை அப்பழுக்கற்றது. அடிப்படையான நேர்மைகளில் அவருக்கு அசையாத நம்பிக்கை உண்டு என்றார் அவர்.

**டாக்டர் பி. வரதராஜுலு நாயுடு:** சேலத்திலிருந்து 'ஹிந்து' பத்திரிகைக்கு அனுப்பிய தந்தியில், குருகுலப் பிரச்னையில் சமரச முடிவை அடையும் தருணத்தில் ஐயர்

மறைந்தது பெரிய நஷ்டமாகும் என்றார். ஐயருடைய இலக்கியப் புகழும், அரசியல் புகழும் அப்பழுக்கற்றவை என்றார் அவர்.

**ஈ. வே. ராமசாமி நாய்க்கர் :** சேலம் விக்டோரியா மார்க்கெட்டில் நடந்த பொதுக்கூட்டத்தில், டாக்டர் நாயுடு தலைமை வகிக்க, ஈ. வே. ராமசாமி நாய்க்கர் ஐயருக்குத் தமது பாராட்டுதலைத் தெரிவித்தார். முந்திய வாரம்தான் தாம் குருகுலத்துக்குப் போயிருந்ததாகவும், அநேகமாக எல்லா விஷயங்களிலும் உடன்பாடு ஏற்பட்டிருந்தது என்றும் ராமசாமி நாய்க்கர் சொன்னார்.

**டபிள்யூ. பி. இக்னேஷியஸ் :** தேசீயப் பற்று நிறைந்த வர்த்தகரான இவர், "குருகுலக் கிளர்ச்சியினால் ஐயர் பிற்போக்காளரோ என்ற சந்தேகம் உண்டாயிருக்கலாம் : அல்லவே அல்ல. அவர் சில சமயம் மேற்கொண்ட நிலைகளை அவர் மேற்கொள்ளக் காரணம், முதலில் தக்க மனமாற்றம் உண்டாக்கிவிட்டே சீர்திருத்தத்தைக் கொண்டு வரவேண்டும் என்ற அவரது நம்பிக்கைதான். இதை அவரே என்னிடம் சொல்லியிருக்கிறார். மற்றவர்கள் அவருடன் கருத்து வேற்றுமை கொண்டு சண்டை போடலாம் ; அவரோ, தமது நிலையில் நம்பிக்கை கொண்டிருந்தார். அவரைப் பொறுத்த மட்டில் எல்லா வகுப்பினர்-எல்லா மதத்தினருடனும் அவர் சமமாக உட்கார்ந்து உணவருந்தினார். அவர் மற்றவர்களைத் தாழ்வாக நினைத்ததே கிடையாது" என்று கூறினார்.

**மௌல்வி ஸையது முர்த்துஸா ஸாஹப் :** சென்னைச் சட்டசபை அங்கத்தினர் முர்த்துஸா ஸாஹப், திருச்சியில் ஒரு துக்கக் கூட்டத்துக்குத் தலைமை வகித்துப் பேசுகையில், தமக்கு ஐயரை இளமையிலேயே தெரியுமென்றார் ; அப்போது முதலே ஐயர் நாட்டின் நிலைமையைக் கண்டு கவலை கொள்வார் என்றார். அப்போதே நாட்டைப் பற்றி ஓயாமல் சிந்தனை செய்வார். வக்கீல் வேலை பார்த்தபோது தொழிலில் அதிக நேரம் செலவிடமாட்டார் ; அதற்கு மாறாகத் தம்முடனும் பிறருடனும்

மணிக்கணக்கில், நாட்டை முன்னேற்றுவது எப்படி என்று விவாதிப்பார். அவர் இங்கிலாந்துக்குப் போவதற்கு முன்பே தேசபக்தி மிகுந்தவராக இருந்தார் என்றார்.

**திரு. வி. கல்யாணசுந்தர முதலியார்** நவசக்தி பத்திரிகையின் தலையங்கத்தில், "தமிழ்நாடு ஒரு தவப் புதல்வரை இழந்தது; கம்பன் தன் நண்பர் ஒருவரை இழந்தான்; நாம் ஓர் உயிர்த்தோழரை இழந்தோம். இவ்வருத்தத்தைத் தணிக்க ஐயர் மீண்டும் வருவரோ? வ. வே. ஸு. ஐயரே! குணமலையே! எமது தோழரே! அசைந்த நடையுடனும், புன்முறுவலுடனும் முனிவர் போல் எம்மிடைப் போந்து இன்னுரையாகும் பெருமொழியை இனி என்றே கேட்கப் போகிறோம்?" என்று எழுதினர்.

**மகாத்மா காந்தி**: 'யங் இந்தியா' பத்திரிகையில் காந்தி ஐயரைப்பற்றி ஒரு சிறு குறிப்பு எழுதினர்: "ஸ்ரீ வி. வி. எஸ். ஐயர் நீரில் மூழ்கி மரணமடைந்த செய்தி கேட்டு 'யங் இந்தியா' வாசகர்கள் என்னைப்போலவே துயருறுவார்கள் என்று நம்புகிறேன். லண்டனில் பல வருஷங்களுக்கு முன் அவரைச் சந்தித்து மகிழ்ந்திருக்கிறேன். அப்போது அவர் கடுமையான அராஜகவாதியாக இருந்தார். ஆனல் காலப் போக்கில், அவர் பழுத்த பழமானர். அப்போதும் தேசப் பற்று என்ற தீ அவருள்ளே கொழுந்துவிட்டு எரிந்து கொண்டிருந்தது. அவர் ஒத்துழையாமை இயக்கத்தில் தீவிரமாக ஈடுபட்டார். சமீப காலத்தில் தமது அவகாசம் முழுவதையும் சேரமாதேவி குருகுலத்திற்காக அர்ப்பணித்துக் கொண்டார். சிறந்த, மனப்பூர்வமான, சளைக்காமல் உழைக்கும் தேசத் தொண்டராகவே நான் அவரை எப்போதும் கருதினேன். அவருடைய ஆத்மா சாந்தி அடைவதாக!"

**விநாயக தாமோதர ஸாவர்க்கர்**: ஆனல், நெஞ்சை உருக்கும் பாராட்டுதல் ஸாவர்க்கரிடமிருந்துதான் வந்தது. 'மராட்டா' பத்திரிகையில் எழுதிய ஐயர் நினைவுக் குறிப்பில், ஸாவர்க்கர் துக்கம் நெஞ்சை அடைக்க, கண்ணில் நீர் பெருக எழுதினர்:

''பெருந்துயரங்கள் எமது வாழ்க்கையை எத்தனையோ தடவை வாட்டி வதைத்துள்ளன; ஆனால், நண்பா! உன்னுடைய திடீர்மரணத்தினால் ஏற்பட்ட துயரம் எம்மால் தாங்கவும் முடியாதபடி இருந்ததுபோல வேறு எதுவும் இருந்ததில்லை. சம்பவம் செறிந்து, சோதனை நிறைந்தவை யாக இருந்த அந்தக் காலத்தின் நினைவுகள் எம்முள் வெள்ளமெனக் குமுறுகின்றன. தங்களை வெளியே காட்டிக்கொள்ள வழிதேடி இதயத்தில் மோதுகின்றன. அந்த நினைவுகளை யெல்லாம் எடுத்துரைக்க முடிந்தால் எவ்வளவு நன்றாக இருந்திருக்கும்! ஆனால், நமது வாய் இதுபற்றிப் பேசலாகாது.

''உன்னுடைய நற்குணங்கள் பற்றியும், சாந்த சுபாவம் பற்றியும் எழுத எங்கள் பேனா துடிக்கிறது. எதிரிகள் உன்னை வஞ்சித்துக் காட்டிக் கொடுத்தபோதும், நீ கலங்காமல் எப் படி நின்றாய் என்று வரைய விரும்புகிறோம். கடமைப்படாத வர்களுக்கும் நீ தொண்டு செய்தாய்; பிறர் அதை அறியாத சமயம் நீ வாய் திறந்து சொல்லவில்லை; பின்னர் எல்லாம் தெரியவந்தபோது துளியும் உனக்கெனப் புகழ் நாட வில்லை. இவற்றையெல்லாம் எழுதத்தான் விரும்புகிறோம். ஆனால் எங்கள் பேனா உடைந்து கிடக்கிறதே! உன்னு டைய உன்னத வாழ்க்கையின் கதையைத் தற்காலம் எழுத முடியாது. ஒருவேளை எக்காலத்திலும் எழுத முடி யாமற் போனாலும் போகலாம்; அதை எழுதக்கூடியவர்கள் உயிருடன் இருக்கும்போது அதைச் சொல்லக்கூடிய காலம் வராமலே போகலாம்; சொல்லக்கூடிய காலம் வரும்போது, சொல்லக்கூடியதை யெல்லாம் தடையின்றிச் சொல்லும் நாள் வரும்போது, அதைக் கேட்க எல்லாரும் ஆவலாயிருக்கும் அந்த நாள் வரும்போது அதைச் சொல்லக்கூடிய தலைமுறை மறைந்து போயி ருக்கக்கூடும். ஆகையால், உனது பெருமை இமயமலையின் சிகரங்களைப் போலக் காணுவார் யாருமின்றித் தனிமை யில் ஒளிவீசும் ஜோதியாக இருக்கவேண்டும் போலும்! ஒரு பெரிய கோட்டையின் அஸ்திவாரங்கள் பூமிக் கடியில் வெகுதூரம் மறைந்து கிடப்பது போல, உனது

தொண்டும் தியாகங்களும் பிறர் அறியாமலே இருக்க வேண்டுமோ என்னவோ!*

"உன்னுடைய எதிர்பாரா மரணம் விளைத்த துயரமே பொறுக்கொணாதது, அதைவிடப் பொறுக்க முடியாதது பிற்காலச் சந்ததியினர் உனக்கு எவ்வளவு தூரம் கடமைப் பட்டிருக்கிறார்கள் என்பதை நாம் வாய் திறந்து சொல்ல முடியாதிருப்பதுதான். எம்முடைய துயரத்தை, தனிப் படவும் பொதுப்படவும் எடுத்துச் சொல்ல முடியாதிருக் கிறதே, என் செய்ய!

"அவன் என்றும் உறுதியான கற்றாணாக விளங்கினான். ஹிந்துக்களில் சிறந்த ஹிந்துவாக விளங்கினான். அவனது மறைவால் நமது ஹிந்து சமூகம் ஹிந்து நாகரிகத்தின் மிகச் சிறந்த மலரை இழந்துவிட்டது. அனுபவம் செறிந்தவன். கஷ்டங்களால் பக்குவப்பட்டவன். மக்களுக்கும் தெய்வத் துக்கும் தொண்டு செய்வதில் இணையற்றவன். ஹிந்து சங்கத்தின் இயக்கத்திற்குத் தென்னாட்டில் முதன்மை யான துணையாக இருந்திருப்பான்.

"1907-ஆம் ஆண்டு அல்லது சற்று முன்பின் இருக்க லாம்.** ஒருநாள் நாங்கள் மாடியிலிருந்து கீழே உணவு கொள்ள இறங்கி வந்த சமயம், வேலைக்காரப் பெண் எங்க ளிடம் ஒரு 'விஸிட்டிங் கார்'டை நீட்டி, எங்களைக் காண ஒரு கனவான் முன் அறையில் காத்திருப்பதாய்ச் சொன் னாள். சற்று நேரத்துக்கெல்லாம், பகட்டாக ஐரோப்பிய உடை தரித்த ஒரு கனவான் உள்ளே நுழைந்தார். அவர் எங்களுடன் ஆர்வத்தோடு கைகுலுக்கினார். தாம் ரங்கூ னில் வக்கீல் தொழில் பார்த்ததாகவும், பாரிஸ்டர் பட்டம் பெற இங்கிலாந்துக்கு வந்துள்ளதாகவும் சொன்னார். அவருக்கு வயது முப்பதுக்கு மேலிருக்குமென்று

* ஸாவர்க்கர் இந்தக் குறிப்பை 1925-இல் நாடு சுதந்தரம் பெறு வதற்குமுன் எழுதியிருக்கிறார் என்பதை நினைவில் வைக்கவேண்டும்.
—ரா. அ. ப.

** இந்தப் பாராவும், அடுத்த மூன்று பாராக்களும், பின்னால் சில பகுதிகளும் இந்நூலில் வேறிடங்களில் ஏற்கனவே தரப்பட்டுள்ளன.
—ரா. அ. ப.

தோன்றியது. நாங்களெல்லோரும் இளைஞர்களாக இருப்பதைக் கண்டு அவர் வியந்தார். தாம் ஆங்கில இசை கற்கப்போவதாயும், ஆங்கில நடனத்திலும் தேர்ச்சி பெறத் தீர்மானித்துள்ளதாயும் அவர் சொன்னார். பெரிய பெரிய பிரச்னைகள் நம்முன் இருக்கும்போது நமது இளைஞர்கள் அற்பக் கேளிக்கைகளில் காலத்தை வீண் செய்வது பற்றி நாங்கள் வழக்கம் போல முணுமுணுத்தோம். எங்கள் கண்டனத்தை அவர் ஏற்கவில்லை. எனினும், அதன் நியாயத்தை அவர் ஓரளவு உணர்ந்ததாகத் தோன்றியது. பிறகு அவர் எங்களிடம் விடைபெற்றார்; அடிக்கடி வந்து பார்ப்பதாகச் சொல்லிச் சென்றார். அந்தக் கனவான்தான் ஸ்ரீஜத் வி. வி. எஸ். ஐயர்.

"1910-இல் மார்ச் மாதம். நாம் கைதியாக நின்றோம். லண்டன் பிரிக்ஸ்டன் சிறையில் அடைபட்டு அதிக நாளாகவில்லை. லண்டன் நகரின் பயங்கரமான சிறைச் சாலை. வெளியிலிருந்து கைதிகளைப் பார்க்க வருபவர்கள் வரும் நேரத்தை வார்டர்கள் அறிவிக்கின்றனர். வருபவர்களைச் சந்திக்க ஒதுக்கப்பட்ட வராந்தாவுக்கு வரிசையாகப் போகிறோம். கம்பிகளின் பின்னால் நின்றுகொண்டு, நம்மைக் காண யார் வந்திருக்கக்கூடும்; லண்டன் போலீஸாரின் விரும்பத்தகாத பார்வைக்கு உட்படத் துணிந்து யார் வந்திருக்கக்கூடும் என்று பார்க்கிறோம். ஏனெனில், கம்பிக்கு வெளியே பார்வையாளர் அரங்கி லிருந்துகொண்டு தாங்கள் எங்களுக்கு வேண்டியவர் என்று காட்டிக் கொள்வதானது, முடிவில் தவறாமல் அதே கம்பிகளுக்குப் பின் தாங்களும் வருவதற்கான மார்க்கமாகும் என்பதை அறிவோம். பார்க்க வந்தவர்களை உள்ளே விடுகிறார்கள். அவர்கள் கும்பல் எங்கள் ஜன்னலைத் தாண்டிச் சென்றுகொண்டே யிருக்கிறது. கடைசியில், கம்பீரமான ஒரு நபர் எங்கள் முன் உள்ள பெட்டியில் நுழைகிறார். அவர் வி. வி. எஸ். ஐயர் தாம்.

"அவருடைய தாடி அவருடைய மார்பை நெருங்கத் தழுவிக்கொண் டிருந்தது. அவருடைய உடை

பளபளப்பாக இல்லை. முன்போல், பகட்டாக உடை உடுத்திய கனவானாக அவர் இருக்கவில்லை. அவருடைய உருவம் முழுவதுமே ஏதோ ஆத்ம நிவேதனத்தால் மாறிப் போயிருந்தது. உணர்ச்சி பொங்க, அவர், 'தலைவ! நீங்கள் ஏன்தான் பாரிஸ் நகரைவிட்டு வந்தீர்கள்!' என்று கேட்கிறார். நாம் அமைதியாக, 'அதை இங்கே விவாதிப் பதில் என்ன லாபம்?' என்று பதிலளிக்கிறோம். சரியோ, தப்போ இந்தச் சிறையில் அடைபட்டருக்கிறோம். இனி என்ன செய்யலாம் என்று பார்ப்பதே சிறந்தது. நிகழ் காலத்தை எப்படிச் சமாளிப்பதென்று கவனிப்போம்.

"செயலுக்கான திட்டங்களை விவாதித்துக்கொண்டிருக் கும்போதே மணி அடித்துவிட்டது - வார்டர்கள் ஓடிவந்து 'மணியாகிவிட்டது' என்று கத்தினார்கள். மனம் குமுற நாங்கள் ஒருவரையொருவர் பார்த்துக் கொள்கிறோம். இந்த வாழ்க்கையில் ஒருவரையொருவர் காணப்போவது இதுவே கடைசித் தடவையாக இருக்கக்கூடும் என்று ஞாபகம் வருகிறது. கண்ணில் நீர் பெருகுகிறது. அதைக் கட்டுப்படுத்திக்கொண்டு, நாம் சொன்னோம். 'இல்லை, இல்லை! நாம் ஹிந்துக்கள். கீதை படித்திருக்கிறோம். அனு தாபம் இல்லாத இந்தக் கும்பலின் முன்னால் நாம் அழக் கூடாது!' –ஹிந்தியில் பேசிக் கொள்கிறோம். ஆங்கிலேயர் கள் இந்தியப் புரட்சிக்காரனையும், அவனுடைய நண்பனை யும் வேடிக்கை பார்க்கிறார்கள். நாங்கள் பிரிகிறோம். அவர் மறையும் வரை அவரைப் பார்த்துக் கொண்டிருந்து மனத்துக்குள் சொல்லிக்கொண்டோம். 'என்ன செய்வது! இந்த அன்பு கனிந்த நண்பனை இனிக் காண்பது சாத்திய மில்லை.' ஏனென்றால், இரண்டில் ஒன்று எனக்கு நிச்சயம் காத்திருந்தது, ஒன்று தூக்குமேடை அல்லது அந்தமான் தீவுகள். எதுவானாலும் நாம் எமது நண்பர்களை மீண்டும் சந்திக்கும் வாய்ப்பு இராது.

"அது 1910–இல் நடந்தது. பதினான்கு வருஷங்கள் ஓடி விட்டன, நடக்கமுடியாததும் நடந்தது. வாழ்க்கையில் அபாயம் நிறைந்த சந்து பொந்துகளிலும், தலைமறைவான பாதைகளிலும் சுற்றிச் சுழன்று, சாவின் நிழலில்

பன்முறை ஒதுங்கி, முடிவில் ஸ்ரீஜத் ஐயரைச் சில மாதங்களுக்கு முன் நான் மீண்டும் சந்தித்தேன். சென்னையிலிருந்து பம்பாய் மாகாணத்துக்கு அவ்வளவு தூரமும் நாங்கள் ஒரு சிலமணி நேரம் அளவளாவி மகிழலாம் என்ற ஒரே காரணத்துக்காக வந்திருந்தார். துயருற்றவர்களின் பண்டை நினைவுகளது கசப்பையும் மனத்தாங்கலையும் சிறிது காலம் மறந்துவிட்டு, நீண்ட விடுமுறைக்குப்பின் கூடும் பள்ளிப் பிள்ளைகள் போல லேசான விஷயங்களைப் பற்றி அரட்டையடித்துக்கொண் டிருந்தோம். பிறகு அவர் விடைபெற்ருர். அவர் என் பார்வையிலிருந்து, மறையும் போது, 'இனி எப்போது வேண்டுமானலும் இவரை அழைத்து மகிழலாம்' என்று எனக்குள் சொல்லிக் கொண்டேன்.

"அவர் இப்படி மனிதரது கூப்பிடு குரலுக்கு அப்பால் போய்விடப் போகிருர் என்று நான் சிறிதும் நினைக்கவில்லை. மனிதபுத்தி, 'இனிமேல் நடக்கவே நடக்காது!' என்று தலையை ஆட்டியபோது, நாங்கள் சந்திப்பது சாத்தியமாயிற்று. 'இனி எப்போது வேண்டுமானலும் சந்திப்போம்' என்று மனிதர் கொக்கரித்தபோது, விதி கடுமையான குரலில், 'ஒருபோதும் இல்லை!' என்று உறுமியது. மனித யத்தனங்களைப் பொய்யாக்கி அவமானப் படுத்துவதைத் தவிர வேறு உயர்ந்த நோக்கம் விதிக்கு இருப்பதாகத் தெரியவில்லை!

"ஐயரென்ற அரசியல்வாதி பற்றி இங்கே குறிப்பிட இயலாது. ஐயரென்ற புலவர், ஐயரென்ற நண்பர், ஐயரென்ற மிக உயர்ந்த ஹிந்து கனவான், ஐயரென்ற 'குறள்' மொழிபெயர்ப்பாளர், ஆயுள் முழுவதுமே தியாகத்திலும் வழிப்பாட்டிலும் கழித்த ஐயரென்ற ரிஷி போன்ற கனவானைப் பற்றியே, நாம் துக்கம் நெஞ்சையடைக்க வருந்துகிறேம். அந்த உன்னத ஆத்மாவுக்கு ஏற்ற முறையில் பகிரங்கமாக மக்கள் அஞ்சலி செய்ய ஏற்பாடு செய்ய முடியாமல் இருப்பதைக் கண்டே பொருமுகிறேம். எமது தலைமுறைதான் எவ்வளவு மோசமான காலத்தைக் கடந்துகொண் டிருக்கிறது! சிரேஷ்டமானவர்கள்

வெள்ளத்தில் அடித்துக்கொண்டு போய்க் கரையில் தள்ளப்படுகிறார்கள்; பயனற்றவர்களெல்லாம் வாழ்க்கை வெள்ளத்தில் சுகமாக நீந்திச் செல்கிறார்கள்!

"ஆனால், நண்ப, நீ உனது கடமையைச் செய்து முடித்துவிட்டாய்! அன்புக்காக வாழ்ந்தாய் நீ; சாவிலும் அன்புக்காகவே உன்னைத் தியாகம் செய்துகொண்டாய். ஆண்டவனின் பணியாள், வாழ்க்கையில் நீ அமைதி காணவில்லை. உனக்குச் சாவில் அமைதி இருக்கட்டும். நண்ப, உனக்கு அமைதி இருக்கட்டும்; தெய்வ அருள் இருக்கட்டும்!"

இவ்வாறு ஸாவர்க்கர் தமது ஐயர் நினைவுக் கட்டுரையில் கூறினார்.

குருகுலக் கிளர்ச்சிக்குச் சமரசமான முடிவைச் சாதிக்கச் சலியாமல் உழைத்தவரான காவ்யகண்ட கணபதி சாஸ்திரி தமது சமாதானத் திட்டம் அமல் செய்யப்படுவதற்கு முன் காலன் அதைத் துவம்சம் செய்துவிட்டதை, ஒரு பழைய ஸம்ஸ்கிருத சுலோகத்தின் மூலம் விளக்கினார். அவர் கூறினார்:

"ராத்ரிர் கமிஷ்யதி பவிஷ்யதி ஸுப்ரபாதம்
பாஸ்வான் உதேஷ்யதி ஹஸிஷ்யதி பங்கஜாதம்!
இத்தம் விசிந்தயதி பத்மகதே த்விரேபே
ஹா ஹந்த ஹந்த நளினீம் கஜஉஜ்ஜ ஹாரா."
('இரவு நீங்கும்; விரைவில் உதயம் வரும்;
சூரியன் உதிப்பான்; தாமரை மலரும்!

மலரில் அகப்பட்டுக்கொண்ட தேனீ இவ்வாறு கனவுகாண, யானை வந்து தாமரைக் கொடியையே துவைத்து நாசமாக்கியது.)

## கவிஞர் அஞ்சலி

ஐயரின் மறைவுச் செய்தி கேட்டு அக்காலத்திலிருந்த தமிழ்க் கவிஞர்கள் சரமகவி பாடி அஞ்சலி செலுத்தினர் கள். அக்கவிதைகள், தமிழ் 'ஸ்வராஜ்யா' என்ற அந்நாள் தினசரிப் பத்திரிகையில் வெளிவந்தன.

நாமக்கல் வெ. ராமலிங்கம் பிள்ளை பாடிய நீண்ட கவிதையில், சில கண்ணிகள் வருமாறு:

"தமிழ்மறையின் பெருமைதன்னை
உலகறிய எடுத்துரைத்த தனிப்பறையின்
பேரோசை தணிந்ததேயோ!
துமியுரைத்த கவியரசன்
சுவைவிளக்கக் கம்பனுக்குத் தூதுவந்த
பாதமவை துவண்டவேயோ!
அமிழ்ந்துறங்கும் தமிழர்களை
அடிமையிருள் அகன்றதென அழைத்தெழுப்பும்
கோழிகுரல் அடைத்ததேயோ!
குமிழ்நுரையின் மலையருவிச்
சுழல்விழுந்து குருகுலத்துச் சுப்ரமண்ய
ஐயருடல் மறைந்தகொள்கை."

* * *

"ஐயரெனில் அந்தணராய் அனைத்துயிர்க்கும்
செந்தண்மை ஆள்வோரென்று
செய்யதிரு வள்ளுவனர் செய்தமொழி
ஒருசிறிதும் சிதைவுறுமல்
மெய்யறிவைநாடி மெய்வருத்திப்
பொய்வெறுத்த மேன்மையாலே

ஐயரெனத் தனியுரைத்தால் உன்னையன்றித்
தமிழுலகம் அறியாதையா."

* * *

"நீகண்ட குருகுலத்தில் நிகழ்வுண்ட
மனத்தாங்கல் நீங்கவேண்டி,
தாய்கண்ட பேரன்பன் தவமுண்ட
காந்தியுரை தவறிற்றென்று
பாய்கின்ற சிறுநதியின் படர்கின்ற
வழியோடிப் பரவைசேர்ந்து
காய்கின்ற வடவனலில் கடுந்தவசு
புரியவதில் கலந்தாய்கொல்லோ?"

* * *

" முழுமதி மயிர்த்தாலன்ன முகந்திகழ் கருணைநோக்கும்
மூர்க்கரும் நேரிற்கண்டால் முகந்திடும் சாந்தவீச்சும்
குழலினும் இனியதான குழந்தையின் மழலைப்பேச்சும்
குவிந்திடும் உதட்டின்மீதும் கூத்திடும் சிரிப்பின் கூட்டும்
தழலினும் தூயவாழ்வும் தாயினும் பெரியஅன்பும்
ஸத்தியநிலையும் முன்னாள் தவமுனி இவனேஎன்னப்
பழகியபேயும் போற்றும் படித்தொரு வடிவந்தன்னைப்
பாரிடை இனிமேல்வேறு யாரிடைப் பார்ப்போமையா?"

* * *

சேரமாதேவி குருகுலத்தில் ஆசிரியராகப் பணியாற்றிய பிரம்மசாரி (பிற்காலம் ஸ்வாமி, யோகி) சுத்தானந்த பாரதி பாடிய பாடலில்-

" முனிபோல் முகமுடையான், முத்து நகையுடையான்,
கனிபோல் மொழியுடையான், கண்ணிலினிக்
காண்பனோ ?

ஆங்கிலமும் செந்தமிழும் ஆரியமும் லத்தீனும்
ஓங்கியொலிக்கும் புலவன், உள்ளங் குளிர்நடையான்!
கண்ணனை வள்ளுவனைக் கம்பக் கவியரசைப்
பண்ணோங்கும் ஆங்கிலத்திற் பாருக் கருளியவன்!"

என்று ஐயரை வர்ணித்தார்.

'லோகோபகாரி' வாரப் பத்திரிகை ஆசிரியர் பரலி சு. நெல்லையப்பர், ஐயர் மறைவுச் செய்தி கேட்டுப் பாடிய பாடலில்–

"பைந்தமிழ் மறந்தீர் கொல்லோ? பாட்டினை மறந்தீர் கொல்லோ?
செந்தமிழ்க் கம்பனூர்தம் தீங்கவி மறந்தீர் கொல்லோ?
அந்தரம் புகுந்து கம்பன் அருகிருந்தவன் வாக்கெல்லாம்
சிந்தையில் உவகை பொங்கக் கேட்டீரோ. செப்புவீரே!"

என்று கேட்டிருந்தார்.

காசிவாசி பா. ஆதிமூர்த்தி பாடிய இரங்கற்பாவில், அவர்,

"தீரம் வளரக் கலைவளரத் திறமை வளரச் செழுந்தவத்தின்
காரம் வளரத் திடம்வளரக் கருணை வளரக் கலைத்திறத்தின்
சாரம் வளரக் குருகுலத்தைத் தந்தான் தமிழர் தலைநாளின்
வீரம் வளர வ.வே.ஸு. வீழ்ந்தான் அருவி விழும் வழியே!"

என்று அங்கலாய்த்தார்.

ஆனால் ஐயர் காலமான சமயம் வந்த இரங்கற் பாக்களில் உணர்ச்சி வெள்ளமாய் நெஞ்சை அள்ளுவது புதுவை பாரதிதாசன் எழுதிய சரமகவியேயாகும். தமிழ் 'ஸ்வராஜ்யா' நாளிதழில் 16-6-1925-இல் வெளி வந்த இக்கவிதையில் சில கண்ணிகள் :

(விருத்தம்)

"கேட்டீரோ தமிழர்களே நம்மில் மிக்க
கீர்த்தி கொண்ட தமிழன் உயிர்நீத்த செய்தி?
'ஆட்படுதல் கடவுள் ஒருவனுக்கே யன்றி,
அத்தனை பேரும் சமமே ஆகும்' என்னும்
மாட்சி மிகும் எண்ணத்தை நாட்டில் மீண்டும்
மலர்வித்த வீரர்க்குள் வீரன் கண்டீர்
தாட்டிகஞ் சேர் சுப்ரமண்ய ஐயன் இந்தச்
சகம் நீத்தால் தமிழர் மனம் சகிப்பதுண்டோ?"

"பருவ மயக்கத்தாலே ஆங்கிலத்தில்
பல்கலை வல்லாளுகி, இன்னும் கற்கக்
கருதி அந்த ஆங்கிலநாடு ஏக அங்குக்
கண்ணெதிரே நகைகாட்டிக் கருத்திற் பாய்ந்த
திருநுதலைச் சுதந்திர நற்றெய்வந் தன்னைச்
செங்கைகள் கூப்பித் தன் தெய்வ நாட்டை
ஒரு நொடியில் விடுவிப்பேன், ஒன்றும் வேண்டேன்,
உறுவன வந்துறுக எனும் உணர்ச்சியாலே"

* * *

"நன்ளுட்டிற்கு அவன் தொண்டு பெரிது வேரில்
நளிர்புனல் போற் பயன் தருவது அன்னை போல
அன்புடையது இருள் கொண்ட நெஞ்சந் தன்னில்
அணை கடந்த வெள்ளம் போல் தேசபக்தி
நன்று வளர்விப்பது நாம் என் செய்வோமால்
நலம் விளைக்கும் கற்பகத்தைப் புதுநினைப்புக்
குன்றத்தைக் குன்றஞ்சார் குளிர்புனல் தான்
கொண்டதுவோ பகைவருளம் குளிர்ந்ததேயோ?"

* * *

"வீரத் தாய் விடுதலைப் போர் ஆரம்பித்து
விரிபுனலில் மகள் வீழ்ந்த காலும் மீட்க
வீரத்தால் முடிவடைந்தான் தமிழ வீரன்
வேண்டி நமக்காய்ச் சிறையும் புகுந்த மேலோன்
சாரத்தால் இனம் வளர்க்க எண்ணி இன்பத்
தமிழ் வளர்க்கக் குருகுலமும் வகுத்தோன் நூற்கள்
வாரித் தந்தோன் ஏடு வரையும் ஆசான்
வானத்தே திகழ்கின்ருன் சாந்தி பெற்ருன்."

* * *

இலக்கிய வானில் தேசத் தொண்டென்ற மெருகேற்றிச் சுடர் விட்டெழுந்து மறைந்த ஐயரை அவர் காலத் தமிழ்க் கவிஞர் உலகம் இவ்வாறெல்லாம் போற்றிப் பாராட்டியதில் வியப்பென்ன?

# பின்னுரை

வ. வே. ஸு. ஐயர் மறைந்து ஐம்பத்தைந்து ஆண்டு களுக்குமேல் ஆகின்றன.

இந்த ஐம்பது சொச்சம் ஆண்டுகளில் ஐயருடைய இலக்கியப் புகழ் உறுதியாக நிலைநாட்டப்பட்டுவிட்டது. தமிழ்நாட்டின் அரசியல் வாழ்வில் அவர் கொண்ட அரும் பங்கும் எல்லோராலும் ஏற்கப்பட்டுள்ளது.

ஐயரது மறைவுக்குப் பின் சேரமாதேவியில் உள்ள அவரது குருகுலம் பல சிரமங்களைத் தாண்டி வந்துள்ளது. ஐயருக்குப் பின் அதை நடத்தியவர்கள் அதை முழு வேகத்துடன் நடத்த முடியவில்லை; ஆதரவு குறைந்து, கடைசியில் மூடிவிட்டார்கள். ஆனால் குருகுலத்துக்கு 31.5 ஏக்கர் நிலம் இருந்ததால், சொத்துக்காக நிர்வாகத் தைப் பிடித்துக்கொண்டு அதிகாரம் செய்ய முயற்சிகள் நடந்தன. 1933–34–இல் குருகுலத்தைப் பற்றி காந்தியிடம் புகார்கள் சென்றன. முடிவில், அவரது யோசனைப்படி, குருகுலத்தை ஹரிஜன சேவைக்காக அகில இந்திய ஹரிஜன ஸேவக ஸங்கத்திடம் ஒப்படைத்தார்கள். ஹரிஜன ஸேவக ஸங்கம் குருகுலத்தில் பல வருடங்கள் ஒரு ஹரிஜனப் பள்ளிக்கூடம் நடத்தியது.

1957–58 ஆண்டுக் காலத்தில், இந்த ஹரிஜனப் பள்ளிக் கூடம் மூடப்பட்டது. அல்லது வேறெங்கோ கொண்டு சென்றார்கள். குருகுல நிலமும், பழைய கட்டடங்களும் யாருக்கோ சொற்பத் தொகைக்குக் குத்தகைக்கு விடப் பட்டன. குருகுலத்தில் ஐயர் பெயரை நீடித்துக் காக்க ஏதும் இல்லை; கட்டடங்களும் இடிந்து விழுந்துகொண் டிருந்தன. இந்தப் பொறுப்புக்குத் தலை முழுகிவிட்டால் கூடத் தேவலை என்று–குருகுலச் சொத்துக்களை விற்றுவிட லாம் என்று ஒரு யோசனை எழுந்தது.

ஐயரிடம் பற்றுக் கொண்டவர்கள் இதைக் கேள்விப் பட்டபோது, குருகுலச் சொத்துக்களுக்கு ஒரு புதிய தர்மகர்த்தா போர்டு நியமிக்க ஏற்பாடு செய்தார்கள். அதன்படி, ஸ்வாமி சித்பவானந்தாவைத் தலைவராகவும், ஐயரது குமாரர் டாக்டர் வ.வே.ஸு. கிருஷ்ணமூர்த்தி உட்பட ஐவர் அங்கத்தினர்களாகவும் உள்ள புதிய தர்மகர்த்தா போர்டை 1972 ஜனவரியில் ரிஜிஸ்தர் செய் தார்கள்.

புதிய தர்மகர்த்தாக்கள் குருகுலத்தை மேற்கொண்டு, அங்கே பாரத்துவாஜ ஆசிரமம் என்ற அமைப்பை நடத்தி வருகிறார்கள். பிரம்மசாரி ஒருவர் ஆசிரமத்தில் வசித்து மேற்பார்வை செய்கிறார். மாதம்தோறும் திருநெல்வேலி மாவட்டத்தில் நாலைந்து இடங்களில் கீதை உபந்நியா சங்கள் நடக்கின்றன; ஏப்ரல் 2-ஆம் தேதி ஸ்தாபகர் தினம் கொண்டாடப்படுகிறது. ஆத்மிகமான பிற கூட் டங்களும் அவ்வப்போது நடக்கின்றன.

1924—25-இல் குருகுலக் கிளர்ச்சி காரணமாக ஐயரின் நற்பெயருக்கு ஏற்பட்ட இழுக்கு, அவரது மரணத்துக்குப் பின் மறைந்து போயிற்று. அவரைக் கடுமையாகத் தாக்கி யவர்களான டாக்டர் நாயுடுவும், ஈ. வே. ராமசாமி நாய்க்க ரும்கூட ஐயர் இறந்ததும் அவரைப் பாராட்டியபோது சமரசமான ஏற்பாடு ஒன்று உருவாகியிருந்த சமயம், அதை அமல் செய்வதற்குள் ஐயர் காலமாகிவிட்டார் என்றும், அவருடைய நேர்மையை மறுக்க முடியா தென்றும் கூறியிருக்கிறார்கள்.

இது அக்காலத்தில் வந்த பத்திரிகைகளில் இருக்கிறது.

ஆகையால், பிற்காலத்தில் ஏற்பட்ட வகுப்புத் துவேஷ வம்புகளுக்கெல்லாம் ஐயர் மீது பழி போடுவதற்கு நடந் துள்ள பிற்கால முயற்சிகளை இந்தப் பகைப்புலனில் பார்க்க வேண்டும்.

கவிச்சக்கரவர்த்தி கம்பனைத் தமிழ் மக்களும், பிறரும் சரிவரப் போற்றும்படி செய்ய ஐயர் எடுத்துக்கொண்ட முயற்சிகள் நற்பலன் தந்துள்ளன. சென்னை, மதுரை முதலிய பல்கலைக் கழகங்களில் பட்ட மேற்படிப்பு

மாணவர்கள் ஆராய்ச்சி செய்ய ஐயரது நூல்கள் மிகவும் பயன்படுகின்றன. அதே போல, திருக்குறளுக்கு ஐயர் செய்துள்ள ஆங்கில மொழிபெயர்ப்பும், 'கம்ப ராமாயணம் — ஓர் ஆராய்ச்சி' என்ற ஆங்கில நூலும் உலக அறிஞர் களின் பாராட்டுகளைப் பெற்றுள்ளன.

வ. வே. ஸு. ஐயரின் நூற்றாண்டு விழா 1981-இல் நிகழ்கிறது.

நாட்டு மக்களுக்கு அரசியல், கலாசார, தொழில் துறை களில் முன்னேற்றம் அளிக்க அவர் அயர்வின்றி உழைத் தார். காந்தி அழகாகக் கூறியது போல, அவர் உண்மை யில், "சளைக்காமல் உழைத்த தேசத்தொண்டர்" தாம்.

நாட்டுக்காக நாம் தொண்டு செய்யவேண்டும் என்ற கருத்து மீண்டும் பரவிவரும் இந்த நாளிலே, ஐயர் போன் றோருடைய பொன்னான வாழ்க்கை வரலாறு நமக்கு வழிகாட்டியாகும்.

## ஆதார விளக்கம்

நூலில் தரப்பட்டுள்ள சம்பவங்களுக்கு ஆதாரங்கள், அநேகமாக அங்கங்கேயே கொடுக்கப் பட்டுள்ளன. சிரத்தை உள்ளவர்களுக்குப் பயன்படட்டுமென அதிக விவரங்கள் இங்கே தரப்பட்டுள்ளன.

அத்தியாயம் 1 : **வரகனேரி**

ஐயருடைய பெற்றோர்கள், உறவினர்கள், அவருடைய இளமை வீரச் செயல்கள் இவைகளை ஐயருடைய புதல்வர் டாக்டர் வ. வே. ஸு. கிருஷ்ணமூர்த்தி ஐயர் கொடுத்தார். திருச்சி, வரகனேரியில் ஐயருடைய பூர்விக வீட்டுக்கு அருகே இளங்காளியம்மன் கோயில் இன்றும் இருக்கிறது.

அத்தியாயம் 2 : **'இந்தியா ஹவுஸ்', லண்டன்**

ஷாம்ஜி கிருஷ்ண வர்மா, ஸாவர்க்கர், இந்திய விடுதி நடவடிக்கைகள் இவை பல்வேறு தரப்பிலிருந்து கோத்துச் சொல்லப்பட்டுள்ளன. முக்கியமாக, டாக்டர் டி.எஸ். எஸ். ராஜன் எழுதியுள்ள 'வ.வே.ஸு. ஐயர்' என்ற நினைவு நூலும், 'ஸாவர்க்கரும் அவரது காலமும்' என்ற தலைப்பில் தனஞ்ஜய் கீர் எழுதியுள்ள ஆங்கில நூலும் மிகவும் பயன்பட்டன.

அத்தியாயம் 3 : **1857-இன் பொன்விழா**

கீர்த்திகரின் துரோகமும், ஐயர் எம். பி. டி. ஆச்சாரியா மூலம் ஸ்காட்லாந்து யார்டை ஏமாற்றி வந்ததும் டாக்டர் ராஜனது நூலில் உள்ளன.

அத்தியாயம் 4 : **மதன்லால் திங்க்ரா**

மொராக்கோவில் போர்க்கள அனுபவம் பெற முயன்ற விஷயம் டாக்டர் ராஜன் சொல்லியிருக்கிறார். ஸாவர்க்கர்

பற்றித் தனஞ்ஜய் கீர் எழுதியுள்ள நூலில் மதன்லால் திங்க்ரா பற்றி நிறைய விஷயம் உள்ளது. இது தவிர, பாண்டிச்சேரி 'இந்தியா' பத்திரிகையில் ஐயரது 'லண்டன் கடிதம்' மூலமாகவும், செய்திகளாகவும், திங்க்ராவைப் பற்றி ஏராளமான செய்திகள் உள்ளன. லண்டன் பிரிட்டிஷ் பத்திரிகைகளில் அக்காலம் திங்க்ராவைப் பற்றி வந்த எல்லா விஷயங்களும் 'இந்தியா' பத்திரிகைக்கு ஐயர் அனுப்பியிருந்தார்.

லாயிடு ஜார்ஜும் சர்ச்சிலும் மதன்லால் திங்க்ரா பற்றிப் பேசிய விவரம் டபிள்யூ. எஸ். ப்ளண்ட் என்பவரது 'என்னுடைய டயரிகள்' என்ற நூலில் இருப்பதாக, தனஞ்ஜய் கீர் அச்சம்பவத்தை ஸாவர்க்கர் பற்றிய தமது நூலில் உபயோகிக்கையில் குறிப்பிடுகிறார்.

அத்தியாயம் 6: ஐயர்-காந்திஜி முதல் சந்திப்பு

இந்திய விடுதியின் தஸரா விருந்தில் பிரதம விருந்தினரான காந்திஜியை அவர் யாரென்று தெரியாமல் நன்றாக வேலை வாங்கின சம்பவத்தை டாக்டர் ராஜன் தெரிவித்துள்ளார்.

அத்தியாயம் 7: ஸாவர்க்கர் கைதானார்

ஷாம்ஜி கிருஷ்ண வர்மா, ஸாவர்க்கர், ஹர்தயாள் கடிதங்களின் பிரதிகள், பம்பாய் ஆராய்ச்சியாளர் டாக்டர் ஆர்.வி. ராமதாஸால் தரப்பட்டன. ஐயரை விடுவிக்க நடந்த முயற்சிகள் பற்றி டேவிட் கார்னெட் எழுதிய 'பொன்மயமான எதிரொலி' [தி கோல்டன் எக்கோ] என்ற நூலில் இருப்பதையும் டாக்டர் ராமதாஸே எடுத்துக் கொடுத்தார். ஸாவர்க்கர் தம்மைக் காணச் சிறைக்கு வந்த ஐயர் பற்றிக் குறிப்பிட்டுள்ளது, 1925-இல் ஐயர் மறைவுக்குப் பின் ஸாவர்க்கர் 'மராட்டா' பத்திரிகையில் எழுதிய உருக்கமான கட்டுரையின் ஒரு பகுதியாகும். முழுக் கட்டுரை 22-ஆம் அத்தியாயத்தில் தரப்பட்டுள்ளது.

அத்தியாயம் 8: வீர் விக்ரம் ஸிங்கும் ருஸ்தும் ஸேட்டும்

ஐயர் மயிரிழையில் தப்பிப் பாரிஸ் போய்ச் சேர்ந்ததும், பிறகு அங்கிருந்து ரோம் முதலிய ஊர்கள் வழியே

பாண்டிச்சேரியை அடைந்ததும் டாக்டர் ராஜன், மண்டயம் ஸ்ரீநிவாஸாச்சாரியார், வ.ரா. முதலிய பலரால் விவரிக்கப்பட்டுள்ளன.

**அத்தியாயம் 10: கலெக்டர் ஆஷ் கொலை**

கலெக்டர் ஆஷைக் கொல்ல மறவர்கள் தலைவர்களின் உதவியை நாடியது, ஐயர் வாஞ்சியின் மனத்தை மாற்றியது. வாஞ்சி ஆஷைக் கொன்றது – இவையெல்லாம் ஸ்ரீ ஸத்குரு ஓம்காரால் (பூர்வாசிரமத்தில் புரட்சிவீரர் நீலகண்ட பிரம்மசாரி) இந்நூலாசிரியருக்கு நேரில் சொல்லப்பட்டன.

**அத்தியாயம் 11: கிணற்றில் ஒரு ஜாடி**

பாண்டிச்சேரியில் ஐயரும், மற்றவர்களும் பட்டபாடுகளை மண்டயம் ஸ்ரீநிவாஸாச்சாரியார் பத்திரிகைக் கட்டுரைகளில் விவரித்துள்ளார்; வ.ரா. தமது 'மகாகவி பாரதியார்' நூலிலும் விவரித்துள்ளார்.

**அத்தியாயம் 14: ஆசிரியர், 'தேசபக்தன்', சென்னை**

இந்த அத்தியாயத்திலுள்ள விவரங்கள் பெரும்பாலும் வெ. சாமிநாத சர்மா தமது சொந்த அனுபவத்தைக் கொண்டு 'தேசபக்தன்' அலுவலகத்தில் ஐயர் இருந்ததை வர்ணித்துள்ளதை ஆதாரமாகக் கொண்டவை; சாமிநாத சர்மாவின் 'நான் கண்ட நால்வர்' நூலிலிருந்து.

**அத்தியாயம் 15: சிறைவாசம்**

1921–இல் 'தேசபக்தன்' தலையங்கத்துக்காக ராஜத் துவேஷக் குற்றம் சாட்டப்பட்டு ஐயர் விசாரிக்கப்பட்ட விவரம், அக்காலத்திய 'ஹிந்து' பத்திரிகையில் விரிவாகத் தரப்பட்டுள்ளது.

**அத்தியாயம் 17: தமிழ்க் குருகுலம்**

தமிழ்க் குருகுலத்தின் நோக்கங்கள், பாடத்திட்டம், அன்றாட நடவடிக்கைகள் முதலியவை ஐயரது குருகுலம் நாட்குறிப்பிலிருந்தும், ஐயரது கடிதங்களிலிருந்தும், யோகி

சுத்தானந்த பாரதியாரது 'வீர விளக்கு வ. வே. ஸு. ஐயர்' நூலிலிருந்தும் சேகரிக்கப்பட்டுள்ளன.

அத்தியாயம் 19 - 20: **'குருகுலக் கிளர்ச்சி', காங்கிரஸ் கமிட்டியில் பிளவு**

இந்த இரண்டு அத்தியாயங்களும், 1924 - 1925-இல் சென்னைப் பத்திரிகைகளில் குருகுலம் பற்றி வெளியான ஏராளமான செய்திகளைக் கொண்டு, பாகுபாடு செய்யப் பட்டுள்ளன. ஐயருக்கெதிராக டாக்டர் வரதராஜுலு நாயுடுவை ஆதரித்த 'தமிழ்நாடு', 'நவசக்தி' பத்திரிகைகளும், நடுநிலைமையாகச் செய்திகளைத் தந்தது என்று டாக்டர் நாயுடுவாலேயே பாராட்டப் பெற்றதுமான 'ஹிந்து' பத்திரிகையும், பட்சபாதமில்லாத நியாயமான சித்திரம் கிடைக்க உபயோகப்படுத்தப்பட்டுள்ளன.

அத்தியாயம் 21: அருவியின் அழைப்பு

ஐயரது கடைசி நாட்களும், அவர் எதிர்பாராதபடி அருவிக்கு இரையாக நேர்ந்த விவரமும், அக்காலத்திய பத்திரிகைச் செய்திகளையும், பலர் நேரில் தெரிவித்த சமாசாரங்களையும் கொண்டு தொகுக்கப்பட்டன. ஐயர் தமது கதர்ப் பையைத் தம்மிடம் தந்து சென்ற விவரம், ஸ்வாமி சித்பவானந்தரால் இந்நூலாசிரியருக்கு 1972-இல் தெரிவிக்கப்பட்டது.

## நூல்கள் பட்டியல்

**ஐயர் எழுதிய நூல்கள்:**

**ஆங்கிலம்**

1. **The Kural or The maxims of Tiruvalluvar.** திருக்குறள் ஆங்கில மொழிபெயர்ப்பு; முதல் பதிப்பு, கம்பநிலையம், புதுச்சேரி, 1915; 2-வது பதிப்பு, பாரத்துவாஜ ஆசிரமம், சேரமாதேவி, 1925; 3-வது பதிப்பு, பாரத்துவாஜ ஆசிரமம், 1952; 4-வது பதிப்பு, அமுத நிலையம் லிமிடெட், சென்னை-600 014, 1961.
2. **Kamba Ramayanam — A Study.** கம்ப ராமாயண ஆராய்ச்சி, ஐயர் காலத்துக்குப் பின் வெளியானது. முதல் பதிப்பு, தில்லித் தமிழ்ச் சங்கம், புது தில்லி, 1950; 2-வது பதிப்பு, தில்லித் தமிழ்ச் சங்கம், புது தில்லி, 1951; மலிவுப் பதிப்பு, பவன்ஸ் புக் யுனிவர்ஸிடி, பம்பாய், 1965; மறுபதிப்பு, 1970.
3. **Kuruntogai.** சங்கநூல் மொழிபெயர்ப்பு; வெளியாகாமல் கைப்பிரதி 1942-இல் தொலைந்துவிட்டது.
4. **A History of India.** இந்திய சரித்திரம். வெளியாகாத கைப்பிரதி; கிடைக்கவில்லை.

**தமிழ்**

1. **'கரிபால்டி சுயசரிதம்'** பாண்டிச்சேரி 'இந்தியா' பத்திரிகையில் வெளிவந்தது, 1909-10.
2. **'நெப்போலியன்'** ஃபிரெஞ்சு மாவீரன் சரிதம், பாண்டிச்சேரி, 1910. நூலின் பிரதி கிடைக்கவில்லை.
3. **'கம்ப ராமாயணம் - பாலகாண்டச் சுருக்கம்'** கம்ப ராமாயண பாலகாண்டம், இலக்கியச் சுவையுடன் தேர்ந்தெடுத்தது, படிக்க எளிதாகும் வகையில் பதம்

பிரித்தது. விரிவான முகவுரையுடன் கூடியது. கம்ப நிலையம், புதுச்சேரி, 1915.

4. "மங்கையர்க்கரசியின் காதல் முதலிய கதைகள்" தமிழில் வெளிவந்த முதல் சிறுகதைக் கொத்து. கம்ப நிலையம், புதுச்சேரி, 1916; 4-வது பதிப்பு, அலயன்ஸ் கம்பெனி, மயிலாப்பூர், 1953.

5. 'காபூல்காரன்' தாகூர் கதையின் தமிழாக்கம். கம்ப நிலையம், புதுச்சேரி, 1916.

6. 'சந்திரகுப்த சக்கரவர்த்தி சரித்திரம்' முதல் பதிப்பு, கம்ப நிலையம், புதுச்சேரி, 1916-17 2-வது பதிப்பு கம்ப நிலையம், புதுச்சேரி, 1917-18; 3-வது பதிப்பு, அமுத நிலையம் லிமிடெட், சென்னை - 600014, 1961.

7. 'நீக்ரோ மகான் புக்கர் டி. வாஷிங்டன்' முதல் பதிப்பு, கம்ப நிலையம், புதுச்சேரி, 1919; 2-வது பதிப்பு, ஸர்வோதயப் பிரசுராலயம், தஞ்சாவூர், 1953.

8. 'நன்னம்பிக்கை' எமர்ஸன் கட்டுரைத் தமிழாக்கம், முதல் பதிப்பு, கம்ப நிலையம், 1919; 2-வது பதிப்பு, கம்ப நிலையம், புதுச்சேரி, 1919; 3-வது பதிப்பு, ஸர்வோதயப் பிரசுராலயம், தஞ்சாவூர், 1953.

9. 'குரு கோவிந்த ஸிங்' முதல் பதிப்பு, பாரத்துவாஜ ஆசிரமம், சேரமாதேவி, 1915; 2-வது பதிப்பு, சுதந்திரச் சங்கு ஆபீஸ், திருவல்லிக்கேணி, சென்னை, 1934; 3-வது பதிப்பு, அமுத நிலையம் லிமிடெட், சென்னை-600014, 1961.

**உபயோகிக்கப்பட்ட பிற நூல்கள் :**

**ஆங்கிலம்**

1. **Imperial Gazetteer of India, Provincial series, Madras, vol. 1** compiled by W. Francis, Supdt. of Govt. Printing, Calcutta, 1908.
2. **Manual of Tinnevely District,** compiled by A. J. Stuart, Govt. Press, Madras, 1979.
3. **Supplement to the Tinnevely District Gazetteer, vol. 1,** Edited by H. R. Pate, Madras, 1917.

4. **Sedition Committee 1918 Report**, (Rowlatt Report), Govt. of India, 1918.
5. **Makers of Modern India**, Indian Council of Historical Research, New Delhi, 1973.
6. **Savarkar and His Times**, by Dhananjay Kheer, Published by the Author, Bombay, 1950.
7. **The Indian War of Independence - 1857**, by V. D. Savarkar, Authorised Abridged edition, Nandi Books, Dhawale Popular, Lamington Road, Bombay-7, 1960.

## தமிழ்

1. **'வ. வே. ஸு. ஐயர்'** : டாக்டர் டி. எஸ். எஸ். ராஜன், கலைமகள் காரியாலயம், மயிலாப்பூர், சென்னை, 1946.
2. **'வீர விளக்கு வ. வே. ஸு. ஐயர்'** : யோகி சுத்தானந்த பாரதி, அன்பு நிலையம், ராமசந்திரபுரம், புதுக்கோட்டை, 1947.
3. **'மகாகவி பாரதியார்'** : வ. ரா., சக்தி காரியாலயம், சென்னை, 1941.
4. **'சித்திர பாரதி'** : ஆதார பூர்வமான பாரதி சரித்திரம், ரா. அ. பத்மநாபன், அமுத நிலையம், சென்னை-600 014, 1957.
5. **'பாரதி புதையல் — 3'** : பதிப்பாசிரியர் - ரா. அ. பத்மநாபன், அமுத நிலையம், சென்னை-600014, 1975.
6. **திருச்சினாப்பள்ளி வர்த்தக சங்கம் பொன் விழா மலர்** : திருச்சி, 1938.
7. **தில்லி தமிழ்ச் சங்கம், ஆண்டறிக்கை 1949—50**, புது தில்லி.
8. **'நான் அறிந்த தமிழ் மணிகள்'** : பி. ஸ்ரீ., வானதி பதிப்பகம், சென்னை-600017, 1971.
9. **'அந்த நாளில்...'** : 'அருண்', 'ஆனந்தவிகட'னில் வந்தவை, 1956 - 57.

10. 'வ. வே. ஸு. ஐயர்': சாமி சிதம்பரனுர், 'தமிழ் நாட்டுத் தியாகிகள்' என்ற நூலிலிருந்து; பதிப்பாசிரியர் - டி. ஜி. ரகுநாதன், ஸதர்ன் கன்ஸர்ன், சென்னை-1, 1950.

11. 'வ.வே.ஸு. ஐயர்' : புலவர் அரசு, தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை - 1, 1951.

12. 'தமிழகப் பெரியார்கள்' : வித்வான் ராஜா. சிவ சாம்ப சிவ சர்மா, ஸவுத் இண்டியா பப்ளிஷிங் ஹவுஸ், கோடம்பாக்கம், சென்னை, 1949.

13. 'புதுவையில் தேசபக்தர்கள்': என். நாகசாமி, சுந்தரேச ஐயர், ஸ்ரீ ஸ்ரீ ஆச்சாரியார், யதுகிரி அம்மாள் எழுதியவை; ஸாரதி பிரசுரம், ரங்கராஜபுரம், சென்னை, 1966.

14. 'எரிமலே' : 1867 பற்றிய ஸாவர்க்கரின் ஆங்கில நூலின் தமிழாக்கம், ஐயமணி சுப்ரமணியம், சக்தி காரியாலயம், சென்னை, 1951.

15. 'தமிழ்த் தென்றல் திரு. வி. கல்யாணசுந்தர முதலியார்' டி. எஸ். உமாபதி, அஸோஸியேஷன் பப்ளிஷிங் ஹவுஸ், சென்னை-1, 1963.

16. 'நான் கண்ட நால்வர்': பாரதி, திரு.வி.க., வ.வே.சு. ஐயர், சுப்பிரமணிய சிவம் நினைவுகள்; வெ.சாமிநாத சர்மா, பிரபஞ்ச ஜோதி பிரசுராலயம், புதுக்கோட்டை, 1959.